# OPINIONS ON THE WORK

—◇—

FROM The Hon'ble Sir P. Ramanathan, Kt, K.C.,C.M.G.
The Hon Mr K Balasingham M.L.C.
The Hon Mr H A P Sandrasagara, K.C. M.L.C.
Dr S C. Paul, M.D.F.R.C.S.
Dr E V Ratnam F.R.C.S.M.M.C.
S. R Supramaniam District Judge, (TRINCO.)
W D Niles District Judge, (COLOMBO.)
S Natesa Pillai B.A.B.L.
Navaneetha Krishna Bharathi, (POET.)
Pandit K. C Nathan Proctor, S.C.

—◇—

கௌரவமிகு ஸேர் பொன் இராமநாதன் கே.ஸி.எம்.ஜி.
கௌரவம் ஸ்ரீமான் க பாலசிங்கம். எம் எல். ஸி.
கௌரவம் ஸ்ரீமான் ஸந்திரசேகரா கே.ஸி. எம். எல். ஸி.
ஸ்ரீமான் டாக்டர் எஸ் ஸி போல் எம். டி.
ஸ்ரீமான் டாக்டர் இ வி இரத்தினம். எம். ஸி. ஸி.
ஸ்ரீமான் எஸ் ஆர் ஸுப்பிரமணியம், டிஸ்திரிக்ட் ஜட்ஜ்
ஸ்ரீமான் டப்ளியூ டி நைல்ஸ், டிஸ்திரிக்ட் ஜட்ஜ்
ஸ்ரீமான் நடேசபிள்ளை பீ. ஏ. பீ. எல்.
ஸ்ரீமான் நவநீதகிருஷ்ணபாரதியார்.
ஸ்ரீமான் க சிவபாதநாதன், பிறக்டர்

☞ இப்பேர்ப்பட்ட கல்விமான்களை இந்நூலை அதிநுட்பமாகப் பரிசீலனை செய்து இந்நூலாசிரியருடைய அறிவின்திறத்தையும் இதனை ஒருங்கு திரட்டிய பெருவன்மையையும் புகழ்ந்து அங்கில பாஷையில் சொற்சுவை பொருட்சுவை ததும்ப வரைந்திருக்கும் மதிப்புரைகளை மொழிபெயர்க்கின் விரியுமாதலால் விடுத்தேம்.

# FOREWORD.

BY THE HONOURABLE

SIR PONNAMBALAM RAMANATHAN.

KT, K C, C M.G, and elected Leader of the unofficial members of the Legislative Council of Ceylon.

Shri Ratnasamy Aiyar has requested me to write a foreword in English for his book of notes on some of the leading Thamils in Ceylon of the present generation.

I have known the author of these notes for many years as a gentle, intelligent and persevering Brahman, devoted to Thamil and Samskritha literature and to Indian music. He is an accomplished violinist, too.

Possessed of these attainments, he is much appreciated by leading Thamils in all parts of the Island, and is thus able to make a good selection of the people whose lives are worth writing about It is good for us all to know "Who is Who" in Thamil Ceylon, in the interests of effective social and other co-operative work.

I congratulate him on the successful termination of his labours in this line, and hope that he will not be a loser financially by the printing and publishing of this book.

Pon RAMANATHAN.

"SUKHASTHAN"
COLOMBO, 1ST JANUARY 1930

LEGISLATIVE COUNCIL OF CEYLON

Pandit Ratnasamy Aiyer who is a renowned Tamil and Sanskrit Scholar, has rendered great Service to Tamils by writing a Dictionary of Tamil biographies, His enterprise is worthy of support.

K. BALASINGHAM.

COLOMBO, 20-12-29.

---

Pandit S Ratnasamy Aiyer has brought out this book, containing short biographical notes of Tamil ladies and gentlemen who adorned the past and are doing so now. He read a few pages to me, and I found them interesting and I should say inspiring. The style was chaste and easy, and the contents free from inane exuberances. I hope that this book would serve the modern youth in keeping them in remembrance of their glorious past, and thus inspire them to look before rather than behind.

W. D. NILES,

(DISTRICT JUDGE)

COLOMBO, 22-12-29

---

"RAO MAHAL"

WARD PLACE,

COLOMBO, 29-12-29

Pandit S. Ratnasamy Iyer has written a book on the Biography of the Tamil people of Ceylon. I have had the privilege of seeing an advance Copy. The book is written in chaste and elegant Tamil and the Pandit has spared no pains in gathering a mass of information about various people The book is not only valuable as the record of the deeds of the present generation, but will be of great interest to those that come behind.

S. C. PAUL,

(M D., F R.C.S.)

# PREFACE.

THIS book Manmakkal Charithram is the first attempt of its kind by Pandit S. Retnasamy Iyer, whose reputation as a Tamil scholar is well known among the Tamils. It is in brief a life history of the prominent and leading Tamils who have distinguished themselves in literature, politics the different professions and public and social service. The recent archaeological researches in different parts of India have clearly shown that the Dravidians were a people whose ancient civilisation in the field of literature, the different arts and politics were superior to that of any other ancient people.

The Tamils of South India and Ceylon form the main branch of the Dravidians and they have contributed much to human progress in the different branches of knowledge. The Tamil language with its wealth of literature and grammar has been recognised even by European and American scholars as one of the ancient classical languages.

The Tamils have contributed much to the present development of Ceylon from ancient times and the history of some of the prominent people of the living generation of the Tamils will not be out of place.

From the few specimens that have come within my perusal it appears that the author has written in beautiful and elegant Tamil prose brief biographical records of several prominent Tamil gentlemen, which I hope will be appreciated by the Tamils, who have an interest at heart of the welfare of the community. I wish the author all success in his new attempt.

A. R. SUPRAMANIAM.
District Judge.

Trincomalee,
27th September 1929.

PARAMESHVARA COLLEGE.
JAFFNA, 11TH NOVEMBER 1929

I have read some portions of Pandit Ratnaswami Aiyar's book entitled "Manmakkal Charithram." It supplies a long-felt want, and I am sure it will be much appreciated by the Thamil public of Ceylon. It is written in a racy and attractive style. The author deserves to be congratulated on his success in bringing out a book of this kind

S. NATESAN, B.A., B.L.
(PRINCIPAL)

---

"PADMAGIRI"
5TH DECEMBER 1929

In Manmakkal Charithram that well known Tamil Scholar Pandit S. Ratnasamy Aiyer gives a series of short but interesting biographies of some of the distinguished Tamils who have contributed to bring this beautiful Island to the prominence she enjoys today in the field of politics of literatures arts and sciences. This book is calculated to inspire the rising generation to emulate the enterprise of their fore-bears. For this reason and that degree of purity and elegance of language attained by the author it should find an honoured place in every Tamil home and library.

That it may find so ready a circulation as to run into many subsequent editions in the wish of.

Dr. E. V. RATNAM, F.R.C.S., M.M.C.

Legislative Council of Ceylon,

Colombo, 16th Dec., 1929.

Pandit S. Ratnaswamy Iyer is a Tamil scholar of the first rank. He is moreover an enthusiast in all matters affecting the Tamil race. He is of opinion that a written record of the doings, hopes and aspirations of the Tamil worthies of Ceylon, will raise a monument which will stimulate the youngest generation to maintain the high cultural and civic standards so worthily attained by their forebears. Who will say that this is not a worthy enterprise?

I wish him in all success in his work.

H. A. P. SANDRASAGRA.

# INDEX.

உ

கடவுள் துணை.

# மேன்மக்கள் சரித்திரம்.

(முதலாம் பதிப்பு)

இது

கொம்பனித்தெரு புதிய அரசினர் பாடசாலைத்
தமிழ்ப் பண்டிதரும,
சங்கீத விற்பன்னருமாகிய

பிரம்மஸ்ரீ சு. இரத்தினசாமி ஐயரவர்களால்
இயற்றப்பட்டு

கொழும்பு
மீனும்பாள் அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.

1930.

சுக்கில ௵  தை ௴

# முகவுரை

"கெட்டாலும், மேன்மக்கள் மேன்மக்களே
சங்கு சுட்டாலும் வெண்மைதரும்."



இந்நகரிலிருக்கும் தமிழ் மக்களுள் அனேகர் அரசாங்க உத்தியோகஸ்தாகளாகவும், சட்டசபை அங்கத்தினர்களாகவும், நீதிபதிகளாகவும், பிரபல நியாயதுரந்தரர்களாகவும், டாகடாமாாகளாகவும், புரோக்கர்மாாகளாகவும், வியாபாரிமாாகளாகவும், சீமை வாத்தகர்களாகவும், பாரிய தனவந்தர்களாகவும், வேறு சிலர் அட்டைஸ்வரியப் பிரபுக்களாகவு மிருக்கின்றனா. இத்தகைய பெருமக்களுள் பலரும் பலவித நோக்கமும், பலவித கொள்கையும், பலவித போக்கும், பலவிதமான உடன்பாடும் உடையர்களாயிருத்தலைக் காண்கின்றேம். இதுபற்றியே "உலகம் பலவிதம்" என்ற உவமையும் வழங்கலாயிற்று இத்தன்மைகளையுடைய நம் தமிழ் மக்களின் பெருமைகளைக் குறித்து விஸ்தாரமாய எழுதப்பட்ட நூல்கள் இதுகாறும் தமிழ்ப்பாஷையில் வெளிவராமையால் அக்குறையை நீக்கும் பொருட்டாக "மேன்மக்கள் சரித்திர" மென்னும் மகுட நாமத்துடன் இப்புத்தகத்தைச் சுருக்கமாய் எழுதத்துணிந்தேம். இதில் எவ்வித குற்றங்களிருப்பினும் அதனைப்பொறுத்து எமக்குத் தெரிவிப்பது அறிவுடையோர் கடனாகும். "மேன்மக்களென்றது." மானிடவருள் கல்வியறிவொழுக்கம், சமயபக்தி தானதருமம் நற்குண நற்செய்கை, சாந்தம், பொறை அடக்கம் பரோபகாரம் பிரபுத்வம் பகுத்தறிவு, இன்சொல், ஈகை இரக்கம், இவைமுதலாய இன்னோரன்ன சிறந்தகுணங்களையுஞ் செயல்களையுமுடைய உத்தமர்களே மேன்மக்களெனப்படுவார்கள். சொல்லளவிலும் பார்க்கச் செயலளவில் மேன்மகனாதலே மிக்க விஷேடமென்றார் அறிவுடையோர். ஆகவே சிலர் விபரீத விளக்கங்கொண்டு இப்புத்தகத்தில் எழுதப்பட்டோர் மாத்திரம் மேன்மக்கள் இதில் எழுதப்படாதோர் கீழ்மக்களோ என்ற கேள்வியை எம்மீது கடாவுதலுங்கூடும். அதற் குத்தரமாக அன்பர்களுக்கு யாம் தெரிவிப்பது பெருந்தொகையான பணத்தை

யாமாகச் செலவிட்டு எம்முடைய காலத்தையும், கருத்தை யும் இதிற்போக்கி எமக்குத் தெரிந்தோர்களுடைய சரித்திரங் களையும், நேரகாலத்தோடே எமக்கு அனுப்பினோருடைய விஷ யங்களையுமே ஒருவாறு எழுதி முடித்தேம் இதோருபுறமிருக்க, யாம் பல வருடங்களாக சமஸ்தமான பிரபுக்களோடும், கன தனவான்களோடும், உத்தியோகஸ்தர்களோடும், நெருக்கமாகப் பழகி, அவரவர்களுடைய மனைவி, மக்கள் முதலானோருக்குக் கல்வி கற்பித்து அன்னியோன்னிய சினேகமாய் ஊடாடியதால், ஞானசாரியன் அல்லது உபாத்தியாயன் என்ற முறையில், அவர் கள் எம்மைக் கனம் பண்ணவும், யாம் அவரவர்களுடைய பெருமையையும், புகழையும், சந்ததி வரலாற்றையும் தெரிந்து புத்தகரூபமாய் எழுதவும் ஆரம்பித்தேம். இவற்றுள் நாவலரு டைய விஷயத்தைக் கௌமுதியினின்றுந் தெரிந்தேம். ஏனை யோர்களுடைய விஷயங்கள் அனைத்தும் எமதனுபவத்திற் கண் டும் கேட்டுமறிந்தவைகளேயாம். இப்புத்தகத்தை அச்சிடுதற்கு ஸ்ரீமான் அ. சி. தம்பையாவும், அவர் சகோதரரான ஸ்ரீமான் செல்லையாவும் எமக்குத் துணைக்காரணராயிருந்தனர். இவ்வுத் தமர்களுடைய நன்றியை என்ஞான்றும் போற்றத்தக்கது. இதில் எஞ்சியவர்களுடைய சரித்திரங்களை மறு பதிப்பில் விரிவாய்க் கூறுவேம்.

" குணநாடிக் குற்றமுநாடி யவற்றுள்
மிகைநாடி மிக்ககொளல். "

சுபமஸ்து

சு. இரத்தினசாமி ஐயர்.

*கொம்பனித்தெரு, அரசினா புதிய பாடசாலைத் தமிழ்ப் பண்டிதர்*

*கொழும்பு.*
15-11-1929.



# Mayn Makkal Charitiram.

பிரபல

# மேன்மக்கள் சரித்திரம்.

## Hon. Sir. P. Arunachalam, M. A. (Cantab) C. C. S

### A



ஸ்ரீமான். சேர். அருணசலம்:—காலஞ்சென்ற இப்பெரியார் இந்நகரில் சகலமான செல்வங்களாலும், உத்தியோகத்தாலும், கீர்த்திப்பிரதாபமுற்று விளங்கிய திரு. பொன்னம்பல முதலியாரவர்களின் அருந்தவப்புதல்வராவர். இவர் இங்கிலாந்து சென்று உயர்தரக் கல்விகற்று, பட்டங்களை வகித்து, அரசாங்கத்தில் வெகுகாலமாகப் பெரும் பெரும் உத்தியோகங்களைக் கையாண்டு வந்தனர். இலங்கையின் நானுபகுதிகளிலும் டிஸ்திறிக் நீதிபதியாயிருந்து தமதுகடமையை அதிக திறமையோடு பார்த்து வந்தனர். இவருடைய கல்வித் திறமையையும், விவேகத்தையும், அரசியல் ஞானத்தையும், சாதுரியத்தையும், வாக்குவல்லபத்தையும் நன்குணர்ந்தஅரசினர், இவரை மேலானபதவியில், பொறுப்புவாய்ந்த ரிஜிஸ்டர் ஜெனரல் (Reg. Gnl ) என்னும் பெரும் உத்தியோகத்தைப் பார்க்கும்படி நியமித்தனர். அக்காலத்திருந்த தமிழ்மக்களுள் இவ்வுத்தியோகத்தை அதிக திறமையோடு பார்க்கக்கூடிய அனுபவ சாலியாயிருந்தவர் இவர் ஒருவரேயாம். ஸ்ரீமான். அருணசலம் விவேகத்திலும், நியாயப்பிரமாணங்களைச் சட்டதிட்டஞ் செய்வதிலும் மகா சாமார்த்தியமுள்ளவரானபடியால் கட்டுபாடுகளையும், நிபந்தனைகளையும் புதிதாயேற்படுத்தி, னொத்தாரிசுமாரை நன்னிலைப்படுத்தி, தமிழ்ப்பாஷையையும் நன்கு கற்கும்படி விருத்திபண்ணிவைத்தனர். இவ்வுத்தியோகஸ்தர்கள் தாய்மொழியாகிய தமிழ்ப் பாஷையைக் கட்டாயமாகக் கற்கவேண்டு மென்ற பிரமாணத்தை அக்காலத்தில் நிறுவிய உத்தமரும் இவரே! அதுமுதலாகத் தமிழ்மொழி வழங்கலாயிற்று. ஸ்ரீமான். அருணசலமவர்கள்

ஆன்மசுகத்துக்கும், அறிவு விருத்திக்கும் ஏற்றதாகிய கல்வியிலே மிக்க விருப்புடையாயிருந்து பதிசாத்திரங்களை ஓதி அதன் பொருளை யறிந்து பாவங்களை விலக்கிப் புண்ணியங்களை அனுஷ்டித்துக் கடவுளை மெய்யன்போடு வழிபட்டு வந்தனர். இப் பெரியார் பரோபகாரமாகச் செய்திருக்கின்ற அரும் பெருஞ் செயல்களை எழுதப்புகின் ஒரு பெரும் பிரபந்தமாய்விடும். ஆதலால் சிலவற்றைச் சுருக்கமாகக் கூறி முடிப்போம். இலங்கையில் ஒருபோதுமில்லாத சிலோன் சோஷல் சேர்விஸ் என்னும் பொது ஜன சேவைச் சங்க மொன்றை ஏழைகள் பாலிரக்கங் கொண்டு முதலாவதாக ஸ்தாபித்தனர். நேஷனல் காங்கிரஸ் என்னும் தேசீய மகா சபையையும் மகாஜன சபையையும் தமிழ்லீக் என்னும் ஐக்கிய சபையையும் இவரே ஸ்தாபித்தனர். யூனிவேசிற்றி யென்னும் ஸர்வ கலாசாலையை இந்நகரில் ஸ்தாபிக்க வேண்டுமென்று முதலாவதாக பெரும்பிரயாசை யெடுத்தவரும் இவரே! அதிக விலையேறப் பெற்ற தமது புத்தகசாலையை இக்கலாசாலைக்கே இனாமாகக் கொடுத்தனர். தமிழ் மக்களுக்காகிய சற்கருமங்கள் பலவற்றையும் சைவசமய விருத்திக்காகிய அரும்பெரும் உதவிகளையும் திரிகரண சுத்தியோடு செய்து வைத்தனர். சமய சம்பந்தமாகச் சொல்லுகில் இலங்கைச் சைவ பரிபாலன சபையை நன்கு நடாத்திப் பெரும்பொருளைச் செலவிட்டுப் பிரசாரகர்களை நியோகித்துச் சனங்களுக்குச் சமயபோதனைகளைச் செய்வித்து வந்தனர். விவேகானந்த சபை முதலானவற்றில் அக்கிராசனம் வகித்தனர். இதுபோன்ற சபைகளுக்கும், சங்கங்களுக்கும், சிவாலயம், மடாலயம், வித்தியாலயம், முதலானவற்றிற்கும் இல்லையென்னாது பொருள் கொடுத்து வந்தனர்.

திசைமாறுமையிலிருந்து கதிர்காம க்ஷேத்திரத்துக்குச் செல்ல வேண்டிய காடுகளை வெட்டி வழி திறந்து நற்பாதையாக்கி வைத்தனர். இதன் பொருட்டாக இவர் செலவிட்ட பணம் கொஞ்சமல்ல! யாத்திரை வாசிகள் இலகுவாய் சென்று வருவதற்கான மார்க்கத்தை ஏற்படுத்தி, கதிர்காம க்ஷேத்திர மகிமையை நன்காராய்ந்து, பலருக்கும் பயன்படுமாறு எழுதிப் புத்தக ரூபமாய் அச்சிட்டு உபகரித்தனர். ஞானிகள் யோகிகளிடத்தன்பு, விசுவாசமுடையவர். ஆனைக்குட்டிச் சாமியாரைப் பிரதிஷ்டை செய்து கோவில் கட்டுவித்தனர். தமது தந்தையினால் ஸ்தாபிக்கப்பட்ட

பொன்னம்பலவாணேசர் ஆலயத்தை சிலகாலம் பரிபாலித்து வந்தனர். ஆகமவுணர்ச்சி யுடையவராதலால் பழிபாவங்கட்குப்பயந்து தேவாலயத்தில் பூசை உற்சவ முதலியவற்றை சிரத்தையோடு விதிப்படி நடாத்தி வந்தனர். உத்தம தருமங்களிலே தமது பொருளைச் செலவிட்டனர். தமிழ் மக்களுள் நேத்திரம்போல விளங்கியவரும் மகாராணியாராலும், சக்கரவர்த்தியவர்களாலும், ஊரவர்களாலும், பிறசமயத்தவர்களாலும், சன்மானிக்கப்பெற்றனர். இன்சொல், இரக்கம், ஈகை, பொறை அடக்கம், சாந்தம், சற்குணம், சைவாசாரம், சிவத்தியானம், சிவபக்தி, சிவதொண்டு, முதலான சிறந்த குணங்களை அணிகலமாகவுடையவர். இவருக்கு விவாகம் ஆதிகாலத்துத் தமிழ் அரசர் வம்சத்திலே தனவந்தராகவும் பிரபுவாகவு மிருந்து தம்காலத்தில் பற்பல தருமங்களையும், சிவாலயம், மடாலயம், முதலான சிவபுண்ணியங்களையும், செய்து பெருங்கீர்த்திப் பிரதாபத்தோடிருந்த ஸ்ரீமான் நமசிவாய முதலியாரவர்களின் புத்திரி, ஸ்ரீமதி சோர்னம்மாளை விவாகஞ் செய்து சற்புத்திர சந்தானங்களைப் பெற்றனர். இவர் இந்தியாவிலுள்ள புண்ணிய ஸ்தலங்களைத் தரிசித்து வரும் மார்க்கத்தில் மதுரையென்னும் திவ்விய க்ஷேத்திரத்தில் சோமசுந்தரப் பெருமானது திருவடி நிழலையடைந்தனர்.

## **Athiar Arunachalam, Esq**. Store Keeper, C. C. Co.,



ஸ்ரீமான் அத்தியார் அருணசலம்:—இவ்வுத்தமர் நீர்வேலியை சென்ம ஸ்தானமாகவுடையவர். இவர் சிவபக்தியிற் சிறந்த யோக்கியராய் சற்குணமுடையவராய் சற்கருமங்கள் பலவற்றைச் செய்து வருகின்றனர். நீர்வேலியில் பிரபலமுற்று விளங்கும் சைவப்பிரகாச வித்தியாசாலையின் அதிபரும் சொந்தக்காறருமாவர். தற்போது கொம்மேஷயல் கொம்பனியில் மேலான உத்தியோகஸ்தராய், பரோபகார சிலராய் விளங்குகின்றனர்.

## Arumuga Navalar.

ஸ்ரீமான் ஆறுமுக நாவலர் :— இப் பெரியாருடைய மூதாதைகள் சிங்கையாரியச் சக்கிரவர்த்தி காலத்தில் இந்தியாவினின்றும் வந்து திருநெல்வேலியில் குடியேறிய கார்காத்த வேளாள குலதிலகராய் விளங்கிய சைவப்பிரபுக்கள் வமிசத்துத் தோன்றிய பரமானந்தர் கந்தர் என்பவருடைய புத்திரருளொருவராவர். அவர்களின் பெயர், தியாகர், சின்னத்தம்பி, பூதத்தம்பி, பரமானந்தர், தம்பு, ஆறுமுகம் என அறுவர் இருந்தனர். இவர்களுள் மூத்த சகோதரர்கள் அரசாங்கத்தில் பலவிதமான பெரும் உத்தியோகங்களைப் பெற்றிருந்தனர். இப்பெரியார் சிறுவயதிலே நற்பழக்க ஒழுககமுடையராய் இலக்கண இலக்கியங்களையும், சைவ சித்தாந்த சாஸ்திரங்களையும், சேனாதிராய முதலியாரிடமும், சரவணமுத்துப் புலவரிடத்திலும் கற்று, வடமொழி தென்மொழி இரண்டிலும், மகா பாண்டித்யமுடையவராய், அரிய நூல்களுக்கு உரையெழுதி அச்சிட்டு பிரசங்கமாரி பொழிந்து, சைவ மதஸ்தாபனஞ்செய்து சிதம்பரத்திலும், யாழ்ப்பாணத்திலும், சைவவித்தியாசாலைகளை ஏற்படுத்தி திருவாவடுதுறை ஆதீனத்துக்குசென்று "ஆறுமுக நாவலர்" என்னும சிறப்புப்பெயரையும் பெற்றனர். அதுமுதல் சென்ற சென்ற விடங்களெல்லாம் ஆறுமுக நாவலர் என்ற பெயரை நாட்டி புலவர்களாலும், வித்துவான்களாலும், அரசர்களாலும் நன்கு மதிக்கப்பெற்றனர். யாழ்ப்பாணத்தவர்களெல்லாம் சைவசமயத்தின் உண்மையையும், அதன் பெருமையையும் அறிந்து, சமயநூல்களையும் பிறவற்றையும் பன்மடங்கு விஷேடமாய் கற்பதற்குத் துணைக்காரணராயிருந்தனர், ஸ்ரீமான ஆறுமுக நாவலரவர்களுடைய பிரசங்கத்தின் கிளர்ச்சியால் சைவ சமயத்தின் பெருமை உலகெங்கும் விளங்கலாயிற்று.

## S. Aiyathurai Aiyer, Kondavil.

பிரமஸ்ரீ ஐயாத்துரை ஐயர்:—இவருடைய பூர்வீகம் தஞ்சாவூர் ஜில்லாவைச்சார்ந்த கணபதி அக்கிரகாரமேயாம். இவர் ஸ்மார்த்த வைதீகப்பிராமண குடும்பத்தில் ஸ்ரீவத்ச கோத்திரத்தில் தோன்றியவரும் சோழதேசத்து வடமனும் ஆவர். இவருடைய பிதா மீனாட்சிசுந்தர சாஸ்திரிகள். இவரை யாழ்ப்பாணத்திலுள்ள

பெரும்பாலார் "வடக்கத்தையில் ஐயரென்றும்" தெலுங்கு பாஷை யில் திறமை வாய்ந்தவரானதால் சிலர் "தெலுங்கையர்" என்றும் வழங்கலாயினர். இவர் இந்தியாவிலிருந்து, யாழ்ப்பாணத்துக்கு வந்து ஏறக்குறைய எண்பது வருடங்களாகின்றன. இவர் வட மொழி தென்மொழி வல்லுனராய், வேதவிற்பன்னராய் சமஸ்த சாஸ்திரங்களிலும் மகா பாண்டித்தியமுடையவராய் ஜோதிடம், மாந்திரீகம், சங்கீதம் முதலான வித்தைகளிற் சிறந்த வித்துவ சிரோன்மணியாய், பிராமணருள் பூர்வக்கிரியை அபரக்கிரியை முதலானவற்றை அகமவிதிப்படி செய்துவைக்கின்றவாத்தியாராய் குரு சிரேஷ்டராய் பெருங்கியாதிபெற்று விளங்கிய பெரியாரின புத்திரராவர். இவ்வுத்தமர் தம்பிதாவைப்போல் வடமொழி தென் மொழி இரண்டிலும் வல்லுனராய சிவபூஜா துரந்தரராய், நைட்டி கராய், யாவராலும் நன்கு மதிக்கப்பெற்ற உத்தமராய் கோண்டா வில்லில் வசிக்கின்றனர். இவரை "வடக்கத்தையில்" ஐயர் மகன் என்றும் சொல்வார்கள், இவரின் ஏகபுத்திரரான சுப்பிரமணிய ஐயரென்பவர் தற்போது கொழும்பில் வசிக்கின்றனர்.

## M. Arasanayagam Esq. Com Agent.

ஸ்ரீமான். அரசநாயகம்:—இவர் நவாலி, மானிப்பாய் என்னுமிடங்களில் பிரக்கியாதிபெற்று விளங்கிய அரசநாயக முதலி யார் வம்சத்துத் தோன்றிய கந்தேசர், முருக உடையார், மயில் வாகனமவர்களின் இரண்டாவது புத்திரராவர். இவர் சில வருடங் களுக்கு முன்னர் கொழும்பிலே கொம்மிஷன் ஏஜண்டாயும் சீமை வர்த்தகராயும், தனவந்தராயும், புண்ணிய சீலராயும், பரம யோக்கியராயுமிருந்து தானதருமங்களை இயன்றளவு செய்து உல கில் பெரும் புகழ் பெற்று சிவபதமடைந்தனர். இவ்வுத்தமருக்கு பிள்ளைகள் ஐந்து. தையல்நாயகி, மனோன்மணி, தியாகராசா, பத் மநாதன், என்னும் நாமங்களையுடைய சந்தானங்களைப் பெற்றனர். இப்பிள்ளைகள் பிதா மாதாக்களைப் போல் நற்பழக்க வொழுக்கம், சைவாசாரம், பிரபுத்துவம், பெருந்தன்மை, முதலாகிய சிறந்த குணங்களையுடைய சற்புத்திரர்களாயும் மேன்மக்களாயும் விளங்கு கின்றனர். ஸ்ரீமான் அரசநாயகம் தரும சிந்தையுடைய பிரபுவான தால் "புண்ணியபயிரிற் புண்ணியந் தெரியும்" என்பதற்கிணங்க இவருடைய பிள்ளைகள் நன் நிலையிலிருக்கின்றனர்.

## S. R. Arianayakam, Esq. Proctor, S C.

பிறக்டர் எஸ். ஆர். அரியநாயகம்:—இவரைப்பற்றி ஆராயுமிடத்து இவருடையமூதாதைகள், மானிப்பாயாரைச்சார்ந்த பிரபலஸ்தர்களாயும், மேன்மக்களாயும், விளங்கினார்களென்று அறியக்கிடக்கின்றது. இவர் மூடியர், கனகசபை என்பவருக்கு பௌத்திரரும், இராச கோபால பிள்ளை என்பவருக்கு புத்திரருமாவர். இவருடைய மாதாவழியை ஆராயுமிடத்து, அராலி வடக்கிலே, சைவவேளாண் செட்டி மரபிலே, உயர்குலத்தோராயிருந்த சின்னத்தம்பிச்செட்டியார், வயித்திலிங்கச்செட்டியார், என்போர் பரம்பரையான சைவர்களாயும், சாதிமான்களாயும், விளங்கினார்கள். இவர்களுடைய புத்திரராகிய இராமுப்பிள்ளை செட்டியார் என்பவர் கிறிஸ்து மார்க்கத்தைத் தழுவி 'பெக்காஸ்' என்னும் பெயருடன் பிரபல வைத்தியராக விளங்கினார். இவருடைய புத்திரர் தம்பையா பெக்காஸ் என்பவர் போதகராயிருந்தார். இராமுப்பிள்ளைச் செட்டியாருக்கும், இந்தியாவில் போலீஸ் இன்ஸ்பெக்டராயிருந்த கார்த்திகேச பிள்ளையவர்களுக்கும், மேலே காட்டிய முதியோருக்கும் இவர் பௌத்திரராவர். இத்தகையோரைச் சார்ந்த, அரியநாயகம் என்பவர், குலத்துக்கேற்ற குணமும், பரோபகாரமும, புத்திசாதுரியமு முடையராய், பிரபல நொத்தாரிசாயும், சுப்பிறியங்கோட்டுத் 'தாணியாயும் விளங்குகின்றார். இவருடைய தன்மைகளை உலகம் நன்கறியுமாதலால், சுருக்கமாய் எழுதலானோம். இவர் டாக்டர் சீ. எஸ். இரத்தினம் அவர்களுடைய புத்திரியை மணமுடித்துப் புத்திர சந்தானங்களைப் பெற்றனர்.

## Dr. M. J. Appasamy, Medical Practitioner, Mutuval.

ஸ்ரீமான் டாக்டர் அப்பாசாமி:—இவருடைய பூர்வீகம் இந்தியா. தற்காலம் கொழும்பில் வசிக்கின்றனர். கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்தவர். உயர்தரக்கல்வி கற்றவர். நற்பழக்கம் நல்லொழுக்கம், சாந்தகுணம், பொறுமை, இன்சொல், இரக்கம், ஏழைகளிடத்தன்பு, விஸ்வாசம் முதலான தன்மைகளையுடையவர். தேவபக்தியுள்ளவர் சைவசமயாசாரமுடையவர். சன்மார்க்கமுள்

பிரபுதவம் பொருந்திய



ஸ்ரீமான்,

டாக்டர், எம். ஜே. அப்பாசாமி.

Meenambal Press, Colombo

ளவர். பழிபாவங்கட்குப் பயந்தவர். அரசாங்கத்தாராலும், பிற ராலும் நன்கு மதிக்கப்பட்டவர். காலஞ்சென்ற, டாக்டர் முத்துக்குமாரு அவர்களோடு, பல வருடங்களாகக் கடமை பார்த்து உலகில் நற்கியாதி பெற்றவர். உப்புக்குளத்தில் சொந்தமாக மருந்துச்சாலை யொன்றை ஸ்தாபித்து நடாத்திவருகின்றனர். வித்தியாசாலைகளுக்கும், தருமஸ்தாபனங்கட்கும் தம்மாலியன்ற பொருளுபகரித்தவர். உலகில் கீர்த்திவாய்ந்த கிறீஸ்தவப் பாதிரிமாராலும், மேற்றிராணிமாராலும், பெரிதுஞ் சன்மானிக்கப் பட்டவர். பொது ஜனசேவை செய்பவர். தேசாபிமானமுடையவர். சோஷல் சேர்விஸ், மெடிக்கல் வைத்திய சங்கம், ரேயல் ஏஷியாற்றிசொசைற்றி, தமிழ் யூனியன், விவேகானந்தசபை, முதலாகிய சங்கங்களிலும், பற்பல சபைகளிலும், அங்கத்தவராவர். பலவித செல்வாக்குமுடைய தனவானுமாவர். இவர் காலஞ்சென்ற திருவாளர். கோவிந்த பிள்ளையின் புத்திரியை விவாகஞ்செய்து புத்திரப் பேறு பெற்று உப்புக்குளத்தில் வசிக்கின்றனர். நல்மனதுடைய இவ்வுத்தமர், கதிர்காமஸ்தலத்தில் திருமடமொன்றை அமைத்தற் பொருட்டு முயற்சி செய்வதாக அறியலானேம் குணசிரேஷ்டராகிய ஸ்ரீமான் அப்பாசாமி பிள்ளை ஆன்மசுகத்துக்கும் நல்வழிக்கும் ஏற்றதாகிய சற்கருமங்களை செய்யும்பொருட்டு எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிவாராக.

## **M. A. Arulanandan Esq**. District Judge, CHILAW.

ஸ்ரீமான் அருளானந்தம்:—இவர் காலஞ்சென்ற முருகேசு அவர்களின் அருந்தவப் புதல்வராவர். கொழும்பிலும் யாழ்ப்பாணத்திலும் கல்வி கற்றவர். நியாயப் பிரமாணங்களை கற்று மகா பண்டித்தியமுடையவராய் பரீக்ஷைகளில் தேறி, யாழ்ப்பாணம் கோடுகளிற் சிலகாலம் கடமை பார்த்த பின், கொழும்பில் சிலவருடங்களாகப் பிரபல நியாய துரந்தராயிருந்து பலராலும் நன்குமதிக்கப்பெற்ற பேரறிஞராவர். இவர் வாக்குச் சாதுர்யமுடையர். எவ்விஷயத்தையும் பேசக்கூடிய திறமையுள்ளவர். அரசியல் ஞானம் பெரிதுமுடையர். தமிழபிமானம் உடையர், இரக்கம், வாய்மை, பொறை, அடக்கம் முதலாயுள்ள சிறந்த குணங்களமையப் பெற்றவர், தேசாபிமானமுடையவர்,

கதராடை தரிப்பவர். தேச தொண்டும் பொதுஜன சேவையும் செய்பவர். இந்தியாவில் வருஷந்தோறும் நடைபெற்றுவரும் தேசிய மகா சபைக்குச் செல்பவர். இலங்கையில் தேசிய மகா சபையை ஏற்படுத்தும்பொருட்டு முயற்சித்தவர். தமிழர் சிங்களவர் என்னும் இருதிறத்தாரையும் ஐக்கியப் படுத்தியவர். மகாஜன சபை அங்கத்தவராகவும், தேசிய சபைக்காரியதரிசியாகவும் சிறிது காலம் கடமை பார்த்தவர். தற்போது டிஸ்திரிக் கோட்டு நீதிபதியாக நியமனம் பெற்றுச் சிலாவத்திலே வசிக்கின்றனர். யாழ்ப்பாணம் நல்லூர் கந்தசாமி கோவில் வழக்கிலே பெருமுயற்சியெடுத்தவரும் இவ்வாலயத்தை பொதுஸ்தலமாக்க வேண்டுமென்று பிரயாசைப்பட்டு வரும் இவரேயாவர். ஸ்ரீமான் அருணாசலமவர்களுடைய அபிப்பிராயம்போல இவ்வாலயம் பொதுக் கோவிலாக வழங்கும்படி தீர்ப்புச் செய்யப்பட்டது.

## S Ambalavanar Esq Shroff Mudaliyar Treasury.

ஸ்ரீமான் அம்பலவாணர்:—இவர் சண்டிருப்பாயில் பாரிய தனவந்தர்களாயும், சிவநேயச் செல்வர்களாயும், விளங்கிய பெரியார் சந்ததியைச் சார்ந்த சரவணமுத்து, சின்னப்பா அவர்களின் புத்திரராவர். இவ்வுத்தமர் இலங்கைப் புகையிரதப் பகுதியிலும், மற்றைய மாகாணங்களிலுள்ள கச்சேரிகளிலும், துறைமுகப்பகுதியிலும் மிகப்பொறுப்பு வாய்ந்த, பிரதம சிறாப்புத்தியோகத்தை வகித்து மேலுத்தியோகஸ்தர்களாலும், பிறராலும் சன்மானிக்கப்பட்டு வருகின்றனர். ஸ்ரீமான் அம்பலவாண முதலியார் நற்குலத்திலேயுள்ளவரானதால், சைவாசாரம், சிவத்தியானம் ஆலயவழிபாடு, இன்சொல், ஈகை, இரக்கம், சாந்தம், சற்குணம், முதலாகிய அரும் பெருங்குணங்களை இயல்பாயுடைய பெருமகனவர். தேசமெங்கும் புகழ்பெற்ற புண்ணிய சீலரான கதிரவேற்சிறாப்பரவர்களின் புத்திரி ஸ்ரீமதி சிவயோகம் என்னும் குலமகளை விவாகஞ்செய்து சற்புத்திர சந்தானங்களைப் பெற்றனர். இவருடைய புத்திரன் கல்வியறிவொழுக்கங்களிலே சிறந்த யோக்கியராய் சர்வகலாசாலையில் உயர்தரக் கல்விகற்று நியாயப்பிரமாணங்களைக் கற்று வருகின்றனர்.

## C. Ariyanayagam Esq. Proctor, S. C. Matale.



ஸ்ரீமான் பிறக்டர் அரியநாயகம்:—இவர் மாத்தளை யென வழங்கும் பன்னகாமத்தில், பிரபல நியாயதுரந்தரராகவும் பிரசித்த நொத்தாரிசாகவும், ஏர்பன் கவுன்சில் அக்கிராசனராக வும், கடமை பார்த்து வருகின்றனர். ஸ்ரீமான் அரியநாயகமவர் கள், கல்வியறிவொழுக்கங்களிலும், பொதுஜனசேவை செய்வதி லும் அரசியல் ஞானத்திலும், வழக்குகளை நடாத்தும் திறமையி லும், வாக்குசாதுரியமாகப் பேசுந்திறமையிலும், நேர்மையிலும் சிறந்தவர். பட்டண பரிபாலன சங்கத்து அக்கிராசனராக நியம னம் பெற்றபின்னர், பன்னகாமத்தில் வசிக்கின்ற ஜனங்களுக்கு அத்தியாவசியமாய் வேண்டிய சௌகரியங்களையும, சுகாதார முறைக்கேற்ற வசதிகளையும் உண்டாக்கி வைத்தனர். சமயாபி மானமு சாதியாபிமானம், இன்சொல், இரக்கம், ஈகை, ஆதிய குணங்களை உடையவரெனப் பலர் சொல்லக் கேள்விப்பட்டுள் ளோம். யாம் இவரை நேரில்கண்டு சம்பாஷித்ததில்லை.

## C. Arulambalam Advocate

ஸ்ரீமான் அருளம்பலம் அத்வகாத்:—இவர், யாழ்ப் பாணப்பட்டினத்தில் பிரபல நியாய துரந்தரராயும், அயிட்டிங் நீதி பதியாயும், பாரியதனவந்தராயும், சிவநேயச்செல்வராயும், பிரக்கி யாதைபெறறு பரோபகாரசீலராய், பெருந்தகையாளராய், விளங் கும் திருவாளர், வி. காசிப்பிள்ளை யவர்களின் புத்திரசிகாமணி யாவர். இவர், 1885-ம் ஆண்டு ஜெனனமானவர். இந்துக் கல்லூரியிலும், றோயல் கல்லூரிலும், கல்விகற்ற பின்னர், நியா யப் பிரமாணங்களில் வல்லுனராய், பிரபல நியாய துரந்தர ரானூர். ஸ்ரீமான் அருளம்பலம் நற்பழக்க வொழுக்கங்களிலும், ஈஸ்வரபக்தியிலும், பொதுஜன சேவைசெய்தலிலும், அறிவிலும், விவேகத்திலும், குணத்திலும் சிறந்த மேதாவியாவர். தேசாபிமா னம், பாஷாபிமானம், மதாபிமானம், என்னும் பேரபிமானங்களை

யுடைய பேரறிஞருமாவர். சைவசமயவிருத்திக்கேற்ற சிவாலயம், மடாலயம், வித்தியாலயம், முதலாயுள்ள பலவற்றை ஸ்தாபித்து பரிபாலனம் செய்துவரும் தர்மகர்த்தாவும், பட்டினபரிபாலன சங்கத்து அங்கத்தவரும் சைவாசாரம், சிவத்தியானம், சிவபக்தி முதலாகிய சிறந்த குணங்களை அணிகலமாயுடைய உத்தம புருஷருமாவர்.

## C. Arumugam, Shroff, National Bank.

**ஸ்ரீமான் சிறுப்பர் ஆறுமுகம்**:—இவர் யாழ்ப்பாணத்துச் சண்டிருப்பா யென்னுமிடத்திலுள்ள பெரும் பிரபுக்கள் வமிசத்தைச் சார்ந்தவர். இந்நகரில் 1880-ம் ஆண்டு நவம்பர் மாதம் ஒன்பதாந் திகதி ஜெனனமானவர். நகுலேஸ்வர மென்னும் திவ்வியஸ்தலமாய் விளங்கும் கீரிமலையில் சிவாலயம், மடாலயம், வித்தியாலயம், தண்ணீர்ப்பந்தல், அன்னசத்திரம், சுமைதாங்கி, திருக்குளம், திருநந்தனவனம், நல்லதண்ணீர்க் கிணறு முதலான சிவபுண்ணியங்களையும், சிவதொண்டுகளையும், இடைவிடாமல் ஊக்கத்தோடும், அன்போடும், பரிபாலனம் நடாத்தி, உலகில் அழியாப் புகழ்பெற்ற மகாபுண்ணிய சீலரான, ஸ்ரீமான் கதிரைவேற் சிறுப்பரவர்களின் புத்திர சிகாமணிகளுள், இவர் கனிஷ்டராவர். இவர், கொழும்பிலுள்ள கலாசாலைகளிற் கல்விகற்றவர். நற்பழக்கமும், நல்லொழுக்கமுமுடைய, சைவாசாரமுள்ளவர். சிவபக்தியுடையவர், ஆலயவழிபாடுசெய்பவர். தேவாலயங்களிலே பூசை உற்சவம் முதலியவற்றை நடத்துபவர். இரப்போருக்கு இல்லையென்னாது பொருள்கொடுப்பவர். ஆண்டிபரதேசிகளுக்கு அன்னம்கொடுப்பவர். "தந்தையெவ்வழி மைந்தனவ்வழி" யென்றபடி தம் பிதாவைப்போல் சற்கருமங்களைச்செய்பவர். சைவசமயவிருத்தியின்பொருட்டு பல உதவிகள் செய்பவர். தம்மாலியன்ற தானதருமங்களை அன்போடு கொடுப்பவர். தீர்த்த யாத்திரை, ஸ்தல யாத்திரை செய்தவர், சாந்தகுணமுடையவர். இன்சொல், ஈகை, இரக்கம், ஏழைகளிடத்தன்பு, விசுவாசம், முதலாயுள்ள மேலான குணங்களமைந்தவர். பழிபாவங்களை விலக்கிப் புண்ணியங்களைச் செய்பவர். தேவாலயங்களுக்கும், மடாலயங்களுக்கும், திருப்பணி வேலைகளுக்கும், பெருந்தொகைப்பொருள் கொடுத்தவர். தொழில்செய்து சீவனஞ் செய்யச் சக்தியில்லாத

குருடர், முடவர், தரித்திரர், வியாதியாளர், வயோதிகர், முதலானோருக்கும், மரியாதையான தக்க குடும்பங்களில் வறுமைப் பிணியால் வருந்துவோர்க்கும், பொருளுதவி செய்பவர். ஆன்ம இரக்கம் உள்ளவர். பெருந்தன்மையுடையவர். யார் எக்கருமங்களுக்கென்று கேட்டாலும், முகமலர்ச்சியோடு தருமங்கொடுப்பவர். "குலத்தளவேயாகுங்குணம்" என்றநீதிப்படி, ஸ்ரீமான் ஆறுமுகமவர்கள். பரம்பரையாகப் புண்ணியங்களைச்செய்துவரும், மேலான குடும்பத்தைச் சார்ந்தவரானபடியால், மேலானகுணமும், மேலான செயலும், மேலான தன்மையும், மேலான கொடையும் மேலான புத்தியும், மேலான வாழ்வும், மேலான கீர்த்தியும், மேலான சம்பத்தும், அட்ட ஐசுவரியமும் பொருந்திய, பரோபகார சீலராய் வாழ்தலைக்காண்கின்றோம். நல்ல வம்சத்தில் மேலான மரபில் பிறந்தவருக்குத்தான், இவ்விதகுணங்களுண்டாகும்மேயல்லாது, சாமானியருக்கு இத்தன்மைகளுண்டாகாதென்பதைத் தருமசாஸ்திரங்களிலே விரித்துக்கூறப்பட்டன. ஔவைப்பிராட்டியாரும், "நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தாராலும் இல்லையென மாட்டார்" என்பதனால் நன்குவிளங்கக்கூறியுள்ளார். இதுவே போதிசன்றாகும். ஸ்ரீமான் ஆறுமுகமவர்களின் உத்தியோகவிஷயமாகச்சொல்லுகில், இதற்குமுன்னர் பற்பல கம்பனிகளில் புறோக்கராகவும், இலங்கைப்புகைரதப்பகுதியில் சிறுப்பராகவும் கடமைப்பார்த்தவர். பலவிடங்களிலும் உத்தியோகம்பார்த்த அநுபவசாலியுமாவார். இவ்வூத்தமர் தமதுசொந்தப்பொறுப்பில் "இந்து சிலோன் றேடிங்கம்பனி" என்கின்ற கம்பேனியொன்றை ஸ்தாபித்து நடாத்திவருகின்றனர். சைவபரிபாலனசபை, விவேகானந்தசபை, தமிழ்யூனியன், என்னுஞ் சபைகளிலும், சங்கங்களிலும் அங்கத்தவராவர். ஆன்மார்த்தவிஷயமாக ஆன்மலாபத்தையும், பரார்த்தவிஷயமாகப்பொதுக்கருமங்களையும், செய்திருக்கின்றனர். மகாஉத்தமியாய் விளங்கிய பதிவிரதை ஸ்ரீமதி. பொன்னம்மாளென்னும், பெண்மணியை, விவாகம்செய்து, பரிமளம், கமலம், என்கிற இருபெண்மணிகளைப்பெற்றனர். இப்பெண்மணிகள் எம்மிடத்திலே கல்விகற்கின்றகாலத்தில் நன்கறிவோம். பிதாமாதாவைப்போல் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்தகுணசாலிகளாவர். தீர்க்காயுளைப்பெற்று இனிதுவாழ எல்லாம்வல்ல இறைவன் அருள்புரிவாராக.

## Lady Arunachalam.

ஸ்ரீமதி சொர்ணம்மாள்:—இப்பெண்ணரசியின் பூர்வம், சிங்கையாரியச்சக்கிரவர்த்தி காலத்திலே, யாழ்ப்பாணத்தைச் சார்ந்த முகமாலைக்கு, அதிபர்களாய், அட்டஐசுவரியங்களும், பொருந்த குபேரசம்பத்துக்களையுடைய குறுநிலமன்னர்களாய், அரசாண்ட தமிழ் அரசர் வமிசத்துத்தோன்றிய இலங்கைநாத முதலியார், முத்துடையாமுதலியார், சிவகுருநாதமுதலியார், நமசிவாயமுதலியாரென, உலகில் பெரும்புகழும், கீர்த்தியும், பெற்று பிரபலஸ்தர்களாய், புண்ணிய சீலர்களாய், தருமவான்களாய், விளங்கிய பெரும் பிரபுக்கள் சந்ததியில், பெருங்குணமுடைய சீமாட்டியாய், ஸ்ரீமான் நமசிவாயமுதலியாரவர்களுக்குப் பூர்வ புண்ணிய சற்குணபுத்திரியாய, வந்துதித்த அருமைப்புதல்வியும், தமிழகத்தாருள் ராஜாவாகவிளங்கிய கௌரவ சேர் அருணசலந், துரையவர்களின் தாமபத்நினியுமாவர். இவ்வம்மையார் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்தவராய், சைவாசாரம், சிவத்தியானம், சிவபக்தி, அடியார்பக்தியுடையவராய் யோகிகள், ஞானிகள், சாதுக்கள், முதலானோரிடத்தன்புடையாராய், இன்சொல், இரக்கம் பரோபகாரம், பிரபுத்துவம், முதலாகிய தன்மைகளையுடைய குலமகளாய் இல்லறதருமத்தைக் குறைவறநடாத்தி உலகெங்கும் பிரக்கியாதிபெற்று, அறிவோடுகூடிய சற்புத்திர சந்தானங்களைப்பெற்றனர்.

### சிவபுண்ணியங்கள்.

ஸ்ரீமதி லேடி அம்மையார், தம்முடைய மூதாதையர்களைப் போல் சிவபுண்ணியங்களிலீடுபட்டு, சிவாலயம், மடாலயம், வித்தியாலயம், முதலானவற்றிற்கு பொருளுதவிசெய்து வருகின்றனர். சைவ சமய விருத்தியை உத்தேசித்துக் காலஞ்சென்ற துரையவர்களால் நடாத்தப்பட்ட சற்கருமங்களைக் கைவிடாமல் இவ்வம்மையார் வழமைபோல் நடாத்தி வருகின்றனர். துரையவர்களால் பிரதிஷ்டை செய்விக்கப் பெற்றதாய் விளங்கும் பன்னகாமம், பரமகுருசாமி மடத்தையும், ஆனைக்குட்டிச சாமியாரின் சமாதிக கோவிலில், விசேடமாயுள்ள திருப்பணிகளையும், மண்டபங்களையும், கட்டி பரிவார மூர்த்திகளையும், நவக்கிரகப் பிரதிஷ்டையையுஞ்

செய்வித்திருக்கின்றனர். சிவகாம சிதம்பரேஸ்வரராகிய ஸ்ரீ நட
ராஜமூர்த்தியின் பிரதிஷ்டையும் நடைபெறப் போவதாக அறிய
லானோம். மகாராணியால் சன்மானிக்கப் பெற்ற சீமாட்டியுமா
வர். ஸ்ரீமதி லேடி அம்மையாரின் இடையறா முயற்சியால் சிவ
கைங்கரியங்கள் குறைவின்றி நடைபெற்று வருகின்றன. சிவ
புண்ணியங்களில் பிரமைகொண்டிருக்கும் அம்மையாருக்கு திட
சரீரத்தையும் நீண்ட ஆயுளையுங் கொடுத்து சுகஜீவியாயிருக்கும்படி
சபாபதிச் சுவாமியார் அருள்புரிவாராக.

## B

## Dr. Brito Babapulle.

ஸ்ரீமான் டாக்டர் பபாப்பிள்ளை:— இவர், இந்நகரிற்
பாரிய தனவந்தர்களாயும், உத்தியோகஸ்தர்களாயும், பிரபுக்களா
யும், யோக்கியர்களாயும், பிரபலமுற்றுவிளங்கிய கொழும்புத்
தமிழர் வம்சத்துத் தோன்றிய, அந்தோனி றெட்றீகோ பபாப்
பிள்ளையின் புத்திரராவர். இவர் புதியதெருவென வழங்கும் கொ
ழும்புச் செட்டித்தெருவில் 1873-ம் ஆண்டு ஜனவரி மாதம் 22-ம்
திகதி ஜெனனமானவர். பாலியவயசுமுதல் நற்பழக்கமும், நற்
குணமும், நேர்மையும், தேவபக்தியும், கிறிஸ்துமதாபிமானமும்,
உடைய யோக்கியராய், சென் பெனடிக் கொலீச்சிலும், செந்தோ
மஸ் கொலீச்சிலும், கல்விகற்று, கேம்பிறிச் பரீட்சையிலும், வைத்
தியப்பரீட்சையிலும், சித்தியடைந்து, இங்கிலாந்து முதலிய
மேலைத்தேசங்களுக்குச் சென்று பலராலும் நன்குமதிக்கப்பெற்ற
பேரறிஞராய், ஹற்றன் டிக்கோயா, முதலிய இடங்களில், டிஸ்திரிக்
மெடிக்கல் அஸிஸ்டென்டாயிருந்து, பல மகத்தவர்களாலும், பிரபுக்
களாலும், நன்குமதிக்கப்பெற்றனர். அதன்பின்னர் கொழும்பிலே
யுள்ள பிரதான இடங்களுக்கு பிறப்பு, இறப்புப் பதிவு உத்தியோ
கஸ்தராய் நியமனம்பெற்றனர். சென்போல்ஸ், நீயூபசார், சென்ஸ
பத்தியான், முதலான வாட்டுகளில் கடமைபார்த்து உலகில் நற்
கியாதிபெற்றனர். ஸ்ரீமான் டாக்டர் பபாப்பிள்ளையவர்களின்
விசேடகுணங்களையும், தருமச்செயல்களையும், சொல்லுகில் இவர்,
சாந்தம், பொறை, அடக்கம், சற்குணம், பரோபகாரம், பெருந்
தன்மை, பிரபுத்துவம், ஏழைகளிடத்தன்பு, உற்சாகம், இன்
சொல், ஈகை, இரக்கம், முதலாகிய அரும் பெருங்குணங்களை

யுடைய உத்தமராய் பாரியகனவந்தராய், பிரக்கியாதிபெற்று விளங்கின்றனர். சாதியாபிமானமும், தேசாபிமானமும், பொதுஜன சேவையும் செய்பவர். அனேக பள்ளிக்கூடங்களுக்கும், பிறவற்றிற்கும் ஏராளமாகத் தருமங் கொடுத்திருக்கின்றனர். கொழும்பி லுள்ள தமிழ்ப் பிரபுக்கள் பலரோடும், ஏனைய மற்றச் ஜாதியார்களோடும், நட்பினராய் ஜாதிவேற்றுமை, மதவேற்றுமைகளின்றி சமத்துவமாயொழுகும் யோக்கியராவர். இவருடைய பிரபுத்துவத்தையும, பெருந்தன்மையையும், குணவிசேடத்தையும வியந்து சொல்லக்கேட்டிருக்கின்றோம்.

## Dr. W. Balendra, M R.C S L D S (Eng) L R C.P. (Lon)

ஸ்ரீமான் டாக்டர் பாலேந்திரா:—இவர் மானிப்பாயைச் சார்ந்தவர். அடிமை, குடிமை, ஐஸ்வரியம், செல்வம், செல்வாக்கு, பரோபகாரம், தானதருமம், ஜீவகாருண்யம முதலானவற்றோடு சிறந்து விளங்கிய உலகநாதர், தில்லையம்பலம், சின்னத்தம்பி, ஆதியோர் வழித்தோன்றலும், பிரபு சிகாமணியாய், உலகில் பெரும்புகழையும, பெருங்கியாதியையும் நாட்டிய, திருவாளர் மயிலுப்பிள்ளைச் சிறுப்பரவர்களின் பௌத்திரரும், ஸ்ரீமான் வைத்தியலிங்கச் சிறுப்பரவர்களின் இரண்டாவது புத்திரருமாவர். இவர் சிறு பிராயம் முதலாக ஆங்கிலக் கல்லூரிகளில் கல்வி கற்று, கேம்பிறிஜ் பரிசைஷகளில் திறமையோடு சித்திபெறறவர். அதன்பின்னர் இலங்கை யரசினருடைய ஆங்கில வைத்தியக் கல்லூரியில் உயர்தரக் கல்வி கற்று டாக்டர் பரிசைஷயில் தேறி L M S. என்ற பட்டத்தைப் பெற்றனர். ஸ்ரீமான் டாக்டா பாலேந்திராவின் திறமையை நன்குணர்ந்த மேலதிகாரிகள் இவரை வேலைபார்க்கும்படியாக, கண்டியைச் சார்ந்த நாடுகளிலும், நுவரேலியா போன்ற இடங்களுக்கும் அனுப்பி கடமைகள் பார்க்கும்படி நியமனம் பெற்றனர். இங்ஙனம் நாலுபகுதிகளிலும் கடமை பார்த்து உலகில் நற்கியாதியையும், நற்பெயரையும் பெற்றனா. சிலவருடங்களான பின்னர் இவர், இங்கிலாந்து முதலான மேலைத்தேசங்களுக்குச் சென்று வைத்திய முயற்சிக்குரிய நூதன முறைகளை நன்கு கறறு, பெரும் பட்டங்களையும் பெற்றுக்கொண்டனர். அதன்பின்னர் அங்கிருந்து அமெரிக்காவுக்குச் சென்று சிலவருடங்கள் தாமசித்து தந்த வைத்தியமென்னும் பல்லு வைத்தியத்தையும், பற்கட்டுகின்ற

விதங்களையும், அதற்கேற்ற நவீன முறைகளையும், அதன் தத்துவார்த்தங்களைப் பற்றிய சாஸ்திரங்களையும், நன்கு கற்று அதிலும் முதன்மையாகச் சித்திபெற்று, தந்த வைத்தியரென்கிற பட்டத்தையும் பெற்றனர். இலங்கையிலிருக்கும் டாக்டர்மாருள் தந்த வைத்திய முறைகளை நவீனமாகக் கற்றுத் தேறியவர் இவர் ஒருவரே. இன்னும் பலர் இருபபினும் இவரைப் போன்ற நிபுணர் இலங்கையில் இல்லையெனக் கூறல் மிகையாகா! மானிப்பாயைச் சார்ந்த தமிழ்ப் பிரபுக்களுள் சிறந்த வைத்தியராயிருப்பவர் இவர் ஒருவரேயாம். ஸ்ரீமான் டாக்டர் பாலேந்திரா அமெரிக்காவிலிருந்து சென்ன தேசத்துக்கு வருகையில் தந்த வைத்தியத்துக்குரிய கருவிகரணங்களை பெரும்பொருள் கொடுத்து விலைக்கு வாங்கித் தாம் வரும்பொழுதே அவைகளைக் கொண்டுவந்து தமது வாசஸ்தானமாகிய வீட்டின் ஒரு பக்கத்திலே அமைத்துத் தந்த வைத்திய முறையை முதலாவதாக இங்கு அனுசரிக்கத் தொடங்கினர். இலங்கையில் ஏனைய ஆஸ்பத்திரிகள் ஏராளமாயிருப்பினும். தருமத்தின் பொருட்டாகத் தந்த வைத்தியசாலை யொன்று இல்லாதிருப்பதை நன்குணர்ந்த அரசாட்சியார், லக்ஷக்கணக்கான ரூபாவைச்செலவிட்டு, கண்ணுஸ்பத்திரிக் கணித்தாயப் பிரமாண்டமான கட்டிடத்தைக் கட்டி, இலவசமாகச் சனங்களுக்கு தந்த வைத்தியம நடாத்தும்படி தேசாதிபதியவர்களால் திறக்கப்பட்டு, டாக்டர் பாலேந்திராவை அதன் பிரதான ஆசிரியராய் நியமித்து, பாலேந்திராவின் சாமர்த்தியத்தையும், சாதுரியத்தையும் தேசாதிபதியவர்கள் வியந்துகூறிச் சென்றனா ஸ்ரீமான் டாக்டர் பாலேந்திரா இப்பெரும் பதவியைப்பெறறு, அதிக திறமையோடு நடாத்தி வருகின்றனர். இது நிற்க, ஸ்ரீமான் டாக்டர் பாலேந்திராவின் குணநிசயங்களைச் சொல்லுமிடத்து இவர் நற்பழக்கமும், நேர்மையும், நல்லொழுக்கமு முடையர். சைவாசாரம், சிவத்தியானம், சிவதொண்டு, சிவபக்தியுடையா. சிவதீக்ஷை பெற்றவர் நித்திய கர்மானுஷ்டான முடையர். ஆலயவழிபாடு, பரோபகாரம், சிவாலய தரிசனம், சிவாலயங்களிலே பூசை உற்சவம் முதலானவைகளைச் செய்பவர். நற்குடியிலே நல்ல கோத்திரத்திலே பிறந்தவரானதால் தமது பேரனுரையும் பிதாமாதாவையும் பின்பற்றி சைவ சமய விருத்திகளுக்கேற்ற சற்கருமங்களைச செய்து வருகின்றனர். தம்மாலியன்ற தானதருமங்களையும், பிதுர்கடன், முதலானவற்றையும் பக்தி சிரத்தையோடு செய்பவர். நற்குணமும்,

பெருந்தன்மையுமுடையர். விவேகானந்த சபை, தமிழ் யூனியன் முதலான சங்கங்களிலும் வேறு சபைகளிலும் அங்கத்தவராவர். ஸ்ரீமான் டாக்டர் பாலேந்திரா புகழ் ஆரவாரம் முதலானவைகளை விரும்பாத உத்தம குணசீலன், அன்ம இரக்கமும் அடக்கமுமுள்ளவர். தேசாபிமானம், பாஷாபிமானம், சமயாபிமானம், சங்கீத ஞானம் முதலானதுடையர். இவ்வுத்தம குணவான் தீர்க்காயுளைப்பெற்று சுகசீவந்தராய நீடூழி வாழ்வாராக.

## P Canapathy Aiyer.

பிரமஸ்ரீ. பொ கணபதிஐயர்:— சிவபுண்ணிய சீலராகிய இப்பிராமணோத்தமர், ஊர்காவற்றுறை யென்னுமிடத்தில், பிறமதத்தவரின் ஆதிக்கியத்துட்பட்ட எல்லையில், தாம் ஈட்டிய பொருளைக்கொண்டு, வைரம்பாய்ந்த கற்களால் விசித்திரமாயோர் கோவிலையமைத்து, பரிவாரமூர்த்திகளோடு சிவப் பிரதிஷ்டை செய்து, நித்திய நைமித்தியங்களை வழுவறநடாத்தி வருகின்றனர். "கணபதீச்சரமென" வழங்கும் இத்தலத்தில் பிறமதத்தவரின் நாட்டமிருப்பதால் பரசமயக்கோளரியாகிய ஞானசமபந்த பரமசார்யஸ்வாமிகள் செயததுபோல் இவ்வுத்தமரும் சைவமதஸ்தாபனார்த்தமாக சிவாலயத்தை ஸ்தாபித்தனர். கணபதிஐயரவர்களுடைய செய்கை போற்றத்தக்கதேயாம்.

C

## S. Chelliah Kurukal.

பிரமஸ்ரீ. சீ செல்லையாக் குருக்கள்:—இவர், புங்குடுதீவு, பிரமஸ்ரீ சீனிவாசகக் குருக்களவர்களின் புத்திரராவர், கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த யோக்கியராய், சிவபூஜா துரந்தரராய், வேதாகமவுணர்ச்சியுடைய பேரறிஞராய், சாந்தம், பொறை, அடக்கம், முதலாகிய பெருங்குணங்களையுடைய சற்பாத்திரராய், குரு லக்ஷணங்களையுடையவராய், யாழ்ப்பாணத்தார் கதிரேசன் கோவிற் பிரதான ஆசிரியராய் விளங்கின்றனர். சந்ததிமுறையாக இக்கோவில் கருமங்களைப்பார்த்து பலராலும் சனமானிக்கப் பட்டுவருகின்றனர்.

## V. Carthigasu, Shroff, Mercantile Bank.

ஸ்ரீமான் சிறுப்பர் கார்த்திகேசு:— இவர் அராலிப் பகுதியில் கீர்த்திப்பிரதாபமுற்று விளங்கிய, தேவேந்திர முதலியார் வமிசத்தைச் சார்ந்த வைரவநாத ரென்பவரின் புத்திரராவர். இவர் 1883-ம் மாண்டு மார்ச்சு மாதம் 13-ம் திகதி அராலிப் பகுதியை ஜென்ம ஸ்தானமாக வுடையவர். சிறுபிராயம் முதலாக நற்பழக்கவொழுக்கமுடையவராய் வளர்ந்து, வட்டுக்கோட்டையிலுள்ள, செமினரியிலும், கொழும்பு சென்றல் கொலீச்லும், கல்விகற்று இம்பீரியலென வழங்கும மதராஸ் வங்கியில் பலகாலம இரண்டாஞ் சிறுப்பாகக் கடமை பார்த்து, பலராலும் நன்கு மதிக்கப பெற்றுத் தற்போது, மொர்கண்டைல் வங்கியில் மிகப்பொறுப்புவாய்ந்த மேலான பதவியாகிய பிரதம சிறுப்புத் தியோகத்தை வகித்து அதிக திறமையோடு பார்த்து வருகின்றனர். இவரிடத்தில் சைவாசாரம், சிவத்தியானம், சிவபத்தி, ஆலயவழிபாடு, அடக்கம், பொறுமை, முதலான தன்மைகள் இயல்பாயுண்டு. இவர் எராளமான திரவியத்தைத் தாமாகச் சம்பாதித்தும், அதனால் கௌரவமடையாது தம் சீவியகாலத்தை, ஆடம்பரமற்ற வாழ்க்கையில் ஈடுபடுத்தி வாழ்கின்றனர். ஸ்ரீமான் கார்த்திகேசு, பகுத்தறிவும் மனுஷத்தன்மையும், உடையராய், சற்கருமங்களைச் செய்யும், சற்பாத்திரராய், சாந்தகுணமுடையராய் பிரபுத்தன்மை பொருந்திய மகாயோக்கியராய், விளங்குகின்றனர். இவருக்கு விவாகம், இந்திய புகைரதப் பகுதியில், உத்தியோகமாயிருந்த சின்னப்பாபிள்ளை புத்திரி ஸ்ரீமதி செல்லம்மா ளென்னும் குணவதியை விவாகம் செய்து இரு ஆண்களையும், இரு பெண்களையும், பெற்றனர். இவருடைய மூத்தமகள் ருக்மணி யென்னும், பெண்மணியை, பிரபல தனவந்தராய் பிரக்கியாதிபெற்று விளங்கும் இராசவாசல் முதலியார் ஸ்ரீமான் த. காராளபிள்ளை யவர்களின் சிரேஷ்ட குமாரர் ஸ்ரீமான் சுந்தரம்பிள்ளை Bsc (Lou) விவாகஞ் செய்திருக்கின்றனர்.

## S. Coomaraswamy Asst Shroff Hong Kong Bank.

ஸ்ரீமான் ச. குமாரசாமி:—இவ்வுத்தமர், மானிப்பாய், நவாலி யென்னுமிடங்களில் வசிக்கும் பாரிய பிரபுக்களின் சந்ததியில், குற்றமற்ற இலக்கணங்களையுடைய சைவவேளாண் மரபைச் சார்ந்த திருவாளர். வீரகத்தியார், முருகேசு, காசிநாதர், சரவணமுத்து, அவர்களின் அருந்தவப்புதல்வராவர். இவர் பதிசாத்திரங்களை ஓதி அதன் பொருளையறிந்து, பாவங்களை விலக்கிப் புண்ணியங்களை யனுஷ்டித்து, சற்கருமங்களைப் பக்தி சிரத்தையோடு செயயுமாற்றலுடைய பெருந்தகையாளராவர் இவ்வுத்தமர், நற்குண நற்செய்கைகளையுடைய சன்மார்க்கராய், ஆன்ம சுகத்தின் பொருட்டு உத்தம தருமங்களிலே தமது பொருளைச் செலவிடுகின்றவர். சைவாசாரம, சிவத்தியானம, சிவபக்தி, சிவதொண்டு, சிவசிந்தனை, ஆலயங்களிலே பூசை, உற்சவம், தானதருமம், குருபக்தி, அடியாரபக்தி ஸ்தலயாத்திரை, இன்சொல், இரக்கம், ஈகை, கொடை, வணக்கம், சாந்தம், பொறை, அடக்கம், முதலாயுள்ள அரும பெருங்குணங்களை இயல்பாயுடைய சிவநேயச் செல்வராவா. ஆன்மார்த்த விஷயமாக இத்தொண்டர் செய்திருக்கின்ற சற்கருமங்களோ அனந்தம். அவைகளை விரிக்கிற பெருமாதலால் இவ்வளவில் விடுத்தோம. இவருடைய பெருங்குணத்தை யறியாதாரில்லை. ஆனதால், சுருக்கமாகக் கூறி முடித்தேம். தற்போது கொங் கொங் ஷாங்கே, என்னும் வங்கியில், உதவிச் சிறுப்புமாருள் ஒருவராய கடமை பார்த்து வருகின்றனா.

## Canthiah Ponnambalam.

ஸ்ரீமான் கந்தையாபிள்ளை:— இவர் யாழ்ப்பாணத்து சண்டிருப்பாய், மானிப்பா யென்னுமிடங்களில் பாரிய தனவந்தர்களாயும், பக்திவைராக்கிய ஞானங்களிற் சிறந்த சிவநேயச் செல்வர்களாயும், பிரபுக்களாயும், விளங்கிய பெரியார் சந்ததியி லுள்ளவரும், யாழ்ப்பாணப் பட்டிணத்தை சிங்கையாரியச் சக்கிரவர்த்தி அரசாண்ட காலத்து சண்டிருப்பா யென்னுமிடத்தில் பிரதிஷ்டை செய்யப் பெற்ற கல்வளை விநாயகாலயத்ததிபரும்

இருபத்து நான்காம் தலைமுறையிலுள்ளவரும், நீயூ ஓரியண்டல் வங்கி யென்னும் வியாபார சமுதாயத்தில் சிறப்பாயிருந்து கீர்த்தி வாய்ந்த திருவாளர், பொன்னம்பலம் பிள்ளையவர்களினது புத்திரருமாவர். இவர், 1871-ம் ஆண்டு மாசி மாதம் 10-ந் திகதி ஜெனனமானவர். சிறுபிராயம் முதலாக நற்பழக்க வொழுக்கங்களிற் சிறந்த யோக்கியராய் செந் தோமஸ் கல்லூரியில் கல்வி கற்று பற்பல கம்பனிகளில் உத்தியோகம் பார்த்தனர். மதராஸ் வங்கியில் இரண்டாவது சிறுபாகச் சிலகாலம் கடமை பார்த்து வந்தனர். அதன் பின்னா, தமது சொந்தப் பொறுப்பில் அச்சுயந்திரசாலை யொன்றை ஸ்தாபித்து. தமிழ் மக்களின் ஈடேற்றத்தைக் கருதி ஆங்கிலத்தில் புதினப் பத்திரிகை யொன்றை ஆரம்பித்து நடத்திவந்தனர். பின்னா ஏராளமான பொருளைச் செலவிட்டு கந்தையா அன் கோ., என்னும் நாமத்துடன் ஓர் கம்பனியைத் தொடங்கி விமரிசையாக நடாத்திவரலாயினர். ஸ்ரீமான் கந்தையா பிள்ளை யவர்களின் சிறந்த குணங்களை யறிதாரில்லை. சுருக்கமாகச்சொல்லுங்கில், இவ்வுத்தமர், சைவாசாரம், சிவபக்தி, சிவசிந்தனை, ஆலயவழிபாடு, இன்சொல், இரக்கம், ஈகை, சாந்தம், சற்குணம் முதலாயுள்ள பெருந்தன்மைகளையுடைய தனவந்தராவர். இவர் முதலாவதாக, ஸ்ரீமான் இராமலிங்கச் சிறுப்பரவர்களின் புத்திரி ஸ்ரீமதி பொன்னம்மாளை விவாகஞ் செய்து தவறிய பின்னர், இரண்டாவதாக ஸ்ரீமதி நாகம்மாளை விவாகஞ் செய்து சற்புத்திரசந்தானங்களாக மூன்று குழந்தை பெற்றனர்.

## A. Chitera Velu, Broker.

ஸ்ரீமான் புறோக்கர் சித்திரவேலு:— இவர் மானிப்பாயிலுள்ள பிரபலகுடும்பத்தைச்சார்ந்த மதியாபரணமுதலியார், கனகசபைமுதலியார், "மிச்சல்" சதாசிவம், ஆகியோருக்குப் பௌத்திரரும், திரிகோணமலையில் பிரபலவர்த்தகராயிருந்த ஆறுமுகம் பிள்ளையவர்களது புத்திரருமாவர், இவ்விளைஞர், தக்க குடும்பத்தைச் சார்ந்தவரென அறியலாகும். "குலத்தளவேயாகுமாங்குணம்" என்னும் நீதி மொழிக்கிணங்க நற்குணமும், நற்செய்கையும் பரோபகாரமுமுடைய சற்பாத்திரராய் விளங்குகின்றனர். இவருக்கு விவாகம், பிரபலநியாயதுரந்தராய் விளங்கிய

நமது நண்பர், நடராஜா சந்திரசேகரா அவர்களது புத்திரியும், சுப்பிறியங்கோட்டு அயிட்டிங் நீதிபதி ஸ்ரீமான் H. A P சந்திர சேகரா அவர்களது தம்பி புத்திரியுமாகிய ஸ்ரீமதி தங்கம்மாள் என்னும்பெண்மணியை விவாகம் செய்து சற்புத்திர சந்தானங் களாக இருகுழந்தைகளைப் பெற்றனர். ஸ்ரீமதி தங்கம்மாள் இன்சொல், இரக்கம், சாந்தம், பொறை, அடக்கம். முதலாகிய நற்குணங்களையுடைய உத்தமி. இப்பெண்மணி எம்மிடம் கல்வி கற்றகாலம்முதலாக யாம் நன்கறிவோம். தம்பதிகள் இன்புற்று இனிது வாழ்வார்களாக.

## A. S. Chelliah.

**ஸ்ரீமான் அ சி. செல்லையா:—** இவர் திரிகோணசல மென்னும் திவ்விய ஸ்தலத்தைப் பிதாவழியாகவும், யாழ்ப்பா ணத்து சித்தங்கேணி யென்னுமிடத்தை மாதாவழியாகவுமுடை யவர். இந்நகரிற் பிறந்து நற்பழக்க வொழுக்கமுடைய சுசீலராய் தமது அன்னையிடம் வளர்ந்து, ஆங்கிலக்கல்லூரிகளிற் கல்விகற்று வரலானர் பாரிய பெருங் குடும்பத்தில் ஸ்ரீமான் அப்பாப்பிள்ளை சின்னத்தம்பியா பிள்ளை அவர்களுக்குக் கனிஷ்ட புத்திரராக வும், சகோதாருள் இளையராகவும், பிறந்தமையால் நல்ல ஞான மும், நற்குண நற்செய்கையும், தானதருமமும், தெய்வபக்தியும், சிவாலயதரிசனமும், சற்கருமங்களைச் செயயும் ஆற்றலுமுடைய சற்புத்திரராய் விளங்கின்றனர். கதிர்காமஸ்தலத்தில் முதிய டைந்த தமது அன்னையின் அந்தியக்கடனைக் காசிக்குச் சென்று செய்யும் பாக்கியத்தை இவ்வுத்தமர் பெற்றனர். இந்நகரிற் பிரபல மாய் விளங்கும் "மீனும்பாள் அச்சுயந்திரசாலை" அதிபருளொருவ ருமா ஸ்ரீமான் அ. சி. தம்பையா அவர்கள் சகோதாருமாவர். ஸ்ரீமான் செல்லையா தற்போது, இவ்வச்சுக்கூடத்துக்கு அதிபரா யிருந்து செவ்வனே நடாத்திவருகின்றனர். அறிவுவிருத்திக்கேற்ற நூல்கள் பலவற்றை பரோபகாரமாக அச்சிட்டுதவும் சன்மார்க்க ருமாவர். கண்டியில் பிரபல வர்த்தகராயிருந்து காலஞ்சென்ற திருவாளர், காத்தமுத்துப்பிள்ளை யவர்களின் புத்திரி ஸ்ரீமதி லோகாம்பாளை விவாகம்செயது, புத்திரசந்தானங்களாக ஐவரைப் பெற்றனர்.

## E. P. Chelliah, Chief Clerk, Police Office, K'galle.

ஸ்ரீமான் ஈ. பீ. செல்லையா:— இவர், யாழ்ப்பாணம் கந்தர்மடம் என்னுமிடத்தைச் சென்மஸ்தானமாகவுடையவர். அரசாங்கத்தில் கடமைபார்த்து பலராலும் நன்குமதிக்கப் பெற்றவரும், சிவத்தியானமுடையவருமாகிய திருவாளர், பொன்னம்பலம் பிள்ளையவர்களுடைய புத்திரசிகாமணிகளிலொருவராவர். ஸ்ரீமான் செல்லையா, சிறுபிராயம் முதலாக நற்பழக்கவொழுக்கமுடையவராய், யாழ்ப்பாணத்துள்ள வித்தியாசாலைகளிற் கல்விகற்றுத் தேறியபின்னர், அரசாங்கத்திலோர் லிகிதராகச்சேர்ந்து, அதிகதிறமையோடு தமது உத்தியோகத்தைப் பார்த்துவரும் நாளில், பற்பல கந்தோர்களுக்கு அடிக்கடிமாற்றப்பட்டு வரலாயினர். ஸ்ரீமான் செல்லையாவுடைய புத்திசாதுரியத்தையும், விவேகத்தையும், உத்தியோகம் பார்க்கும் சாமர்த்தியத்தையும், நன்குணர்ந்த அரசினர், கிளறிக்கல் லயினில், தேர்ச்சியும் மிக்க அனுபவமுமுடைய ஸ்ரீமான் செல்லையாவுக்கு மேலதிகாரிகள் பொறுப்புவாய்ந்த பெரும் உத்தியோகமாகிய பிரதமலிகிதர் ஸ்தானத்தைக்கொடுத்து, பற்பல கந்தோர்களில் கடமைபார்க்கும்படி நியமனம் செய்தனர். அந்நாட் தொடக்கம் இந்நாள் வரையிலும் றப்பர்கந்தோர் போன்ற ஆபீசுகளிற் பல காலமாக முதலாங் கிளாக்கராயிருந்து திறமையோடும், நேர்மையோடும் தமது உத்தியோகத்தைப்பார்த்து நல்லபிள்ளையென்கின்ற நற்பெயரையும், நற்கியாதியையும், உலகில் பெற்றனர். ஸ்ரீமான் செல்லையா இயல்பாகவே இன்சொல், இரக்கம், ஈகை, அடக்கம், பொறை, சாந்தம், கொடை, வணக்கம், கிருபை, உறவு, முதலாகிய இன்னோரன்ன சிறந்த குணங்கள் பலவற்றைத் தமக்கு அணிகலமாயுடைய சற்புத்திரராவர். இவர் சைவாசாரம், சிவத்தியானம், சிவகைங்காரியம், ஆலயவழிபாடு முதலானவைகளையுடையவர். தருமவிஷயமாகச் சொல்லுகில், எவ்வகையான சற்கருமங்களுக்கும் இல்லையென்னாது தம்மாலியன்ற பொருளுதவிகளை அன்போடு செய்கின்ற உத்தமகுணசீலர். ஸ்ரீமான் செல்லையா புண்ணிய வசத்தால் சகல செல்வங்களையும் பெற்ற தனவானுகவும், பரோபகார சிந்தையுடைய, குலமகனுகவும் பலராலும் நன்குமதிக்கப் பெற்ற யோக்கியராகவும் பிரபலமுற்று விளங்குகின்றனர்.

## V. Coomaraswamy, C. C. S. A. G. A Hambantota.

ஸ்ரீமான் குமாரசுவாமி:—இவர், யாழ்ப்பாணத்தைச் சார்ந்த வட்டுக்கோட்டை மேற்கில், பாரியதனவந்தர்களாயும், சிவநேயச் செல்வர்களாயும் விளங்கிய, பெருவேளாண்மையில், வந்துதித்த திருவாளர் வேலுப்பிள்ளை யவர்களின் புத்திரருளொருவராவர். இவர் கல்வியறி வொழுங்கங்களிற் சிறந்த மேதாவியாய் சிலோன் சிவில் சேர்விஸ் என்னும் பரீக்ஷையிற் சித்திபெற்று 1913 மாண்டு பங்குனி மாதம் 26-ம் திகதி முதலாக புத்தளம், சலாபம், தண்டுகாமம், நீர்கொழும்பு, கேகாலை முதலான இடங்களில், போலீஸ் நீதிபதியாகவும், டிஸ்திறிக் நீதிபதியாகவும், நிதாசனம் வகித்து தரும நீதிப்படித் தமது கடமைகளை நன்கு நடாத்தி உலகில் நற்பேரையும் நற்கியாதியையும் நாட்டி தற்போது, அம்பாந்தோட்டையில் உப ஏசண்டாகக் கடமை பார்த்து வருகின்றனர். நீதிபதி ஸ்ரீமான் குமாரசுவாமி அரசியல் ஞானம், உலகியல் ஞானம், தேசவழமை, என்பனவற்றில் சிறந்த ஞானமும், விவேகமும், சாதுரியமு முடைய பேரறிஞரும், சாந்தம், பொறை, அடக்கம், பரோபகாரம் முதலாகிய பெருந்தன்மைகளையுடைய குலமன்னனுமாவர். இவ்வுத்தமர், முதலாவதாக பிரபல டாக்டராயிருந்த திருவாளர் சின்னத்தம்பி யவர்களின் சிரேஷ்ட புத்திரி ஸ்ரீமதி தையல்நாயகி யென்னும் குணவதியை விவாகஞ் செய்து காலஞ் சென்றபின்னர், ஸ்ரீமான் தம்பையா அவர்களின் புத்திரியை விவாகஞ் செய்திருக்கின்றனர். தம்பதிகள் சற்புத்திர சந்தானங்களைப் பெற்று இனிது வாழ்வார்களாக.

## K Chelliah, Proctor, S. C

ஸ்ரீமான் பிறக்டர் செல்லையா:—இவர், யாழ்ப்பாணத்தைச் சார்ந்த கொக்குவிலில் பரம்பரையாகக் கமம் பிலம், காணி, பூமி, விளைநிலம், தோட்டம், மாடு, கன்று முதலான அணிகளோடு குறைவிலா ஐசுவரியங்களும் பொருந்த, சைவா சிலர்களாய், பக்திவைராக்கிய ஞானங்களிற் சிறந்தோராய், கல்வியறிவாளர்களாய், யோக்கியர்களாய் விளங்கிய பெரியார் சந்ததியில், வந்துதித்த திருவாளர் கார்த்திகேய பிள்ளை யவர்களின் புத்திரருளொருவராவர். ஸ்ரீமான் செல்லையா விருவறிந்த

நாள் முதலாக நற்பழக்க வொழுக்க முடையவராய் சற்குண சம்பன்னராய் சைவாசாரமுடையவராய், பொறுமையுள்ளவராய், யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரியிற் கல்வி கற்று வரலானார். இவர் கல்வியை விரும்பி நற்பேதோடு ஆசிரியர்களுடைய உள்ளத்திலே அருள் உண்டாகும்படி நடந்து நல்லபிள்ளை யென்றும் யோக்கியரென்றும் கல்வியில் விவேகி யென்றும் அக்காலத்திலிருந்த பெரியோரால் நன்குமதிக்கப் பெற்றனர். இவர் கல்வி கற்கின்ற காலத்தில், ஆங்கில பாஷையை மாத்திரம் கற்காது அறிவு விருத்திக்கேற்ற நீதிநூல்களையும் நன்குகற்றனர். ஸ்ரீமான் செல்லையா உயர்தரக் கல்வியாகிய நியாயப்பிரமாணங்களை கற்று பரீக்ஷையில் சித்தியடைந்து பிரபல நியாயதுரந்தரராக கொழும்பிலுள்ள நீதிமன்றங்களில் அதிக திறமையோடும் நேர்மையோடும் சென்ற 23 வருட காலங்களாகத் தமது கடமையை ஒழுங்காகப் பார்த்து பல சாரியாராலும் நன்கு மதிக்கப்பெற்று வருகின்றனர். ஸ்ரீமான் செல்லையா அவர்களின் உத்தம குணாதிசயங்களைப் பற்றி அறியாதாரெவருமில்லை. ஆதலால், யாம் இங்கு சுருக்கமாகக்கூறி, முடிப்போம். இவர் நற்பழக்க வொழுக்கமும், சைவாசாரமும் சிவசிந்தனையும் ஆலயவழிபாடும, இன்சொல், இரக்கம் ஈகை, பரோபகாரம், சாந்தகுணம், பொறுமை, அடக்கம், முதலாயுள்ள அரும் பெருங்குணங்களை அணிகலமாக வுடையவர். சைவசமய விருத்தியைகுறித்து சற்கருமங்களுக்குந் தம்மாலியன்ற பொருளுதவிகளைச் செய்கின்றவர். சமய பக்தியைவளர்த்து வருகின்ற சபைகளிலும், சங்கங்களிலும், அங்கத்தவராவர். ஸ்ரீமான் செல்லையாவுக்கு விவாகம், பகிரங்கப்பகுதி ஆபீசில் பலகாலம் முதலாவது கிளர்க்காயிருந்து அரசாங்கத்திலுள்ள பெரும் உத்தியோகஸ்தர்களாலும், துரைமாராலும், ஊரவர்களாலும் நன்குமதிக்கப் பெற்றவரும், பரோபகாரம், பெருந்தன்மை, சாந்தகுணம் முதலான உத்தம குணங்களையுடையவருமாகிய ஸ்ரீமான் தில்லையம் பல முதலியாரவர்களின் அருந்தவப் புதல்வி ஸ்ரீமதி இராசம்மாவை இல்வாழ்க்கைத் துணைவியாகக் கொண்டு சற்புத்திர சந்தானங்களாக இராசையா, தில்லையம்பலம், குமாரசுவாமி என்கிற மூவரைப் பெற்றனர்.

இவர் மனைவி ஸ்ரீமதி இராசம்மாளின் சிறந்தகுணங்களைப் பற்றிச்சிறிது கூறிமுடிப்போம். இவவுத்தமி, கல்வியறிவொழுக்கங்களிலும், கடவுள் பத்தியிலும், இல்லறதருமத்தைக் குறைவற நடத்தும் திறமையிலும், சிவனடியார், சிவபக்தர், முதலானோர்களை உபசரித்து அவரவருக்கு வேண்டிய உதவிகளைச்செய்வதிலும். "கல்லென்றாலும் கணவன். புல்லென்றாலும் புருஷன்" என்றபடி தன்னுடை கணவனைத் தெய்வமாகப் பாவித்து, "கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி" என்னும் நீதி மொழிக்கிணங்க தன் நாயகனுடைய குறிப்பறிந்து அவர்மனம் விரும்பியவாறு ஒழுகுதலிலும், இன்சொல், இரக்கம், ஈகை, பிரிய வசனம், ஏழைகளுக்கு இயன்றதான தருமம், முதலானவற்றிலும், "அன்னைதயையுமடியாள்பணியுமலர்ப்பொன்னினழகும் புவிப்பொறையும்" என்றருளிய அமிர்த வாக்குக்கிணங்க, சகல இலக்கணங்களையும் தமக்கு அணிகலமாயுடைய இப்புண்ணியவதியின் அரும் பெருங் குணங்களைப் பலவருடங்களாக நாமறிவோம். இப்பெண்மணி பிதாமாதாவைப்போல் ஆன்மஇரக்கம் ஜீவகாருண்ணியம் முதலானவற்றிலும், பழிபாவங்களுக்குப்பயந்து நடத்தலிலும், நற்குண நற்செய்கைகளிலும், சிறந்த சுகுணவதியாயிருந்து இற்றைக்குச் சிலமாசங்களுக்கு முன்னர் சிவபதமடைந்தனள்.

**A. C. Chellaraja** Manager, Polytechnic Fort, Colombo.

திருவாளர் ஏ. சீ. செல்லராசா:—இவர் திரிகோணமலையை சென்மஸ்தானமாயுடையவர். இவருடைய மூதாதைகள் அச்சுவேலியில், வம்சத்திலுள்ள, சாதிமான்களின மரபைச் சார்ந்தோராவர். இவர், தற்போது பொலிற் ரெக்னிக் என்னும் பிஸ்னெஸ் கலாசாலைக்கு அதிபராயிருந்து "சோட்டான் ரைப்றையிற்றிங்" (Short-hand Type-writing) என்னும் பாடங்களைப் பல மாணவருக்குக் கற்பித்து உத்தியோகஸ்தர்களாலும், பிரபுக்களாலும் நன்குமதிக்கப்பெற்று வருகின்றனர். இவ்விளைஞர், அரசியல் ஞானமும், உலகியல் ஞானமும், உடைய பேரறிஞராவர். இவர், கல்வியறிவும், விவேக புத்தியும், வாக்கு சாதுரியமும், நற்பழக்கவொழுக்கமும், சைவாசாரமும், சமயபக்தியும், பரோபகாரமும், பெருந்தன்மையுமுடைய யோக்கியராய், குணத்திலே சிறந்த குணசாலியாய், விளங்குகின்றனர். இப்புத்தகத்தை எழுதுவதற்குக் காரணராயிருந்து எம்மை உற்சாகப்படுத்தியவரும் இவரே.



Mr. C. Coomaraswamy, C. C. S.

Chief Appointments held. Police Magistrate Matara & Puttlam, Chilaw.
District Judge, Batticaloa. Commissioner of Requests, Colombo
Commissioner of Stamps, Colombo.
Registrar General. Present Appointment District Judge Kurunegala.

Meenambal Press.

## S. Coomaraswamy, C. C. S. District Judge, Kurunegale

நீதிபதி ஸ்ரீமான் சி. குமாரசுவாமி:—உலகில் எத்திசையும் பிரசித்தி பெற்ற பேரறிஞராய், பிரக்கியாதி பெற்று விளங்கும் இப்பெரியார், வண்ணார்பண்ணை, ஐயனார் கோவிலடி, நல்லூர், என்னும இடங்களில் பெரும் பிரபுக்களாயும், மேன்மக்களாயும், சாதிமான்களாயும், உத்தியோகஸ்தர்களாயும் விளங்கிய பெரியார் வழித்தோன்றலாக அடிமை, குடிமை, செல்வம், செல்வாக்கு, பிரபுத்துவம், கீர்த்தி, பரோபகாரம், பெருந்தன்மை ஆதியவற்றோடு, சைவாசிலராய், சமயபக்தி உடைய சற்பாத்திரராய், கொழும்பு, கண்டி, யாழ்ப்பாணம் முதலாகிய இடங்களிலுள்ள கோடு கச்சேரிகளில் உத்தியோகமாயிருந்து நன்கு மதிக்கப்பெற்ற திருவாளர், சின்னப்பாபிள்ளை அவர்களின் அருந்தவப் புதல்வராவர். இவ்வுத்தமர் 1887-ம் ஆண்டு ஆகஸ்ட்டு மாதம் இருபத்தைந்தாம் திகதி செனனமானார். இவர், சிறுபிராயம் முதலாக நற்பழக்க வொழுக்கமும், சைவாசாரமும், நற்குண நற்செயகையுமுடைய சற்புத்திரராக வளர்ந்து யாழ்ப்பாணம், இந்துக் கல்லூரியிலும், அதன் பின்னர் றோயல் கொலீச்சிலும் கல்வி கற்று, சகலகலைகளிலும்மகாபாண்டித்தியமுடையவராய், தமிழ்ப்பாஷையைக்கற்ற பேரறிஞராய், நியாயப் பிரமாணங்களிலும் பிறவற்றிலும் வல்லுனராய், 1913-ம் ஆண்டு முதலாக புத்தளப் பகுதிக்குப் போலீஸ் நீதிபதியாகவும், அடிஷனல் டிஸ்திறிக் நீதிபதியாகவும் நியமனம் பெற்றனர். அதன்பின்னர், பற்பல மாகாணங்களில் பெரிய கோட்டு நீதிபதியாக நிதாசனம் வகித்துத் தருமநீதி தவறாமல் தம் கடமையைச் செலுத்தி, அரசினராலும், ஊரவர்களாலும் நன்குமதிக்கப்பெற்று, உலகில் நற்பேரையும், நற்கீர்த்தியையும் நாட்டிவைத்தனர். ஸ்ரீமான் குமாரசுவாமி அரசியல் ஞானம், உலகியல் ஞானம், இரண்டிலும் சிறந்த பேரறிஞராயிருந்தபடியால் அரசாங்கத்தில் பெரும் உத்தியோகங்களைக் கையாண்ட பின்னர், (Reg. General ) பதிவு கந்தோர்த் தலைவராகவு மிருந்தனர். சேர். அருணாசலத்துக்குப்பின் இப்பதவியை இவரே பெற்றனர். தற்போது இப் பெருந்தகையாளர் குருநாக்கல் டிஸ்திறிக் நீதிபதியாயிருக்கின்றனர். இவருடைய குணமகிமைகளைச் சொல்லுகில், "குலத்தளவேயாகும் குணம்" என்பதற்கிணங்க ஸ்ரீமான் குமாரசுவாமி பெரும் உத்தியோகஸ்தராயிருந்தும்

நற்புகழ், ஆரவாரம், உத்தியோகப்பெருமை, அகங்காரம், முதலாகிய அற்பகுணங்களற்ற யோக்கியராய், மேலானகொள்கையும், மேலானபோக்கும், மேன்மையான செய்கையுமுடைய சற்பாத்திரராய், குணத்திலேசிறந்த குணசாலியாய், சன்மார்க்கமுடையராய் சாந்தம், பொறை, அடக்கம், உள்ளவராய், அறிவிலும், விவேகத்திலும், சிறந்த பேரறிஞராய், ஆனம இரக்கம், சீவகாருண்ணியம், பரோபகாரம், பிரபுத்துவம், முதலாகிய அரும்பெருங் குணங்களை அணிகலமாயுடைய பெருமகனும், தயவு, தாக்ஷணியமுடைய, காருண்ணியவள்ளலாய், எத்திசையும் கீர்த்திப்பிரதாபமுற்று விளங்கும், இப்பெரியாருடைய குணமகிமைகளை உலகமறியுமாதலால், சுருக்கமாகக்கூறினோம். இது பற்றியே "பொறப்பறிவில்லாத பலபுத்திரரைப் பெறலினோர் நற்புதல்வனைப்பெறுதல் நன்றாம்" என்னும் உண்மை வாக்கால் உணர்த்தப்பட்டது. இலங்கையில், இந்தமகானைப்பற்றி வியந்து கூறாதாரில்லை, இத்தன்மையான குணசீலரைப்பெறுதற்குயென்ன தவம்செய்தார்களோ! யாமறியேம்! இவருக்கு விவாகம், அதாவது நல்லூர் வாசரான ஸ்ரீமான் சபாபதி முதலியாரவர்களின் அருந்தவப் புதல்வி

ஸ்ரீமதி மங்கையர்க்கரசி,

என்னும் பெண்மணியை இல்வாழ்க்கை துணைவியாகக் கொண்டு, சற்புத்திர சந்தானங்களாக, இராஜேந்திரா, மகாதேவா சந்திரயேந்திரா என்னும் நாமத்தையுடைய புத்திரசிகாமணிகளைப் பெற்றனர். இந்தப் பிள்ளைகள் தம் பிதாவைப்போல் விவேகத்திலும், குணத்திலும், சிறந்தவர்களாய் றோயல் கொலீச்சில் கல்வி கற்று வருகின்றனர். இவருடைய மனையாளின் தருமகுணங்களைப்பற்றிச்சொல்லுகில், இப்பெண்ணரசி கல்வியறிவொழுக்கங்களிலும், கடவுள் பத்தியிலும் கணவருடைய பணிகளைச்செய்தலிலும், அவருடைய குறிப்பறிந்து நடத்தலிலும், குடும்ப பாரத்தை வகித்து இல்லறதருமத்தைக் குறைவற நடத்துதலிலும் பர்த்தாவுக்கேற்ற பதிவிரதையாய், குணத்திலே சிறந்த குணவதியாய், பரோபகாரமும் பெருந்தன்மையுமுடைய குலமகளாய் "கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி" என்னும் வாக்கிற்கு இலக்காய் நற்குண நற்செய்கைகளோடு கூடிய உத்தமியாய் விளங்குகின்றனர்.

## N. Chelliah, Broker, Mack Wood Co.,

ஸ்ரீமான் புரோக்கர் செல்லையா:—இவர், என்னாட்டினும் நன்னாடாய் விளங்கும் மணியம்பதில், செல்வம், செல்வாக்கு பரோபகாரம், பிரபுத்வம், கீர்த்தி முதலானவற்றோடு விளங்கிய மாணுப்பிள்ளை வமிசத்துத்தோன்றிய, விசுவநாத உடையார் சங்கர பிள்ளை புத்திரர், ஸ்ரீமான் நன்னித்தம்பி அவர்களின் நற்புதல்வராவர். இவர், பிரபல புரோக்கராயும், சிவானுபூதிச் செல்வராயும், தருமப்பிரபுவாயும், விளங்கும் திருவாளர், மூத்ததம்பி யவர்களுக் குச்சகோதரருமாவர். இவர் பிரமாதி வருடம், 2-ம் திகதி, சென னமானவர். சிறுபிராயமுதல் இந்துக்கல்லூரியிலும, பலகாலம் கொழும்பிலுள்ள ஆங்கிலக்கல்லூரியிலும் கல்விகற்றவர். அதன் பின்னர் மூத்ததம்பியவர்களோடு ஜேர்மன் கம்பனியில் தொழில் முறைகளைப்பழகி தற்போது இவர் மைக்வூட் கம்பனியில் பிரபல புரோக்கராயிருக்கின்றனர். "உற்றநல்லுதவிதன்னால் உலகெலா மாளலாகும், உற்ற நல்லுதவி தன்னால் லொண்பொருள் பெறுதலாகும்" என்பதற் கிணங்க ஸ்ரீமான் செல்லையா அண்ணுவுடைய ஆதரவாலும், தம்முடைய ஊக்கத்தாலும், பற்பல கம்பெனிகளில் உத்தியோகம் பார்த்து ஏராளமன திரவியங்களைச சம்பாதித்து, பாரிய தனவந்தராய் வாழ்கின்றனர். இவர் நற்பழக்கமும், நல்லொழுக்கமும், சைவாசாரமும் உடையவர். சற்கருமங்களுக்கும், ஏழைகளுக்கும், இல்லையென்னுது பொருளுதவி செய்பவர். பரோபகார சிந்தையும். பிறருக்கு உதவி செய்தலாகிய பெருங்குணமும் உடையர். வோக்கைப் பிள்ளையார் கோவிலுக்குப் பக்கலிலே திருமடம் ஒன்றை ஸ்தாபித்து உற்சவ காலங்களில் வருகின்ற சிவனடியார்களுக்கு, நீர், மோர், முதலியன வார்ப்பிக்கின்றவர். புகழ், ஆரவாரம், தற்பெருமை, முதலானவைகளில்லாதவர். "சந்தனத்தைச் சேர்தருவுந் தக்க மணங்கமழும்" என்றபடி நல்லோரைச் சார்ந்திருப்பதால் நற்குணமும், நற்செய்கையும், சாந்தம், பொறை, அடக்கம் முதலாகிய தன்மைகளும் உடையராய் விளங்குகின்றனர். இவர் **ஸ்ரீமதி செல்லாச்சி** என்னும் பெண்மணியை விவாகம் செய்து சற்புத்திர சந்தானங்களாக மூன்று ஆண்களையும், இரண்டு பெண்களையும், பெற்றனர். இவர் புத்திரராகிய ஸ்ரீகாந்த என்பவர்

கேம்பிறிச் கிளாசில் வாசிக்கின்றனர். இவர் மனைவி ஸ்ரீமதி செல்லாச்சியின் குணவிசேடங்களைச் சொல்லுகில் இவ்வுத்தமி, கல்வியறிவொழுக்கங்களிலும், கடவுள் பத்தியிலும், குணத்திலும், பொறுமையிலும் சிறந்த புனிதவதியாவர். இத்தம்பதிகள் நீடூழி காலம் இனிது வாழ்வார்களாக. அடுத்துவரும் பதிப்பில் விபரமாய் கூறுவோம்.

## A. Chellappa, Acct: Port. Com. Office

திருவாளர் அ. செல்லப்பாபிள்ளை:—இவர் அராலியில் பெரும் பிரபுக்களாயும், மேன்மக்களாயுமிருந்த, இராச வன்னிய முதலியார் வம்சத்துத் தோன்றிய, கச்சேரிச் சிறாப்பர் ஸ்ரீமான் அருணாசலம் பிள்ளை யவர்களுடைய அருந்தவப் புதல்வரும், நீராவியடி நில்லையம்பலம், விசுவநாதர், கந்தையா, ஆதியோருக்கு அரிய சகோதருமாவர். இவ்வுத்தமர், நற்பழக்க வொழுக்கமும் சைவசமயாசாரமும் ஆகமவுணர்ச்சியும், மேலான அறிவுமுடைய பரம சற்பாத்திரராய், இன்சொல், நகை, இரக்கம்' வாய்மை, பொறை, அடக்கம் முதலாகிய தருமகுணங்களையுடைய உத்தமராய், சைவசமய விருத்தியின் பொருட்டுச்சற்கருமங்களைச் செய்கின்ற புண்ணிய சீலராய், விவேகானந்த சபை ஸ்தாபகருள் ஒருவராய் குணத்திலே சிறந்த புனிதராய், போட் கொம்மிஷன் ஆபீசில் அதிகாரம்படைத்த பெரும் உத்தியோகஸ்தராய், விளங்குகின்றனர். சுருக்கமாகச் சொல்லுகில் நம் தமிழ் மக்களுள் இவரைப் போன்ற யோக்கியரை இக்காலத்தில் காண்பதரிது. இவர், மூளாயிலே சதாசிவ உடையார் சந்ததியிற் றோன்றிய, முருகேசுவின் புத்திரி ஸ்ரீமதி சின்னச்சிப் பிள்ளை என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து, ஓர் பெண்மகவைப் பெற்றனர். இந்தப் பெண்ணை கொட்டைக்காட்டு விநாயகர் மகன் டாக்டர், வைத்தியலிங்கம் என்பவர் விவாகஞ் செய்திருக்கின்றனர். ஸ்ரீமதி சின்னச்சிப்பிள்ளை என்னும் மகா உத்தமி, இல்லற தருமத்தைக் குறைவற நடாத்தி இற்றைக்குச் சில வருடங்களுக்கு முன்னர் சிவலோகஞ் சென்றனர்.

## T. Chellaturai, Broker.

ஸ்ரீமான் புரோக்கர் செல்லத்துரை:—இவர் ஆனைக் கோட்டையை ஜென்ம ஸ்தானமாக வுடையவர். சகலமான செல்வாக்குகளையுடைய பிரபலஸ்தர்களாய் விளங்கிய, கனகசூரியர் வழித்தோன்றலாயுள்ள விஞசித்தம்பி, முருகேசு, அவர்களுக்கும், பிதாவழியில் சங்கானையைச் சார்ந்த பொன்னம்பலம், ஆறுமுக மவர்களுக்கும் பௌத்திரராய் தில்லையம்பல மவர்களது புத்திரருமாய்த் தோன்றினர். இவர், சிறுபிராயம் முதலாக நற்பழக்க வொழுக்கங்களிற் சிறந்து சைவாசாரமும் சமயபக்தியுமுடைய நற்புதல்வராய்க் கல்வி கற்று நிரேடிங் கம்பனியில் புரோக்கராய் அதிக திறமையோடும், நேர்மையோடும் தமது கடமையைப் பார்த்து உலகில் நற்பேர் பெற்று பெறுந்தனவந்தராயும், பரோபகார சீலராயும், பிறருக்கு உதவிபுரிகின்ற சற்பாத்திரராயும், ஏழைகளுக்கும், இரப்போருக்கும், இல்லையென்னுது யாசகங் கொடுக்கின்ற உத்தமராயும், சிவாலயம், மடாலயம், வித்தியாலயம், முதலானவைகளுக்குப் பொருளுதவுகின்றவராயும், சாந்தம், பொறை, அடக்கம், சற்குணம் உள்ளவராயும் விளங்குகின்றனர். ஆனைக் கோட்டை மூத்தநயினர் கோவிற் திருவிழா வொன்றை பெரும் பொருள் செலவிட்டு அதிவிமரிசையாக நடாத்தி வருகின்றார். திருப்பணி விஷயமாகச் சொல்லுகில் ஸ்ரீராமபிரானல் பிரதிஷ்டை செய்யப்பெற்ற முனீஸ்வராலயத்தில் சில பணிகளைச் செய்வித்திருக்கின்றார். இவ்விஷயமிருப்ப, இவருடைய நற்குண நற்செய்கைகளுளொன்றை இங்கு பிரதானமாய் கூறிமுடிப்போம்.

### சைவ வித்தியாசாலை.

உலகத்தில் பொருட் செல்வத்தினும் கல்விச் செல்வமே சிறந்ததென்பது கருத்து. தானங்களுள்ளும் மிகச்சிறந்தது வித்தியாதானமாகும். கடவுளுடைய குணமகிமைகளையும், புண்ணிய பாவங்களையும், சுவர்க்க நரகங்களையும், விதிவிலக்குகளையும், அறிதற்குக் கருவியாயிருப்பது கல்வி. கல்விக்குத் துணையாயிருப்பது செல்வம். செல்வத்தையுடையவருக்குத் தமது பொருளை நல்ல வழியில் செலவு செய்ய வேண்டுமென்கின்ற ஞானம் உண்டாவது மிகவருமை. இங்ஙனமிருப்ப ஸ்ரீமான் செல்லத்துரை மனமுவந்து, ஆனைக்கோட்டையில் பெருந்தொகையான பணத்தைச் செல

விட்டு, காலஞ்சென்ற தம் மனைவி, ஸ்ரீமதி திலகவதியம்மாளின் ஞாபகார்த்தமாக ஆறாயிரம் ரூபாவுக்குமேற் செலவு செய்து கட்டடமொன்றை சுவாமி சந்நிதானத்தில் அமைப்பித்து "பாலசுப் பிரமணிய வித்தியாசாலை" யெனப் பெயரிட்டு நூற்றுக்கணக்காயுள்ள சைவப்பிள்ளைகளுக்கும், பெண்பிள்ளைகளுக்கும், கல்விகற் பிக்கும் பொருட்டாக, தராதரப் பத்திரம் பெற்ற உபாத்தியாயர்களை நியோகித்து, போதனைகளைச் செய்வித்து சமய பக்தியை வளர்த்து வருகின்றனர். இவர் செய்திருக்கின்ற புண்ணியச் செயலானது ஏழேழு தலைமுறை வரைக்கும், அழியாததாயிருக்கின்றது. இவர், முதலாவதாக காலஞ்சென்ற டாக்டர் சின்னத் தம்பி யவர்களின் முதற்றார மனைவியின் புத்திரியாகிய ஸ்ரீமதி திலகவதி என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து நகுலேஸ்வரன், கணேசு என்னும் நாமத்தையுடைய இருகுழந்தைகளைப் புத்திர சந்தானங்களாகப்பெற்றனர். ஸ்ரீமதி திலகவதியம்மாள் குணத்திலும், நற்பழக்க வொழுக்கங்களிலும், இன்சொல், நகை, இரக்கம், முதலானவற்றிலும் சிறந்த உத்தமியாயிருந்து சிவலோகஞ் சென்றனள். இவர்களுடைய பிள்ளைகளின் குணாதிசயங்களைச் சுருக்கமாகச் சொல்லுகில், சைவாசாரம், சிவத்தியானம், சிவாலய வழிபாடு, நற்பழக்கம், நல்லொழுக்கம், பிதா, மாதா, குரு, உபாத்தியாயர் முதலான பெரியோர்களிடத் தன்பும் பணிவுமுடைய சற்புத்திரர்களாய் விளங்குகின்றனர். சிரேஷ்ட புத்திரராகிய நகுலேஸ்வரன் உத்தியோகமாயிருக்கின்றனர். இவர் பன்மடங்கு விசேட குணமுள்ளவர். ஸ்ரீமான் செல்லத்துரையின் அரிய சகோதரர் சபாநாயக மென்பவர், தருமப் பிரபுவாய் விளங்கும் ஸ்ரீமான் இராமலிங்க மவர்களுடைய புத்திரியை விவாகஞ் செய்து அருமைவாய்ந்த அன்னையாராகும், ஸ்ரீமதி பொன்னம்மாவோடு வசிக்கின்றனர்.

## Hon Mr. A Canagaratnam, M L. C.

கௌரவ ஸ்ரீமான் கனகரத்தினம்:—இவர் 1873-ம் ஆண்டு பிறந்தவர். நீர்வளம், நிலவளம் பொருந்திய யாழ்ப்பாண நகரில், சகல செல்வங்களோடு அஷ்ட ஐசுவரியங்களும் பொருந்திய, கனதனவான்களாய், தனதான்ய சம்பத்து, விளைநிலம், தோட்டம் முதலிய அணிகளோடு சிறந்து விளங்கிய பிரபுக்கள் வமிசத்

தில் உத்தியோகஸ்தர்களாய், பரம்பரையான செல்வர்களாய், பிரபுக்களாயுள்ள சிவானு பூதித் செல்வர்களின் வழித்தோன்றலாவார். இவர் நற்பழக்க வொழுக்க முடையவராய், யாழ்ப்பாணஞ் சென்றல் கோலீச்சிலும், கொழும்பிலுள்ள வெஸ்லிக் கொலீச்சிலும் கல்வி கற்ற பின்னர், கல்கத்தா முதலிய இடங்களுக்குச் சென்று உயர்தரக் கல்வி கற்று, சகல கலைகளிலும் மகா பாண்டித்தியமுடையவரானார். இவர் கல்வியை இடைவிடாமல் ஊக்கமாக கற்றுத் தேறியதால் பிரபல நியாய துரந்தரராக வெளிவந்தனர். ஸ்ரீமான் கனகரத்தினமவர்கள் ஆண்மையும், அறிவும், விவேகமும், புத்திக்கூர்மையுமுள்ளவர். அரசியல் ஞானமும, உலகியல் ஞானமுமுடையவர். எக்கருமத்தையும் நன்காராய்ந்து அதன் வழி ஒழுகும ஆற்றலுடைய பேரறிஞர். இதுபற்றியே "அறிவுடையொருவனை யரசனும் விரும்பும்" என்றார் பெரியோர். ஸ்ரீமான் கனகரத்தினம அபிமான புத்திரரானபடியால், தேசாபிமானங் கொண்டு யாழ்ப்பாணத்தவரின் ஏடேற்றத்தைக் கருதி "சிலோன் பேற்றியற்" என வழங்கும் "இலங்காபிமானி" பத்திரிகையைத் தமது சொந்தப் பொறுப்பில் பலவருடங்களாக நடாத்தி வருகின்றனர். பட்டின பரிபாலன விஷயமாகச் சொல்லுகில், யாழ்ப்பாணத்தில் முதலாவதாக இச்சங்கத்தை ஏற்படுத்தி, சனங்களின் சுகாதாரத்துக்கேற்ற சீர்திருத்தங்களையும், நவீன முறைகளையும் அனுசரிக்கும்படி உண்டுபண்ணிவைத்தனர். இவர் தம் காலத்தில் இன்னு மெத்தனையோ சற்கருமங்களைப் பரோபகாரமாக அவ்வப்போது செய்திருக்கின்றனா யாழ்ப்பாணச் சீர்திருத்த விஷயமாக ஸ்ரீமான் கனகரத்தினம் செய்திருக்கின்ற செயல்களை தேசாதிபதியவர்கள் விஜயஞ் செய்த காலத்து மிகவும் வியந்து கூறியிருக்கின்றனா. யாழ்ப்பாணத்தவரின் சுயநலங்களை விரும்பிய்ட்ட நிரூபண சபையில் வாதிக்கின்ற விஷயங்கள் பலவும் புதினப் பத்திரிகைகள் மூலம் நன்கறியத்தக்கது. ஸ்ரீமான் கனகரத்தினம் சமயாபிமானம், சாதியாபிமானமுடைய பெருமகன், என்பதற்கு சந்தேகமில்லை. இவர் சைவாசாரம், சிவத்தியானம், சிவ, பக்ம, ஆலயவழிபாடு, முதலானதும் இன்சொல், இரக்கம், ஈகை, பொறை, அடக்கம், தானதருமம் முதலாயுள்ள அரும் பெருங் குணங்களை அணிகலமாகவுடைய உத்தமருமாவர். சர்வ கலாசாலை விஷயமாகவும இலங்கை ஆசாரச் சீர்திருத்த விஷயமாகவும் அபிப்பிராயங்கள் பலவற்றை எடுத்தாண்டனர். ஸ்ரீமான் கனகரத்தினத்தைப் போன்ற பேரறிஞர்கள் கவுன்சிலில் முக்கியமாயிருக்கவேண்டும். ஆனல் இனி எப்படியாகுமோ அறியேம்.

## K. T. Chittambalam, Esq. Proctor S. C.

ஸ்ரீமான் பிறக்டர், திருச்சிற்றம்பலம்:—இவர் யாழ்ப்பாணத்தைச்சார்ந்த வட்டுக்கோட்டை மேற்கில் பிறபலமுற்று விளங்கிய மேன்மக்கள் மரபைச்சார்ந்த திருவாளர் கார்த்திகேசு அவர்களின் அருந்தவப் புதல்வராவர். இவருடைய சிறந்த குணங்களைப்பற்றி ஆராயுமிடத்து நற்பழக்கமும், நல்லொழுக்கமும், சைவாசாரமும், உடையராய் சாந்தம், பொறை, அடக்கம் முதலாகிய விசேடகுணங்கள் அமையப்பெற்ற யோக்கியராய் விளங்குகின்றனர். இனி, இவருடைய கல்வியறிவையும், சாமார்த்தியத்தையும், பற்றிச் சுருக்கமாகச் சொல்லுகில் ஸ்ரீமான் சிற்றம்பலம் நியாயப்பிரமாணங்களில் வல்லுனராய், வியாபாரிமாராலும் உத்தியோகஸ்தராலும், நன்குமதிக்கப்பெற்று, பிரபல நொத்தாரிசாகவும், பிரபல நியாயதுரந்தரராகவும் விளங்குகின்றனர். இவ்விழைஞர், சுறுசுறுப்பும், நேர்மையும், விவேகமும், உடையரானதால் சனங்கள் எல்லாரும் இவரை விரும்பி இவர் மூலமாகவே தங்கள் வழக்குகளை நடாத்தி வருகின்றனர். தற்போது இங்குள்ள பிறக்டர்மாருள் கோட்டு விஷயமாகவும், உறுதிவிஷயமாகவும், ஏராளமான வழக்குகளைப் பெற்று நடாத்தும் திறனுடையராய் விளங்குகின்றனர்.

## A. Coomaraswamy Mudaliyar M L. C.

ஆ. குமாரசாமி முதலியார்:—இவர், இந்நகரில், முற்காலத்திருந்த ஆறுமுகம்பிள்ளை என்பவரின் புத்திரராவர். ஆறுமுகம் பிள்ளை யென்பவர் யார்? இவர் எங்குள்ளவர்? எப்படிப்பட்டவர்? என்பது எமக்குப் புலப்படாமையால் விடுத்தேம். இவருடைய பூர்வீகத்தை எழுதவில்லையே என்று எம்மைக் குறைகூறுதிருக்கும்படி நாதிகளை வேண்டுகின்றேம். இதுநிற்க, இந்த குமாரசாமி முதலியார், காராளகுல சிங்கமுதலியார் வமிசத்துத்தோன்றிய, கந்த இறைசுவார், வைரவநாதரின் இரண்டாந்தரத்து மகளை, இரண்டாவதாக விவாகஞ்செய்து, Sir. முத்துக்குமாரசுவாமி என்பவரையும், ஒரு பெண்மகவையும் பெற்றனர். இந்த சேர். முத்துக்குமாரசாமி என்பவர்,கவுன்சில் ஏற்பட்ட காலத்தில் சட்டநிரூபண சபையில்,முதலாவது தமிழ் பிரதிநிதியாயிருந்தனர்.

சுருக்கமாகச் சொல்லுகில் இவர்கள் காலத்திலிருந்தே இலங்கையிலிருக்கப்பட்ட தமிழருக்கு அரசாங்கத்தில் மகத்துவமுண்டாயிற்றென்று சொல்லவேண்டும். சேர். முத்துக்குமாரசுவாமியின் சகோதரியை இராசவாசல் முதலியாராயிருந்த தில்லையம்பலம், அருணாசலம், பொன்னம்பலம், என்பவர் விவாகஞ்செய்து இராமநாதனைப்பெற்றார். தற்போது, இவரே கவுன்சில் மெம்பராயிருந்து வருகின்றனர்.

## D

## R. Doresamy, Esq Shroff Eastern Bank Ltd.,

ஸ்ரீமான் துரைச்சாமி:— இவர் இந்நகரில் பாரியதனவந்தர்களாயும் மேன்மக்களாயும் பிரக்கியாதிபெற்று விளங்கும் பிரபுக்கள் சந்ததியைச்சார்ந்த திருவாளர் இரத்தினசபாபதி முதலியாரவர்களின் புத்திரருளொருவரும் காலஞ்சென்ற சிவகுருநாதமுதலியார் நமசிவாயமுதலியாரவாகளின் பௌத்திரருமாவர். இந்நகரிலுள்ள தமது விசித்திரமாளிகையில் 1896-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 21-ம் திகதி ஜெனனமானவர். இவர் சிறுபிராயமுதலாக றோயல் கொலீச்சில் கல்விகற்று கேம்பிறிச் பரீட்சைகளிற் தேறிய பேரறிஞராய் தற்போது ஈஸ்ரேண் வங்கியில் மிகப் பொருப்புவாய்ந்த பெரும் உத்தியோகத்தை வகித்துத் தமக்கு உதவியாகப் பலரை நியோகித்து சிறப்புவேலையை அதிக திறமையோடும் நேர்மையோடும் நடாத்தி நாட்டுக்கோட்டை நகரத்தாராலும், வியபாரிமார்களாலும், மேல்உத்தியோகஸ்தர்களாலும், நன்குமதிக்கப்பெற்று வருகின்றனர். ஸ்ரீமான் துரைச்சாமி இயல்பாகவே, பெரும் பிரபுக்கள் வமிசத்தைச் சார்ந்தவரானபடியால் பெருந்தன்மையும், பிறருக்கு உதவிசெய்தலாகிய பெருங்குணமுமுடைய யோக்கியராய் எல்லாருக்கும் நல்லபிள்ளையாய் விளங்குகின்றனர். இவருக்கு விவாகம், இந்நகரில் பாரியதனவந்தராயும், பிறக்டராயும், பிரபல நொத்தாரிசாயுமிருந்த, முத்துசுவாமியவர்களின் ஏகபுத்திரியும் தமிழ்ப் பிரதிநிதியாயிருந்த கௌரவ ஸ்ரீமான் எதிர்மன்ன சிங்கமுதலியாரவர்களின் பௌத்திரியுமாகிய

ஸ்ரீமதி நாகம்மா ளென்னும் பெண்மணியை விவாகஞ்செய்து, சற்புத்திர சந்தானங்களாக தியாகராஜா, சாரதாம்பா, என்னும் இரு குழந்தைகளைப் பெற்றனர். ஸ்ரீமதி நாகம்மாளின் குண விசேடத்தைப் பற்றிச் சொல்லுகில், இப்பெண்மணி பிதா மாதா வைப்போல் நற்பழக்கமும், சைவாசாரமும், சாந்தகுணமும், பொறுமையும், உடைய குணசாலியாய், இந்தியா முதலிய இடங் களைத் தரிசித்த சீமாட்டியாய் விளங்குகின்றனர். அடுத்துவரும் புத்தகத்தில் இவருடைய தன்மைகளை ஆராய்ந்து கூறுவோம்.

## S. Deva Raja Aiyer

பிரமஸ்ரீ தேவராஜ ஐயர்:—இவர் பருத்தித்துறையை சென்ம ஸ்தானமாகவுடையர். கல்வியறிவொழுக்கமும், சமயபக் தியும், தேசாபிமானமும், பாஷாபிமானமு முடைய சற்பாத்திர ராய், சித்திரசாலைக் கதிபராய் 'சித்திரம்" என்னும் சிறந்த சஞ் சிகையை நடாத்திவரும் போற்றுநராய் சிந்தாம்பிட்டித்தெரு, சிவ சுப்பிரமணிய சுவாமி கோவில் அருச்சகருளொருவராய் ஸ்ரீதேவ ராஜ் பிறதேர்ஸ் என்னும் வியாபாரஸ்தலத்துக்குச் சொந்தக்காரராய் பிரபல முற்று விளங்குகின்றனர்.

## E. Doresamy, Esq. Proctor S. C.

பிறக்டர் துரைச்சாமி:—காலஞ்சென்ற இவர், மாணிப்பா யாருட் சிறந்த யோக்கியராய், பிரபல நொத்தாரிசாகவும், பிறக்ட ராகவும் கடமை பார்த்து, உலகில் நற்பெயர் பெற்றனர். பிரபுக் கள் வம்சத்திற் றோன்றிய நியாயவாதிகள் இக்காலத்தில் ஏராள மாயிருப்பது போல், அக்காலத்தில் அதிகமானோர் இல்லாமையால், இவர் முதன்மைபெற்ற பிறக்டராயிருந்து அனேக வழக்குக்களை நடாத்தி, சிலவருடங்களுக்கு முன்னர் காலஞ்சென்றனர். இவர் மாணுப்பிள்ளை சந்ததியிற் றோன்றிய விசுவசிங்க முதலியார் எதிர் மன்ன சிங்கமுதலியார், அருணாசலம் வித்துவான், சுவாமிநாதர், ஆதியோருக்குப் பௌத்திரரும் சட்டசபை அங்கத்தினராயிருந்த கௌரவ எதிர்மன்ன சிங்கமுதலியார் புத்திரருமாவர்.

பொதுஜன சேவை புரியும்



ஸ்ரீமான் டாக்டர் ஐ. டேவிட்.

Meenambal Press.

**Dr. I David,** Medical Practitioner, St Sebastian, Colombo.

ஸ்ரீமான் டாக்டர் ஐ. டேவிட்:—இவ்வுத்தமர், இந்தியாவை ஜென்ம ஸ்தானமாகக் கொண்டு, இலங்கையில் தற்போது சென் ஸெபஸ்தியானில் ஆஸ்பத்திரி ஒன்றை ஸ்தாபித்து வைத்திய முறைகளை நன்கு நடாத்தி, இந்திய மக்களாலும், ஊரவர்களாலும் சன்மானிக்கப்பெற்று பிரபல டாக்டராய் விளங்குகின்றனர். ஸ்ரீமான் டாக்டர் டேவிட் இந்திய மக்களின் இடர்களை நீக்கும் பொருட்டாக பல துறைகளிலும் ஈடுபட்டு அளவற்ற நன்மைகளைச் செய்து வருகின்றனர். உதாரணமாக, மண்டபம் காம் விஷயமாகவும், கூலிச்சனங்களின் சம்பள விஷயமாகவும். தோட்டக்காடுகளில் வேலையாயிருக்கும் தொழிலாளர் விஷயமாகவும். இன்னும் இதுபோன்ற எத்தனையோ அரும்பெருஞ் செயல்களிற் பிரவேசித்துத் தம்மாலான சகாயங்களைச் செய்திருக்கின்றனர். இந்தியத் தேர்தலில் அபேட்சகராய் முற்பட்டு நின்றவர். அரசியல் ஞானம் உடைய இப்பேரறிஞரை அடுத்துவரும் தேர்தலிலாவது தெரிவு செய்தால் உலகத்துக்கு நன்மையுண்டாகும். ஆகலால் வீண் சோம்பேறிகளையும், சோத்துமாடுகளையும் தெரிவதால் நன்மை யுண்டாகாது. ஸ்ரீமான் டாக்டரவர்கள் சாந்தம், பொறை அடக்கம், பரோபகாரம், பிரபுத்துவம் முதலாகிய நற்குண நற் செய்கைகளை உடைய பிரபுவாய் விளங்குகின்றனர். இந்திய மக்கள் இவ்வுத்தமரை பிரதிநிதியாகத் தெரிவு செயயாமல் விட்டது பெருந்துக்கம, "நல்லமாட்டுக்கு ஒரு சூடு" என்றபடி மோசம் போகாமல் இனிமேலாவது தங்கள் வாக்குரிமையை நல்வழியில் உபயோகிப்பார்களென எதிர்பார்க்கின்றோம். அடுத்துவரும் பதிப்பில் எமது அபிப்பிராயத்தைக் கூறுவோம்.

**Hon Mr. W Duraiswamy,** Advocate, M. L. C.

கௌரவ ஸ்ரீமான் வை. துரைச்சாமி:---இவர் யாழ்ப்பாணத்து அராலியில் சைவவேளாண் மரபில் வைசிய குலதிலகனும், சிவநேயச் செல்வர்களாயும், பிரபுக்களாயும், ஆகம சாஸ்திரங்களை ஐயந்திரிபறக் கற்ற வித்வ சிரோன்மணிகளாயும் விளங்கிய செய்துங்கர், அம்பலவாணர், ஐயம்பிள்ளை ஆதியோர் வழித் தோன்றலும், இந்திய அரசாங்கத்தில் இஞ்சினியர் உத்தியோகத்

தை யதிக திறமையோடு பார்த்து துரைமார்களாலும் மேல் அதிகாரிகளாலும், பிரபுக்களாலும், சன்மானிக்கப்பட்ட திருவாளர், வைத்தியலிங்கம் பிள்ளை யவர்களின் புத்திரருள் ஒருவரும், மாதா வழியில், வேலணையைச் சென்ம ஸ்தானமாயுடைய இருமரபுந் துய்ய தனிநாயக முதலியார் பௌத்திரன், சின்னத்தனி நாயக முதலியார், ஆறுமுகம், குமாரவேலு புத்திரி கதிராசிப்பிள்ளையின் புத்திரருமாவர் ஸ்ரீமான் துரைச்சாமி சிறுபிராயம்முதல் நற்பழக்கவொழுக்கமும், சைவாசாரமு முடைய சற்புத்திரராய் வளர்ந்து உயர்தரக் கல்வியாகிய நியாயப்பிரமாணங்களையும், பிறவற்றையும் நன்கு கற்று சகல, கலைகளினும் மகா பாண்டித்தியமுடைய பேரறிஞராய், பிரபல நியாயதுரந்தரராய், வடமாகாணப் பிரதிநிதியாய், சட்ட நிரூபண சபை அங்கத்தினராய், இந்து கலாவிர்த்தி சங்கத்தலைவராய், சைவ வித்தியாசாலைகட்கதிபராய், மானேசராய், சைவ சமய விருத்திக்கேற்ற சற்கருமங்களை ஸ்தாபித்து நடாத்தும் சிவ புண்ணிய சீலராய், பற்பல சங்கங்களுக்கும் சபைகளுக்கும் தலைவராய், சிவாலயம் மடாலயங்களுக்குத் தர்மகர்த்தாவாய், யாழ்ப்பாணத்தாரின் சுயநலங்களை விரும்பி சட்ட சபையில் வாதிப்பவராய், வழக்குகள்பலவற்றை யதிக திறமையோடு நடாத்துபவராய், இடையிடையே பொலிஸ் நீதிபதியாகவும், டிஸ்திறிக் நீதிபதியாகவும், கடமை பார்க்கின்றவராய், உலகில்நற்கியாதியும், நற்கீர்த்தியும், நற்பேறும், உண்டாக தேசாதிபதியவர்களாலும் பிறராலும், சன்மானிக்கப்பெற்று சாந்தம், சற்குணம், இன்சொல், ஈகை, இரக்கம், கொடை, வணக்கம், சிவபக்தி, சிவாலயவழிபாடு முதலாகிய சிறந்த குணங்களையுடைய பேரறிஞராய் பிரக்கியாதி பெற்று சற்புத்திர சந்தானங்களோடு விளங்குகின்றனர்.

**N. Doraisamy Esq.** Building Contractor, Wellawatta

ஸ்ரீமான் துரைச்சாமி:— இவர், திரிகோணமலையைச் சென்மஸ்தானமாயுடைய, பால்வண்ணம்பிள்ளை, நமசிவாயமவர்களின் புத்திரராவர். இவர், தற்போது இந்நகரில் ஒப்பந்தவேலை செய்யும் பிரபல கொந்திறுத்துக் காரராயும், தனவந்தராயும், விளங்குகின்றார். இவரைப்பற்றி விசேஷமாகச்சிலர் சொன்னதால், மேன்மகனென மதித்து, இப்புத்தகத்தில் எழுதலானேம், இனி

நாம் இவரை ஒருமுறை சந்தித்து, இவரோடு கலந்து, இவருடைய பெருந்தன்மையும், உதாரகுணத்தையும், நன்கறிந்து அடுத்துவரும் புத்தகத்தில் எமது அபிப்பிராயங் கூறுவேம். இவர் ஸ்ரீமான கண்ணையாவின் புத்திரி, ஸ்ரீமதி பொன்னமாளென்னும் மாதை விவாகம்செய்து நடராசா, நிசைவீரசிங்கம், சந்திரசேகரம், ராசரத்தினம் என்னும் புத்திரர்களையும் வடிவாச்சி என்னும் ஓர் பெண்மகவையும் பெற்றனர்.

## S. Doraisamy, Broker

ஸ்ரீமான் துரைச்சாமி:—இவர், காலஞ்சென்ற புரோக்கர் சங்கரப்பிள்ளையவர்களின் இரண்டாவது புத்திரராவர், இவர் உயர்குலத்துத் தோன்றிய பிரபுக்கள் வமிசத்தைச் சார்ந்தவர், தற்போது புரோக்கராயிருக்கின்றனர்.

## E

## T. V. Edward, Esq., (La Retraite) Barnes Place.

ஸ்ரீமான் ரீ. வீ. எட்வேட்:—இவர், தற்போது கறுவாக்காட்டில் வசிக்கின்றார். இவ்வுத்தமர், உயர்குலத்துத்தோன்றிய மேன்மகனும், குணத்திலே சிறந்த குணசாலியாய், பரோபகாரம், பெருந்தன்மை ஆதியவற்றில் சிறந்த புனிதராய் விளங்குகின்றனர். ஸ்ரீமான் எட்வேட் அவர்களுடைய, பெருங்குணங்களைப்பற்றி, பலருஞ்சொல்லக் கேள்விப்பட்டுள்ளோம். ஆனதால், இப்பேர்ப்பட்ட குலமகனை, இப்புத்தகத்தில் எழுதாமல் விடக்கூடாதென்று சுருக்கமாய் எழுதலானேம். அடுத்துவரும் பதிப்பில் இவரைப்பற்றி யாம் நன்கறிந்து விரிவாய்க்கூறுவேம். தற்போது இவ்வுத்தமர், பிரபல புரோக்கராகவும், கம்பனிகளுக்குச் சாமான் சப்ளைசெய்யும் கொந்திறுத்துக்காறராகவும், தனவந்தராகவும் விளங்குகின்றனர். தங்கரத்தினம் என்னும் புத்திரியை முதலாவதாகப்பலபுத்திரசந்தானங்களைப்பெற்ற பாக்கியசாலியுமாவர்.

## **A. S. Eliatamby,** J P U P. M. Superintendent of Police.

ஸ்ரீமான் இளையதம்பி:— இவர், மட்டக்களப்பிலே பிரபலமுற்று விளங்கும் பாரிய குடும்பத்தில், இராசவாசலில் முதலியாராகவும், அதிகாரராகவும் புகழ்பெற்று விளங்குமிருவாளர், இளையதம்பி முதலியாரவர்களின் புத்திரராவர். இவர் 1883-ம் ஆண்டு மே மாதம் 11-ம் திகதி சென்னமானவர். சிறுபிராயம் முதலாக செந்தோமஸ் கல்லூரியில் கல்விகற்று இராணுவத் தலைவரின் கீழ், பொலிஸ் இன்ஸ்பெக்டராயிருந்து, பற்பல வழக்குகளை திறமையோடு நடாத்தி, உலகில் நற்பேர்பெற்று, தேசத்தொண்டும் அரச சேவையும் செய்து, உத்தியோக உயர்வடைந்து, தேசாதிபதியவர்களாலும், ஜனரவர்களாலும் நன்குமதிக்கப்பெற்று, பிதாவைப்போல் பட்டங்களைவகித்து அதிகாரவாக்கத்தினராய், பரோபகார சீலராய, சற்குணசம்பன்னராய், அரசியல் ஞானமுடையவராய, சமாதான நீதிபதியாய் விளங்குகின்றனர். இதுகாறும நம், தமிழ் மக்களுள் ஸ்ரீமான் இளையதம்பியவர்களைப்போல் பொலிஸ் இராணுவத்தில், மேல் உத்தியோகஸ்தராயிருந்து புகழ் பெற்றவர் எவருமில்லையெனலாம. அடக்குமுறையில், ஜனங்களை சீர்படுத்திவைத்தவருமு இவரேயாவர். திடசரீரமும், மனத்தைரியமும், நட்புத்தியும், விவேகமும், சாதுரியமுமுடையவர். கிறிக்கெற் முதலான விளையாட்டில் முதன்மைபெற்றவர். தமிழ் யூனியன் சங்கத்து ஸ்தாபகருள் ஒருவருமாவர்.

## **Erambaiyer Avergal.**

பிரமஸ்ரீ பரம்பையரவர்கள்:—காலஞ்சென்ற இப்பெரியார் மாதகலைசென்மஸ்தானமாகவுடையவர். வடமொழி, தென்மொழி இரண்டிலும் வல்லவராய் பாவியற்றும் பான்மையுடையராய் சைவப்பிரசாரகருளொருவராய் பிரக்கியாதிபெற்று விளங்கினார். ஆசௌசவினவிடை மகாசங்கல்பம், நகுலேஸ்வரமான்மியம் முதலாகிய அரிய நூல்களைச்செய்திருக்கின்றனர். கீரிமலையில் சைவ வித்தியாசாலையொன்றை ஸ்தாபித்து பலமாணவர்க்குக் கல்வி கற்பித்து வந்தனர். வித்வ சிரோன்மணியாய் விளங்கிய இப்பெரியாரால் கட்டப்பட்ட ஒரு மடமும் இருக்கின்றது.

## Hon. Mr. Edirmanasingha, Mudaliyar, M. L C.

ஸ்ரீமான் கௌரவ எதிர்மன்னசிங்க முதலியார்:— இப்பெரியாருடைய வரலாற்றை ஆராயுமிடத்து, வெகுகாலத்துக்கு முன்னர் இணுவிலை ஜெனமஸ்தானமாகக்கொண்டு பிரபலஸ்தர்களாய் விளங்கிய மாணுப்பிள்ளை விசுவசிங்க முதலியாரின் புத்திரராவர். இவர் தமிழ்மக்களுள் முதன்மைபெற்ற மகானுய், குலாசாரம், மதாசாரம் பூண்ட பிரபுவாய், பரோபகார சீலராய், எத்திசையும் புகழ்பெற்ற கீர்த்திமானுய விளங்கினுர். இவர் சட்ட நிரூபணசபைத் தமிழ்ப் பிரதிநிதியாயிருந்து உலகிலுள்ள சமஸ் ஜனங்களாலும நன்குமதிக்கப பெற்றனா. அக்காலத்திலுள்ள மதிப்பும, கௌரவமும், இக்காலத்திலுள்ள பிரதிநிதிகளுக்கில்லை. ஸ்ரீமான் எதிர்மன்னசிங்க முதலியார் செல்வத்திலுைம், குணத்திலுைம் சிறந்த மேன்மகனுய பலவித புண்ணியங்களைச் செய்து தம்முடைய பெயரைநாட்டி மேலுலகஞ் சென்றனர். காலஞ்சென்ற துரைச்சாமி இவருடைய புத்திரர் மு. சோமசுந்தரம் ஸ்ரீமதி மு. கமலாம்பா, ஆகியோர் முறையே பௌத்திரர்களாவர்.

## G

## Ganesha Aiyer Avergal.

பிரமஸ்ரீ கணேச ஐயர்:— இவர் வண்ணூர்பண்ணையிலுள்ளவர். யாழ்ப்பாணத்திலே கொம்மாண்டோர் அரசியற் சங்கத்தில் முதன்மை பெற்றவர். அக்காலத்திருந்த பிராமணருள், முதலியார் பட்டம்பெற்று சர்வாதிகாரம் படைத்த பிரபுவாய் பாரிய தனவந்தராய் விளங்கினுர். யாழ்ப்பாணத்திலிருந்த தமிழ் வித்துவான்களையும், இந்தியாவிலிருந்துவரும் வித்துவான்களையும் உபசரித்து, திரவிய சகாயங்களைச் செய்து தமிழ்ப் பாஷையை வளர்த்து வந்தனர். இவர்பேரில் பாடப்பட்ட பலபிரபந்தங்களும் வழங்குகின்றன. இவருடைய ஆண் சந்ததியாருக்கு இப்பவும் சுப்பிறியங்கோடு நடக்குங்காலத்தில் கௌரவஸ்தர்களாய் மதிக்கப்பட்டு வருகின்றனர்.

## C. Gnanasekaram Esq., J. P

—<>—

ஸ்ரீமான் ஞானசேகரம் சமாதான நீதிபதி:—இப் பெரியார், இந்நகரிலுள்ள தமிழ்மக்களுள், கல்வி அறிவொழுக்கங் களாலும், தானதருமங்களாலும், பிரபலமுற்று அரசாங்கத்தில் அதிகாரம்படைத்த பெரும் பிரபுவாய், தருமங்கொடுப்பதில் சிறந்த கொடை வள்ளலாய், சிற்றரசனுக்கு ஒப்பாகவிளங்கும், இவ்வுத்த மருடைய பூர்வீகத்தையும், சந்ததிவரலாற்றையும் ஆராயுமிடத்து, தமிழரசர் வமிசத்துத்தோன்றிய மனப்புலிசிங்க முதலியார், தனப் பாலசிங்க முதலியார், என்னும் பெயரையுடைய பெருமக்களின் வழித்தோன்றலாவர். அக்காலத்திலே இவர்கள், மல்லாகப்பகு திக்கு அதிபர்களாய் அடிமை, குடிமை, ஆட்சி, அதிகாரம், செல் வம், கீர்த்தி, பரோபகாரம், பிரபுத்வம், பெருந்தன்மை, சைவா சாரம், முதலானவற்றோடு சமயபக்தி யுடையவர்களாய், பிரபல முற்று விளங்கினார்கள். காலாந்தரத்தில் ராஜவமிசத்தைச்சார்ந்த கதிர்காமர் சுப்பிரமணியம் என்பவர், இணுவிலிற் குடியேறிய காரைக்கால் வேளாண் மரபிற்றோன்றிய வேலாயுதர் புத்திரி, சிதம் பாவல்லி என்னும் பெண்ணை விவாகஞ்செய்து நவாலிப்பகுதிக்கு அதிபர்களாயிருந்தார்கள். இவருடைய புத்திரர் கதிரைவேற் பிள்ளை. இனி, கதிரைவேற் பிள்ளையுடைய சிரேஷ்ட புத்திரரே ஸ்ரீமான் ஞானசேகரம். திருஷ்டாந்தமாக இவர் ராஜாக்களைப் போல் லக்ஷாதிபதியாய், அஷ்டைஸ்வரியப் பிரபுவாய் தம் மூதாதை யர்களுக்கு இலக்காய், தமிழ் அரசரின் அம்சம்பெற்ற மகானாய் விளங்குகின்றனர். இதுநிற்க, இந்தியாவிலுள்ள இராஜாக்கள் ஒன்றுக்கு மேற்பட்ட கன்னியர்களை விவாகஞ்செய்து வாழ்ந்தன ரென்று புத்தகங்கள் மூலமாய் அறியக்கிடக்கின்றது. அதன்மை போற் கதிரைவேற் பிள்ளையவர்களும் அனேகரை விவாகம்பண்ணி புத்திரர்களையும், புத்திரிகளையும் பெற்று வாழ்ந்தனர். சிரேஷ்ட புத்திரராகிய ஸ்ரீமான் ஞானசேகரம் அவர்களுடைய சிறந்தகுணங் களைப்பற்றி இங்கு சுருக்கமாகக் கூறுவோம். இந்த மகான் 1861 ஆண்டு மே மாதம் ஜெனனமானவர். சிறுபிராயம் முதலாக நற் பழக்கவொழுக்கங்களிற் சிறந்து, செந்தோமஸ் கல்லூரியில் கல்வி கற்றவர். சிவதீக்ஷை, நித்தியகருமானுஷ்டானம், சைவாசாரம், சிவத்தியானம், சிவாலயவழிபாடு முதலானதும் உடையர், சிவா

தருமசீலராகிய சமாதான நீதிபதி



ஸ்ரீமான் க. ஞானசேகரம் J. P

Meenambal Press, Colombo.

லயங்களிலே பூசைஉற்சவ முதலியனவற்றைக் காலந்தோறும் விதிப்படி செய்விப்பவர். விரதவிலக்குகளையும் விசேடதினங்களை யும் அனுஷ்டிப்பவர். சாந்தகுணமும் விவேக புத்தியுமுடையர். தருமசாஸ்திரங்களின் இயல்பை நன்கறிந்தவர். இராமேஸ்வரம் முதல், காசிபரியந்தம் உள்ள புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று கங்கை முதலான புண்ணிய தீர்த்தங்களாடினவர். வாய்மை, இரக்கம், பொறை, அடக்கம் முதலான தருமகுணங் களையுடையவர்.

## உத்தியோகம்.

ஸ்ரீமான் ஞானசேகரம் பழைய ஒறியன்டல் வங்கி புதிய ஒறி யண்டல் வங்கி, கொங்கோங் வங்கி முதலாயுள்ள இடங்களில் சிறுப்பறாயிருந்து பலராலும் சன்மானிக்கப்பெற்றனர். அதன் பின்னர் நேஷனல் வங்கியில் மிகப் பொறுப்புவாய்ந்த ஸ்தா னத்தை வகித்து பிரதம சிறுப்பராய், மேலான உத்தியோகஸ்த ராய், பலகாலம் நேர்மையோடும், மதிப்போடும் கடமைப்பார்த்து உலகில் நற்கீர்த்திபெற்று உத்தியோகத்தினின்றும் இளைப்பாறி னர்.

## தானதருமம்.

இனி தரும விஷயமாகச் சொல்லுகில், தானதருமங்களை இயன்றமட்டுஞ் செய்து புகழ்பெற்ற பெரியாரின் பிள்ளையான தால், "எந்தை நல்கூர்ந்தா னிரப்பார்க் கீந்தென்றவன் மைந்தர் தம்மீகை மறுப்பரோ" என்னும் ஆன்றோர் வாக்கிற்கிணங்க, அள வு கணக்கற்ற தானதருமங்களைச் செய்திருக்கின்றனர். அவை களை விரிக்கிற் பெருகும் ஆதலால் சிலவற்றைக் கூறுவேம். இயல் பாகத் தம் பொருளை உத்தம தருமங்களிலே செலவிடுகின்றவர். தவத்தினளவாகத் தான் பெற்ற பொருளைக்கொண்டு ஏழைகளுக் கும், இரப்போருக்கும், வறிவர்களுக்கும், சற்பாத்திரர்களுக்கும், கல்வியறிவாளர்களுக்கும இல்லையென்னாது தருமங்கொடுப்பவர். இனி இவர் செய்திருக்கின்ற சைவசமய விருத்திக்கேற்ற சற்கருமங் களைச சொல்லுகில், தம் பிதாவைப்போல் அன்னதானம் வஸ்திர தானம் செய்பவர். சிவாலயம் மடாலயங்களுக்குப் பொருள் கொடுப்பவர். ஜெனரல் ஆஸ்பத்திரியில் தருமவைத்தியசாலை ஒன் றை ஏற்படுத்தியவர். யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரி, கீரிமலை சிவன் கோவில், ஆதிய திருப்பணிகளுக்குப் பெரும்பொருள்

கொடுத்தவர். நகுலேஸ்வர ஸ்வாமியின் நித்திய பூசைக்கு முதல் கட்டடியவர். கார்த்திகை மாசத்துச் சோமவாரத்தன்று விமரிசையாக நவோத்ர சங்காபிஷேகஞ் செய்பவர். களவோடை அம்மன் கோவிற் திருப்பணிகளையுஞ் செய்துமுடித்தவர். விவேகானந்த சபை ஆதியவற்றில் அங்கத்தவருமாவர். இவருக்கு விவாகம் வட்டுக்கோட்டை மாறுமுதலியார் வம்சத்துத் தோன்றிய பூதத்தம்பி, சுவாமிநாதர், ஆறுமுகம் புத்திரன், சிறப்பு மயில்வாகனமவர்களின் புத்திரி ஸ்ரீமதி நீலாயதாக்ஷி யென்னும் பெண்மணியை விவாகஞ்செய்து சற்புத்திர சந்தானங்களாக, சமாதான நீதிபதி சண்முகத்தையும், பிரபல டாக்டராகவும் பாரிஸ்டராகவும விளங்கும் விக்கினராசாவையும் பெற்றனர்.

நீலாயதாக்ஷி

இவ்வுத்தமியின் குணவிசேடத்தை அறியாதாரில்லை. சுருககமாகச் சொல்லுகில் சைவாசாரமும், சிவபக்தியும், ஆகமவுணர்ச்சியும், தருமசிந்தையும், ஆன்ம இரக்கமும் உடைய பெரும் புண்ணியவதியாய், குலமகளாய் இருந்து சில வருடங்களுக்கு முன்னர் சிவபதமடைந்தனர்.

## Dr Gunaratnam Cooke, M D (Lon )

ஸ்ரீமான் டாக்டர் குணரத்தினம் குக்:—இவர், யாழ்ப்பாணத்தில் பிரக்கியாதி பெற்ற பிரபல குடும்பத்தில், நியாய துரந்தரராயிருந்து உலகில் நற்பேர் பெற்றுச், சிலவருடங்களுக்கு முன்னர் காலஞ்சென்ற, பிறக்டர் தம்பையா அவர்களின் அரிய புத்திரருளொருவராவர். இவர் 1892-ம் ஆண்டு ஜுன் மாதம் 30-ம் உ ஜெனனமானவர். இவவுத்தமர் சிறுபிராயம் முதலாக நற்குணமுடைய புதல்வராய் சென்றல் கல்லூரியிலும், ரோயல் கல்லூரியிலும், கல்விகற்ற பின்னர், ஐரோப்பா முதலிய மேலைத்தேசங்களுக்குச் சென்று, ஆங்கில வைத்திய சாஸ்திர முறைகளை நன்காராய்ந்து மகா பாண்டித்தியமுடைய நிபுணராய், பெறுதற்கரிதான பெரும் பட்டத்தையும் பெற்று, இங்கிலாந்திற்றானே பற்பல ஆஸ்பத்திரிகளில் டாக்டராயிருந்து பலராலும் நன்குமதிக்கப்பட்டனர். தற்போது ஜெனரல் ஆஸ்பத்திரியில் மிகப்பொறுப்புவாய்ந்த பெரும் உத்தியோகஸ்தராயிருக்கின்றனர். ஸ்ரீமான் டாக்டர் குணரத்

தினம் கல்வியிலும், அறிவிலும், நற்பழக்க வொழுக்கங்களிலும், சிறந்த புனிதர். இவருக்கு விவாகம் பிரபல டாக்டராய் பெரும் புகழ்பெற்று விளங்கும், ஸ்ரீமான் செல்லர்போல் அவர்களின் சிரேஷ்ட புத்திரி ஸ்ரீமதி லோலிதா என்னும் பெண்மணியைக் கைப்பிடித்து இரு குழந்தைகளைப் பெற்றனர். இப்பெண்மணி சிறுபிராயத்தில் எம்மிடங்கல்வி கற்ற காலம் முதலாக இப்புனித வதியின் உத்தமகுணங்களை யாம் அறிவேம். கல்வி யறிவொழுக்கம், இன்சொல், ஈகை, இரக்கம், பிதா, மாதா, குரு, உபாத்தியாயர் முதலாகிய பெரியோரிடத்து அன்பும் பணிவுமுடைய சுகுண வதியாவர்.

## Ganesha Aiyer Avergal.

பிரமஸ்ரீ வித்துவான் கணேச ஐயர்:—இவர் புன்னாலைக் கட்டுவனிலுள்ளவர். குமாரசுவாமிப் புலவரிடம் கல்வி கற்றவர். இலக்கண இலக்கிய அறிவிற் சிறந்தவர். ஆரிய நூல்களை இயறறியுள்ளார். யாழ்ப்பாணத்திலுள்ள வித்துவான்களுள் ஒருவராய் சிறந்து விளங்குகின்றனர். தற்போது இப்பிராமணோத்தமர் சுன்னாகம் பிராசீன பாடசாலைத் தலைமையாசிரியராய் மதுரைத் தமிழ் சங்கத்து பண்டிதர் வகுப்புப் பரீட்சகராயிருக்கின்றனர்.

## A. R. Hallock, Esq., C. C. S.

ஸ்ரீமான் ஆனந்த ராஜா ஹாலக்:—இவர் மானியம் பதியிலே தக்ககுடும்பத்தைச் சார்ந்த முருகேச முதலியார் பௌத்திரரும், இலங்கை அரசாங்கத்தில் பிரபல டாக்டராயிருந்து பெருங்கீர்த்தி வாய்ந்த திருவாளர் (ஹலக்) சரவணமுத்து அவர்களின் கனிஷ்ட புத்திரருமாவர். இவர் இங்குள்ள ஆங்கிலக் கல்லூரிகளில் கல்விகற்று, இங்கிலாந்து முதலிய மேலைத்தேசங்களுக்குச் சென்று, அங்கே உயர்தரக் கல்வியையும், நியாயப்பிரமாணங்களையும் நன்கு கற்று, சிலோன் சிவில் சேர்விஸ் C. C. S. என்னும் பரீக்ஷையில் தேர்ந்து புத்தளம், சிலாவம், என்னுமிடங்களில் உப ஏசண்டாகவும், பொலீஸ் நீதிபதியாகவும், கடமை பார்த்து வருகின்றனர். ஸ்ரீமான் ஆனந்தராசா கல்வியறிவிலே சிறந்தவர். நல்ல குலத்திலுள்ள வராதலால் நற்குணமும், பெருந்

தன்மையும், பரோபகாரமும், அன்பும், கொடையு முள்ளவர். விவேகத்திலும், சாதுரியத்திலும், திறமையுள்ளவர். பிதா மாதா உபாத்தியாயர் முதலானோரிடத்து விசுவாசமுடையர். மேலைத் தேச சங்கீத ஞானத்தில் சிறந்தவர். பலதேசத்தரசர் முன்னிலையில் பல பாஷைகளில் இசையோடு பாடி விலையேறப் பெற்ற பெரும் பரிசுகள் பெற்றவர். இவர், பிறக்டர் ராஜநாதன் அவர்களுக்குச் சகோதரரும், யாழ்ப்பாணம் உப ஏசண்டர், ஸ்ரீமான் ராஜநாயக முதலியாரவர்களின் சகோதரி புத்திரருமாவர். ஸ்ரீமான் ஆனந்தராஜா தற்போது களித்துறையில் உப ஏசண்டாயும் உதவிப் பொலீஸ் நீதிபதியாயும் இருக்கின்றனர். சுருக்கமாகச் சொல்லுகில், சிறந்த குணமும், பெருந்தன்மையும், சற்குணசாலியுமாவர். நாம் அறியாத பெரும் உத்தியோகஸ்தர்களு மில்லை பிரபுக்களுமில்லை, இருந்தபோதிலும், ஆனந்த ராஜாவைப்போல் விவேக புத்தியுள்ள வாலிபரை இந்த விதமான பெரும் உத்தியோகத்தில் பார்த்ததேயில்லை இவருக்கு ஜீன் ராணி, சிந்தியா, என்னும் நாமத்தையுடைய மூன்று புத்திரிகளுண்டு.

## Mrs. A Hallock

ஸ்ரீமதி அன்னபூரணி அம்மாள்:—காலஞ் சென்ற இப்பெண்மணியுடைய மூதாதைகள் சண்டிருப்பாயையும் அதன் பின்னர் நாவலியையும், சென்மஸ்தானமாக்க கொண்டு பிரபலமுற்ற மேன் மக்களாய் விளங்கினார்கள். இவ்வுத்தமியின் வரலாற்றை ஆராயுமிடத்து இருமரபுந்துய் முதலிய வம்சத்தைச் சார்ந்த அம்பலவாண இறைசுவார், வீரசிங்க உடையார், ஆதியோரின் பௌத்திரியும், உலகில் நற்கீர்த்தி பெற்ற ஓவசியர் செல்லப்பா அவர்களின் அருமைப் புதல்வியருளொருவருமாவர். இப் பெண்மணி கல்வியறிவொழுக்கமும் சமயபக்தியும் குலாசாரமும் நற்குணமும், நற்செய்கையுமுடைய, பதிவிரதையா யிருந்து டாக்டர். " ஹல்லக் " சரவணமுத்து அவர்களை விவாகஞ் செய்து, புத்திர சந்தானங்களைப் பெற்று, இல்லற தருமத்தை நன்கு நடாத்தி 1920-ம் ஆண்டு இவ்வுலக வாழ்வை நீத்துப் பரலோகஞ் சென்றனர். இவ்வுத்தமியின் பிள்ளைகள் தற்போது மேலான ஸ்திதியிலிருக்கின்றனர். இவர்களுள், தங்கம்மா ளென்னும் பெயராலறி

யப்பட்ட சதாசிவம் மனைவி ஸ்ரீமதி இராசமுத்து என்னும் பெண் மணி மாத்திரம், தாயைப் போல் உத்தம குணம் வாய்ந்த சற்புத்திரியாய், சைவ சமயாசாரங்குன்றாத குலமகளாய, தன்மரபைக் காப்பாற்றிய குலஸ்திரியாய், புத்திரசந்தானங்களைப் பெற்று சீர் சிறப்பாய் வாழ்கின்றனர் தற்போது, இந்தப் பெண்மணியொரு வாயல், இந்தக் குடும்பத்தின் பெருமை விளங்கத் தக்கதாயிருக்கின்றது.

## Dr S. Hallock

ஸ்ரீமான் டாக்டர் ஹலக் சரவணமுத்து:—இவர் மானிப்பாயில் பிரபல குடும்பத்தைச் சார்ந்த பெரும் உத்தியோகஸ்தராவர். கல்வியறிவொழுக்கங்களிலும், கடவுள் பத்தியிலும், சற்கருமங்களைச் செய்தலிலும், சிறந்த மேதாவியாவர் அரசாங்கத்தின் நாலுபதிகளிலும் டாக்டராயிருந்து, பற்பல சமயத்தவர்களாலும், சாதியார்களாலும், சன்மானிக்கப்பட்ட சற்பாத்திரருமாவா. இவ்வுத்தமரை அறியாதார் எவருமில்லை. இவர் இன்சொல்லை, அன்பு இரக்கம், தயவு, தாக்ஷணியம் முதலாகிய நற்குண நற்செய்கைகளோடு கூடிய உத்தமராய் விளங்கினுர். இவர் உத்தியோகமாயிருக்குங் காலத்தில சிவாலயங்கள் மடாலயங்களுக்குப் பொருளுதவியும், ஏழைகள், இரப்போர், முதலானவர்களுக்குத் தானதருமங்களும் சீர உதவியும் செய்தனர். பிற்காலத்தில் இந்தியாவிலுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று ஸ்தல யாத்திரை தீர்த்தயாத்திரை செய்தனர். களங்கமற்ற மனதையுடைய சுத்தாத்மாவானதால், இவருடைய பிள்ளை குட்டிகளெல்லாரும் சந்தான விருத்தியாகி பெரும் உத்தியோகங்களைப் பெற்று மேலானபதவிகளில் விளங்குகின்றனர். இப்புண்ணியசீலர் 1912ம் ஆண்டு ஆடி மாதம் 27-ம திகதி இவ்வுலகை நீத்துப் பரலோகஞ்சென்றனர் மிக்க கற்பினளாய், செல்வச்சீமாட்டியாய், புண்ணிய பொக்கிஷமாய் விளங்கிய, இவர் மனைவி ஸ்ரீமதி அன்னபூரணியம்மாள் தமது சுற்ற மித்திரர் மத்தியில் சில ஆண்டுகளுக்கு முன்னர் சிவபதமடைந்தனள்.

## Inuvil Kandaswamy Kovil.

இணுவில் கந்தசுவாமி கோவில்:—இவ்வாலயம் பல நூற்றாண்டுகளுக்கு முன்னராயுள்ளது. யாழ்ப்பாணத்துள்ள புராதன வாலயங்களுள் இதுவுமொன்றாகும். இக்கோவில், பிராமணர்களாலே கட்டப்பட்டது. பிராமணர்களுக்கே சொந்தமாயுள்ளது. இங்ஙனமிருப்ப சில அறிவீனர், பிராமணரிடமிருந்து இவ்வாலயத்தை அபகரித்துக் கொள்ளலாமென்ற நோக்கம்பற்றி வழக்குத்தொடர்ந்து அபஜெயமடைந்தனர். ஆதிகாலந்தொட்டுக் குருசிரேஷ்டர்களாய், சிவபூஜாதுரந்தரர்களாய், விளங்கிய பெரியார் சந்ததியைச்சார்ந்த சீனிவாசகக்குருக்கள் புத்திரன் நாகநாதக்குருக்கள், செல்லக்குருக்கள், சோமசுந்தரக்குருக்கள் ஆகியோர்களே இவ்வாலய ஆதீன தர்மகர்த்தாக்களாயிருந்து நித்தியநைமித்தியங்களைக் குறைவற நடாத்திவந்தனர். ஜேஷ்டர்களிருவரும் சில வருடங்களுக்கு முன்னர் சிவபதமடைந்தனர். தற்போது பிரமஸ்ரீ சோமசுந்தரக் குருக்களவர்களே தர்மகர்த்தாவாகவும் பிரதான அருச்சகராகவுமிருந்து வழமைபோல் நடாத்தி வருகின்றனர். இவர் தம் மூதாதையர்களைப்போல் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த, சிவபூஜா துரந்தரராய், பலராலும் நன்குமதிக்கப்பெற்ற பிரபலஸ்தராய் விளங்குகின்றனர்

## D. James, Broker

ஸ்ரீமான் புரோக்கர், டீ. ஜேம்ஸ்:— இவருடைய மூதாதைகள் மாதகலில் உயர்குடிப்பிறந்த மேன்மக்களாயும், சாதிமரபிலே சிறந்தவர்களாயும், வம்சபாரம்பரியத்திலுள்ள பிரபுக்களாயும், செல்வர்களாயும், உத்தியோகஸ்தர்களாயும், அடிமை, குடிமை, ஐசுவரியம், பரோபகாரம், பிரபுத்வம், தேவபக்தி முதலானவற்றோடு சிறந்த புனிதர்களாய் அதிகாரம் பூண்ட மேதாவிகளாய் முதலியார்பட்டம் சமாதான நீதவான்பட்டம் முதலாகிய கௌரவப் பட்டங்களைப்பெற்ற பேரறிஞர்களாய், உலகில் பெருங்கீர்த்திபெற்று விளங்கிய பெரியார் சந்ததியிற் றோன்றியவரும் நாட்டாண்மை, செல்வாக்கு, கிராமாதிகாரம், ஆதியவற்றோடு, உடையாராயிருந்து, புகழ்பெற்ற திருவாளர், தியோகுப்பிள்ளை

யவர்களின் புத்திர சிகாமணிகளி லொருவரும், சுப்பிரமணியமுதலியார், இராசவாச முதலியாராயிருந்த, சந்திரசேகரா, சின்னதம்பி ஆதியோரின் பௌத்திரருமாவர். ஒல்லாந்தர் காலந்தொடக்கம் முதன்மைபெற்ற குடும்பத்தினராய் பிரபலமுற்று விளங்குகின்றனர். ஸ்ரீமான் ஜேம்ஸ் கிறிஸ்துமதாபிமானியாய, தம் மூதாதையர்களைப்போல் இன்சொல், இரக்கம், ஈகை, பரோபகாரம், பெருந்தன்மை முதலாகிய சிறந்த குணங்களையுடைய புனிதராய், குலாசாரம், மதாசாரம்பூண்ட யோக்கியராய் விளங்குகின்றனர். இவர் 1883-ம் ஆண்டு நவம்பர் மாதம் 27-ம் திகதி ஜெனனமானவர். குலத்துக்கேற்ற குணமும், நறபழக்க வொழுக்கமுமுடையவராய் சென்பற்றிக் கல்லூரியிலும், செனபெனடிக் கொலீச்சிலும் கல்விகற்றனர். இவருக்கு விவாகம், புத்தளப்பகுதியில் நீதிபதியாகவும், J. P. U. P. M. முதலான பெரும் பட்டங்களை பெற்ற மேன்மகனும், தனவானும் பிரபலமுற்று விளங்கும் வேந்தர்கோன் முதலியாரவர்களின் இரண்டாவது புத்திரி ஸ்ரீமதி பிளோறென்ஸ் தியோடோறு என்னும் குணவதியைக் கைப்பிடித்து இருபெண்களையும், இரு ஆண்களையும் சந்தானங்களாகப் பெற்றனர். அடுத்துவரும் பதிப்பில் விபரமாய்க் கூறுவேம்.

## **James Joseph Esq.** District Judge, Jaffna.



ஸ்ரீமான் ஜேம்ஸ் ஜோசெப்:—இவர், இந்நகரில் பிரபல நியாயதுரந்தரராக கடமைபார்த்து பலராலும் நன்கு மதிக்கப்பெற்றவர். பலவருடங்களாக இவர் அப்பீல்கோடு முதலான இடங்களில் அருப்பெரும் வழக்குகளை மூவிராசாக்கள் முன்பாக நடாத்தி உலகில் நற்கியாதி வாய்ந்தவர். இந்நகரில் பல்லாயிரக் கணக்காயுள்ள அப்புக்காத்துமார் இருப்பினும், இவரைப்போல் வாக்கு வல்லபமும், சாமார்த்தியமும், பிரமாணங்களில் அதிக திறமையுமுள்ள நியாயவாதியைத் தமிழ்மக்களுட் காண்பதரிது. இதுவல்லாமலும் ஸ்ரீமான ஜோசெப் குணத்திலும், விவேகத்திலும் சிறந்து விளங்கினமையால், இங்குள்ள உத்தியோகஸ்தர்களாலும், பிரபுக்களாலும், பெரிதும் சன்மானிக்கப்பட்டு, லங்கா சுபோதவிலாச சபையைப்போன்ற பலவித சபைகளுக்கும், சங்கங்களுக்கும் தலைவராயிருக்கும்படி நேர்ந்தன, பொது

வாக ஸ்ரீமான் ஜோசேப் அறிவிலே சிறந்த மேதாவியாவர். சாந்தம், பொறுமை, அடக்கம், பரோபகாரம், பெருந்தன்மை முதலாகிய குணங்களும், நேர்மையும், சாதியாபிமானமும், உலகியல் அரசியல் ஞானமுமுடையராய், விளங்கியதால், பெறுதற்கரிதாகிய பெரும் பதவியைப்பெற்று, அதுவும் பிரதான நகரமாயுள்ள யாழ்ப்பாணம் பெரியகோட்டுக்கு நீதிபதியாயிருப்பதென்றால் இவருடைய திறமையைப் பற்றி நாம சொல்லவேண்டுவதில்லை.

## K

### K. Kanagaratnam Esq., Audit Office

ஸ்ரீமான் க. கனகரத்தினம்:—இவர், யாழ்ப்பாணம் வட்டுக்கோட்டையை ஜென்ம ஸ்தானமாகவுடைய ஸ்ரீமான் கந்தையாபிள்ளையின் புத்திரராவர். நீர்வளம், நிலவளம், அடிமை, குடிமை, ஐஸ்வரியம், செல்வம், செல்வாக்கு, தனதானிய சம்பத்து, கீர்த்தி, பரோபகாரம், தருமசிந்தை, சைவாசாரம், முதலானவற்றோடு சிறந்து விளங்கும் பிரபுக்கள் வம்மிசத்துப் பெரு வேளாண் மரபில் வந்துதித்த சற்குணசாலியாவர். ஸ்ரீமான் கனகரத்தினம் சிறு பிராயம் முதலாக நற்பழக்க வொழுக்கங்களிற் சிறந்த சற்புத்திரராய் கல்விகற்று கிளரிக்கல் முதலான பரீக்ஷைகளிற் சித்தியெய்தியமையால் அரசாங்கத்தில் உத்தியோகம் பெற்றனர். ஸ்ரீமான் கனகரத்தினம் கல்வியிலும், அறிவிலும், விவேகத்திலும், நேர்மையிலும், குணத்திலும், புத்தி சாதுரியத்திலும், வாக்குவல்லபத்திலும் சிறந்து விளங்கினமையால் இவருடைய திறமையை நன்குணர்ந்த மேலதிகாரிகள், மிகப்பொறுப்பு வாய்ந்த மேலான உத்தியோகத்தைக் கொடுத்தனர். ஒடிற் றுபிசில உயர்ந்த ஸ்தானமாகிய பெரும உத்தியோகத்தை இவரே முதலாவதாக பெற்றனர். இது பற்றியே "அறிவுடை யொருவனை யரசனும் விரும்பும்" என்று கூறிய ஆன்றோர் நீதிமொழிக்கிணங்க சகலமான இலட்சணங்களையு முடைய குணசிரேஷ்டராய் நல்மனதுடையராய், இன்சொல், இரக்கம், ஈகை, தெய்வபக்தி முதலானவற்றோடு சன்மார்க்கமு முடைய சற்பாத்திரராயிருந்தமையால் கடவுள் கிருபா நோக்கஞ் செய்தனர். ஸ்ரீமான் கனகரத்தினம் பரோபகார சிந்தையும், பிறருக்குதவிபுரியும் பெருங்குண முடைய சுகுணசீலராவர் விவேகானந்த சபையின் காரியதரிசியாயிருந்து பலராலும் சன்மானிக்கப்பெற்று சபையை நன்னிலையில் விருத்தியாகும்படி செய்து வைத்த உத்தமரும் இவரே யாவர்.



DR. M. M. KUMARASAMY, F.R.C.S. (Eng.)

## Dr. M. M. Kumaraswamy F.R.C.S. (Eng.)

ஸ்ரீமான் டாக்டர் குமாரசாமி:—இவர் சண்டிருப்பாயில் பெருவேளாண்மரபில், பிரபுக்களாயும், மேன்மக்களாயும், சிவநேயச் செல்வர்களாயும், பிரபல முறையில் விளங்கிய பெரியார் சந்ததியிற் றோன்றியவரும், மலையாளப் பகுதியில் கொம்மிஷனராயும் நீதிபதியாயுமிருந்து உபகார வேதனம் பெற்று, உலகில் பெரும் புகழும் கீர்த்தியும் பெற்று விளங்கியவருமான திருவாளர், முவ் பகநூர் முருகேசம்பிள்ளை யவர்களின் அருந்தவப் புதல்வராவர். இவர், தம் முதாதையர்களைப்போல் சைவாசாரம், சிவத்தியானம், சாந்தம், பொறை, அடக்கம், பரோபகாரம், பிரபுத்துவம், பெருந்தன்மை, இன்சொல், நகை, இரக்கம், சீவகாருண்யம், நற்பழக்க வொழுக்கம், ஆகமவுணர்ச்சி, முதலாகிய அரும்பெருங் குணங்களையுடைய உத்தமராய், உலகியல் ஞானம், அரசியல் ஞானம், வாக்குசாதுரியம், உடையவராய், சென்னை முதலான இடங்களிலும் இங்கிலாந்து முதலான மேலைத் தேசங்களிலும், உயர்தரக் கல்வி கற்ற பேரறிஞராய், வைத்திய சாஸ்திரங்களிற் சிறந்த வல்லுனராய், பெறுதற்கரிய பட்டங்களைப் பெற்ற நிபுணராய், அரசாங்க உத்தியோகத்தினின்றும் விலகி, சுய அதிகாரம் பூண்ட பெருமகனாய், பிரபல டாக்டராய், தமிழ் மக்களுட்சிறந்து உலகில் நற்பெயருடன் பிரக்கியாதி பெற்று விளங்குகின்றனர். ஸ்ரீமான் குமாரசுவாமி அவர்களுடைய சிறந்த குணங்களைப் பற்றி பிரபுக்கள் பலரும் வியந்து பேசக் கேட்டிருக்கின்றோம். யாழ்ப்பாணத்தாருடைய சுவதந்திரங்களை யிட்டுப் பெரிதும் உழைத்து வருகின்றனர். மேன்மாகாணத் தமிழப் பிரதிநிதித் தேர்தலில் முற்பட்டு நின்று, பிரசங்கமாரி பொழிந்தவர். இலங்கையின் ஆசார சீர்திருத்த விஷயமாக, விசாரணைக் கமிற்றியாகிய கொம்மிஷன் வந்த காலத்தில், தமிழ்ச் சாதியாருக்கு வேண்டிய சுய உரிமைகளைப் பெறும்பொருட்டாக வாக்கு மூலம் கொடுத்தவர். சுருக்கமாகச் சொல்லுகில், ஸ்ரீமான் குமாரசாமி யவர்களைப் போன்ற அனுபவசாலியும், அறிவாளியும், இக்காலத்துத் தமிழ் மக்களுள் இல்லையெனலாம். இவவுக்தமா விவேகானந்த சபையைப் போன்ற பல சபைகளிலும் சங்கங்களிலும் அங்கத்தவராவர். அடுத்து வரும் பதிப்பில் ஸ்ரீமான் குமாரசுவாமி யவர்களுடைய விசேட செயல்களைப் பற்றி நன்காராய்ந்து விரிவாய் எழுதுவேம்.

## S. Kathiravelu Pillai, Contractor

ஸ்ரீமான் கதிரைவேற் பிள்ளை:—இவ்வுத்தமர், யாழ்ப்பாணத்துக்கும் இந்தியாவுக்கும் தொடர்பாயுள்ளவர். சிறு பிராயம் முதலாக நற்பழக்க வொழுக்கங்களிலும் நற்குண நற்செய்கைகளிலும் சிறந்த மேதாவியாய் கல்விகற்று சற்சன சகவாசத்தாலும், பெரியோருதவியாலும், பற்பல கம்பனிகளில் முயற்சி பார்த்து பலராலும் சன்மானிக்கப்பட்டு வரலாயினார். ஸ்ரீமான் கதிரவேற் பிள்ளை மேலான குலத்தில் தருமசொரூபமாகப் பிறந்தமையால் சைவாசாரமும், சிவத்தியானமும், சிவபக்தியும், சிவதொண்டும், சிவகைங்கரியமும், சிவாலய தரிசனமும், சிவசிந்தனையுமுடைய புண்ணியாத்துமாவாய தருமப்பிரபுவாய், பாரிய தலைவந்தராய் விளங்குகின்றனர். இகபர இரண்டிற்குமே ஏதுவாகிய புண்ணிய விஷயங்களிலீடுபட்டுத் திரிகரண சுத்தியோடு தாம் ஈட்டிய பொருளைக் கொண்டு அளவில்லாத பெருந்தருமங்களை மனமகிழ்ச்சியோடு செய்துவருவதால், ஸ்ரீமான் கதிரைவேற பிள்ளையவர்களுக்கு குறைவிலாத செல்வத்தை மேலாக ஈஸ்வரன் கொடுத்துவருகிற றென்பதற்கு சந்தேகமில்லை. "நலத்தளவே யாதுமாந் தான் பெற்ற செல்வங் குலத்தளவே யாகுங் குணம்" என்னும் நீதிமொழிக்கிணங்க பூர்வ சென்மத்திலே செய்த தவத்தினளவாக செல்வத்தையும், குலத்தினளவாக சிறந்த குணங்களையும் உடைய இவ்வுத்தமர், பரோபகாரமாகச் செய்திருக்கின்ற செயல்களையும் ஆன்மார்த்த விஷயமாகச் செய்திருக்கின்ற சற்கருமங்களையும் எம்மால் கணக்கிட முடியாது. யாமறிந்தளவில் சுருக்கமாகக் கூறிமுடிப்போம். "நட்பும் தயையுங் கொடையும் பிறவிக் குணம்" என்றார் மேலோர். தருமத்தின் பொருட்டுக் கொடுப்பதாகிய குணம், மனிதருள் சாமானியமாயுண்டாகாது. ஆனதால் அதுவும் உடன்பிறக்க வேண்டுமென்பது தரும சாஸ்திரங்களின் கொள்கை. ஆகவே, ஸ்ரீமான் கதிரவேறபிள்ளை யவர்கள் ஏராளமான பொருளைச் செலவிட்டு

முனீஸ்வர க்ஷேத்திரத்தில் மடம்

ஒன்றை ஸ்தாபித்து உற்சவ காலத்தில் வருகின்ற சிவனடியார்களுக்கும், பிராமணர், சைவர், முதலானோருக்கும் அன்புடன் அன்னதானம் செய்கின்றனர். சிவாலயங்களிலே பூசை உற்சவ முத

வியவற்றைக் காலந்தோறும் விதிப்படி நடத்துபவர். கப்பித்தான் தோட்டத்தில் மிகப்புராதனமாயுள்ளதும் பழமை வாய்ந்ததுமாகிய விக்கினேஸ்வராலயத்தைப் பரிபாலனஞ் செய்துவரும் தர்மகர்த்தாவுமாவர். சிவாலயம், மடாலயம், வித்தியாலயம், தண்ணீர்ப் பந்தல் முதலான தருமங்களுக்கும் பிராமணர், சைவர், முதலான சற்பாத்திரர்களுக்கும், இரப்போருக்கும் இல்லையென்னாது பொருளைக் கொடுப்பவர். சிந்தாம்பிட்டித் தெருவில் எழுந்தருளியிருக்கும் சிவசுப்பிரமணிய சுவாமி ஆலயத்தில் விமரிசையாகச் சண்முகப் பெருமானுக்குக் கார்த்திகை மாசத்துச் சோமவாரமாகிய புண்ணிய தினத்தில் சகஸ்திர

(சங்காபிஷேகமும் அன்னதானமும்)

செய்பவர். சதிர்காமம் முதலாகிய க்ஷேத்திரங்களுக்கும் யாழ்ப்பாணத்திலுள்ள சிவஸ்தலங்களுக்கும் பொருளுதவி செய்பவர். வருடந்தோறும் ஸ்தலயாத்திரை தீர்த்தயாத்திரை செய்பவர். அறுபதுக் கறுபது என்னும்

சஷ்டி பூர்த்தி

சாந்திக் கல்யாணத்தை ஆகமவிதிப்படி ஏராளமான திரவியங்களைச் செலவிட்டு பூர்த்திசெய்து சுகஜீவந்தராய பிரக்கியாதியுடன் வாழ்கின்றனர்.

## P. Kathiravelu (Violinist)

பொ. கதிரவேலு:—இவரும் ஆனைக் கோட்டையை சென்மஸ்தானமாகவுடையவர் நற்பழக்கமும், நல்லொழுக்கமும், சாந்தகுணமும், குரு விசுவாசமும், தெய்வ பக்தியுமுடையவர். எம்மிடம் சங்கீதம் கற்ற சிஷ்யருளொருவராவர். சிவாலயங்களிலே அரி பஜனை செய்யும் திறனுடையர். எமது சிஷ்யர்களாகிய தங்கரத்தினம், கதிரவேலு, என்னும் இவ்விரண்டு மாணாக்கர்களிடத்திலே, யாழ்ப்பாணத்துள்ள ஆண் பெண் இரு பாலாரும் சங்கீதத்தை முறைப்படி கற்றுவருகின்றனர். இவர்களுடைய நன் முயற்சியால், யாழ்ப்பாணத்துள்ள சமஸ்த ஜனங்களுக்கும் சங்கீத ஞானம் உண்டாகி பிற்றில் முதலான வாத்தியங்களை வாசிக்கும் இயல்புடையர்களாய்க் காணப்படுகின்றனர்.

## S. Kandasamy, Surveyor, Matale,

சேவையர் ஸ்ரீமான் சு கந்தசாமி:—இவ்வுத்தமர், பன்னகாம மெனவழங்கும் மாத்தளையில், பாரிய வர்த்தகர்களாயும் சிவநேயச் செல்வர்களாயும் விளங்கிய பெரியார் சந்ததியிற் றோன்றிய சுப்பையா பிள்ளையின் புத்திரராவர். இவர், கல்வி, அறிவு, ஒழுக்கம, பரோபகாரம், பெருந்தன்மை, சாந்தம், சற்குணம், அடக்கம், பொறை முதலாகிய நற்குண நற்செய்கைகளை யுடைய புனிதரும, சைவசமய விருத்திக்கேற்ற சிவாலயம், மடாலயம், வித்தியாலயம் முதலாயுள்ள சற்கருமங்களை ஸ்தாபித்துக் குறைவற நடாத்துபவரும், ஆன்ம சுகத்தை விரும்பி சிவபுண்ணியங்களில் ஈடுபட்டு பற்பல தருமங்களைச் செய்பவரும், சைவாசாரம், சிவத்தியானம், சிவபக்தி, தானதருமம், ஸ்தலயாத்திரை, தீர்த்தயாத்திரை முதலானவைகளை செய்பவரும், ராமநாதன் கல்லூரி யெனவழங்கும் பெண்பாடசாலையை சாஸ்திர முறைப்படி கட்டியவரும், இதுபோன்ற பல கட்டிடங்களைக் கட்டிக்கொடுத்தவரும், நவீன முறையாகத் தற்காலத்துக் கேற்ற புதுபிளான்களை சித்தரிப்பவரும், கணிதசாஸ்திர ஆராய்ச்சியும், சங்கீத ஞானமும், விவேகமுமுடைய சற்குண சீலராவர். இவ்வுத்தமர் அரசாங்கத்தில் சிலகாலம் கடமை பார்த்தவர். சுகதார சங்கத்தின் அங்கத்தவருள் ஒருவராய் மாத்தளையில் பொதுஜனசேவை செய்யும் பிரபலஸ்தராய் விளங்குகின்றனர்.

## Gate Mudaliyar, C. Kailasa Pillai

ஸ்ரீமான் முதலியார் கைலாச பிள்ளை:—இவர், நல்லூரைச் சார்ந்தவர். சைவாசாரங்களிற் சிறந்தொழுகியவர். பலவிடங்களில் கச்சேரி முதலியாராகவும், சுப்பிறிங் கோட்டு துவிபாஷகராகவும், பிற்காலத்தில் கவுணர்ஸ் கேற் முதலியாராகவுமிருந்து உலகில் பெருங்கீர்த்திபெற்று, சிவபதமடைந்தனர் இவ்வுத்தமர், வடமொழி, தென்மொழி, இரண்டிலும் மகாபாண்டித்தியமுடையராயிருந்து, சைவசித்தாந்த சாஸ்திரங்களைப் பலமாணவருக்குப்பயிற்றி வந்தனர். பல வருடங்களாக இப்பெரியார் எமக்கு சகல கலைக்கியானங்களையும் கற்பித்த குரு சிரேஷ்டருமாவர்.

## P. Kathiravelu Pillai Esq., Engineer, C. T D.

ஸ்ரீமான் கதிரைவேற் பிள்ளை:—இவர், மட்டக்களப்பைச் சார்ந்த கல்முனை யென்னுமிடத்தில், சிவபக்தி வைராக்கிய ஞானங்களிற் சிறந்த சிவபுண்ணிய சீலர்களாயும், செல்வர்களாயும், பரம்பரை உத்தியோகஸ்தர்களாயுமிருந்த, பெரியார் சந்ததியில், மட்டக்களப்புப் பகுதிக்கு வன்னிய முதலியாராயிருந்து உலகில் நற்கியாதி பெற்ற திருவாளர் பெரியதம்பி யவர்களின் புத்திர சிகாமணியாவர். இவர் சைவவேளாண் மரபைச்சார்ந்த சற்குண சீலரானதால் சைவசமய விருத்திக்கேற்ற சிவாலயம், மடாலயம், வித்தியாலயம் முதலானவற்றை சொந்தப் பொறுப்பாக ஸ்தாபித்து சைவப்பயிர் தழைத்தோங்கும்படியான சற்கருமங்களையும சிவபுண்ணியங்களையும், தானதருமங்களையும், பரோபகாரமாகச் செய்து வருகின்றனா. ஸ்ரீமான கதிரைவேற்பிள்ளை யவாகள் கல்வியறி வொழுககங்களிலும, கடவுள் பத்தியிலும், இன்சொல், ஈகை, இரக்கம், பொறை, சாந்தம, கொடை, வணக்கம், பிரபுத்வம், பெருந்தன்மை முதலாகிய சிறந்த குணங்களையுடைய சற்பாத்திரராவர். விககினங்களை விலக்கியருளும் விநாயகப் பெருமானது நித்திய நைமித்தியங்களைக் குறைவற நடாத்தி வருதலால் ஸ்ரீமான் கதிரைவேற் உத்தியோகத்தாலும், மதிப்பாலும், முதன்மை பெற்று விளங்குகின்றனர். தூரஸ்ரவண யந்திர முறைகளை நூதனமாய் அமைப்பதில் நிபுணராவா. தற்போது இவ்வுத்தமர் தந்திக்கந்தோர்த் தலைவருள் ஒருவராய், வயர்லஸ் என்னும் கம்பியில்லாத் தந்திக் கந்தோருக்கு அதிபராய், தந்தி ஆபீசில் நூற்றுக் கணக்காய் இருக்கப்பட்ட உத்தியோகஸ்தர்களுக்குத் தலைவராய், அரசாங்கத்தில் அதிகாரம் படைத்த இஞ்சினியராய், எல்லா விஷயங்களையும் நன்கறிந்த மேதாவியாய், ஊரவர்களாலும், உத்தியோகஸ்தர்களாலும்,வெள்ளைக்காரர்களாலும், நன்குமதிக்கப்பட்டு வருகின்றனர். சுருக்கமாகச் சொல்லுமிடத்தில், சமயாபிமானம், தேசாபிமானம், பாஷாபிமானம் முதலிய பேரபிமானங்களையுடைய பெருமகன் என்பதற்குச் சந்தேகமில்லை. வெள்ளைக்காறரைத் துரும்பாகமதித்து நடக்கும் பான்மையுடைய தீரன். சிவபுண்ணியங்களிலீடுபட்ட இவ்வுத்தமருக்கு எல்லாம் வல்ல இறைவன் இஷ்ட சித்திகளை அருள்புரிவாராக.

## Gate Mudaliyar, T. Karala Pillai Avl.

இராசவாசல் முதலியார் ஸ்ரீமான் காராளபிள்ளை:— இப்பெரியார் மானியம்பதியில் பிறவிச் செல்வர்களாயும் பாரிய தனவந்தர்களாயும் பிரபலமுறறு விளங்கிய (உடுவில்) மதியாபரண முதலியார், கெங்காகுலரத்தின முதலியார், மதியாபரண முதலியார் கனகசபை முதலியார், காராளபிள்ளை உடையார், வெற்றிவேற் பிள்ளை ஆதியோர் வழித்தோன்றலாயுதித்த ஸ்ரீமான் தம்பிப்பிள்ளை அவர்களின் அருந்தவப் புதல்வராவர். இவ்வுத்தமர் 1874-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 20-ம் திகதி செனனமாகிச் சிறு பிராயம் முதலாக நற்பழக்க வொழுக்கமுடைய சுசீலராய் யாழ்ப்பாணத்திலும் அதன்பின்னர் வெஸ்லிக் கொலீச், செந்தோமஸ் கொலீச் என்னும் ஆங்கில வித்தியாசாலைகளிற் கல்விகற்ற பேரறிஞராவர். சைவசமய விருத்தியின் பொருட்டுச் சற்கருமங்களைச் சிரத்தை யோடு செய்துவரும் சற்பாத்திரருமாவர். ஸ்ரீமான் காராளபிள்ளை முதலியாரின் உத்தம குணங்களை அறியாதார் எத்தேசத்திலும் இல்லையெனலாம். நாலுதிக்கிலும் புகழ்படைத்த இப்பெரியார் தேசாபிமான மேலீட்டால் பொதுவிஷயமாகவும், உலக விஷயமாகவும் எண்ணில்லாத சற்கருமங்களைப் பரோபகாரமாகச் செய்திருக்கின்றனர். பெருந்தனவந்தராகிய இப்பெருந்தகையாளர்தருமத்தின் பொருட்டாகச் செய்திருக்கின்ற செயல்களை இச்சிறிய புத்தகத்தில் எழுதி அடங்காது. ஆகையால் ஒருவாறு சுருக்கமாகக் கூறிமுடிப்பேம்

### தரும விஷயம்.

முதலாவது வித்தியா விஷயமாக வடமாகாணத்துள்ள சைவப்பள்ளிக்கூடங்களுக்கும், சிவாலயங்கள், மடாலயங்களுக்கும் ஏராளமான பணத்தைச் செலவிட்டிருக்கின்றனர். இரண்டாவதாக யாழ்ப்பாணத்திலே அரிசிப்பஞ்சம் உண்டான காலத்திலும், வெள்ளத்தால் இடருற்ற காலத்திலும் லக்ஷக்கணக்காயுள்ள பொருளைச் செலவிட்டு உண்ண உணவும், உடுக்க வஸ்திரமும் கொடுத்தனர் இதுபோன்ற எத்தனையோ சற்கருமங்களைச் செய்திருக்கின்றனர். இவர் அபிமான புத்திரரானதால் யாழ்ப்பாணத்தவரின் ஈடேற்றத்தைக் கருதி,பலதுறைகளிலும் ஈடுபட்டு உலகத்தாரும் அரசாங்கத்தாரும் அறியத்தக்க அரும்பெரும்

செயல்களைச் செய்துவருகின்றனர். உதாரணமாக யாத்திரை வாசிகளுக்கும், பிரயாணிகளுக்கும் சகாயமாகப் புகைரதச் சலாரைக் குறைந்த விகிதமாய் ஏற்படுத்தி வைத்தனர். வடமாகாணப் பகுதியில் முக்கியமான இடங்களில் புகைரதம் தங்கிப்போதற்கான ஒழுங்குகளைச் செய்திருக்கின்றனர். இதுபோல் மற்றைய மாகாணங்களிலும் சில பல நன்மைகளை ஊரவர்களுக்குச் செய்து வருகின்றனர். ஸ்ரீமான் காராளபிள்ளை அரசியல் ஞானமும், உலகியல் ஞானமும் உடையரானதால் ரயில்வே அட்வைசறி போட் ஆலோசனைச் சங்கம், புரேக்கர்மார் சங்கம், முதலாகிய பற்பல சங்கங்களில் அங்கத்தவராயிருந்து வருகின்றனர். இயல்பாகச் சாந்தம், பொறை, அடக்கம், இன்சொல், முதலாகிய தன்மைகளை உடைமையால் தேசாபிமானியவர்களாலும், அதிகார வர்க்கத்தினராலும், ஊரவர்களாலும், பிறமதத்தவர்களாலும் சன்மானிக்கப் பட்டு வருகின்றனர். ஸ்ரீமான் காராளபிள்ளை முதலியாருக்கு அரசாங்கத்தில் உண்டான மதிப்பும், மேன்மையும், வேறு எவருக்கும் இல்லையென்று சொல்லலாம். இவர் பட்டம்பெற்ற பெரியாரானதால் அரசாங்கத்திலுள்ள வரிசைகள் அனைத்தையும் சுபாசுபகாலங்களில் பெற்றுவருகின்றனர். தற்போது இவ்வுத்தமர் ஜேம்ஸ்பின்லே கம்பனிக்கு புரேக்கராயிருக்கின்றனர். அன்றியும் இவர் யாழ்ப்பாணத்தார் கதிரேசன் கோவில் தரும கர்த்தாவாயும் மானிப்பாய் இந்துக்கல்லூரி அதிபருள் ஒருவராயும், சைவபரிபாலன சபை, விவேகானந்த சபை, தமிழ் யூனியன், முதலாகிய பற்பல சபைகளில் அங்கத்தவராயு மிருக்கின்றனர். இவருக்கு விவாகம் வட்டுக்கோட்டை மானுமுதலியார் வமிசத்துத்தோன்றிய பூதத்தம்பி, ஆறுமுகம், அருணாசலம், புத்திரன் நாகநாதரின்மகள் **ஸ்ரீமதி சின்னத்தங்கம்** என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து செல்லம்மா, சுந்தரம்பிள்ளை, B. S. C. (Lon.) சண்முகம் பிள்ளை **Barrister**, தையல்நாயகி, கனகசபை, சரஸ்வதி, எனனும நாமத்தை உடைய சற்புத்திர சந்தானங்களைப் பெற்றனர். இந்தப் பிள்ளைகளுடைய குணவிசேடத்தையும், நற்பழக்க வொழுக்கங்களையும் அறியாதாரில்லை இவர்கள் எம்மிடம் கல்விகற்ற நாள்முதல் யாம் நன்கறிவேம். சுந்தரம்பிள்ளை, சண்முகம்பிள்ளை என்னும் இருவரும் பிதாவைப் பார்க்கிலும் பன்மடங்கு விசேட குணங்களை உடைய நற்பிள்ளைகளாய் விளங்குகின்றனர்.

## ஸ்ரீமதி சின்னத்தங்கம்

இனி, இவர் மனைவியாகிய இந்தச் சுகுணவதியின் பெருந் தன்மையையும், நற்பழக்க வொழுக்கங்களையும், தானதருமங்களின் வியல்பையும் குடும்ப பாரத்தை நடாத்தி வந்த திறமையையும், குணவிசேடத்தையும் இத்தேசத்தில் அறியாதாரில்லை. சற்குணசீலியாய் விளங்கிய இவ்வுத்தமியின் அரிய செய்கைகளை நினைத்துக் கலங்காதாரில்லை. "இல்லாளகத்திருக்க இல்லாதவொன்றில்லை" என்றபடி ஸ்ரீமான் முதலியார் இந்தச் சீமாட்டியால் சகலமான செல்வங்களையும் ஒருங்கு அமையப் பெற்றனர். இந்தப் புண்ணியசாலியை ஏற்றபின்னரே இவருக்கு பேரும், புகழும் பெரும்வாழ்வும், உண்டாயிற்று என்று பலருஞ் சொல்லக்கேள்வியுற்றேம். இவ்வுத்தமியால் மனுஷத்தன்மையாயுள்ளோரும் இனசனங்களும் அடிக்கடிபோய் கொண்டாடி வந்தார்கள். இதனால் இவருடைய மனை ஒரு காலத்தில் சிறப்புறறிருந்தது. இது நிறக, இத்தன்மைகளை உடைய ஸ்ரீமதி சின்னத்தங்கம், சாந்தம்,பொறை அடக்கம், இன்சொல், ஈகை, இரக்கம், பகுத்தறிவு, பரோபகாரம் முதலானவற்றேடு நல்ல பிள்ளைகளைப் புத்திர சிகாமணிகளாகப் பெற்று சில வருடங்களுக்கு முன்னர் சிவலோகஞ் சென்றனர்.

## Sir. A. Kanagasabai,

சேர். அ. கனகசபை:—இவர், பன்னலையில் காரைக் காட்டு வேளாண் மரபைச்சார்ந்தவர். பலகாலம் பிரபல நியாய துரந்தராகவும், கவுன்சில் மெம்பராகவும், யாழ்ப்பாணத்திற் சில காலம் டிஸ்திறிக் நீதிபதியாகவும் கடமை பார்த்து பலராலும் சன் மானிக்கப் பெற்ற பேறினராய்ச் சிவபதமடைந்தனர்

## T. Kailasa Pillai Avl.

ஸ்ரீமான் த. கைலாசபிள்ளை:—இவர், ஆறுமுகநாவல ரவர்களின் மருகரும் சைவப்பிரகாச வித்தியாசாலை அதிபருமாவர். இவர் வடமொழி, தென்மொழி, ஆங்கிலம், ஆதிய பாஷைகளில் அதிக விற்பத்தியுள்ளவராய், பரம்பரையாக வித்வ சிரோன்மணிகளது சந்ததியைச் சார்ந்தவராய் சைவாசாரங்களிற் சிறந்த நைட்டிகராய் விளங்குகின்றனர்.

## **Kathiravale Pillai Esq**. Police Magistrate. Kayts

நீதவான் கதிரைவேற் பிள்ளை:—காலஞ்சென்ற இப் பெரியார், உடுப்பிட்டி யென்னுமிடத்தில் உயர்குலத்துத் தோன்றிய குலதிலகனாய் 1829-ம் ஆண்டு ஜெனனமானார். இவருடைய பூர்வீ வரலாற்றை ஆராயுமிடத்து, கல்வியிலே மிக்க திறனுடைய வித்துவான்களாய், அறிவு விருத்திக் கேற்ற அரும் பெரும் நூல்களை இயற்றிய போறிஞர்களாய் விளங்கிய, சந்திரசேகர மாப்பாண முதலியார், கதிர்காமபூப்ப முதலியார் என்போருக்குப் பௌத்திரரும், குமாரசாமி முதலியார் புத்திரருமாவர். நீண்ட ஆயுளைப் பெற்று சுகசீவந்தர்களாய வாழ்ந்த இக்குடும்பத்தினருடைய குலப் பெருமையும், குணப்பெருமையும், பரம்பரையாய் இனறுவரையில் வழங்கிவருகின்றன. இவர்கள் இயற்றிய விறலிவிடுதூது, நொண்டிச்சிந்து, ஆதிய நூல்கள், பலவர்ணனைகளமைந்ததாய் ஞானார்த்தமுடையதாய் வழங்குகின்றன. குறவஞ்சி யென்னும் புத்தகத்தில், இந்துதேயப் புலவரொருவர் இவர்களுடைய வரலாற்றை வரைந்திருப்பதாகவு மறியலானேம். இதுநிற்க, ஸ்ரீமான் கதிரைவேற்பிள்ளை அக்காலத்திருந்த தமிழ் மக்களுள் பிரபல நியாயதுரந்தரராகவும் அதன் பின்னர், ஊர் காவற்றுறைப் பொலீஸ் நீதிபதியாகவுமிருந்து உலகில் நற்கீர்த்திபெற்று, வடமொழி தென்மொழி வல்லுனராய் "தர்க்க பாஷை, அகராதி" ஆதிய நூல்களை இயற்றிய பேரறிஞராய் சிவபதமடைந்தனர். இவருடைய புத்திரரே ஸ்ரீமான் கௌரவ பாலசிங்கம்.

## A. Kumaraswamy Pulavar.

ஸ்ரீமான் அ. குமாரசாமிப் புலவர்:—இவர், சுன்னுகத்திலே சைவவேளாண் மரபிலே உயர்குலத்துத் தோன்றிய அவதார புருஷர். சைவாசாரம், நித்திய கர்மானுஷ்டானம் முதலானவைகளையுடைய பரம யோக்கியராய் இலக்கண இலக்கியங்களிலும், காவிய பாடங்களிலும், சைவசித்தாந்த சாஸ்திரங்களிலும் சிறந்த வித்துவானாய் சங்கப்புலவருளொருவராய், அரியநூல்களை இயற்றிய பேரறிஞராய், சைவப்பிரகாச வித்தியாசாலைப் பிரதம ஆசிரியராய், வடமொழி, தென்மொழி வல்லுனராய் கீர்த்தி பெற்று விளங்கினர். இப்பெருந்தகையாளர், நமது ஞானசிரியருளொருவருமாவர்.

## Kumaraswamy Kurukal, High Priest.

பிரமஸ்ரீ குமாரஸ்வாமிக் குருக்கள்:—காலஞ்சென்ற இப்பெரியார், இலங்கையில் பிரதான குருசிரேஷ்டராய் விளங்கினர். சிந்தம்பிட்டித்தெரு சிவசுப்பிரமணியாலயம், முனிஸ்வராலயம், திருக்கேதீஸ்வராலயம் முதலாகிய திவ்விய ஸ்தலங்களுக்கு அதிபராயிருந்து, இத்தலங்களைப் பிரகாசிக்கச் செய்து உலகில் பெருங்கியாதி பெற்றுத் தம் பெயரை நாட்டி, இற்றைக்குச் சில வருடங்களுக்கு முன்னர் சிவலோகஞ் சென்றனர். இவர் சோழ நாட்டிலே, தொண்டமண்டலத்திலே, காஞ்சிபுரத்திலே, ஆதி சைவப்பிராமண குலத்திலே, கௌசிக கோத்திரத்திலே யுதித்த பிரமஸ்ரீ நாகேந்திரக் குருக்களவர்களின் அருந்தவப் புதல்வராவர். இவர் வேதாகமோதி சமஸ்த சாஸ்திரங்களில் மகாபாண்டித்திய முடையராய், சோதிட சாஸ்திரவிற்பன்னராய், யாழ்ப்பாணத்துள்ள சுந்தராம்பா ளென்னும் பெண்மணியை விவாகஞ் செய்து சற்புத்திர சந்தானங்களைப் பெற்று விளங்கினர். தற்போது சோமாஸ் கந்தக்குரு வென்பவர் தம பேரனைப்போல் எத்திசையும் புகழ்ப்பெற்ற பேரறிஞராய் விளங்குகின்றனர்.

## T. Kunaratnam Esq, Audit Office

திருவாளர் தி. குணரத்தினம்:—இவ்விளைஞரின் பூர்வீகம் நவாலி. பகிரங்கப் பகுதியில் உத்தியோகஸ்தராயிருந்து உலகில் நற்கீர்த்தி வாய்ந்த தில்லையம்பல முதலியார் அவர்களின் அருமைப்புதல்வராக 1902-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 18-ம் திகதி செனனமானர். அரசாங்கத்தில் அதிகாரம் பெற்ற ஸ்ரீமான் தில்லையம்பல முதலியார் குலத்தாலும், குணத்தாலும், மேன்மையுற்று, பரோபகார சீலராய் விளங்கினர். அத்தன்மைபோல புத்திரராகிய குணரத்தினமும் தமது மூதாதையர்களைப் பின்பற்றி கல்வியறி வொழுக்கங்களிற் சிறந்து, கேம்பிறிச் பரீட்சைகளிற்சித்திபெற்று, நற்பழக்க முடைய சற்புத்திரராய், குணத்திலே சிறந்த குணசாலியாய், எல்லாருக்கும் நல்ல பிள்ளையாய், சாந்தம், பொறை, அடக்கம, சைவாசாரம், குருபக்தி, முதலானவைகளை யுடைய குலமகனாய், பிதுர்கடன், மாதுர்கடன், செய்யும் பாக்கிய சாலியாய் ஓடிற் ஆபிசில் உத்தியோகமாயிருக்கின்றனர். சுருக்கமாகச் சொல்லுகில் பிதாவுடைய குலப்பெருமையை விளங்க ஏதுவாயிருக்கின்ற மேன்மகன் இவரொருவரேயாம்.

## K. Kandiah Esq. Broker

ஸ்ரீமான் புரோக்கர் க கந்தையா:—இவர், மானியம் பதியில் பிரபல குடும்பத்தைச் சார்ந்த பிள்ளை உடையார் கனக சபையவர்களின் இரண்டாவது புத்திரராவர். இவர் யாழ்ப்பாணத்திலும் கொழும்பிலும் கல்விகற்று விற்றேரல் கம்பனியில் புரோக்கரா யிருக்கின்றனர். நற்பழக்கம். நல்லொழுக்கம், சாந்தகுணம், பரோபகார சிந்தை முதலான பெருந்தன்மைகளையுடையவர். சற்கருமங்களுக்கு இல்லை என்னாது பொருளுதவி செய்யுமியல்பினர். குலத்துக்கேற்ற குணமும் கொடையும், செயலும், உருவமும் உடையாராய் மதாசாரம் பூண்ட உத்தமராய் விளங்குகின்றனர். இவருக்கு விவாகம் ஜேம்ஸ் பின்லே புரோக்கரும் ராசவாசல் முதலியாரும், பிரபல தனவந்தரும் பரோபகாரியும் பொதுஜன சேவை செய்பவருமாகிய ஸ்ரீமான் த. காராளபிள்ளை முதலியாரவர்களின் குமாரத்தி ஸ்ரீமதி செல்லம்மா வென்னும் பெண்மணியை விவாகஞ் செய்து பத்மநாதன், விஜயநாதன், ஸ்ரீ ரெங்கநாதன், பரமேஸ்வரி, சொர்ணம், மனோன்மணி, ராஜேஸ்வரி, சுந்தரேஸ்வரி, விக்கினேஸ்வரி, பத்மகாந்தி, என்னும் பெயர்களையுடைய சந்தானங்களைப் பெற்றனர். ஸ்ரீமதி செல்லம்மாள் பிதாமாதவைப் போல் சற்குணசாலியாய் சாந்தம், பொறை, அடக்கம், முதலாகிய சிறந்த குணங்களை உடைய உத்தமியாய் குடும்பத்துக்குத் தலைவியாய்மேலான செய்கையும் மேலான போக்கும் உடைய குணவதியாய் வாழுகின்றனர்

## R. Kumaraswamy Reddiar.

ஸ்ரீமான் குமாரசாமி ரெட்டியார்:—இவ்வுத்தமர் மூலைக்கரைப்பட்டியை சென்ம ஸ்தானமாகவுடையவர். அந்நாட்டிலேயுள்ள ரெட்டிப் பிள்ளைகளுள் செல்வத்தாலும், கீர்த்தியாலும், பிரபுத்தன்மையாலும், ஜாதிமரபாலும் மேன்மையுற்று விளங்கும் "தெற்கரண்மனைப்" பண்ணையுடைய வழித்தோன்றலாவர். இவர் குடும்பத்தினர் இன்றைக்கும் சர்வாதிகாரம் படைத்த மேன்மக்களாயும் பிரபுக்களாயும் விளங்குகின்றனர். ஸ்ரீமான் குமாரசாமி ரெட்டியார் தம மூதாதையர்களைப்போல் சற்குண சம்பன்னராய், மெய்ஞ்ஞானியாய், பரோபகாரமும், தேசாபிமானமும், பிரபுத்தன்மையுமுடைய யோக்கியராய் விளங்குகின்றனர்.

## Kandaswamy Kovil Nallur

நல்லூர்க் கந்தசுவாமி கோவில்:—யாழ்ப்பாணத்தில் மிகப்புராதனமாயுள்ள இவ்வாலயம் புவனேகவாகு காலத்தில் கட்டப்பெற்றது. போர்த்துக்கீசர் காலத்தில் தகர்க்கப்பட்டது. டச்சுக்காலத்திலே பின்னரும் இவ்வாலயம் கட்டப்பெற்றது. அக்காலந் தொடங்கி இக்காலம் வரையில் அனுக்கிரகஸ்தலமாய் விளங்குகின்றது. இவ்வாலயத்தின் வரலாற்றை விசாரித்தறிகிற வரையில் கல்வியறி வொழுக்கங்களிற் சிறந்த யோக்கியர்களாயும், சிவபக்தி வைராக்கிய ஞானங்களில் முதிர்ந்த உத்தமர்களாயும் விளங்கிய பிராமணர்கள் தேசாதிபதிக்கு மனுக்கொடுத்து அதன் பயனாக ஓர்காணித்துண்டை இவர்கள் பெயர்பட எழுதி வாங்கி, சமயவழிபாடு செய்தற் பொருட்டாகத் தங்கள் பொருளைக்கொண்டும ஊரில் சேகரிக்கப்பட்ட பிறர்பொருளைக்கொண்டும் இவ்வாலயத்தைக் கட்டி பூசை முதலான வற்றை விதிப்படி நடாத்தி வந்தார்களென்றும் கர்னபரம்பரையாக அறியக்கிடக்கின்றது. சமீபகாலத்தில் இக்கோவில் விஷயமாக பிராமணரும், ஊரவர்களும் தொடர்ந்த வழக்கில் யாழ்ப்பாணம் டிஸ்திறிக் நீதிபதி "ரூக்" என்பவர் இக்கோவிலைப் பொதுஸ்தலமாக வழங்கிவரும்படி தீர்ப்பிட்டாரென்றும் சொல்ல அறிகின்றோம்

## Mudaliyar, V. Kanagasabai, Station Master Jaffna.

வெ. கனகசபை முதலியார்:—இவர் யாழ்ப்பாணத்துப் புகைரதஸ்தானத் தலைவராயும், ஸ்றேஷன் மாஸ்றறாயு மிருந்து, உலகில் நற் கீர்த்திவாய்ந்த திருவாளர், கனகசபை, தெல்லிப் பழை வாசராயிருந்த, குலசேகர முதலியார், வமிசத்துத்தோன்றிய குமரேசர் மகன் "பேச்" வைத்தியநாதரின் புத்திரராவர். இவர், மானிப்பாயில், பிரபலஸ்தராயும், பரோபகார சீலராயும், விளங்கிய "லோட்டன்," கனகரத்தினமவர்களின் புத்திரிகளுள் ஒருவரை விவாகஞ் செய்து, சற்புத்திர சந்தானங்களைப் பெற்றனர். முதலியார் என்ற பட்டத்தைப் பெற்ற இவ்வுத்தமர், சாந்தம், பொறை, அடக்கம், பரோபகாரம் முதலாகிய நற்குண நற்செய்கைகளையுடைய யோக்கிரா யிருந்து, பிரயாணிகளுக்குத் தம் மாலியன்ற சரீர ஒத்தாசைகளைச் செய்து வந்தனர். இவரைப் போல் பொறுமையுடைய உத்தியோகஸ்தரை இந்த ஸ்தானத்தில் இனிமேற் காண்பதரிது.

## S. Kathiravaloe Esq. Shroff.

காலஞ்சென்ற கதிரைவேற் சிறப்பர்:-இவர் 1824-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 7-ம் உ பிறந்தவர், பூர்வ காலத்துள்ள தமிழரசர் வம்சத்தில் பெரும் பிரபுக்களாய் மல்லாகப் பகுதிக்கு அதிபர்களாய், செல்வம்,கீர்த்தி,பரோபகாரம்,பிரபுத்துவம்,அடிமை குடிமையாட்சி, அதிகாரம், முதலிய வற்றோடு உலகில் பெருங் கீர்த்தி பெற்று விளங்கிய, மனப்புலிசிங்க முதலியார்,தனபாலசிங்க முதலியார், வமிசத்தில் பிரபுக்களாய பரம்பரையான பெரும் உத்தியோகஸ்தர்களாய, இராஜ வம்சத்தைச் சார்ந்தவர்களாய், நவாலிப்பதியில் குடியேறிய ஸ்ரீமான் சுப்பிரமணியமவர்களின் புத்திரராய் அவதரித்தனர். இவர் மாதா வழியால் சண்டிலிப்பாயிலிருந்த காரைக்கால் வேளாளன். மரபைச் சார்ந்தனர். ஸ்ரீமான் கதிரைவேற் சிறப்பர் ஆதிகாலத்திலே இராசதானியாகிய கொழும்பு நகரைச சேர்ந்தாருள் ஒருவராவர். இவர் இந்நகரையடைந்ததும், பலவிதமான உத்தியோகங்களைப் பார்த்த பின்னர், ஓரியண்டல் வங்கியில் மிகப் பொறுப்பு வாய்ந்த சிறப்புத்தியோகத்தையேற்று, அதிக திறமையோடும் நேர்மையோடும், பார்த்து ஏராளமான திரவியங்களைச் சம்பாதித்து, உலகில் நற்கியாதியையும், நற்பேரையும், சற்புத்திர சந்தானங்களையும், பெற்றனர். சிறப்பு வேலையை இங்குள்ளாருக்கு முதலாவதாகக் காண்பித்து வைத்தவரும் இவரேயாம். அக்காலந் தொடக்கம் இக்காலம் வரையில் தலமுறைகத்துவமாக இவ்வுத்தியோகம் இவர் சந்ததியார் களாலேயே பார்க்கப்பட்டு வருகின்றன. ஸ்ரீமான் கதிரைவேற் சிறப்பர் கல்வியறிவிலும், நற்குண நற செய்கைகளிலும், சிறந்தவரானதால், தாம் ஈட்டிய பொருளைத் தரும வழியிலே செலவிடும்படி யுத்தேசித்து, மிகப் புராதனமாயும் திவ்வியஸ்தலமாயும் விளங்கும், நகுலேஸ்வர க்ஷேத்திரத்தில், சிவாலயம், மடாலயம், வித்தியாலயம், அன்னசத்திரம், தண்ணீர்ப்பந்தல், முதலானவைகளை ஸ்தாபித்துள்ளார். இவ்வன்னச் சத்திரத்தில் பிராமணர்களுக்கும், சைவர்களுக்கும், ஆண்டி பரதேசிகளுக்கும்,சிவனடியார்களுக்கும்,வழிப்போக்கர்களுக்கும், அன்ன பானீயங்களை அன்போடு கொடுத்து வந்தனர். விசேஷ காலங்களிலும் புண்ணிய தினங்களிலும் இவர்களுக்கு ஆடைகளும், இயன்ற பொருளுதவிகளும் வழங்கி வந்தனர். இந்த மகா புண்ணியவான் ஆன்ம ஈடேற்றைத்தை

யும் சிவகாருண்ணியத்தையும் உத்தேசித்து செய்திருக்கின்ற தான தருமங்களும் புண்ணியங்களும் அளவுகணக்கில்லை. இப பெரியார் வெகுகாலத்துக்குமுன்னர், தோணிமார்க்கமாகக் காசிக் குச்சென்று, அவ்விடத்திலும் பலவிதமான சற்கருமங்களைச் செய்துள்ளாரென்று, புத்திரருள் ஒருவராயிருந்து காலஞ்சென்ற எமது நண்பர், ஸ்ரீமான் நமசிவாயம் அவர்கள் எமக்குக் கூறியுள்ளார். கொடைவள்ளலென்று பேர்பெற்ற ஸ்ரீமான் கதிரைவேற் சிறுப் பர் இற்றைக்குச் சிலவருடங்களுக்கு முன்னர் தம் பேரப்பிள்ளை கள், பீட்டப்பிள்ளைகள், கொப்பட்டாப் பிள்ளைகள், முதலானோ ரைக்கண்டு பேரானந்தமுற்று இவர்கள் மத்தியில் 1918-ம் ஆண்டு ஜனவரி மீ 7-ம் திகதி சிவலோகப் பிராப்தியானார். இவருடைய சரீரம் இவரோடு அழிந்தது. ஆனால், இவர் செய்த புண்ணியங் களும், தானதருமங்களும், அழிவின்றி இவ்வுலகில் நிலைத்திருக்கின் றன. இதுபற்றியே "அறஞ்செய விரும்பு" என்னும் உண்மை வாக்கு உலகில் பிறந்ததென்றறிக.

## S. Kasinathan Esq Store Keeper, Henderson Co.

ஸ்ரீமான் காசிநாதன்:—இவர், மானிப்பாயிலுள்ள பிர புக்கள் வமிசத்தைச் சார்ந்த மாதவராயர் சுப்பிரமணியம் என்பவ ரின் இரண்டாவது புத்திரராவர். இவர் 1892-ம் ஆண்டு மார்சு மாதம் செனனமானார். இவர் மேன்மக்களின் மரபைச்சார்ந்த வரானபடியால், நற்பழக்கமும், நல்லொழுக்கமும், சைவாசாரமும், சமய பக்தியுமுடைய யோக்கியராய் வளர்ந்து, கல்விகற்று, தற் போது, "ஹெண்டர்சன்" கம்பனியில் ஸ்டோர் கீப்பராயிருக்கின் றனர். இவருடைய சிறந்த குணங்களைப்பற்றி எமது அனுபவத் திற் கண்ட சிலவற்றை இங்கு கூறிமுடிப்பேம். நாமறிகிற வரை யில், சைவசமயத்தின் பெருமையை அறியாத எத்தனையோ பிர புக்கள் தாங்கள் இந்துக்கள் என்றும், சைவசமயிகள் என்றும் பறைசாற்றிக்கொண்டு, சைவசமயத்தின் உண்மையை அறியாத வர்களாய், "சிவசிவ" என்ற சொல்லைத்தானும் உச்சரியாத பாவி களாய், ஆலயவழிபாடு என்றால், இன்னதென்று தெரியாதவன் கண்ணர்களாய், ஈகையில்லாத லோபிகளாய், தங்கள் செல்வம் நிலையுள்ளதென்று நினைந்து,பணச் செருக்குற்ற அறிவிலிகளாய்த் திரியும் சில பிரபுக்களுடைய டாம்பிகத்தைப் பற்றி, நாம் சொல்

லப்போனுல் எம்மைக் குறை கூறுவார்கள். "ஏறச் சொன்னுல் எருதுக்குக் கோபம், இறங்கச் சொன்னுல் முடவனுக்குக்கோபம்" என்ற தன்மைபோலிருப்பதால், இந்த டாம்பிகர்களைப்பற்றி நாம் நன்கபராய்ந்து அடுத்துவரும் பதிப்பில் விபரமாய் எழுதுவேம். இது நிற்க, ஸ்ரீமான் காசிநாதனைப் பற்றிச் சொல்லுகில், இவ்வுத்தமர் சைவாசாரமும், சிவத்தியானமும, சிவபக்தியு முடைய ராய, இன்சொல், ஈகை, இரக்கம், பரோபகாரம், பெருந்தன்மை முதலாகிய நற்குண நற்செயகைகளையுடைய மேன்மகனுய் விளங்குவதால், இப்புத்தகத்தில் இவரைப்பற்றி விசேடமாய் எழுதும்படி நேரந்தன. ஸ்ரீமான் காசிநாதனைப் போல் சமயபக்தியும், ஆலயவழிபாடும், சிவசிந்தனையுமுள்ள யோக்கியரை, இக்காலத்துள்ள வாலிபருட் காண்பகரிது. இவருடைய மனப்பான்மையையும், தெய்வபக்தியையும் யாம் நன்கறிவேம். இவர், சிவபக்தியில் ஈடுபட்டுச் சிவாலயங்களிலே செய்துவரும் செயல்களே இவருடைய தன்மைகளை விளக்கப் போதிய சான்ருகும். இஃதொன்ருல் ஸ்ரீமான காசிநாதன் சற்பாத்திரனென அறியக்கிடக்கின்றது. ஸ்தலயாத்திரையின் பொருட்டு இந்தியாவிலுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று காசி முதலான ஸ்தலங்களைத் தரிசித்தவர். சமய சம்பந்தமாகச் சற்கருமங்களைச் செய்து வருகின்றனர். இது வன்றியும் இவர் இலங்கையில் பாடல் பெற்ற ஸ்தலங்களாய் விளங்கும் கதிர்காமம், முனீஸ்வரம, நல்லூர், மருதடி, முதலான திவ்விய க்ஷேத்திரங்களுக்குச் சென்று ஆங்காங்கு சுவாமிக்குச் செயய வேண்டிய அபிஷேகம், பூசை, ஆராதனைகளை விதிப்படி செய்து வருகின்றனர். இவருடைய செயலை அறியாதாரில்லை இவர் தமிழ் யூனியனைப் போன்ற பற்பல சங்கங்களில் அங்கத்தவருமாவர். இவா, புத்தளத்தில் வசிக்கும் நமது நண்பர் ஸ்ரீமான் சிவசோதியவர்களின் சிரேஷ்ட புத்திரி **ஸ்ரீமதி கமலா** என்னும் பெண்மணியை விவாகஞ் செய்திருக்கின்றனர். இந்தப்பெண்மணி பிதா மாதாவைப் போல் சிறந்த குணங்களை உடைய சுகுணவதியாய், நற்பழக்க வொழுக்கமும், சைவாசாரமும், தமிழறிவும், சங்கீதஞானமும் உடைய நற்குண பாத்திரமாய் வாழ்கின்றனள். இத்தம்பதிகள் சற்புத்திர சந்தானங்களைப் பெற்று இனிது வாழ் எல்லாம் வல்வ இறைவன் அருள்புரிவாராக.

## K. Karalasingam Esq. Broker.

ஸ்ரீமான் புரோக்கர் காராளசிங்கம்:—இவர் இந்நகரில் பிரபல புரோக்கராயிருந்து காலஞ்சென்ற பிள்ளையுடையார், கனக சபை உடையாரவர்களின், மூன்றாவது புத்திரராவர். நீர்வளம், நிலவளம் பொருந்திய மானியம்பதியில், அடிமை, குடிமை, ஐஸ்வரியம், கீர்த்தி, பரோபகாரம், பிரபுத்துவம், பெருந்தன்மை, முதலானவைகளையுடைய மேன்மக்களின் மரபைச்சார்ந்தவர். இதற்கு உதாரணமாக இவரிடத்தில் அநேக இலட்சணங்கள் இயல்பாயுண்டு அதாவது இவர் நற்பழக்க வொழுக்கமும், சைவாசாரமும், சமயபக்தியும், உடையாராய், மிக்க நேர்மையும், பெருந்தன்மையுமுடைய யோக்கியராய் விளங்குதலைக் காண்கின்றோம். இக்காலத்துள்ள வாலிபருள் அநேகர், தங்கள் செல்வம நிலையுள்ளதென்று நினைந்து, நாகரீகத்துள் ஆழ்ந்து,எமக்கு இவரென்ன அவரென்ன, என்ற விதமாய் இறுமாப்புடன் உலாவும அறிவீனரைப போல இடறுறாமல், புகழ்,ஆரவாரம் முதலான வீண்டம்பங்களுக்கும், வீண் ஆடம்பரங்களுக்கும் ஆளாகாமல், சாந்தம், பொறை, அடக்கம், இன்சொல், ஈகை, இரக்கம் முதலாகிய அருமபெருங் குணங்களை யுடைய உத்தமராய் விளங்குகின்றனர். இவர் மதியும், ஆண்மையும், மாசிலா வொழுக்கமுமுடைய நற்புதல்வராய் வளர்ந்து இந்துக்கல்லூரியில் கல்விகற்று பற்பல கம்பனிகளில் புரோக்கராயிருந்து, பற்பல சாதியார்களாலும சமயத்தார்களாலும் சன்மானிக்கப் பெற்று வருகின்றனர். "கிளாக்யங்" கம்பனியிற் சிலகாலம கடமைபார்த்துத் துரைமாராலும், நாட்டுக் கோட்டை நகரத்தாராலும், நன்குமதிக்கப் பெற்றனர். தற்போது இவ்விளைஞர் ஹெரால்ட் சிலோன் கொம்மேஷியல் கம்பனிக்குப் புரோக்கராயிருக்கும் திருவாளர் மூத்ததம்பி யவர்களோடு அலுவல் பார்த்து வருகின்றனர், இவவுத்தம குணசாலியுடைய பெருமையையும், இவருடைய சிறந்த குணங்களையும், அறியாதாரில்லை, குலநலனுடைய இவவிளைஞரின் செயல்களைச் சிறுபிராயம முதலாக யாம் நன்கறிவோம். ஆதலால், இவரைப பற்றி இப்புத்தகத்தில் சுருக்கமாய்க் கூறத்துணிந்தேம். இவர், சற்கருமங்களாயுள்ள புண்ணிய விஷயங்களுக்கு மன ஆர்வத்தோடும், அன்போடும் தம்மாலியன்ற ஒத்தாசைகளைச் செய்யும் ஆற்றலுடையர். யாத்திரை விஷயமாக இலங்கையிலுள்ள முக்கிய ஸ்தலங்களுக்கும் இந்தியாவிலுள்ள புண்ணிய ஸ்தலங்களுக்கும செல்பவர். தெய்வ பக்தியும், சமயபக்தியும், சன்மார்க்கமுமுடையர் என்பதற்குச் சந்தேகமில்லை. இவர் வித்துவான்களையும், அறிவாளிகளையும் ஆத

ரிக்கும் குணமுடையர். ஸ்ரீமான் காராளசிங்கம் சங்கீதத்தில் அதிக ஞானமும், அதிக விருப்பமுமுடையர். இவர் இனிய கீதங்களைக் கேட்கும் பொருட்டாக, சங்கீத வித்துவான்களையும், வாத்தியக்காரர்களையும் நன்குமதித்து அவர்களைத் தகுந்தபடி ஆதரித்துத் தம்மாலான பொருளுதவிகளைச் செய்து, அவர்களைக் கௌரவப்படுத்தி வருகின்றனர். இத்தன்மையான குணங்களுடையவரை இக்காலத்து மாணிப்பாய வாசிகளுட் காண்பதரிது. இவர், நவாலியில் மேன்மக்களாய் விளங்கிய, அரசநாயக முதலியார் வம்சத்துத்தோன்றிய முருகேச உடையார் மயில்வாகனம், சிவப்பிரகாசமவர்களின் புத்திரி ஸ்ரீமதி பாகீரதி யென்னும் பெண்மணியை விவாகஞ்செய்து பத்மினி, நாகம்மா என்னும் பெயர்களையுடைய இருகுழந்தைகளைப் பெற்றனர். இந்தப் பெண்மணியுடைய குணமகிமைகளைச் சொல்லுமிடத்து, நற்பழக்கமும், நல்லொழுக்கமும், நல்லறிவும், ஈஸ்வரபக்தியும், சாந்தகுணமும், மிக்க பொறுமையுமுடைய தலைமகளாவர். கற்பிலக்கணங்களிற் சிறந்தொழுகும் இப்பெண்ணரசி, நல்லாசிரியர்களிடத்திலே சங்கீதத்தை முறைப்படி கற்று, மிகவும் இனிமையாய்ப் பாடும் வல்லமையடைந்தனர். யாமிதுவரை அநேக பெண்கள் பாடியதைக் கேட்டிருக்கின்றோம். பாடுகின்ற பெண்களுட் சிலருக்கு, சுருதிக்கியானம், லயக்கியானம், சுரக்கியானம் என்பவற்றுள், எல்லாம் நிறைவாயிருத்தலைக் காண்பதரிது. இந்தப் பெண்மணியோ வென்றால், ஈஸ்வரானுக்கிரகத்தால், எல்லாவற்றையும் ஒருங்கமையப் பெற்றனர். இதுவல்லாமலும், இந்தப் பெண்மணியுடைய சாரீரத்தின்கனிவை எம்மால் சொல்லுந்தரமன்று. புண்ணிய வசத்தால், குயில்போன்ற சாரீர சம்பத்தையுடைய, இம்மாது சிரோன்மணியைப்போல், சங்கீதத்தில்,வித்துவத்திறமை பூண்டு பாடும்பெண்களை, இலங்கையில் யாமிதுகாறும் பார்த்ததேயில்லை. இத்தம்பதிகள் தீர்க்காயுளைப் பெற்று இனிதாய் வாழ எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக.

## A. V. Kulasingham Esq Advocate.

ஸ்ரீமான் குலசிங்கம் அத்வகாத்:—இவர், காரைநகரை ஜென்மஸ்தானமாயுடையர். அந்நாட்டில், குலநலனுடைய மேன் மக்களாயும், சைவாசாரங்களையுடைய உத்தமர்களாயும், விளங்கிய சிவநேயச் செல்வர்களின் சந்ததியைச் சார்ந்தவர். இவர், கல்வி யறிவொழுக்கங்களிற் சிறந்த பேரறிஞராய், ஆங்கிலப் புதினப்பத் திரிகைகளுட் சிலவற்றிறகுப் பிரதான ஆசிரியராயிருந்து, பலரா லும் நன்குமதிக்கப்பெற்ற யோக்கியராய், இப்பதவியினின்றும் விலகித் தற்போது, யாழ்ப்பாணத்தில், பிரபல நியாயதுரந்தரராய் விளங்குகின்றனர். ஸ்ரீமான் குலசிங்கம், இயல்பாகவே சாந்தம், பொறை, அடக்கம், முதலாகிய நற்குண நற்செய்கைகளையுடை யர். தேசம், பாஷை, மதம் என்பவற்றில் பேரபிமான முடைய சற்பாத்திரருமாவர். சுருக்கமாகச் சொல்லுமிடத்தில், நியாயப்பிரமா ணங்களை ஆராய்தலிலும், அறிவிலும், அனுபவத்திலும், விவேகத் திலும் சிறந்து விளங்கு மிப்பேரறிஞரின் சாதுரிய புத்தியை அறி யாதாரில்லை. இவர் யாழ்ப்பாணத்திலே இதுகாறும் அனேக பெரும் வழக்குகளை நடாத்தியிருக்கின்றனர். அவற்றுள் உதார ணமாக நல்லூர்க் கந்தசுவாமி கோவில் வழக்கும் ஒன்றாகும்.

## C. T. Kandaiya, Proctor S. C.

பிறக்டர் கந்தையா:—காலஞ்சென்ற இவ்வுத்தமர், நல் லூரைச் ஜென்மஸ்தானமாயுடையவர். இவர், இந்நகரில பிரபல நொத்தாரிசாகவும், சுப்பிறியங்கோட்டுத் தரணியாகவும், பிரபல முற்று விளங்கினர். இவருடைய திறமையையும், நேர்மையை யும், சாதுரியத்தையும், உத்தம குணங்களையும அறியாதார் இலங் கையிலில்லை யெனலாம். ஸ்ரீமான் கந்தையா சுமார் இருபதுவரு டங்களுக்கு மேலாக இவ்வூரில் பிரபல நியாயதுரந்தரராயிருந்து எல்லாச் சாதியாருக்கும், எல்லாச் சமயத்தாருக்கும், இணங்க மிக்க நேர்மையோடும், திறமையோடும் தமது கடமையைப் பார்த்து உலகில் நற்பேரையும், நற்கீர்த்தியையும், நற்புகழையும் நாட்டிச் சென்றனர். இவர், நறபழக்கமும், நல்லொழுக்கமும், சைவாசாரமும், சிவத்தியானமும் சிவபக்தியுமுடையர். வருடந் தோறும் ஸ்தலயாத்திரை, தீர்த்தயாத்திரை, செய்தவர். தரும

விஷயமாகவும், புண்ணிய விஷயமாகவும் அநேகமாகச் செய்திருக்கின்றனர். தமிழ் யூனியன் சங்கத்து அங்கத்தவருமாவர். ஈசனருளால் சற்புத்திர சந்தானங்களையும், சகல செல்வங்களையும் உண்டாகப் பெற்று, காத்திராவண்ணம் சிவலோகஞ் சென்றனர். இவ்வுத்தமர் எமது சிநேகருமாவர். தற்போது இவருடைய முயற்சிகளை வழமைபோல் இவருடைய சகோதரராகிய ஸ்ரீமான் நவரெத்தின மென்பவர் பிரபல நியாய துரந்தரராயிருந்து இக்கருமங்களை பார்த்து வருகின்றாரென அறியலானோம். இவருடைய குறுநிசயங்கள் எமக்குப் புலப்படாமையால் விடுத்தேம். ஒருமுறை நன்காராய்ந்து அடுத்துவரும் பதிப்பில் விபரமாய் வெளியிடுவோம்.

## A. Kasi Chettiar Avl.

ஸ்ரீமான் அ. காசிச்செட்டியார்:—இவர், இராமநாதபுரம் ஜில்லாவைச் சார்ந்த பட்டமங்கல மென்னும் கிராமத்தைச் சென்ம ஸ்தானமாகவுடையவர். அந்நாட்டிலே, குற்றமற்ற இலக்கணங்களையுடைய வைசிய மரபிலே யுதித்து, இகபர மிரண்டிற்கும் ஏதுவாகிய சிவபுண்ணியங்களிலும் தானதருமங்களிலும் ஈடுபட்டு சிவாலயம், மடாலயம், வித்தியாலயம், முதலாகிய அரும்பெரும் செயல்களைப் பக்தி சிரத்தையோடு செய்து, உலகில் பிரக்கியாதி பெற்றுத் தரும சீலராகவும், பாரிய தனவந்தராகவும் விளங்கும் திருவாளர் A. V. R. A. அடைக்கப்பச் செட்டியாரவர்களின் அருந்தவப் புதல்வராவர். இவர், தம்முடைய மரபிற்கேற்ப, சைவாசாரமும், நற்பழக்க வொழுக்கமுமுடைய சற்பாத்திரராய் வளர்ந்து, ஆங்கிலம், தமிழ் என்னும் இரண்டையும் நன்கு கற்று, நல்லறிவோடு கூடிய நற்புதல்வராய், ஐரோப்பா முதலிய மேலைத்தேசங்களுக்குச் சென்று வியாபார முறைகளை நடாத்தும் கிரமங்களை நன்கறிந்து, தற்போது இந்நகரில், சீமை வர்த்தகராய் பிரபலமுற்று விளங்கும் A. V. R. A. என்னும் விலாசத்துக்கு அதிபராயும், அதன் சொந்தக்காரராயும் விளங்குகின்றனர். ஸ்ரீமான் காசிச் செட்டியார் இயல்பாக சாந்தம், பொறை, அடக்கம், இன்சொல், ஈகை, இரக்கம் முதலாகிய சிறந்த குணங்களை

யுடையவர். பிறவிச் செல்வராகிய இவ்வுத்தமரோடு யாம் சில வருடங்களாகப் பழகியதால், இவருடைய குணமகிமைகளை இப் புத்தகத்தில் எழுதும்படி துணிந்தோம். இத்தகைய ஸ்ரீமான் காசிச் செட்டியார், கல்லல் என்னுங் கிராமத்தை வாசஸ்தானமா யுடைய திருவாளர், முருகப்பச் செட்டியாரவர்களின் புதல்வியை விவாகஞ் செய்து மூன்று பெண்களையும் ஓர் ஆண் மகவையும் பெற்றனர்.

## V. Karthigesa Kurukal Avl.

பிரமஸ்ரீ கார்த்திகேயக் குருக்கள்:—தம்பையாக் குருக்கள் என்னும் நாமத்தாலறியப்பட்ட இப்பிராமணோத்தமர், நல்லூரை ஜென்மஸ்தானமாகக் கொண்டு, கொழும்பில் அநேக வருடகாலங்களாக வாசஞ்செய்தனர். இவர், ஆகமவுணர்ச்சியும் சோதிட சாஸ்திரங்களில் அதிக தேர்ச்சியும், "ஹிப்னொற்றிசம், மெஸ்மெரிஸம், மாந்திரீகம்" என்னும் முறைகளில்மிக்க அநுபவமுமுடையர். இவர் சிலகாலம் பொன்னம்பலவாணேசர் ஆலயத்து அருச்சகராயும், ஸ்தானீகராயுமிருந்து, கோவிற்கருமங்களை நன்கு நடாத்திப் பலராலும் சன்மானிக்கப் பெற்றனர். இது போன்ற அநேக ஆலயங்களுக்கு அருச்சகராயும், பிரதிஷ்டா குருவாயுமிருந்து வந்தனர். தற்போது பிரமஸ்ரீ தம்பையாக் குருக்கள் தாம் ஈட்டிய பொருளைக்கொண்டு, நல்லூரிலே விசித்திரமாயோர் சிவன் கோவிலைக்கட்டி, பரிவார மூர்த்திகளையும் அமைப்பித்து, ஆகமவிதிப்படி பிரதிஷ்டை முதலானவைகளை விமரிசையாகச் செய்வித்து, காலந்தோறும் பூசை, உற்சவம் முதலானவைகளை நடாத்தி வருகின்றனர். இவர் இயல்பாகவே நல்லறிவும் நன்மனதும், வாக்குவல்லபமும், பரோபகாரமும், பெருந்தன்மையும், குருலக்ஷணமுமுடைய யோக்கியராய், பிரக்கியாதி பெற்று விளங்குகின்றனர். யாழ்ப்பாணத்தில் இதுகாறும், பிராமணோத்தமர்களால் கட்டப்பெற்ற எத்தனையோ ஆலயங்களைத் தங்கள் வசப்படுத்தி, விதண்டாவாதம் புரியும் வீணர்கள் இக்காலத்தில் தோன்றியிருப்பதால், இக்கோவிலைப் பற்றிய விசேட குறிப்புரைகள் சிலவற்றை, மறுபதிப்பில் விபரமாய்க் கூறுவேம்.

## A. Kanagasabai, Asst Broker.

திருவாளர் அ. கனகசபை:—இவ்விளைஞர், ஆனைக்கோட்டையில் பிரபல மேன்மக்களாய் விளங்கிய, கனகசூரியர் வமிசத்துத் தோன்றிய விஞ்ஞித்தம்பியார், முருகேசு, அவர்களின் புத்திரருளொருவராயிருந்து உலகில் நற்பெயர் பெற்றுச் சில வருடங்களுக்கு முன்னர் பரகதியடைந்த திருவாளர், அப்பையாவின் புத்திரசிகாமணியும், இந்நகரில் பிரபல டாக்டராயிருந்த ஸ்ரீமான் சின்னத்தம்பியவர்களுடைய தமையனார் புத்திரருமாவர். இவ்விளைஞர், நற்பழக்கமும், நல்லொழுக்கமும், சாந்தகுணமுமுடைய சற்புத்திரராய் வளர்ந்து, யாழ்ப்பாணத்திலும், கொழும்பிலும் கல்விகற்றுத் தற்போது பிரபல புறோக்கர்மாரோடு உத்தியோகம் பார்த்து வருகின்றனர். இவர், புகையிரதப் பகுதியில் உத்தியோகமாயிருக்கும் திருவாளர், கணபதிப்பிள்ளையின் சிரேஷ்ட புத்திரி ஸ்ரீமதி பத்மாவதி என்னும் பெண்மணியை விவாகஞ் செய்திருக்கின்றனர். இந்தப் பெண்மணியுடைய குணமகிமைகளைச் சொல்லுகில், இல்லறதருமத்துக்குரிய இலட்சணங்களெல்லாவற்றையும் ஒருங்கமையப் பெற்ற உத்தம குணசாலியாவர். சைவாசாரமும், சிவத்தியானமும், தெய்வபக்தியும், குருவிஸ்வாசமுமுடைய இக்குலமணி, எமதிடம் கல்விகற்ற மாணுக்கிகளுளொருவராய், சங்கீத ஞானத்திற் சிறந்து, மிகவினிமையாய் வாத்தியம் வாசிக்கும் வல்லமையடைந்தனர். தம்பதிகள் சற்புத்திர சந்தானங்களைப் பெற்று இனிதுவாழ எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிவாராக.

## Krishna Pillai Francis Esq. Auctioneer & Broker

பிரான்சிஸ் கிருஷ்ண பிள்ளை:—இவர், தற்போது லைசென்ஸ் பெற்ற புறோக்கராயும், பிரபல வெந்தீஸ் மேஸ்தராயும் விளங்குகின்றனர். பகிரங்க விற்பனவுகாரர்களாய், அனேகர் இருந்தபோதிலும், இவரிடத்துள்ள குணவிசேடத்தையும், இவருடைய பெருந்தன்மையையும், சிலர் சொல்லக் கேள்வியுற்றதால் மேலான போக்குடையாராயிருக்கலாமென மதித்து, இவரைப் பற்றி இப்புத்தகத்தில் குறிப்பிடலானேம். யாம் இவருடைய செயலை நன்கறிந்து அடுத்துவரும் பதிப்பில் விபரமாய்க்கூறுவேம்.

## A. Kanagasingam Esq. Vanniah. Tambalagamam.

ஸ்ரீமான் ஏ. கனகசிங்கம்:—இவர், திருகோணமலையைச் சென்மஸ்தானமாயுடையவர். அரசாங்கத்தில் உத்தியோகம் பார்த்துக் கிளறிக்கல் லயினில் உயர்வடைந்து, தம்பலகாமப் பகுதிக்குத் தலைமை பூண்ட வன்னியராகத் தேசாதிபதியவர்களால் நியமனம் பெற்றுத்தமது கடமையை அதிக நிறைமையோடு நடாத்தி வருகின்றனர். இவரை நன்கறிந்த நண்பர்கள், இவருடைய தகுதியைப்பற்றி எம்மிடம் கூறியதால் இவரை, நாம் கௌரவமாக மதித்து, இதில் சுருக்கமா யெழுதலானோம். தம்பதிகளான பின்னர், மறுபதிப்பில் விபரமாய்க் கூறுவோம்.

## A. Kanagasabai, Booking Clerk, C G R.

திருவாளர் ஆ. கனகசபை:—இவர், உலகமாதாவாகிய நாகபூஷணியம்பாள் எழுந்தருளியிருக்குந் தானமாய் விளங்கும் நயினாதீவில், வம்ச பாரம்பரியத்தைச் சார்ந்த மேன்மக்கள் மரபிலே யுதித்த, ஆறுமுகமவர்களின் புத்திரராவர். இவ்விளைஞர் நற்பழக்க வொழுக்கமுடையராய்ச், சிலகாலம் எம்மிடத்தில் கல்விகற்றனர். சாந்தகுணமும், சமயபக்தியும், புத்திசாதுரியமுமுடைய இவ்விளைஞர், புகைரதப் பகுதியில் உத்தியோகம் பெற்றுத் தற்போது "கமபஹா" என்னு மிடத்தில் புக்கிங் கிளார்க்காயிருக்கின்றனர்.

## A. Kasippillai Esq. P. C. M. O. Office.

ஸ்ரீமான் அ. காசிப்பிள்ளை:—இவர் உரும்பராய் என்னுமிடத்தைச் சென்ம ஸ்தானமாயுடையவர். இருபாலை யென்னுமிடத்தில் குலாசாரம், மதாசாரம், பூண்ட மேன்மக்களின் மரபிலே யுதித்த அப்பாத்துரை யவர்களின் புத்திரராவர். இவர், தற்போது பீ. சீ. எம். ஓ. என்னும் ஆபீசில் பிரதான உத்தியோகஸ்தருள் ஒருவராய் விளங்குகின்றனர். இவர், சிலகாலம் அபின், கஞ்சா, முதலான வஸ்துக்களைப் பரிசோதனை செய்யும் இன்ஸ்பெக்டராகக் கடமை பார்த்துப் பலராலும் நன்குமதிக்கப் பெற்றனர். யாம் இவரோடு நீண்டகாலம் பழகி இவருடைய உத்தமகுணங்களை யறிந்தமையால், எக்காலத்தும் அழிவின்றி யிருக்கும் இப்புத்தகத்தில் குறிப்பிடலானோம்.

## M. Kanagasingam Esq. Chief Trains Controller, Maradana.

ஸ்ரீமான் எம். கனகசிங்கம்:—இப்பொழுது இலங்கைப் புகையிரதப் பகுதியில், இதுகாறும் ஏற்பட்டிராத சில திருத்தங்களும், உத்தியோக விஷயமாய், முன்னொரு காலத்துமில்லாத ஏற்றங்களும், இத்துடன் இடையிடையே சிற்சில மாற்றங்களும் நிகழ்வதை புதினப்பத்திரிகைகள் வாயிலாக, அவ்வப்போது காண்கின்றேம். உதாரணமாக, சமீபகாலத்தில், ஒப்பறேற்றிங் செக்ஷனில் முதலாங் கிளாக்காயிருந்த ஸ்ரீமான், எம் கனகசிங்க மென்பவர், தற்போது உயர்ந்த ஸ்தானமாகிய பெரும் உத்தியோகத்தைப் பெற்றனரென அறிகிறேம். கோண்டாவிலைச் சார்ந்த ஸ்ரீமான் கனகசிங்க மவர்களுடைய விசேட குறுநிசயங்களையும் பிறவற்றையும் நன்கறியாமையால், விரிவாய் எழுதாது சுருக்கமாய் எழுதலானேம் மறுபதிப்பில் விபரமாய் ஆராய்ந்து கூறுவேம்.

## Kumara Puram.

குமாரபுரம் சித்திரவேலாயுத ஸ்வாமி ஆலயம்:—இவ்வாலயம் முல்லைத்தீவுக் கணித்தாய், மூன்று மைலுக்குள்ளாக இருக்கின்றது. செகராஜ சேகரன் காலத்தில் கட்டப்பெற்றதெனவறிகிறேம். இவ்வாலயத்துக்கு மானியங்களு மிருக்கின்றன புத்தூரிலுள்ள குமார சுவாமிக் குருக்கள் என்பவரே இதற்குத் தர்மகர்த்தாவாவர். பலவருடங்களாகத் தேடுவாரின்றிப் பழுதடைந்து கிலமுற்றிருந்த இவ்வாலயத்தைப் பிரமஸ்ரீ கு பரமசாமிக் குருக்களவாகளால் சேகரிக்கப்பட்ட பொருளைக் கொண்டு, முன்போலத் திருத்தி, சம்புரோட் சணகும்பாபிஷேகஞ் செய்யப் பெற்று, நித்திய நைமித்தியங்கள் நடைபெற்று வருகின்றன. சகோதரராகிய பஞ்சாக்ஷரக் குருக்க ளென்பவரும் இவருக்குத் துணையாளாயிருக்கின்றனர். இவ்விருவரும் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த யோக்கியர்களாய், சாந்தகுணமும், ஈசர பக்தியு முடையர்களாய் விளங்குகின்றனர். பரமசாமிக் குருக்களென்பவர், மாவிட்டபுரத்துச் செல்லக் குருக்களவர்களின் புத்திரி ஸ்ரீமதி நாகரத்தின மென்னும் பெண்மணியை விவாகஞ் செய்தவர்.

## V. Kanagaratnam Esq. Agricultural Dept. Peradeniya.

ஸ்ரீமான் வை கனகரத்தினம்:—இவர், ஊர்காவற்றுறையில், பொலீஸ் கோட்டுச் சக்கிடுத்தாராயிருந்த, வைத்தியநாதரவர்களின் புத்திரருளொருவராவர். இவர், காரம்பன் என்னுமிடத்தை ஜென்மஸ்தானமாயுடைய குலமகனானதால், சைவாசாரங்களிற் சிறந்து, தம் மரபிற்கேற்றதாகும் கமத்தொழில் முறைகளைக் கற்று, அரசாங்க உத்தியோகஸ்தராய், தற்போது பெறடேனியாவிலிருக்கின்றனர். இவருடைய குணமகிமையையும், சமயபக்தியின்றிறத்தையும் போற்றிப் பலருஞ் சொல்லக் கேள்வியுற்றேம். இத்தகைய ஸ்ரீமான் கனகரத்தினம் யாழ்ப்பாணத்தில் உப ஏசண்டாயிருந்த எமது நண்பர், ஸ்ரீமான் இராசநாயக முதலியார் C. C. S. அவர்களுடைய ஏகபுத்திரி ஸ்ரீமதி மனோன்மணி என்னும் மாதுசிரோன்மணியை விவாகஞ் செய்து, ஆனந்தவல்லி என்னும் ஓர் பெண்மகவைப் பெற்றனர். இவருடைய தாயார் வழியை ஆராயுமிடத்து, காரம்பன் என்னுமிடத்தில், உயர்குலத்துத்தோன்றிய சைவ வேளாண்மரபில், பரம்பரையாக உடையார் வேலை பார்த்து, உலகில் நற்கீர்த்தி பெற்ற, உத்தமர்களின் சந்ததியிலுள்ள ஆறுமுக உடையாரவர்களின் புத்திரி யென அறியலானோம். இத்தம்பதிகள், அரசரத்தினம், ஆறுமுகம், கனகரத்தினம், (Dr.) நடராசா, ஏகாம்பா, ஆச்சி, என்னும் பெயர்களையுடைய சந்தானங்களைப் பெற்றனர். ஏகாம்பா என்னும் பெண்மணி பிறக்டர் இராமலிங்கத்தை விவாகஞ் செய்தனர். ஆச்சி என்னும் பெண்மணி நாரந்தனையில் குலத்திலகராய் விளங்கும் செல்லப்பா உடையாரின் மகன் நாகரத்தின மென்பவரை விவாகஞ் செய்து புத்திர சந்தானங்களைப் பெற்று வாழ்கின்றனர்.

## Kothavari Aiyer Avl.

கோதாவரி ஐயர்:—சிலஆண்டுகளுக்குமுன்னர், கோதாவரி ஐயர் என்னும் நாமத்தாலறியப்பட்ட சுப்பிரமணிய சாஸ்திரிகளென்பவர் ஒருவர் இருந்தார் இவர் ராஜமகேந்திரபுரத்தில், சாலங்காயன கோத்திரத்திலே உதித்த, நாகேந்திர சாஸ்திரிகளின் புத்திரராவர். தாயார் பெயர் சீதாலெக்ஷுமியம்மாள். இவர், இந்தியாவினின்றும் அறுபது வருடங்களுக்கு முன்னர் யாழ்ப்பாணம் வந்து நல்லூரில் வசித்தனர். ஆகமங்களிலும், வேதாத்திய

யனத்திலும் திறனுடையாராய் இருந்தமையால், நல்லூரிலிருந்த பிராம்மணருக்கு முறைப்படி கல்வி கற்பித்து வந்தனர். அக்காலத்தில் பிரபல நியாயதுரந்தராயிருந்த, பிறக்டர் பாலசுப்பிரமணிய ஐயரின் பௌத்திரி, அன்னபூரணியம்மாளை மேலே சொல்லப்பட்ட கோதாவரி ஐயர் விவாகஞ் செய்து, பாலசுப்பிரமணியக் குருக்கள் என்னும் ஓர் ஆண்மகவைப் பெற்று, முனீஸ்வரத்திலும், நல்லூரிலும், பூசகராயிருந்து காலஞ்சென்றனர். பாலசுப்பிரமணியக் குருக்களென்பவர், கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்து, சாம்பசிவக் குருக்களவர்களின புத்திரி, சாரதாம்பாளை விவாகஞ் செய்து, சற்புத்திர சந்தானங்களைப் பெற்றனர். தற்போது, இவர் பொன்னம்பல வாணேசர் ஆலயத்தில் அருச்சகராயிருக்கின்றனர்.

## S. T. Kanagasabai Esq. Pettah Store

ஸ்ரீமான் எஸ். டீ கனகசபை:—இவர், யாழ்ப்பாணத்திலே, தக்க குடும்பத்தைச் சார்ந்தவர். தற்போது பெருந்தொகையான பணத்தைச் செலவிட்டுப் புறக்கோட்டையிலோர், சாய்ப்புக்கடையை ஸ்தாபித்துப் பிரபலமாய நடாத்திவருகின்றனர். இவர் சமயாபிமானமும், தேசாபிமானமும், பொதுஜன சேவையும், பெருந்தன்மையுமுடையர். உத்தியோகஸ்தர்களாயும், பிரபுக்களாயுமுள்ள பிரமுகர்களை இடமாகக்கொண்ட "தமிழ் லீக்" என்னும் மகாசபையில் பிரதான அங்கத்தவருமாவர். புகழ், ஆரவாரம், முதலானவற்றை விரும்பாத ஸ்ரீமான் கனகசபையுடைய குணகுணங்களை உலகமறியுமாதலால், சுருக்கமாய்க் கூறினோம். எம்மால் எழுதப்படும், மற்றோர் சரித்திரத்தில் இடம்பெறில் சிறுகக் கூறுவோம்.

## V. C. Kanagasabai Esq. Broker, Carson & Co.

காலஞ்சென்ற வெ. செ. கனகசபை:—இவர், மானிப்பாயைச் சென்மஸ்தானமாயுடைய வல்லிபுரம் செல்லையாவின் புத்திரராவர். 1894-ம் ஆண்டு ஏப்பிரல் மாதம் பத்தாந் திகதி சென னமானவர். சிறுபிராயம் முதலாகக் கொம்மிஷன் ஏசண்டாயிருந்து, வியாபார முறைகளை நன்கறிந்து, ஈற்றில் உயர்ந்த ஸ்தானங்களை வகித்து, பாரிய கம்பனிகளுக்குப் பிரபல புரோக்கரா

யிருந்து, சொற்ப காலத்துள் பலராலும் நன்குமதிக்கப் பெற்று சிலவருடங்களுக்கு முன்னர் பரலோகஞ் சென்றனர். நண்பராகிய திருவாளர் கனகசபை, ஒரு சந்தர்ப்பத்தில், எமக்குப் பரோபகாரமாய்ச் சில உதவிபுரிந்தமையால், இவருடைய செயலை மறவாது, மேன்மக்கள் சரித்திர மென்னும இப்புத்தகத்தில் சிறிது கூறத்துணிந்தேம். இவர் "ஹேறலி அன் கென்னியில்" சிலகாலம் கடமை பார்த்த பின்னர், வேறொரு ஜர்மன் கம்பனிக்கு புரோக்கராக நியமனம் பெற்றனர். சிலகாலத்துள் அங்கிருந்து, கார்சன் கம்பனிக்குப் புரோக்கராகச் சென்றனர். இவர், இங்கிருந்து ஏராளமாகச் சம்பாதித்துச் சில சற்கருமங்களையும் செய்திருக்கின்றனர். உதாரணமாக, ஆவணி மாசத்துச் சதுர்த்தியிலன்று, மருதடிப்பிள்ளையார் கோவிலில், விமரிசையாக இவ்வுற்சவத்தைச் சில வருடங்களாக நடாத்திவந்தனர். இத்துடன் ஸ்தலயாத்திரையுஞ் செய்தவர். திருவாளர் கனகசபை பார்த்து வந்த கார்சன் கம்பனிப் புரோக்கர் வேலையை, இவருடைய தம்பி அரியகுட்டி எனபவர் பார்த்து வருகின்றனர் என, அறியலானேம். "சந்தனத்தைச் சேர் தருவுந்தக்க மணங்கமழும்" என்றபடி இவரும தமையனைப் போல் பெருந்தன்மையும், சமயபக்தியுமுடைய ரென்று சொல்லக் கேள்வியுற்றேம். எம்மால் எழுதப்படும் மற்றோர் சரித்திரத்தில் இவருடைய செயலின்திறத்தை ஆராய்ந்து கூறுவேம்.

## **M. H. Kantawala,** B. A Cantab, District Judge, Negombo.

ஸ்ரீமான் மோஹன் ஹரிகோவிந்தாஸ் கந்தவாலா:- இவர் வடஇந்தியாவில் 1890-ம் ஆண்டு டிசம்பர் மாதம் மூன்றாந் திகதி பிறந்தவர். சீவில் சேர்விஸ் பரீட்சையில் சித்தியடைந்து 1914-ம் ஆண்டு ஜனவரி மாதம் இலங்கைக்கு வந்ததும் அவிசாவலை, மட்டக்களப்பு ஆகிய இடங்களுக்குப் பொலிஸ் நீதிபதியாக நியமனம் பெற்றனர். அதன் பின்னர், டிஸ்திறிக் நீதியாக உயர்வடைந்து, பலமாகாணங்களிலும் தமதுகடமையைச்சரிவர நடாத்திவந்தனர். ஸ்ரீமான் கந்தவாலா அறிவிலும், அனுபவத்திலும், புத்திசாதுரியத்திலும், சிறந்து விளங்கினமையால், யாழ்ப்பாணம் பெரிய கோட்டிலுஞ் சிலகாலம் நிதாசனம் வகித்து உலகில் நற்பெயர் பெற்றனர். தற்போது இவர் நீர்கொழும்பில் டிஸ்திறிக் நீதிபதியாயிருக்கின்றனர்.



S. J. C. Kadirgamar Esq., Proctor & Notary,

Partner Wilson & Kadirgamar Proctors & Notaries.

Director & President Y. M. C A.

Helped to found the Ceylon Lawyers' Benevolent Association

Member Com appointed to revise Taxable cost in civil Proceedings.

Member Royal Asiatic Society.

Meenambal Press.

## S. J. C. Kadirgamar Esq. Proctor and Notary.

ஸ்ரீமான் பிறக்டர் கதிர்காமர்:—இவர், யாழ்ப்பாணத்து மானிப்பாயில், செல்வம் சீர்த்தி, உத்தியோகம், பிரபுத்துவம், பெருந்தன்மை என்பவற்றுட் சிறந்த பிரபுக்களாய் விளங்கிஞேர் சந்ததியில், பிஸ்கால் ஆபீசராகவும், உத்தியோகஸ்தராகவு மிருந்து நற்கீர்த்தி பெற்று விளங்கிய ஸ்ரீமான் கதிர்காம முதலியாரவர்களின் அருந்தவப் புதல்வராவர். இவர் காலஞ்சென்ற வைர முத்து, ஐஸ்பரி ஆதியோருக்குப் பௌத்திர ரென்றும் அறியக் கிடக்கின்றது. ஸ்ரீமான் பிறக்டர் கதிர்காமர் 1888-ம் ஆண்டு சூலாய் மாதம் பதினேழாம் திகதி செனனமாகி, நற்பழக்க வொழுக்கமும், தேவபக்தியும், கிறிஸ்து மதாபிமானமுமுடைய சற்புத்திரராய் வளர்ந்து, செந்தோமஸ் கொலீச்சில் கல்விகற்று, கேம்பிறிச் முதலான சோதனைகளிற் சித்தியடைந்தனர். அதன் பின்னர் நியாயப்பிரமாணங்களைச் சட்டக் கல்லூரியில் கற்று அதிலும் தேர்ச்சியடைந்து, தற்போது பிரபல நியாயதுரந்தரராகவும், பிரசித்த நொத்தாரிசாகவும் பிரபலமுற்று விளங்குகின்றனர். இந் நகரிலிருக்கும் எத்தனையோ பிறக்டர்மாருள் ஸ்ரீமான் கதிர்காமர் விவேகத்தாலும், அறிவாலும், நேர்மையாலும், யோக்கியத்தாலும் சிறந்து உலகில் நற்கீர்த்தி பெற்று உத்தியோகஸ்தர்களாலும், பிரபுக்களாலும் நன்குமதிக்கப் பெற்று வருன்கிறனர். "மன்னர்க்குத் தன்றேச மல்லாற் சிறப்பில்லை, கற்றோர்க்குச சென்ற விடமெல்லாஞ் சிறப்பு" என்றபடி ஸ்ரீமான் கதிர்காமர் அடிக்கடி இங்கிலாந்து முதலிய மேலைத்தேசங்களுக்குச் சென்று ஆங்காங்குள்ள அறிஞர்களாலும் அங்கீகரிக்கப் பெற்று வருகின்றனர். கிறிஸ்து மார்க்கத்தில் பேரபிமானமுடையரானதால் Y. M. C. A. முதலான பிரபல சங்கங்களிலும், சபைகளிலும் அக்கிராசனராயிருத்தலைக் காண்கின்றேம். இவருக்கு விவாகம், அதாவது யாழ்ப்பாணத்து மானிப்பாயில் பிரபலஸ்தராய் விளங்கும் ஸ்ரீமான் எட்வேட் மேதர் அவர்களின் அருமைப் புதல்வி Edith Rosamund Parimalam என்னும் பெயரையுடைய பெண்மணியைக் கடைப்பிடித்து, ஐந்து குழந்தைகளைப் பெற்றனர். இத்தகைய ஸ்ரீமான் கதிர்காமரின் விசேட குணதிசயங்களைப் பற்றி, பலருஞ் சொல்லக் கேள்வியுற்று, இவரைச் சந்தித்துச் சற்று நேரம் சம்பாஷிக்கும் பொருட்டாகச் சென்றிருந்தேம். இவர், எம்மைக் கண்டதும் முகமலர்ச்

சியோடு "வாருங்கள்" என்று எம்மை வரவேற்று விஷயத்தை வினவிய பின்னர், எம்மோடு சில நிமிஷங்களாக மிகவும் அன்பாய் சம்பாஷித்தனர். அப்பொழுது இவர் குலத்துக்கேற்ற குணமும், செயலும் பெருந்தன்மையுமுடைய பிரபுவாய்க் காணப்பட்டனர். அப்பொழுது யாம் ஒரு க்ஷணிகநோக்கில் மட்டுப்படுத்தி குலமகனெனக் கண்டு, இவருடைய தயாளகுணத்தின் மகிமையை இப்புத்தகத்தில் எழுதத்துணிந்தேம். இதுபற்றியே "குலத்தளவே யாகுங்குணம்" என்ற வாக்குப் பிறந்தது. ஆகவே ஸ்ரீமான் சாமுவேல், ஜெபரத்தினம் கதிர்காமரவர்களைப் பற்றி எம்மால் எழுதப்படும் மற்றோர் சரித்திரத்தில் விரிவாய்க்கூறுவேம்.

## Kailasam Chettiar

திருவாளர், கைலாயஞ் செட்டியார்:—இவர் யாழ்ப்பாணத்துள்ள பெருமாள் கோவிலுக் கணித்தாக வசிப்பவர். கொழும்பிலும், யாழ்ப்பாணத்திலும் ஜவுளிக்கடை முதலானவைகளை நடாத்திவருகின்றனர். வியாபாரத்தை விருத்தி செய்து பெரும்பொருளை ஈட்டிப் பாரிய தனவந்தராயிருக்கின்றனர். திருவாளர் கைலாயஞ் செட்டியாரை அறியாதாரில்லை. இவர் மனுஷத்தன்மையுடைய பெரும் பிரபுக்களோடு சஞ்சரித்துப் பழகியதால் பெருந்தன்மையான போக்கும், சாந்தகுணமும், பரோபகார சிந்தையுமுடையாராய் விளங்குகின்றனர். பெருமாள் கோவிலடியில் வசிக்கும் விஷ்ணுபக்தர்களான வைசியருள் முதன்மை பெற்றவர். இவருக்கு வன்னிப்பகுதியில் விளைநிலந் தோட்டம் முதலானவைகளு மிருக்கின்றன. பலவிதத்தாலும் இவர் தகமையுடையரென மதித்து இப்புத்தகத்தில் இவருடைய செயலை எழுதலானேம். எம்மால் எழுதப்படும் மற்றோர் சரித்திரத்தில் குறிப்புரை முதலானவை கூறுவேம்.

## M. Kanapathiy Pillai Esq. Fort, Colombo.

ஸ்ரீமான் எம். கணபதிப் பிள்ளை:—இவர் புலோலி என்னு மிடத்தைச் சென்ம ஸ்தானமாயுடையவர். அந்நாட்டில் சைவாசாரங்களிற் சிறந்தொழுகும் மேன்மக்கள் மரபைச் சார்ந்தவர். தற்போது "கணபதிப்பிள்ளை அன் கோ" என்னும் நாமத்துடன் ஓர் கம்பனியை ஸ்தாபித்துப் பிறநாட்டிலிருக்குஞ் சில

கம்பனிகளுக்குப் பிரதான ஏசண்டாகவும் அவற்றிற்குப் பிரதிநிதியாகவுமிருந்து ஆங்காங்குள்ள வியாபாரப் பொருட்களைத் தருவித்து இங்குள்ளாருக்குக் கொடுத்துவரும் கொம்மிஷன் ஏசண்டாயிருக்கின்றனர். ஸ்ரீமான் கணபதிப்பிள்ளை, சாந்தம், பொறை, அடக்கம் முதலாகிய குணங்களை யுடையவர். சைவாசாரமும், சமயபக்தியுமுடைய குலமகளுடைய வியாபாரிமாராலும், பிறராலும் நன்குமதிக்கப் பெற்ற உத்தமராய், பிரபலமுற்று விளங்குகின்றனர். மறுபதிப்பில் ஸ்ரீமான் கணபதிப்பிள்ளையைப் பற்றி விபரமாய்க் கூறுவோம்.

## S. Karthigesa Kurukal.

பிரமஸ்ரீ சு. கார்த்திகேசக் குருக்கள்:—இவர், நல்லூரைச் சென்ம ஸ்தானமாயுடைய சுப்பையாக் குருக்களவர்களின் புத்திரரும், சண்முகக் குருக்களவர்களின் பௌத்திரருமாவர். இவர், ஆங்கிலம், தமிழ், சமிஸ்கிருதம் என்னும் பாஷைகளைக் கற்றுச் சில காலம் ஏதோ ஒரு உத்தியோகத்திலிருந்தனர். தற்போது இவர் நவாலி விசுவநாத ஐயருடைய புத்திரியை விவாகஞ்செய்து, செட்டித்தெரு முத்துவிநாயகர் ஆலயத்தில் அருச்சகராயிருக்கின்றனர். இவருடைய பிதா பிரமஸ்ரீ சுப்பையாக் குருக்களென்பவரை அறியாதாரில்லை. யாம்இதனை எழுதுஞ் சமயத்தில் இப்பெரியார் இவ்வுலக வாழ்வை நீத்துப் பரலோகஞ் சென்றனர் என்னுந்துக்க சமாசாரத்தை அறியலானேம்.

## A. V. K. Kasinathan Chettiar.

திரு. ஆ. வி. க. காசிநாதன் செட்டியார்:—இவருடைய சென்னதேசம் தனவைசியர்களுக்குத் தலைநகராய் விளங்கும் தேவகோட்டையென வறிகிறேம். இவர், சிலகாலம் இந்நகரில் ஆங்கிலங் கற்றவர். இக்காலத்துக் கேற்ற சீர்திருத்த முறைகளை அனுசரித்துச் சைவாசாரங்களிற் சிறந்தொழுகும் இயல்புடையர். இவரைச் சிலவருடங்களாக யாம் நன்கறிவோம். இவருக்கு கொழும்பிலும், யாழ்ப்பாணத்திலும், பிறநாடுகளிலும், கடைகளிருக்கின்றன. லைசென்ஸ் பெற்று ஈடுபிடிக்கும் வர்த்தகருள் முதன்மை பெற்ற வணிகராவர். நற்குணமுடைய ஸ்ரீமான் காசிநாதன் செட்டியார் இத்தொழின் முயற்சியால் ஏராளமான திரவியத்தை ஈட்டிய தனவந்தருமாவர். இதுகாறும், இவர் அல்லது இவருடைய தகப்பனார் செய்திருக்கின்ற சற்கருமங்களைப் பற்றி அறியேம். ஆதலால் அதனை ஆராய்ந்து எத்தன்மையுடையவென்பதை அடுத்துவரும் மற்றோர் சரித்திரத்தில் கூறுவோம்.

# M

## M Mootatamby Esq. Broker

ஸ்ரீமான் புரோக்கர் மூத்ததம்பி:—இப்பெரியார், நீர் வளம், நிலவளம் பொருந்திய மாணியம்பதில் அடிமை, குடிமை, ஐசுவரியம், கீர்த்தி, செல்வம், பரோபகாரம், பிரபுத்துவம், பெருந் தன்மை முதலாகிய இலக்கணங்களையுடைய பிரபுக்கள் வமிசத் திலே சைவவேளாண் மரபிலே உயர்குலத்தவராய் வந்துதித்த திரு வாளர் மதியாபரண முதலியாரவர்களின் புத்திரரும், நற்கீர்த்தி பெற்ற சுவாமிநாதபிள்ளை உடையாரவர்களின் பௌத்திரரும அருணாசலம்பிள்ளை, சுவாமிநாத இறைசுவார், ஆகியோரின் வழித் தோன்றலுமாக 1873-ம் ஆண்டு ஜெனனமானார். இவ்வுத் தமர் சிறுபிராயம் முதலாக நற்பழக்க வொழுக்கங்களிற் சிறந்து வேதாகமாதி சமஸ்த சாஸ்திரங்களையும் பிறவற்றையும் நன்க றிந்து, வெஸ்லிக் கொலீச்சில் ஆங்கிலக் கல்விகற்று உத்தியோகத் தில் அமர்ந்தனர். வொல்காட் கம்பனியில் புரோக்கராயிருந்து புகழ்பெற்ற சங்கரப்பிள்ளை யவர்களுக்கு இரண்டாவதாயிருந்து நற்கியாதி பெற்றனர். அதன் பின்னர் புருடன்பேர்க் என்னும் ஜர்மன் கம்பனியில் இருபது வருடகாலம் பிரதம புரோக்கரா யிருந்து எத்திசையும் நற்பெயர் பெற்றனர். தற்போது இப்பெரி யார் ஹெறலன் சிலோன் கொம்மேஷியல் கம்பனியில் பிரதம புரோக்கராயும் பெரும் உத்தியோகஸ்தராயும், பலராலும் நன்கு மதிக்கப் பெற்ற பெரும் பிரபுவாயும், கொடை வள்ளலாயும், பிரக் கியாதி பெற்று விளங்குகின்றனர். தருமஸ்சொரூபனாய் விளங் கும் இவ்வுத்தமரின் குணமகிமைகளை அறியாதார் எவருமில்லை. ஆயினும் எமது சிற்றறிவுக் கெட்டியவரையில் சுருக்கமாகக் கூறி முடிப்பேம்.

### சிறந்த குணங்கள்.

ஸ்ரீமான், மூத்ததம்பி சைவாசாரமுடையவர், சிவதீக்ஷை பெற்றவர். சந்தியாவந்தனம் நித்திய கர்மானுஷ்டானம், சிவபக்தி, சிவசிந்தனை, சிவத்தியானம் முதலானவைகளையுடையர். கொடை, வணக்கம், கிருபை, உறவு, சாந்தம், பொறை, அடக்கம், வாய்மை இரக்கம், செபம், தியானம், பூசை முதலாகிய தன்மைகளில் சிறந் தவர். ஆலயவழிபாடு ஆலயங்களிலே பூசை உற்சவ முதலிய

வற்றை விதிப்படி செய்பவர். நித்திய பூசை யில்லாதிருக்கும் ஆலயங்களில் திருவிளக்கேற்றி, பூசை முதலானவைகளைச் செய்விப்பவர். விசேட தினங்களை அனுஷ்டிப்பவர். நல்லோரிணக்கமும் நல்லறிவுமுடையர், பதிசாத்திரங்களை ஓதி அதன் பொருளை யறிந்து பாவங்களை விலக்கித் தருமங்களை அனுஷ்டிப்பவர். ஆன்மசுகத்தின் பொருட்டு உத்தம தருமங்களிலே தமது பொருளைச் செலவிடுபவர் இத்தகைய இலட்சணங்க ளெல்லாவற்றையு முடைய இப்பெரியார் சிவபுண்ணியங்களி லீடுபட்டுச் செய்திருக்கின்ற சிலவற்றைக் கூறுவேம்.

## சிவ புண்ணியங்கள்.

யாழ்ப்பாணத்து நல்லூர்க் கந்த சுவாமி கோவில் மேற்கு வீதியில் அன்னதானம் நடைபெறும் திருமடத்தைக் கிரயங் கொடுத்து வாங்கிப் பெரும்பொருள் செலவிட்டுப் பழுதறப் புதுக்குவித்து யாத்திரைவாசிகளுக்கும், விரதக்காரர்களுக்கும், சிவனடியார்களுக்கும், வேதபாரகர்களுக்கும், உபயோகமாகும் பொருட்டு மடாலய தருமஞ் செய்திருக்கின்றனர். கல்வியறி வொழுக்கங்களிலும ஈசுரபக்தியிலும சிறந்து விளங்கும போதகர்களைக் கொண்டு சனங்களுக்குச் சமயபோதனைகளை செய்விக்கும் சற்பாத்திரராவர். நல்லூரில் மிகப் புராதனமாயுள்ள சண்முகப் பெருமானது திருக்குளத்தை, தமது சொந்தச் செலவில் பழுது பார்ப்பித்து மிகவழகாகக் கட்டுவித்திருக்கின்றனர். ஆயிரக்கணக்காயுள்ள ரூபாவைச் செலவு செயது கட்டிய இக்குளத்தில் வருடந்தோறும் தெப்போற்சவம் இவருடைய புண்ணியத்தால் நடைபெற்றுவருகின்றது. நல்லூர்க் கந்தசுவாமி கோவில் விஷயமாகத் திருப்பணிகள் பலவற்றைச் செய்திருக்கின்றனர். இக்கலியுகத்திலே பிரத்தியக்ஷமாய் இஷ்டசித்திகளையும், தனு, கரண, புவன, போகங்களையும் கொடுத்துக் காப்பாற்றியருளும் கலியுகவரதராகிய சண்முகப்பெருமானது கடோசித்திருநாளாகிய பூங்காவன உற்சவத்தை, பக்தி சிரத்தையோடு ஆகமவிதிப்படி பெரும்பொருள் செலவிட்டுப் பூம்பல்லக்கு, பூந்தண்டிகை முதலானவைகளை விசித்திரமாய் அமைப்பித்து விமரிசையாக நடாத்தி வருகின்றனர். பொதுவாய் கோவில் விஷயமாகவும், திருப்பணிகள் விஷயமாகவும் செய்திருக்கின்ற உதவிகளோ அனந்தம். இலங்கையில் மாத்திரமன்று இந்தியாவிலுள்ள சிவஸ்தலங்கட்கும் சிவாலயம், மடால

யம், வித்தியாலயம், திருக்குளம், திருநந்தனவனம், அன்னசத்திரம், தண்ணீர்ப்பந்தல் முதலான தருமங்களுக்கும் சிவபுண்ணியங்களுக்கும் இயன்ற பொருளுதவி செய்திருக்கின்றனர். செக்கடித்தெரு யாழ்ப்பாணத்தார் கதிரேசன் கோவிற் றிருப்பணிகளைச் செய்து வாகனங்களை நூதனமாய் அமைப்பித்துக் கொடுத்திருக்கின்றனர். இக்கோவிலுக்காகப் பெருநிதியுங் கொடுத்தனர். இக்கோவிலின் தரும கர்த்தாக்களிலொருவருமாவர். செட்டித்தெரு முத்துவிநாயகர் கோவிலுக்கும், மாவிட்டபுரம் கந்தசுவாமி கோவிலுக்கும், மருதடிப் பிள்ளையார் கோவிலுக்கும், கதிர்காம மடாலயத்துக்கும், இன்னு மெத்தனை யெத்தனையோ சற்கருமங்களுக்கும், பிராமணர்களுக்கும், வித்துவான்களுக் கும், வறியவர்களுக்கும், இல்லை யென்னாது பொருளுதவி செய்திருக்கின்றனர். திருவாலங்காட்டிலே நடைபெற்ற தேர்த்திருப்பணிக்காகப் பெருந்தொகையான பணம் உபகரித்தவர். சுதுமலை புவனேஸ்வரியம்பாளின் திருப்பணிகள் சிலவற்றையுஞ் செய்திருக்கின்றனர்.

## வித்தியாலயம் மடாலயம்.

நல்லூரில் நூற்றுக்கணக்காயுள்ள சைவப்பெண்களும் சைவப்பிள்ளைகளும் கல்வி கற்க ஏதுவாயிருக்கின்ற மங்கையர்க்கரசி வித்தியாசாலை அதிபரும், துறவிகள் ஆச்சிரமத்தைப் போன்ற தருமஸ்தாபனங்களின் தரும கர்த்தாவும், மானிப்பாய் இந்துக்கல்லூரி அதிபருளொருவருமாவர். இந்துக் கல்லூரியில் உயர்தர மாணவர் பொருட்டு, தத்துவ சாஸ்திர ஆராய்ச்சி செய்தற்குரிய இடமொன்றை, தமது சொந்தச் செலவில் அமைப்பித்திருக்கின்றனர். வறிய குடும்பங்களிலுள்ள பிள்ளைகளுக்கு இலவசமாய் கல்வி கற்பித்து வருகின்றனர். சர்வகலாசாலை மாணவர் விடுதிச் சாலையின்பொருட்டுப் பொருளுபகரித் திருக்கின்றனர் விவேகானந்தசபைக்கும் விவேகானந்த வித்தியாலயத்துக்கும், திரவிய சகாயஞ்செய்திருக்கின்றனர். சைவபரிபாலன சபை, தமிழ் யூனியன், சுகுண விலாச சபை, சுபோத விலாச சபை, சோஷல் சேர்விஸ், விவேகானந்த சபை, முதலான சங்கங்களுக்கும் சபைகளுக்கும் உப அக்கிராசனராவர். சைவசமய விருத்திக்கேற்ற சற்கருமங்களையும் ஆன்ம சுகத்துக்கேற்ற புண்ணியங்களையுஞ் செய்திருக்கின்றனர். இவ்வுத்தமருடைய ஈகையின் உயர்வைப்பற்றிச் சொல்லுகில் "இலனென்னுமெவ்வமுரையாமை யீதல் குலனுடை

யான் கண்ணேயுள" என்னும் திருவாக்கிற் கிணங்க இல்லை யென்னாது தருமங்கொடுக்கும் இயல்புடையருமாவர். சமய குரவர்களது குரு பூசைகளைத் தவறாது நடாத்தி அன்னதானம் பிராமண சமாராதனை முதலானவைகளைப் பக்தி சிரத்தையோடு செய்து வருகின்றனர். ஆகமவுணர்ச்சி யுடையவரானதால் பழிபாவங்களுக்குப் பயந்து தரும வழியில் ஒழுகும் பான்மையுடையராவர்.

## யாத்திரை.

ஸ்ரீமான் முத்ததம்பி வருடந்தோறும் இந்தியாவிலுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று ஸ்தலயாத்திரை தீர்த்த யாத்திரை முதலானவைகளைச் செய்பவர். சேது இராமேஸ்வரம் மதுரை, சீகாழி, சிதம்பரம், திருச்செந்தூர், கதிர்காமம், முனீஸ்வரம் முதலான திவ்விய ஸ்தலங்களுக்குத் தவறாது செல்கின்றவர். இன்னுமொன்று பிரதானமாயிங்கு குறிப்பிடத்தக்கது.

## முனீஸ்வராலயத் திருப்பணி.

விண்ணவா முனிவா சித்தர் விளங்குபேராசரன்பா
வண்ணமெய்யடியார் யார்க்கும் வடிவழகம் மைபாகம
நண்ணவீற்றிருந்து நாளும நல்வரம வாழ்வு நல்கும்
எண்ணரும முன்னை நாதனிணையடி யிறைஞ்சுவாம

என்றபடி விராடபுருஷனது சரீரமாகிய பிரமாண்டத்தின் இடை நாடிக்கு ஸ்தானமென்று சாந்தோக்கியம் முதலிய உபநிஷத்துகளிலே எடுத்தோதப் பெற்றதும், சிவானுபூதிச் செல்வர்களாகிய நாயன்மார்களாலும், பிறராலும், சிவபூமி, சுவர்ணபூமி, புண்ணிய பூமி, அனுக்கிரகஸ்தலம் என்று வியந்து கூறப்பெற்றதுமாகிய இவ்விலங்கையில் அனாதிமலமுத்த சுத்த சாட்குண்ணிய சச்சிதானந்தப் பரம்பொருளாகிய ஸ்ரீ கைலாசவாஸராகிய சிவபெருமான் சர்வான்மாக்களுக்கும் மனோபீஷ்டப்படி போக மோக்ஷங்களைக்கொடுத்து அனுக்கிரகிக்குமாறு எழுந்தருளியிருக்கும் உத்தம சிவாலயங்களுள் மிக்க சிறப்புற்று விளங்குவதும், பிரமாதி தேவர்களின் பூஜைக்குகந்து பெரும்பேறருளியதும், ஸ்ரீராமபிரானின் பிரமகத்தியாதி தோஷத்தை நிவாரணஞ் செய்தருளியதும் வியாசமுனிவரின்சிவாபராதத்தை நீக்கியருளியதும்ஸ்ரீசங்கபோதி பராக்கிரம பாகுவாதி சமஸ்த இலங்காதிபதிகளுக்கு இஷ்டசித்தி

களை அனுக்கிரகித்தருளியதும், சர்வரோக நிவாரண உத்தமோத்தம சித்தாமிர்த கூபமாதி பதினெண் புண்ணிய தீர்த்தங்களாற் சூழப்பெற்றதும், இன்னும் பறபல விசேஷங்களையுடையதுமாகிய ஸ்ரீ முன்னேஸ்வர மகா க்ஷேத்திரத்தி லெழுந்தருளி யிருக்கும், சர்வாபீஷ்டவரத ஸ்ரீ வடிவாம்பிகா சமேத முன்னநாத ஸ்வாமி கோவிற் றிருப்பணிகள் முற்றும் நிறைவேறுது கிடப்பதைக் கண்ணுற்று, மனம் பதைபதைத்து, நிருத்த மண்டபம், வசந்த மண்டபம், முதலானவற்றையும், தரிசனையின் பொருட்டுச் செல்கின்ற பக்தகோடிகள் நின்று தரிசித்தற்கும், பிரதக்ஷணம் செய்தற்கும், நமஸ்காரம் செய்தற்கும், வீதிவலம் வருவதற்குமாக சுற்றுப்பிரகாரக் கொட்டகையைத் தமது சொந்த செலவில், காலஞ்சென்ற சிரேஷ்டபுத்திரி **ஸ்ரீமதி நாகபூஷணி** யம்மையின்பேரால் திருப்பணிகள் பலவற்றைச் செய்தவர். சந்தான கோபாலரைப் பிரதிஷ்டை செய்து நித்திய நைமித்தியங்களைக் குறைவற நடாத்தி வருகின்றனர். இத்தகைய புண்ணியங்களை மனமுவந்து செயவாரை இக்காலத்திற் காண்பதரிது. "மாதவர் மடங்களாதி வரதன் மந்திரங்களாதி நாதமா மிலிங்கமாதி நளின புட்கரணியாதி சேத முற றிடின் முன்போற் றிருத்தினோர்க் குறு பலன்றான், ஓதிடின் முன்னையோரினுயிரங் குணிதமோங்கும்" என்று வேதாகமங்களிலே கூறியபடி, புண்ணியங்களைச் செய்தவான்மாக்கள் மேலுலகங்களாகிய புண்ணிய லோகங்களிலே போய் தருமவடிவாயிருந்து இன்பத்தை அடைவர் என்பது தருமசாஸ்திரங்களின் கொள்கை. ஆகவே, ஸ்ரீமான் மூத்ததம்பி யவர்கள் செய்திருக்கும் செயற்கருஞ் செய்கையானது யாவராலும் போற்றத்தக்கதேயாம்.

## கமலாம்பா.

இவருக்கு விவாகம், வீரசிங்க முதலியார், சண்முக உடையார், வித்துவான் பீதாம்பரம் புத்திரர், ஸ்ரீமான் பிறக்டர் முத்துக்குமாரு அவர்களின் அருந்தவப் புதல்வி **ஸ்ரீமதி கமலாம்பா** என்னும் பெயரையுடைய மாதுசிரோன்மணியை விவாகஞ் செய்து நாகபூரணி, சிவகாமி, சுவாமிநாதன் என்னும் நாமங்களையுடைய சந்தானங்களைப் பெற்றனர். ஸ்ரீமதி கமலாம்பாவுடைய தாயார் வழியை ஆராயுமிடத்து மாணப்பிள்ளை வமிசத்துத் தோன்றிய அருணாசலம், வித்துவான் சுவாமிநாதபிள்ளை, கௌரவ எதிர்மன்ன

சிங்க முதலியார் ஆகியோருக்குப் பௌத்திரியுமாவர். ஆதிகாலத்தில் இவ்வுத்தமர்களே, குலாசாரம், மதாசாரம், பூண்ட மேன்மக்களாயும், அட்டைஸ்வரியப் பிரபுக்களாயும், பிரபலமுற்று விளங்கினார்கள். இந்நகரிலுள்ள தமிழ் மக்களுள் இவர்களுக்கு மேற்பட்டோர் இருந்ததாகத் தெரியவில்லை. பிறவியிலே சைவர்களாயும், சிவபூசாதுரந்தரர்களாயுமிருந்த சங்கரபண்டிதர், சிவப்பிரகாசபண்டிதர், வித்துவான் சபாபதிப்பிள்ளை, ஆறுமுக நாவலர் ஆகியோரைப் பாந்தவ்விய மாயுடைய ஸ்ரீமதி கமலாம்பாவின் செயலைச் சொல்லுகில், இப்பெண்ணரசி குலத்தாலும், குணத்தாலும், கொடையாலும், கல்வியறிவாலும் மற்று மெவ்வகையாலுஞ் சிறந்து, பெண்களுள்ளே நடுநாயகமாய் விளங்கும் இக்குலமணியின் பெருமையைச் சொல்லவல்லேமல்லேம். புத்திரராகிய சுவாமிநாதனைப் பற்றிச் சொல்லுகில், இவ்விளைஞர் பிதா மாதாவைப் போல் நற்பழக்க வொழுக்கமும், சைவாசாரமும், சமயபக்தியு முடையராய றோயல் கொலீச்சில் கல்விகற்று கேம்பிறிச் சர்வகலாசாலைப் பரீக்ஷைகளிற் சித்திபெற்று, நியாயப் பிரமாணங்களைக் கற்கும் மாணவராயிருக்கின்றனர். இவருடைய குணமகிமைகளைப் பாலிய வயசிலிருந்து யாமறிவேம். இவர் எம்மிடம் கல்வி கற்றவர். பிதா, மாதா, உபாத்தியாயர், குரு, என்னும் பெரியோர்களிடத் தன்பும், பணிவுமுடையர். இதுபற்றியே "பொற்பறி வில்லாத பல புத்திரரைப் பேறலினோர், நற்புதல்வனைப் பெறுதல் நன்றாம்" என்னும் நீதிவாக்கால் உணர்த்தப் பட்டது.

## Hon'ble. Mr. A. Mahadeva, B A M L C

கௌரவ ஸ்ரீமான் மகாதேவா:—இவர், ஆதிகாலத்தில் இந்தியாவிலே சேரன், சோழன், பாண்டியன் என்னும் மூவரசர்களிருந்து அரசாண்ட தன்மைபோல், இவ்விலங்கா தீபத்தில் கீர்த்திபெற்று விளங்கிய, பொன்னம்பல முதலியா ரவர்களுக்குப் புத்திரராக மூவர் அவதரித்து, உத்தியோகத்தாலும், கீர்த்தியாலும், மதிப்பாலும், கீர்த்திப்பிரதாபமுற்று விளங்கினார்கள். இவர்களுள் சக்கரவர்த்தியவர்களாலும், ஊரவர்களாலும், பிறசமயத்தவர்களாலும், நன்குமதிக்கப் பெற்றுத் தம்முடைய பெயரை உலகில் நாட்டிச் சென்ற திருவாளர் கௌரவ சேர் அருணாசலந் துரையவர்

களின் புத்திரசிகாமணியாவர். இவர், இந்நகரிலே பிறந்து, நற் பழக்க வொழுக்கமுடையராய வளர்ந்து, ரேயல்கொலீச்சில்கல்வி கற்று, கேம்பிறிஜ் சர்வகலாசாலைப் பரீக்ஷைகளில் சித்திபெற்றனர். அதன் பின்னர், இங்கிலாந்து முதலிய மேலைத்தேசங்களுக்குச் சென்று நியாயப்பிரமாணங்களையும் பிறவற்றையும் நன்குகற்று, பாண்டித்தியமுடையவராய, பட்டங்களையும பெற்றனர். இவர் நெடுங்காலமாகத் தமது பிதாவை விட்டுப்பிரியாமல் அவர் பக்கலிலேயிருந்து, நீதிமுறைகளையும், அரசியல் விஷயங்களையும், நாளா சரணையில் கற்று, தமக்கு சந்தேகமானவைகளைப் பெரிய பிதாவாகிய சேர் இராமநாதனவர்களிடத்திலும் கற்றனர். சிலகாலம் திறவுண் கவுன்சில் உத்தியோகஸ்தராயிருந்தனர். அதன பின்னர் தம பிதாவினால் ஸ்தாபிக்கப்பட்ட தேசீய மகாசபை யென்னும் நேஷனல் காங்கிரஸிலும், சோஷல் சேர்விஸ் என்னும் பொதுஜன சேவைச் சங்கத்திலும், கௌரவ காரியதரிசியாயிருந்து தேச தொண்டு செய்து வந்தனர். அதன் பின்னர் யாழ்ப்பாணத்துக்குச் சென்று பரமேஸ்வரக் கல்லூரியில் தலைமை ஆசிரியராயிருந்து ஆங்குள்ள சைவமாணவர்க்குக் கல்வி கற்பித்து, பலராலும் நன்கு மதிக்கப் பெற்றனர். அதன் பின்னர் மேன்மாகாண தமிழ்ப் பிரதிநிதித் தேர்தலுக்கு முற்பட்டு நின்றனர். அப்பொழுது, ஸ்ரீமான் அருணாசலம் தமிழ்ச் சாதியாருக்காகப் பாடுபட்ட பிரயாசையை நினைந்து, புத்திரராகிய ஸ்ரீமான மகாதேவாவைத் தங்கள் பிரதிநிதியாகத் தெரிவுசெய்தார்கள். ஸ்ரீமான் மகாதேவா அந்நாட் டொடக்கம் இந்நாள் வரையிலும் தமிழ் மக்களுக்காக வேண்டிய சுவதந்திரங்களைப் பற்றிச் சட்டசபையில் ஆக்ஷேபித்து வருகின்றனர் இவர், தம் பிதாவைப்போல் பரோபகாரமாய் இதுகாறும் எத்தனையோ விஷயங்களைச் செய்திருக்கின்றனர். அவ்விஷயங்களை இப்புத்தகத்தில் எழுதியடங்காது ஒருவாறு சுருக்கமாகச் சொல்லுகில், சர்வகலாசாலை விஷயமாகவும், வேதனவிஷயமாகவும், யாத்திரைவாசிகளின் புகைரதப் பிரயாணச் செலவு விஷயமாகவும், விசேட தினங்கள் விஷயமாகவும் இவைப்போன்ற எத்தனை யெத்தனையோ அரும் பெரும் விஷயங்கள் காரணமாகப்பெரும்பிரயாசைப் பட்டிருக்கின்றனர். ஸ்ரீமான் மகாதேவாவைப் போன்ற உத்தமரைத் தமிழ் மக்களுட் காண்பதரிது. இவர், குலாசாரம், மதாசாரம், பூண்ட பெரும் பிரபுவாயிருப்பதால், தமிழ்ச்சாதியத்தாராகிய நாங்கள் இவரை மறந்து

விடாமல் சமீபகாலத்தில் நடைபெறப்போகும் தேர்தலில், முன் போல ஸ்ரீமான் மகாதேவா அவர்களை எங்கள் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுப்பது தமிழ் மக்களாகிய வெங்கள் கடமையாகும். தகுதியற்றவர்களைத் தெரிந்தோ மென்றால் எங்கள் சாதியாரின் ஈடேற்றமும் எங்கள் பெருமையும் எங்களுக்கிருக்கும் மதிப்பும் கீர்த்தியும் இல்லாதொழிந்து விடுமென்பது திண்ணம். ஆகவே எங்கள் சுவதந்திரங்களைக் காப்பாற்றிவரும் இவ்வுத்தமரைக் கை விடலாகா தென்பதை உங்களெல்லாருக்கும் ஞாபகப்படுத்துகின் றோம். எமது நண்பருடைய குணத்தின் பெருமையைப் பற்றிச் சொல்லுகில் "உலகமறிந்த பார்ப்பானுக்குப் பூணூலேன்" என்று வீட்டுப் பெண்கள் சொல்லும் பழமொழிபோல் உலகத்திலேயுள்ள சகலமான ஜனங்களுக்குந் தெரியபட்டவரைக் குறித்து நாம் விசேடமாகச் சொல்ல வேண்டுவதில்லை. ஆயினும் இப்புத்தகத் தில் இவருடைய திறமையையும், பெருமையையும் பற்றிச் சிறுக இருப்பது விசேடமெனக் கண்டு யாமிவரை கௌரவமாக மதித்து எழுதலானோம். தற்போது ஸ்ரீமான் மகாதேவா தருமஸ்தாப னங்களாயுள்ள விவேகானந்த சபை, சைவபரிபாலன சபை, ஆதி யவற்றிற்கு அக்கிராசனராகவும், ஆனைக்குட்டிச் சாமி ஆலயம், பன்னுகம் பரம குருஸ்வாமி யாலயம், ஆதியவற்றிற்குத் தர்ம கர்த்தாவாயு மிருக்கின்றனர். உதாரணமாக இவருடைய தகப் பனாரிடத்தில் என்னென்ன குணங்களுஞ் செயல்களு மிருந்தன வோ அவைகளெல்லாம் இவரிடத்திலும் காணப்படும். புருஷ லக்ஷணத்திற் சிறந்து, ராஜ அம்சம் பெற்ற ஸ்ரீமான் மகாதேவா, பிரபல புரோக்கராயும் தருமப்பிரபுவாயும் விளங்கும் திருவாளர் மூத்ததம்பி யவர்களின அருந்தவப் புதல்வி, **ஸ்ரீமதி சிவகாமி** என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து, சற்புத்திர சந்தானங் களாக, பாலகுமாரன என்னும் ஓர் ஆண்மகவையும், சொர்ணம என்னும் ஓர் பெண் மகவையும் பெற்றனர். உத்தம பத்தினி யாயீ விளங்கும் ஸ்ரீமதி சிவகாமியுடைய சிறந்த குணங்களைப் பற்றிச் சொல்லுகில், இப்பெண்மணி பிதாமாதவைப் போல் கல்வி யறிவொழுக்கமும், சைவாசாரமும், சமயபக்தியும், சாந்தம், பொறை, அடக்கம், இன்சொல், ஈகை, இரக்கம், இது முதலாகிய

நற்குண நற்செய்கைகளையுடைய நன்மனையாளராவர். கற்பிலக்கணங்களையுடைய இச்சற்குணவதியின் குணமகிமையைச் சிறுபிராயம் முதலாக யாம் நன்கறிவோம். எம்மிடம் கல்விகற்ற மாணாக்கிகளுள் ஒருவராவர். தயாள சிந்தையும், தண்ணளியான போக்கும், நிறைந்த மனமும், திரண்ட செல்வமுமுடையர். இப்பெண்மணியிடத்தில் அறுபகுணங்களை அணுவளவேனுங் காண்பது மிகவருமை. ஆகவே இத்தம்பதிகள் தீர்க்காயுளைப் பெற்றுச் சுக சீவந்தர்களாய் வாழ எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக.

## Dr. S. Muttiah, M B.B S L,R C.P (Lon,) MRCS(Eng) MMC

ஸ்ரீமான் [illegible] முத்தையா:—இவர், இறைக்குச் சில வருடங்களுக்கு முன்னர் இந்நகரில் பிரபல வர்த்தகராயும், பாரியதனவந்தராயுமிருந்து நற்கருமங்களைச் செய்து காலஞ்சென்ற, திருவாளர் சின்னத்தம்பி யவர்களின் புத்திரராவர். இவர், 1889-ம் ஆண்டு பிறந்தவர். சிறுபிராயம் முதலாக நற்பழக்கமும் நல்லொழுக்கமும், சமயபக்தியும், சாந்தகுணமும், மிக்க பொறுமையுமுடைய சற்புத்திரராய் வளர்ந்து வெஸ்லிக் கொலீச்சில் கல்வி கற்று, கேம்பிறிஜ் பரீட்சைகளிற் தேர்ந்த பின்னர், இங்கிலாந்து முதலிய மேல்நாட்டுத்தேசங்களுக்குச் சென்று, "லண்டன் ஹொஸ்பிற்றல் மெடிக்கல் கொலீச்" என்னும் கலாசாலையில் வைத்திய முறைகளை நன்கு கற்று, மகா பாண்டித்திய முடையராய் எம் பீ.பீ.எஸ் எல் ஆர். சீ. பீ., எம். ஆர். சீ. எஸ். என்னும் பட்டங்களைப் பெற்றனர். இத்துடன் தேக உறுப்புக்களாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் தானங்களில உண்டாகும் நோய்களைப பற்றி அதிநுட்பமாயும், நூதனமாயும் கற்றுத் தேறியவர். இம் முறைகளெல்லாவற்றையும் இங்ஙனந் தெரிந்து, இங்கிலாந்திற் றானே சில வருடங்கள் தாமதித்து, அங்குள்ள ஆஸ்பத்திரிகளில் பிரபல டாக்டராயிருந்து யாவராலும நன்குமதிக்கப் பெற்றனர். இவ்விஷயமிருப்ப, கல்வித் தேர்ச்சியின் பொருட்டாக இங்கிலாந்துக்குச் செல்லும் வாலிபர்களுட் [illegible] ர் மாயவலையிற் சிக்குண்டு குலத்தைக் கெடுக்க வந்த கோ[illegible]ரம்புகள் போலத் தங்கள் குலாசாரத்தையும், மதாசார[illegible]யுந் துறந்து ஒழுக்கங்குன்றிய அறி

விலிகளாய்த்திரியும் பித்தர்களைப்போல் இடருறாமல், ஸ்ரீமான் முத்தையா தம்முடைய மரியாதையையும் மதிப்பையும் காப்பாற்றிய யோக்கியராய், யாவரும் மதிக்கத்தக்க மாண்புடையராய்க் கௌரவத்தோடு வந்து, தற்போது இந்நகரில் பிரபல டாக்டராய் விளங்குகின்றனர். கல்வியிலும், அறிவிலும், குணத்திலும், ஒழுக்கத்திலும், அரசியல் ஞானத்திலும், உலகியல் ஞானத்திலும் சிறந்த மேதாவியாய் விளங்கும் ஸ்ரீமான் டாக்டர் முத்தையாவுடைய அரும் பெருங்குணங்களை இதுகாறும் அறியாதாரில்லை. இவர் தேசாபிமானமும், தேசதொண்டும், பொதுஜன சேவையும் செய்பவர். தேசமுன்னேற்றமடைதற்கான சற்கருமங்களைச் செய்து வருகின்றனர். உதாரணமாக, சர்வ ஜனசமூகத்தினர் சம்மதம் பெற்றுக் கொரபணித்தெருவுக்குப் பிரதிநிதியாக இவரைத் தேர்ந்தெடுத்த பின்னர், சனங்களுடைய வசதிக்கும், சுகாதாரத்துக்கும் ஏற்ற சீர்திருத்தங்கள் சிலவற்றைச் செய்திருக்கின்றனர். அவைகளை விரித்தெழுத இப்புத்தகம் இடம் பெறாதாகையால் சிலவற்றைச் சுருக்கமாய்க் கூறிமுடிப்போம். முதலாவதாக, வறிய பிள்ளைகள் கல்வி கற்க வித்தியாசாலையையும், இரண்டாவதாக, நோயால் வருந்தும் வியாதியாளர் சிகிச்சை பெறுதற்குத் தரும வைத்தியசாலையையும், மூன்றாவதாக வியாபாரிமார்களுக்குப்புதிய மார்க்கட்டையும், நான்காவதாக, ஓர் இலவச மருத்துவதியையும், ஐந்தாவதாக, ஜனங்கள் நடமாடும் தெருக்களை விசாலிப்பித்தும், ஆறாவதாக, அனாதப் பிள்ளைகள் விளையாடுதற்கும் பந்தாட்டமாடுதற்குமாக ஓரிடத்தையும் ஏற்படுத்தி வைத்தனர். இத்தகைய எமது நண்பர் ஸ்ரீமான் முத்தையா, நேஷனல் காங்கிரஸ், லேபர் யூனியன், தமிழ் யூனியன், மகாஜனசபை, விவேகானந்த சபை, காந்தி சங்கம், நகர சங்கம், வைத்திய சங்கம் ஆகிய பற்பல சங்கங்களிலும் சபைகளிலும் அங்கத்தவராவர். மகாத்மா காந்தி விஜயம் செய்த காலத்து உபசாரணைக் கூட்டம் வைத்து கதர் நிதியாகப் பெரும்பொருள் சேகரித்துக் கொடுத்தனர். ஜனங்களிடத்திற் பிரீதி, இன்சொல், ஈகை, இரக்கம், கொடை, வணக்கம், பரோபகாரம் முதலாகிய பெருந்தன்மைகளை அணிகலமாயுடைய பேரறிஞராயும், பிரபலஸ்தராயும் விளங்குகின்றனர்

## M. Maruthappah Esq. Shroff P & O. Bank.

ஸ்ரீமான் சிருப்பர் மருதப்பா:—இவர், மானிப்பாயைச் சார்ந்த ஆனைக்கோட்டை உடுவில் என்னுமிடங்களில் சகல செல்வாக்குகளோடு பிரபலஸ்தர்களாயிருந்த வேளாண் பிரபுக்களின் வழித்தோன்றலாயுள்ள சங்கரப்பிள்ளை, முருகேசரவர்களின் புத்திரராவர். இவர் யாழ்ப்பாணத்திலே 1875-ம் ஆண்டு பிறந்தவர். கொழும்பிலுள்ள வெஸ்லிக் கொலிச்சில் ஆங்கிலக் கல்விகற்றவர். அக்காலத்தில் ஆங்கிலக் கல்வியோடு தமிழ்க் கல்வியையும் இடைவிடாது கற்றனர். ஸ்ரீமான் மருதப்பா கல்விகற்றுத் தேறிய பின்னர் உத்தியோக முயற்சியைப் பார்க்கும் பொருட்டாகப் பல துறைகளிலு மீடுபட்டு, வியாபார முறைகளை நடாத்தும் வல்லமையடைந்தனர். அக்காலத்தில் கப்பல் வைத்து ஏற்றுமதி இறக்குமதி செய்யும் பாரிய வர்த்தகராயும், பெருந்தனவந்தராயுமிருந்த, தூர்பாய கம்பனியில் ஏறக்குறைய 35 வருடகாலமாக மானேஜராயிருந்து வியாபார முறைகளை ஊக்கத்தோடும், அதிக திறமையோடும் நடாத்தி உலகில் நற்கீர்த்தியையும், நற்பேரையும் பெற்றனர். இவர் இந்தக் கம்பனியைத் தமது சொந்தம் போலெண்ணி தம்முடைய பொருளாக மதித்து, பலவிதமான வியாபாரங்களைச் செய்து, லக்ஷக்கணக்காயுள்ள வருமானங்களை உண்டாக்கி அதிக லாபத்தையுங் காண்பித்தனர். வியாபார முறையின் பகுப்பையறியாத இக்கம்பனியாருக்கு, விருத்தி செய்யும் முறைகளை காண்பித்து மேலோங்கச் செய்தனர் மிகப் பொறுப்பு வாய்ந்ததும் நம்பிக்கையுள்ளதுமான பெரும் உத்தியோகத்தை இதுவரையில் எவராவது ஏற்று நடாத்தியதாக நாம் கேள்விப்பட்டதே யில்லை. இதற்கு நியாயம் ஸ்ரீமான் மருதப்பா நேர்மையும், நம்பிக்கையும், பிறர் பொருள் இச்சியாமையும், சத்தியந் தவறாமையுமே காரணமென்றறிக. "அடுத்தவரை யொருநாளுங் கெடுக்க வேண்டாம்" என்றும், நம்பிக்கைத் துரோகஞ் செய்ய வேண்டா மென்றும், உலகத்திலுள்ள எல்லாத் தருமங்களிலும் இதுவே மிக மேலாகிய தருமம் என்று, கூறிய நீதிமொழிக்கிணங்க மனநீதிக்கும், கடவுள் நீதிக்கும், மாறில்லாமல் நல்லவழியிலே நன்மையாய் ஒழுகிவந்தமையால் நாளொருவண்ணம் பொழுதொரு மேனியாக உத்தியோகத்தாலும், செல்வத்தாலும், கீர்த்தியாலும், மதிப்பாலும், புத்திர பாக்கியங்களாலும், அட்ட ஐசுவரியங்களாலும் உயர்வடைந்து

ஊரவர்களாலும், வியாபாரிமார்களாலும் மற்றும் பிறமதத்தவர்களாலும், நன்குமதிக்கப் பெற்ற பெரும் தனவானாகவும், பிரபுவாகவும் விளங்குகின்றனர் இது பற்றியே, "தவத்தளவே யாகுமாந் தான்பெற்ற செல்வம் குலத்தளவே யாகுங்குணம்" என்றருளிச் செய்தார் அதாவது முற்பிறப்பிலே செய்த தவத்தினளவாக செல்வம் உண்டாகு மென்றும், குலத்தினளவாகவே நற்குணம், தானதருமம், பரோபகாரம், இன்சொல், இரக்கம், ஈகை முதலாகிய தன்மைகள் உண்டாகு மென்றும் கூறிப்போந்தார். இதற்கிணங்க ஸ்ரீமான் மருதப்பாபிள்ளை சகலமான இலக்கணங்களையும் உடையவராய், பக்திமானும் சிவானுபூதிச் செல்வராய், ஆலயங்களிலே பூசை உற்சவ முதலானவற்றைக் காலந்தோறும் நடாத்துபவராய், சைவசமய விருத்தியின் பொருட்டு சிவாலயம், மடாலயம், வித்தியாலயங்களுக்கும், சற்கருமங்களுக்கும், கைத்தொழில், கமத்தொழில் விருத்திக்கும் இயன்ற பொருளுதவிகளை வருஷந்தோறும் செய்து வருகின்றனர். இரப்போருக்கும், ஏழைகளுக்கும் இல்லையென்னாது தம்மாலியன்ற பொருள் கொடுப்பவர். அராலியில் மிகப்புராதனமாயுள்ள அம்மன் கோவிலில் நித்திய நைமித்தியங்களை நடாத்தி அதனைப் பரிபாலனஞ் செய்து வருகின்றனர் ஸ்தலயாத்திரை, தீர்த்தயாத்திரை செய்தவர். இவரைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்லுகில் புண்ணிய விஷயமாக பலவற்றைச் செய்துள்ளார். விவேகானந்த சபை அங்கத்தவருமாவர். ஸ்ரீமான் மருதப்பாவுக்கு விவாகம் அதாவது அராலியை சென்னஸ்தானமாக வுடையவரும், தென்னிந்திய புகைரதப் பகுதியில் இன்ஸ்பெக்டராயிருந்து உபகாரவேதனம் பெற்றவருமாகிய சின்னப்பாபிள்ளை யவர்களின்புதல்வி ஸ்ரீமதிசிவகாமிப்பிள்ளையை விவாகஞ் செய்து, கேதாரவல்லி, பெரியதம்பி, நமசிவாயம், சுருதம என்னும் பெயரையுடைய சந்தானங்களாக எண்மரைப் பெற்றனர். ஸ்ரீமதி சிவகாமிப்பிள்ளை கல்வியிலும், அறிவிலும், ஒழுக்கத்திலும், நற்குண நற்செய்கைகளிலும், சிறந்து குடும்பபாரத்தையும் இல்லற தருமத்தையும் நன்கு நடாத்தி சில வருடங்களுக்கு முன்னர் இவ்வுலக வாழ்வை நீத்துப் பரலோகஞ் சென்றனள்.

## Dr. K. Muttukumaru Avl. Jaffna.

ஸ்ரீமான் க. முத்துக்குமாரு:—சுதேச வைத்தியராய் பிரபலமுற்று விளங்கும், இவர், யாழ்ப்பாணத்தைச் சார்ந்த சுதுமலையிலே, பிரபுக்கள் குடும்பத்திலே, சிவபூசா துரந்தரர்களாய் நைட்டிகர்களாய், சைவாசாரம் குன்றாதவர்களாய், கல்வியறிவொழுக்கங்களிலே சிறந்தவர்களாய், வைத்திய சாஸ்திரத்திலும் மாந்திரீக வித்தையிலும் வல்லபமுடையர்களாய், பலராலும் நன்கு மதிக்கப்பட்டவர்களாய் விளங்கிய சைவச் செட்டிப் பிள்ளைகள் மரபிலே வந்துதித்த, வைத்தியர் ஸ்ரீமான் கதிரைவேலு பிள்ளை அவர்களின் அருந்தவப் புதல்வராவர். ஸ்ரீமான் முத்துக்குமாரு தமது பிதாவைப் போல் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்தவர். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த்தங்கள் நான்கையும் அடைதற்கேதுவாகிய அறிவையுணர்த்தும தரும சாஸ்திரங்களையும், நீதிநூல்களையும் கற்றவர். ஜீவசம்ரக்ஷணார்த்தமாக வைத்திய சாஸ்திரங்களையும் கற்றுத் தேரியவர். நற்பழக்கம், நல்லொழுக்கம், சைவாசாரம், சிவத்தியானம், சிவபக்தி, சிவதொண்டு சிவாலய வழிபாடு முதலானதும், செபம், தியானம், பூசை, நித்திய கர்மானுஷ்டானம் முதலானதுமுடையர். சிவதீக்ஷை பெற்றவர், சிவாலயங்களிலே பூசை, உற்சவம், புராணபடனம், சைவப்பிரசங்கம் முதலானவைகளைக் காலந்தோறும் விதிப்படி நடாத்துபவர் தொழில் செய்து சீவனஞ் செய்யச் சக்தியில்லாத குருடர், முடவர், தரித்திரர், வியாதியாளர், வயோதிகர் முதலானோருக்கும் வறியவர்களுக்கும், இரப்போருக்கும், ஆண்டிபரதேசிகளுக்கும், சிவனடியார்களுக்கும், சிவாலயம், மடாலயம், வித்தியாலயம், தண்ணீர்ப்பந்தல் முதலான சற்கருமங்களுக்கும் இல்லையென்னாது பொருள் கொடுப்பவர். தானதருமங்களையும் புண்ணியங்களையும் பக்தி சிரத்தையோடு செய்பவர். பெரும்பாலும் இவரிடத்தில் இன்சொல், இரக்கம் ஈகை, பொறை, அடக்கம், பிரியவசனம், பரோபகாரம், தயவு, தாக்ஷண்யம், பிரபுத்துவம், பெருந்தன்மை, ஜீவகாருண்யம் முதலாயுள்ள சிறந்த குணங்களைத் தமக்கு அணிகலமாகவுடையவர். குலாசாரம், மதாசாரம் பூண்ட பெரும் பிரபுவாய், வாழையடி வாழையாய்த் தங்கள் வைத்தியத் தொழிலை நன்கு நடாத்தி உலகத்தில் நற்பெயரையும், நற்கீர்த்தியையும், பெற்று பிரபல வைத்தியராக விளங்குகின்றனர். இதுபற்

றியே "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்றார் பெரியோர். ஸ்ரீமான் வைத்தியர் முத்துக்குமாரு அவர்களின் குணங்களை களை அறியாதாரில்லை. ஆதலால் சுருக்கமாகக் கூறிமுடித்தோம். இவர் பரிசாத்திரங்களை ஓதி அதன் பொருளை யறிந்து பாவங்களை விலக்கித்தருமங்களை அனுஷ்டிப்பவர். ஆன்மசுகத்தின் பொருட்டு உத்தம தருமங்களிலே தமது பொருளைச் செலவிடுகின்றவர். சுதுமலையில் மிகப்புராதனமாயுள்ள புவனேஸ்வரியம்மன் கோவிற் றிருப்பணிகள் பலவற்றைச் செய்து பெரும்பொருள் செலவிட்டு சம்புரோக்ஷண மகாபாபிஷேகஞ் செய்வித்துக் காலந்தோறும் நித்திய நைமித்தியங்களையும் விசேட பூசை உற்சவ முதலியவற்றையும் விதிப்படி நடாத்தி வருகின்ற தரும காத்தாவுமாவர். ஈசனருளால் சிறப்புத்தர சந்தானங்களையும் பெற்றனர்.

## V. M. Muttukumaru Esq. B A Maniagar, Jaffna.

ஸ்ரீமான் முத்துக்குமாரு முதலியார்:—இவ்வுத்தமருடைய பூர்வீகத்தையும் சரித்திரவரலாற்றையும் ஆராய்கிற வரையில், இவருடைய மூதாதைகள், வம்சபாரம்பரியத்துள்ள மேன்மக்களாயும், பிரபுக்களாயும் அரசாங்கத்தில் அதிகாரம் படைத்த உத்தியோகஸ்தர்களாயும், கீர்த்திபெற்று விளங்கினார்களென அறியக்கிடக்கின்றது. இணுவிலைச் சென்மஸ்தானமாய்க் கொண்ட பேராயிர முடையான் வழித்தோன்றலாயுதித்து, சுதுமலையைச் சார்ந்த உயரப்புலம் என்னுமிடத்திற் குடியேறிய குழந்தைச் சட்டம்பியார், குலநாயக மாப்பாண முதலியார், குமாரவேல் உடையார், சிவராமலிங்கம் பிள்ளை, வைத்தியநாத உடையார் என்போருக்குப் பௌத்திரராகவும், பிரபல டாக்டராயிருந்து பலராலும் அறியப்பட்ட திருவாளர், முத்துக்குமாரு அவர்களுக்கு அருந்தவப் புதல்வருமாவர். இவர் தம்முடைய மூதாதையர்களுக்கிலக்காய், சைவாசாரமும், சமயபக்தியும், நற்பழக்க வொழுக்கமும், பரோபகார சிந்தையும் பிரபுத்தன்மையுமுடைய யோக்கியராய் வளர்ந்து, கல்விகற்று. பீ. ஏ. முதலான பட்டங்களைப் பெற்றுச் சிலகாலம் கொழும்பிலுள்ள ஆங்கிலக் கல்லூரிகளில் ஆசிரியராய் அமர்ந்திருந்தனர். அதன் பின்னர், யாழ்ப்பாணத்து லோக்கல் போட் சக்கிடுத்தாராயிருந்தனர். அதன் பின்னர் பட்டணம் மணியக்காரனாக நியமனம் பெற்றுப் பலவருடங்களாகத் தமது கடமையை அதிக திறமையோடு பார்த்து, தேசாதிபதியவர்களா

லும், ஊரவர்களாலும், சன்மானிக்கப் பெற்று, தகமை வாய்ந்த பட்டங்களையும் வழங்கப் பெற்றனர். குலத்திலகராய விளங்கும் ஸ்ரீமான் முத்துக்குமாரு விவேக புத்தியும், அரசியல் ஞானமும், மிக்க நேர்மையுமுடையயரானதால் "துஷ்ட நிக்கிரஹ சிஷ்டபரி பாலன" மென்றபடி பலரையும் அடக்கி ஆளுந்திறனுடைய நீதிமானும் அதிகார வர்க்கத்தினராயும் பிரக்கியாதி பெற்று விளங்குகின்றனர். இவ்வுத்தமர் நல்லூர் வாசராகிய டாக்டர் கந்தையா பிள்ளையின் சிரேஷ்ட புத்திரியை விவாகஞ் செய்து ஓர் ஆண் மகவையும் மூன்று பெண்களையும் பெற்றனர்.

## S. Manickkavasagar Esq. Accountant, P. W. D.

ஸ்ரீமான் சி மாணிக்கவாசகர்:—இவர் சண்டிருப்பாயைச் சென்மஸ்தானமாயுடையர். தற்போது பிரபல டாக்டராய் விளங்கும் திருவாளர் தியாகராஜா அவர்களின் சிரேஷ்ட சகோதரராவர். அரசாங்க உத்தியோகஸ்தர்களாயும், கல்வியறிவொழுக்கங்களில் சிறந்த மேன்மக்களாயும் விளங்கிய பெரியார் சந்ததியில் அராலியைச் சென்மஸ்தானமாயும், சண்டிருப்பாயை விவாகஸ்தானமாயுங்கொண்ட வயித்தியலிங்க உடையார், சோமநாதபிள்ளை, சிற்றம்பலமவர்களின் புத்திரராவர். ஸ்ரீமான் மாணிக்கவாசகர் உயர்குலத்தில் உதித்தமையால், குலத்துக்கேற்ற குணமும், செயலும் உடைய யோக்கியராய, சாந்தம், பொறை, அடக்கம், பரோபகாரம், பெருந்தன்மை, ஆகிய நற்குணங்களையுடைய உத்தமராய, உத்தியோகப் பெருமை, குங்கி, அகங்காரம், தற்புகழ் என்னும் அற்பகுணங்களற்ற பெருமகனாய் விளங்குகின்றனர். ஸ்ரீமான் மாணிக்கவாசகர் கிளறிக்கல் முதலான பரீட்சைகளிற் தேர்ந்து அரசாங்கத்தில் மிகப்பொறுப்பு வாய்ந்த பெரும் உத்தியோகத்தைப் பெற்று அதிக திறமையோடு பார்த்து வருகின்றனர். தம்மைப்போல் பிறரும நன்நிலையடைய வேண்டுமென்கிற நற்சிந்தையுடையவர். உதாரணமாக எத்தனையோ ஏழைகளுக்கு உதவிபுரிந்து, பகிரங்க வேலைத்தலத்தில் அவர்களை உத்தியோகஸ்தர்களாக்கி வைத்திருக்கின்றனர். தண்ணளியுடைய இவ்வுத்தமரின குணவிசேடங்களை உலகமறியுமானதால் இவரைப் பற்றி இங்கு யாம் சுருக்கமாகக் கூறிமுடித்தேம். ஸ்ரீமான் மாணிக்கவாசகர் **ஸ்ரீமதி ஆதிநாயகம்** என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து இல்லறதருமத்தை நன்கு நடாத்தி வாழ்கின்றனர்.

## V. Mylvaganam Esq. H M Customs

திருவாளர் வ. மயில்வாகனம்:—இவர் திரிகோணமலையைச் சென்மஸ்தானமாயுடையவர். ஸ்ரீமான் முதலியார் வல்லிபுரம் பிள்ளையவர்களது சிரேஷ்ட புத்திரராவர். இவருடைய [illegible] விசாரிக்கும் பொழுது, முல்லைத்தீவுப் பகுதியில் பெயராலும், கீர்த்தியாலும், செல்வத்தாலும், உத்தியோகத்தாலும், சிறந்து விளங்கிய ஸ்ரீமான் மயில்வாகனம், சிறப்பர் கணபதிப்பிள்ளை [illegible] வழித்தோன்றலாவர். அன்றியும் இவர், [illegible] கௌரவ [illegible] அவர்களின் [illegible] இவர் மட்டக்களப்பு [illegible] "கச்சேரி" ஆபீசராயிருந்து, தற்போது [illegible] ஆபீசில், பிரதான உத்தியோகஸ்தராய் [illegible] இவர் கல்வியறிவொழுக்கமும், சாந்தகுணமும், [illegible] பொருந்தியவரான போக்குமுடையவர். [illegible] விவாகஞ் செய்து [illegible] பெற்றனர்.

## Mahalinga Aiyer Avl,

பிரமஸ்ரீ மகாலிங்க ஐயர்:—இவர், மதுரை மாநகரில் சிவப்பிராமண குலத்தில் அவதரித்த மகாவித்வ சிரோன்மணியாவர். அக்காலத்திருந்த வித்துவான்களாலும், ராஜாக்களாலும், சன்மானிக்கப்பட்டவர் "சிவமறையோர் குலஞ்சிறப்பத்தோன்றிய, தவநிறை தருமறைச் சைவமாமணி" என்றும், "இயலிசை நாடகமெனுமுத்தமிழ்ம் பலநத்தெரிந்த மாட்சிகொள் புலவன்" என்றும் வியந்து பாராட்டப்பட்ட இப்புலவரின் பெருமையை என்னென்று சொல்வேம். இப்பிராமணோத்தமர் தொல்காப்பியத்துக்கு, நச்சினார்க்கினியர் செய்த உரையைப் பிழையின்றி மிகத் தெளிவாக அச்சிட்டிருக்கின்றனர். அன்றியும் இவர் அக்காலத்திலே "போதவசனம்" என்னும் நூலொன்றை இயற்றியதோடு எல்லப்ப நாவலர் இயற்றிய, அருணாசல புராணத்துக்கு உரையுஞ் செய்தனர்.

## Mariamman Kovil, Kotahena

மாரியம்மன் கோவில்:—கொட்டாஞ்சேனையில் எழுந்தருளியிருக்கும் இவ்வாலயத்தின் வரலாற்றை யாம் விசாரித்தளவில், இங்கிலீஷ் அரசுக்கு முற்பட்டதென்றும், நாணயங்கள் செய்தற் பொருட்டாகத் தருவிக்கப்பட்ட ஆசாரிமார்களால் ஸ்தாபிக்கப்பட்டதென்றும், ஒரு வாணிபச் செட்டியிடம் இந்நிலத்தையும் வேறுசிலவற்றையும் வாங்கி அம்பாளுக்கே சாதனஞ் செய்தார்களென்றும் அறியக்கிடக்கின்றது. இதன் உண்மை தெரியாது, சாதிபேதம் சமயபேதமின்றி எல்லா வருணத்தவர்களும் இங்கு தரிசனைக்குச் செல்வது வழக்கம். அருச்சனையாலும், உபயங்களாலும், நேர்கடனாலும் வருகின்ற பணத்தொகை கொஞ்சமல்ல. யாம் பலரிடத்திலும் நோக்கமாக விசாரித்த பொழுது சகல செலவும் நீக்கி, மாதம் ஆயிரம் ரூபாய் வரையில் மிச்சப் பகுதியாகு மென்று சொல்லக் கேள்வியுற்றேம். அடுத்துவரும் பதிப்பில் விபரமாய்க் கூறுவோம்.

## Meenakshi Sundara Sastrikal.

பிரமஸ்ரீ மீனாக்ஷிசுந்தர சாஸ்திரிகள்:—இப்பிராமணோத்தமருடைய ஜென்ம தேசம் கணபதி அக்கிரகாரம். இவருடைய கோத்திரம் "ஸ்ரீவத்ஸகோத்திரம்" வடமொழி தென்மொழி இரண்டிலும் வல்லுனர். பாவியற்றுந் திறனுடையர். சங்கீதத்திலும் இராமாயணப் பிரசங்கத்திலும் மகா சமர்த்தர். சுமார் எழுபது வருடங்களுக்கு முன்னாக யாழ்ப்பாணம் வந்து பிரசங்கமாரி பொழிந்து, கிறிஸ்து மத கண்டனஞ் செய்து பலராலும் சன்மானிக்கப்பட்ட பேரறிஞராய் விளங்கினர். அக்காலத்திலே இவர், யாழ்ப்பாணத்துள்ள பிராமணர்களுட் பெரும்பாலாருக்கு வேதாகமங்களை முறைப்படி கற்பித்துச் சிவலோகஞ் சென்றனர். இவருடைய புத்திரரே வீராச்சாமி ஐயரென்னும் பெயரால், எத்திசையும் அறியப்பட்ட பிரமஸ்ரீ வித்துவான் சுப்பையர். தற்போது இவருடைய புத்திரரே மேன்மக்கள் சரித்திர மென்னும் இப்புத்தகத்தை எழுதியச்சிட்டனர்.

## V. C. Manickkam Esq. Audit Office, Colombo

ஸ்ரீமான் மாணிக்கம்:—இவர், யாழ்ப்பாணத்துள்ள பெரும் பிரபுக்களின் குடும்பத்தைச் சார்ந்தவர். அரசாங்கத்தில் உத்தியோகம் பெற்றுக் கிளாரிக்கல் பகுதியில், முதன்மை பெற்ற உத்தியோகஸ்தராய் விளங்குகின்றனர். தற்போது ஸ்ரீமான் மாணிக்கம், ஒடிற்றுபீசில் உயர்வான உத்தியோகத்திலிருக்கின் றனர். இவர் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்தவர். சாந்த குணமும், பரோபகார சிந்தையுமுடையவர். இங்கேயுள்ள தமிழ மக்களாலும் மற்றும் ஏனைய உத்தியோகஸ்தர்களாலும், நன்கு மதிக்கப்பட்டு வருகின்றனர். இவருடைய சிறந்த குணங்களைப் பற்றி யாம் பலவாறுமெடுத்தியம்ப யறிந்தமையால், சிறிது கூறத்துணிந் தேம். பலராலும் நன்கு மதிக்கப்பட்டவராயும், அரசாங்கத்திலே கணக்குப் பரிசோதகராயும், பிரபல்யமுற்று விளங்கும் மாணிக்க மவர்களின் குணத்தையும் விவேகத்தையுமிட்டு யாம் அதிகமாய இங்குசொல்ல வேண்டுவதில்லை. இவர் சாதியாபிமான முடைய ரென்பதற்கு உதாரணமாக, இந்நகரிலுள்ள தமிழ்ச் சாதியாருக்கு உபயோகமாயிருக்கும் "தமிழ் யூனியன்" சங்கத்தைஸ்தாபிக்கும் பொருட்டாகப் பிரயாசை யெடுத்தோருள் ஒருவராவர். இத் தகைய ஸ்ரீமான் மாணிக்கம் கொழும்பாயில் பிரபல உடையாராய விளங்கும் ஸ்ரீமான் கந்தையாபிள்ளையவர்களின் புத்திரியை விவா கஞ்செய்து Pathmavathi, Kamalavathi, Swaminathan, Leelavathi என்னும் நாமங்களையுடைய பிள்ளைகளைப் பெற்றனர். இவர், நீதிபதி வைத்தியநாதனவர்களுக்கு மைத்துனருமாவர்.

## T. Muttucomaroe Esq. Mechanical Engineer.

ஸ்ரீமான் தி. முத்துக்குமாரு இஞ்சினீர்:—இவர், சண்டிருப்பாயில் சகல செல்வாக்குக்களை யுடைய பிரபுக்கள் வம்சத்திலே, வாரிநீச்சிங்க முதலியார் வழித்தோன்றலாயுதித்த குமார வேலர், அம்பலவாணர், கனகசபை மகன் தில்லையம்பல மவர் களின் இரண்டாவது புத்திரராவர். இவர் 1881-ம் ஆண்டு ஆனி மீ 27-ம் திகதி ஜென்னமாகிச் சென்தோமஸ் கொலீச்சிலும், டெக் னிக்கல் கொலீச்சிலும் கல்வி கற்றவர். இவருடைய மூதாதை கள் உலகில் எவ்வாறு நற்கீர்த்திபெற்று விளங்கினார்களோ அத்

## D, Muttusamy, Proctor, S. C. Colombo

ஸ்ரீமான் டி. முத்துச்சாமி:—காலஞ்சென்ற இவர், இக் கொழும்பிலுள்ள தமிழ் மக்களுள் பிரபல நொத்தாரிசாகவும், சுப்றீயங் கோட்டுத் தானியாகவுமிருந்தனர். கௌரவ எதிர்மன்னசிங்க முதலியாருக்குப் பௌத்திரரும், பிறக்டர் ஆனைச்சாமிக்குப் புத்திரருமாவர். இவர் பிரபுக்கள் வம்சத்தைச் சார்ந்தவர். குலத்துக்கேற்ற குணங்களையுடையராயிருந்தனர். இவர் தமதுடைய காலத்தில் எல்லாரோடும் இணக்கமாயிருந்தபடியால், தமிழ் மக்கள் இவரை நன்கு மதித்து "தமிழ் யூனியன்" சங்கத்துக்கு உபஅக்கிராசனாராகத் தெரிவு செய்தார்கள். இவர், தம்பையா முதலியார் மகள், காமினிபவாதனுடைய புத்திரி ஸ்ரீமதி சாரதாம்பா என்னும் பெண்ணை விவாகஞ் செய்து, Nagamma, Anandan, Sri Ranganathan, என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப் பெற்று முப்பத்தைந்தாம் வயதில் மரணமானார்.

## P. Muttukumaru Esq. Proctor, S. C Colombo

ஸ்ரீமான் பிறக்டர் முத்துக்குமாரு:—காலஞ் சென்ற இப்பெரியார், வம்ச பாரம்பரியத்தைச் சார்ந்த குலமகன். குணத்திலே சிறந்த பெருமகன். சிவபூஜா துரந்தரர்களாயிருந்த சிவநேயச் செல்வர்களையும், உத்தியோகஸ்தர்களாயிருந்த பிரபுக்களையும், வித்துவான்களாயிருந்த பேரறிஞர்களையும், உடன்கொண்டு உலகில் பெருங்கீர்த்தி பெற்று விளங்கிய, மானிப்பாய் சந்ததியிற் றோன்றிய வீரசிங்க முதலியார், சண்முக உடையார், வித்துவான் சிதம்பரம் பிள்ளையவர்களின் அருந்தவப் புதல்வராவர். இவர், சைவாசாரங்களிற் சிறந்த புனிதராய், எவரும் போற்றத்தக்க நியாயதுரந்தரராயப் பிரக்கியாதி பெற்று விளங்கினார். பிரபுக்கள் வம்சத்தைச் சார்ந்த பெருமகனானதால், யாழ்ப்பாணத்திலிருந்து வழக்கு விஷயமாகக் கொழும்புக்கு வரும் ஏழை மக்களுக்குத் தம் மாலியன்ற உதவிகளைச் செய்து நற்பெயர் பெற்றனர் இவர் வீண் பெருமைகளுக் காளாகாமல், தம்முடைய சீவிய காலத்தை நல்வழியில் உபயோகப்படுத்தி, மிகவும் பணிவுடையராய் வாழ்ந்தனர். முற்காலத்திருந்த முதியோருள், முதன்மை பெற்ற பிரபுவாய், சுப்றீயங் கோட்டு நீதிபதிகளாலும், தேசாதிபதியாலும்

நன்குமதிக்கப் பெற்ற யோக்கியராய் விளங்கினார். இவருக்கு இரண்டு புத்திரிகளும், ஏகபுத்திரருமுண்டு. புத்திரராகிய சோம சுந்தர மென்பவர் தம் பிதாவைப் போல் சிறந்த யோக்கியராயும், பிரபுவாயும் விளங்குகின்றனர். இரண்டாவது புத்திரியாகிய ஸ்ரீமதி கமலாம்பா என்னும் மாதுசிரோண்மணி, தரும சீலராய் விளங்கும் திருவாளர், மூத்ததம்பி யவர்களை விவாகஞ் செய்து, சுவாமிநாதனை என்னுமோர் மகவை யீன்று அட்டைஸ்வரியங்களை யுடைய சீமாட்டியாய் வாழுகின்றனர்.

## Mylvahanappulavar. Jaffna

ஸ்ரீமான் மயில்வாகனப் புலவர்:—இவர், மாதகலென்னும் கிராமத்தில் ஏறக்குறைய 175 வருடங்களுக்கு முன்னே இருந்தவர். திக்கெட்டும் புகழ்பெற்ற சிற்றம்பலப் புலவரது மருகராவர். யாழ்ப்பாண "வைபமாலை" யென்னும் நூலையும், "புலியூரந்தாதியையும்" இயற்றியவர் இவரேயாம். அக்காலத்தில் வண்ணார்பண்ணைச் சிவன் கோவில் ஆதீனக் கர்த்தராயிருந்த வைத்திய லிங்கச் செட்டியா ரென்பவர், கூழங்கைத் தம்பிரானிடம் ஆகம சாஸ்திரங்களைப் பாடங்கேட்கத் துணையாளராயிருந்தனர். கூழங்கைத் தம்பிரான் ஒரு பாடத்தை இரண்டாம் முறை சொல்லும் வழக்கமில்லையாம. ஆகவே அத்தருணத்தில் இப்புலவர் ஒரே முறையில் மனனம்பண்ணி, அதனைப் பின்னர் செட்டியாரவர்களுக்கு கற்பித்தாரென்றும அறியக் கிடக்கின்றது.

## Muttukumaru Mudaliyar.

ஸ்ரீமான் முத்துக்குமாரு முதலியார்:—இவர், உடுப்பிட்டியிலே, வல்லிபட்டி என்னுங் கிராமத்தில், குலதிலகராய் ஏறக்குறைய நூற்றிருபது வருடங்களுக்கு முன் பிறந்தவர். இவருடைய தந்தைக்குப பெயர் சந்திரசேகர முதலியார். குமாரசாமி முதலியா ரென்பவருக்கு இவர் தாய் மாமன். சில ஆண்டுகளுக்கு முன்னர் ஊர்காவற்றுறையில் நீதவானாயிருந்த கதிரைவேற் பிள்ளைக்குப் பாட்டன் முறையான வரென்று அறிகிறோம. இவரால் இயற்றப்பட்ட சில பாடல்களும் உண்டென்று சொன்னார்களே யல்லாமல் அப்பாடல்களை இதுகாறும் யாம் கண்டதில்லை. பா. ம.

## Sir. Muttu-kumaraswamy, M L. C

சேர். முத்துக்குமாரசாமி:—எத்திசையும் புகழ் பெற்று விளங்கிய இவ்வுத்தமரை அறியாதாரில்லை. தமிழ்ச் சாதியாருள் முதலாவதாக "சேர்" பட்டத்தைப் பெற்றவர் இவரே. இவர் 1833-ம் ஆண்டு பிறந்தவர் அக்காலத்தில் இவருடைய பிதாவாகிய குமாரசாமி யென்பவர் இராசவாசல் முதலியாராயிருந்து பெரும் கீர்த்தி பெற்றனர். இந்த சேர். குமாரசாமி சிலகாலம் சட்ட சபை அங்கத்தினராயுமிருந்தனர். இவர் இங்கிலாந்துசென்று அங்குள்ள ராஜசபையில் "சைவ சமயத்தின் உண்மையையும்" "அரிச்சந்திர புராணத்தின் சாரத்தையும்" பிரசங்கித்து அவர்களை மகிழ்வித்தனர். தற்போது இவருடைய புத்திரராகிய ஆனந்தக் குமாரசாமி யென்பவர் அமெரிக்கா முதலிய மேனாட்டுத்தேசங்களில் பிரக்கியாதி பெற்று விளங்குகின்றனர். யாம் இவரைச் சந்தித்துப் பல விஷயங்களையு மிவரோடு சம்பாஷித்துள்ளோம். இவர், இயற்றிய நூல்களை விருப்புடன் வாசியாதாரில்லை யெனலாம். இவர் சாந்த குணமும், விவேக புத்தியும், தயாபிமானமு முடையவர். இவருடைய வடிவத்தைப் பற்றிச் சொல்லுங்கால் சிவந்த நிறமும், நீண்டு பருத்த உடம்பும், நெடிய அவயவங்களும், வட்டித்த கண்களும், நீண்ட முகமும், அகன்ற நெற்றியும், மேவி வாரப்பட்ட கூந்தலையு முடையவர்.

## S. Mahadeva Esq, Engineer, P. W D.

ஸ்ரீமான் இஞ்சினியர் மகாதேவா:—இவருடைய சந்ததி வரலாற்றை அறியும்பொழுது, மானிப்பாயில் மேன்மக்களாய் விளங்கிய பிரபுக்களின் வம்சத்தைச் சார்ந்த மதாவபாயர், சுப்பிரமணிய மவர்களின் சிரேஷ்ட புத்திரராவர். காலஞ் சென்ற ஸ்ரீமான் சுப்பிரமணியத்தை யாம் நன்கறிவோம். இவர் பல வருடங்களாகச் செக்கடித்தெருவில் வாசஞ்செய்தவர். சைவாசாரமும், சமயபக்தியும், சாந்தகுணமும், தெய்வசிந்தனையுமுடைய யோக்கியராயிருந்தனர். அக்காலத்தில் எமது பிதா சைவபரிபாலன சபைக்குப் பிரசாரகராயிருந்து சனங்களுக்குச் சமயபோதனை செய்துவரும் நாளில் இவர், ஏனைய பிரபுக்களுடன் தாமும் ஒருவராயிருந்து ஞானாமிர்தமாகிய பிரசங்கத்தைப் பக்தி சிரத்தை

யோடு கேட்டு, எம் பிதாவில் மிக்க அன்பு விசுவாசமுடையரா யிருந்தனர். இத்தன்மையுடைய உத்தமர்களை இக்காலத்திற் காண்பது மிகவருமை. புத்திரராகிய ஸ்ரீமான் மகாதேவா தம் பிதாவைப்போல் நற்பழக்க வொழுக்கமும், சமயாபிமானமு முடையராய் வளர்ந்து, கல்விகற்று உத்தியோகமாயிருந்தனர். இப்படி இருக்கும் காலத்தில் இவருடைய விவேகத்தையும், நுட்பபுத்தியையும் நன்குணர்ந்த அரசினர், உபகார வேதனங்கொடுத்துத் தங்கள் செலவிலே, இவரை இங்கிலாந்துக்கு அனுப்பி உயர்தரகல்வி கற்பித்துப் பெரும் பட்டங்களையும் வழங்கப்பெற்றனர். ஸ்ரீமான் மகாதேவா இயல்பாகவே சாந்தகுண முடையரா இக்குண விசேடத்தால் இங்குள்ள பிரபுக்கள் எல்லாரும் இவரை மிக்க விசேடமாய் மதித்துவருதலைக் காண்கின்றோம். இதுகாறும் எத்தனையோ கட்டிடங்களை, அநேகர் முறையாய் அமைப்பித்திருக்கின்றனர். உதாரணமாக, முனீஸ்வராலயத்திற் சில கட்டிடங்களையும், அங்கொடை என்னுமிடத்தில், ஆஸ்பத்திரி முதலானவைகளையுங் கட்டியவர் இவரே. சுருக்கமாகச் சொல்லுமிடத்தில், இந்தியாவுக்குச் சென்று ஸ்தல யாத்திரை, தீர்த்த யாத்திரை செய்தவர். "தமிழ்-யூனியன்" வித்தியா விநோத சபை, விவேகானந்த சபை, முதலாயுள்ள சங்கங்களில் அங்கத்தவருமாவர். இவர், காலஞ்சென்ற செல்லையா பிள்ளையின் புத்திரி ஸ்ரீமதி மீனம்பாள் என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து Nadaraja என்னும் ஏகபுத்திரனைப் பெற்றனர்.

## T. Muttu-kumaraswamy Esq. Ward Place.

காலஞ்சென்ற ஸ்ரீமான் முத்துக்குமாரசுவாமி:—
இவருடைய மூதாதைகள், மானிப்பாயைச் சார்ந்த ஆனைக்கோட்டையில், பிரபலஸ்தர்களாய் விளங்கினோர்களென அறியக்கிடக்கின்றது. அக்காலத்தில் வீரநாராயண முதலியார் என்று ஒருவர் இருந்தார். இவருடைய மகன் முருகேசுச் சட்டம்பியார், இவருடைய மகன் சண்முகத்தார், இவருடைய மகன் தம்பையா முதலியார், இவருடைய மகன் திருவாளர் முத்துக்குமார சுவாமி இவர் இக்கொழும்பு மாநகரில் இருக்கப்பட்ட தமிழ் மக்களுள் பெரும் தனாதிபராகவும், அட்டைஸ்வரியப் பிரபுவாகவும், அழகிற் சிறந்த புருஷராகவு மிருந்தனர் இவர் தம்முடைய மூதாதையர்

களைப்போல் கல்வியறி வொழுக்கமும் சைவாசாரமும், சமயபக்தியுமுடையராயிருந்தனர். இப்படி இருக்குங் காலத்தில் பரோபகாரமாய் அநேக சாதனங்களையுஞ் செய்யத் துவங்கினர். பிரபுவுடைய புத்திமானதால் மனச்சோர்வின்றி மரணபரியந்தம் பிரபுத்தன்மையுடையராக வாழ்ந்தனர். பெருமையாலும் பிறருக்கு உதவிசெய்தலாகிய பெருந்தன்மையுடைய வென்பதை யாம் பல வருடங்களா யறிவோம். இத்தேசத்தில் இவரை யறியாதார் இல்லையெனலாம். இவர் தமது ஜீவிய காலத்தில் செய்திருக்கின்ற புண்ணிய விஷயங்களை எம்மால் எழுதியடங்காது. ஆகவே சுருக்கமாயக் கூறிமுடித்தோம். இவர் ஜீவந்தையிருக்கும் வரையில் உத்தியோகஸ்தர்களாலும், வெள்ளைக்காரர்களாலும், மற்றும் பிற மதத்தவர்களாலும், நன்கு மதிக்கப்பெற்று உலகில் நற்கீர்த்தியையும் புகழையும் நாட்டிச் சென்றனர். இவருக்கு விவாகம், மாட்சிமை பொருந்திய சக்கரவர்த்தியவர்களாலும், தேசாதிபதியவர்களாலும், நன்குமதிக்கப்பெற்றுத் தேசமெங்கும் கீர்த்திப்பிரதாபமுற்றுவிளங்கும், காருண்ணியவள்ளலாகிய கௌரவ சேர் பொன்னம்பலம், இராமநாதன் அவர்களுடைய ஜேஷ்ட புத்திரியாகிய **ஸ்ரீமதி காமினி** என்னும் பெண்மணியை இல்வாழ்க்கைத் துணைவியாகக் கொண்டு Meenambikai, Sellam Nadaraja. Sathanandan என்னும் நாமங்களையுடைய பிள்ளைகளைப் பெற்றனர். ஸ்ரீமதி காமினி ஆச்சி, தம் பிதாவைப் போல் கல்வியறி வொழுக்கங்களிற் சிறந்து சைவாசாரமும், சிவத்தியானமும், குருபக்தியு முடைய உத்தமியாய் விளங்குகின்றனர். அறிவுக் கேற்றதாகும் நூல் ஒன்றையும் இயற்றியுள்ளார். கனிஷ்ட புத்திராகிய சதானந்தன் என்பவர் கேம்பிறிச் சோதனைகளிற் சித்திபெற்று உயர்தரக்கல்வி கற்கின்றனர். இவர் எம்மிடம் கல்வி கற்றவர். விவேக புத்தியும் சாந்த குணமும், நற்பழக்கமு முடையராய் காணப்படுகின்றனர்.

## S. R. Muthiah Pillai.

ஸ்ரீமான் சு. இ. முத்தையா பிள்ளை:—இவர், பலாங்கொடை யென்னுமிடத்தைச் ஜென்ம ஸ்தானமாகக் கொண்டு 1888-ம் ஆண்டு மாசி மாதம் 3-ம் திகதி ஜெனனமானார். இவருடைய மூதாதைகள் கல்வியறி வொழுக்கங்களிற் சிறந்த யோக்கியர்களாயும், சைவாசாரம் குன்றாத உத்தமர்களாயும் விளங்கிய

சிவநேயச் செல்வர்கள் மரபிலே யுதித்த திருவாளர், சுப்பையா இராசா என்பவருடைய புத்திர சிகாமணியாவர். இவர் சிறு பிராயம் முதலாக நற்பழக்க வொழுக்கமும், சைவாசாரமும், சமய பக்தியு முடைய நற்புதல்வராய வளர்ந்து, ஆங்கிலம், தமிழ், என் னும் இரு பாஷைகளையும் நன்குகற்று. நலுவலை யென்னுங்கோட் டத்துக் கதிபராய், பாரிய தனவந்தராய், ஏழைகள் பலர் சீவித் தற்குக் காரணராய், பற்பல சாதியாரானாலும், சமயத்தார்களா லும் நன்கு மதிக்கப்பெற்ற யோக்கியராய் விளங்குகின்றனர். நாமறிகிறவரையில் தற்போது பலாங்கொடை யென்னுமிடத்தில் தனவான்க ளென்றிருக்கும் தமிழ் மக்களுள் இவர் சமயாபிமா னம், சாதியாபிமானம், தேசாபிமானம், பாஷாபிமானம், என்னும் பேரபிமானங்களையுடைய அபிமான புத்திரராய்க் காணப்படுகின் றனர். இவர் ஆகம சாத்திரங்களை யோதி அதன் பொருளை யறிந்து, ஆன்மலாபத்துக்குரிய சற்கருமங்களைப் பக்தி சிரத்தை யோடு செய்து வருகின்றன ரென்றும் சிவாலயம், மடாலயம், வித்தியாலயம், முதலானவற்றிற்கும், கற்றோர் மற்றோராகிய இரு திறத்தாருக்கும் இல்லை யென்னாது பொருள் கொடுக்கின்ற உத் தம ரென்றும், துனைவி யென்னுமிடத்தில் எழுந்தருளி யிருக்கும் கலியுகவரதராகிய கொட்டுடை முருகமூர்த்தியினது வருடோற் சவத் தினத்தில், ஒரு திருவிழாவைத் தமது பொறுப்பாக விமரி சையுடன் செய்கின்ற அன்பரென்றும் அறியலானேம். இத் தகைய இலட்சணங்களெல்லாவற்றையு முடைய ஸ்ரீமான் முத் தையா பிள்ளை, தம்மரபிற்கேற்ப, கல்வியறி வொழுக்கங்களிலும், கடவுள் பக்தியிலும், நற்குண நற்செய்கைகளிலும், சாந்தம், பொறை, அடக்கம், முதலாகிய இன்னோரன்ன குணங்களிற் சிறந்து விளங்கும் உத்தம பத்தினியாகிய **ஸ்ரீமதி செல்வபாக்கியம்** என்னும் நாமத்தையுடைய பெண்மணியை விவாகஞ் செய்து ஈஸ் வரானுக்கிரகத்தால் இராஜேந்திரம், இராஜேஸ்பரி, இராஜலட்சுமி என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளை சந்தானங்களாகப் பெற் றனர். எம்மால் எழுதப்படும் 'மற்றோர்' சரித்திரத்தில் இவருடைய பெருந்தன்மைகளைப் பற்றி நன்காராய்ந்து விரிவாய்க் கூறுவோம்.



# MR S. R. MUTHIAH PILLAI,

(Proprietory Planter & Manager,)

**BALANGODA & SELWAWATTA ESTATES.**

---



Naluwella Estate Balangoda.

குணமு, சிவ
புவாயுர், குணத்
தருடைய பெருமை

Meenambal Press.

## Muttutamby, Broker.

காலஞ்சென்ற புரோக்கர் முத்துத்தம்பி:—இவர், செங் காருலாத்தினம் என்னும் பெயரையுடையவர். மானிப்பாயில் மதியாபரண முதலியார், கனககரை முதலியார், வழித்தோன்ற லாயுள்ள தன்மாவரதரின் புத்திரராவர். "இஸ்க்றையின்" வீட்டுப் புரோக்கராயிருந்து பலருக்கும் அக்காலத்தில் பலவிதமான பெரும் ஒத்தாசைகளைச் செய்த பரோபகார சீலர். இப்பெரியார், சமயா சாரமும், தெய்வபக்தியுமுடைய சற்பாத்திரராயிருந்து, அளவற்ற புண்ணியங்களைச் செய்திருக்கின்றனர். அவற்றுள் சிலவற்றைக் கூறுவேம். மருதடி விருயகர் ஆலயத்துக்குச் சமீபமாய் விசு வேசர் என்ற நாமத்துடன் மடமொன்றை ஸ்தாபித்துள்ளார். மருதடி ஆலயத்தில் பெரும்பொருள் செலவிட்டுச் சிவப்பிரதிஷ்டை செய்து நித்திய நைமித்தியங்களின் பொருட்டாகக் குளத்துப் பிட்டி என்னுமோர் வயலில் இருபது பரப்பைச் சுவாமி பேருக்கு மானியமாகத் தருமசாதனஞ் செய்துள்ளார். சுதுமலை அம்மன் கோவிற் பூசைக்சாக,இரண்டு காணித்துண்டுகளைத் தருமசாதனஞ் செய்திருககின்றார். புன்னாலை வரதராஜப் பெருமாள் கோவிற் சந்நிதானத்தில் பாரிய மடமொன்றைக் கட்டி, முன்னுலிருக்கும் தென்னந்தோப்பைச் சாதனஞ் செய்திருக்கின்றார். கதிர்காமத் தில் தற்போது "றயிற்றா" மடம் என்று வழங்கும் மடாலயம், முக்கால் பங்கும் இவருடைய பொருளைக் கொண்டே கட்டப்பட் டதெனவறிகிறேம். சேதுக்கரையில் மடங்கட்டுவித்தவர். சிதம் பரத்தில் நடராஜப்பெருமானுடைய பூஜைக்காகத்திருநந்தனவனத் தையும் ஏற்படுத்திச் சிவலோகஞ் சென்றனர். இவருடைய புத்தி ரரே காலஞ்சென்ற திருவாளர், சிவராம். இவருடைய புத்திரரே தற்போது பிரபல நியாயதுரந்தரராயிருக்கும் இரத்தினகரம்.

## T. Murugesu Esq. Villula, Torrington Place.

காலஞ்சென்ற ஸ்ரீமான் த. முருகேசு:—இத்தரும சீலர், இந்நகரில் ஏறக்குறைய முப்பது வருடங்களுக்கு முன்னரா யிருந்து தமிழ் மக்களால் பெரிதும் சன்மானிக்கப் பெற்றுச் சொற்ப வயதிற்றனே கொடிய யமன் கையிற் சிக்குண்டு, சிவ லோகஞ் சென்றனர். அட்டைஸ்வரியப் பிரபுவாயும், குணத் திலே சிறந்த குணசாலியாயுமிருந்த இப்புனிதருடைய பெருமை

யை இக்காலத்துள்ள வாலிபர் அறியமாட்டார்கள். இன்னும் சில வருடங்கள் செல்லுமாயின், இவருடைய பெயரையும் அடியோடு மறந்துவிடுவார்களென்பது நிச்சயம் ஆகவே இவ்வுத்தமருடைய ஞாபகம் எல்லாருடைய இருதயத்திலு மிருக்கும் பொருட்டாக யாம் இவரை நன்குமதித்துச் சிறுக எழுதலானோம். இவருடைய தகப்பனார் ஸ்ரீமான் தம்பையா முதலியார். இவர், ஆனைக்கோட்டையிலிருந்த வீரநாராயண முதலியார், முருகேசச் சட்டம்பியார் மகன், சண்முகத்தாருடைய புத்திரராவர். இவர் சைவசமய விருத்தியின் பொருட்டுச் செய்திருக்கின்ற சற்கருமங்களும் சிவபுண்ணியங்களும் கொஞ்சமல்ல. தம்முடைய பிதாவைப்போல் ஸ்ரீமான் முருகேசரும் மகா யோக்கியராய் வாழ்ந்தனர். இவர், வட்டுக்கோட்டை மானு முதலியார் பூதத்தம்பி வம்சத்துத்தோன்றிய கதிர்வேலர் மகன் தம்பையாச் சிருப்பர் அவர்களின் ஜேஷ்ட புத்திரி ஸ்ரீமதி சிவகாமிப் பிள்ளை யென்னும் மாதுசிரோன்மணியை விவாகஞ் செய்து, சற்புத்திர சந்தானமாக Thambiah என்னும் ஓர் ஆண்மகவைப்பெற்றுசிவபதமடைந்தனர்.

## V. Muthiah Esq, Post Master, Slave Island,

திருவாளர் முத்தையா:—இவர், வட்டு மேற்கை சென்மஸ்தானமாயுடைய விசுவநாதர், விஞுசித்தம்பி யவர்களின் புத்திரராவர். தற்போது மானிப்பாயை வாசஸ்தானமாய்க் கொண்டுள்ளார். இவர் 1896-ம் ஆண்டு கார்த்திகை மாதம் சென்னை மானுர். வட்டுக்கோட்டை சாஸ்திர கலாசாலையிற கல்விகற்று பரீட்சைகளிற தேர்ந்து தபாற் கந்தோரப பகுதியில் போஸ்ற மாஸ்டராயிருக்கின்றனர். இவர் ஊர்காவற்றுறையில் பிரபல டாக்டராயிருந்த சந்நியாசி ஜோசப் சிற்றம்பல மவர்களின் புத்திரி Constance மனோன்மணி என்னும் மாதைக் கைப்பிடித்து வெள்ளவத்தையில் வசிக்கின்றனர்.

## Myluppillai, Shroff

காலஞ் சென்ற மயில்வாபிள்ளைச் சிருப்பர்:—இக்கொழும்புநகரில் பிரபலஸ்தர்களாயிருந்த முதியோருள் ஒருவராவர். இவருடைய பூர்வீகம மானிப்பாய். உடைகாத முதலியார் வம்சத்துத்தோன்றிய தில்லையம்பலம் மகன் சின்னத்தம்பியுடைய

புத்திரராவர். இவர் அக்காலத்தில் மெர்க்கின்ரையில் வங்கிக்குப் பிரதம சிருப்பாயிருந்து பலராலும் நன்குமதிக்கப் பெற்றனர். இவர் ஏராளமாகப் பொருளைச் சம்பாதித்துத் தரும விஷயங்களிற் செலவிட்டனர். கொடுப்பதிற் சிறந்த கொடையாளியென்று இக் காலத்திலும் இவர் பெருமையைப்பற்றி வியப்பாய்க்கூறக் கேட்டுளேம். இவருக்கு வைத்தியலிங்கம் என்றும், சதாசிவம் என்றும், இரண்டு புத்திரர்களிருந்தனர். இவர்களுடைய பிள்ளைகளும் பேரப்பிள்ளைகளும், சந்தான விருத்தியாகிப் பற்பல இடங்களில் வாக்குப்பட்டுச் சீர்சிறப்பாய் வாழுகின்றனர். வைத்தியலிங்கமவர்களுக்கு Srimathi Sundari, Srimathi Balambikai என்னும் இரு பெண்களும், Sathsivam, Balendra என்னும் இரு ஆண்களுமிருக்கின்றனர். இவர்களுள் ஒருவர், பிரபல நியாயதுரந்தரராகவும், மற்றொருவர் தந்த-வைத்தியசாலையின் பிரதான டாக்டராகவும் பிரக்கியாதிபெற்று விளங்குகின்றனர்.

## E. Murugesam Pillai Esq J. P. Proctor & Notary.

ஸ்ரீமான் பிறக்டர் முருகேசம்பிள்ளை:—சமாதான நீதவான் என்னும் கௌரவப்பட்டம் பெற்றுத் தற்போது யாழ்ப்பாண நாட்டில் பிரபல நியாயதுரந்தரராகவும், பிரசித்த நொத்தாரிசாகவும் பிரக்கியாதி பெற்று விளங்கும் இவ்வுத்தமர், மானிப்பாயைச் சென்ம ஸ்தானமாயுடையவர். பிதாவுடைய வழியால் சண்டிருப்பாயையும், மாதாவுடைய வழியால் மானிப்பாயையுஞ் சார்ந்தனரென்று அறியலானேம். சண்டிருப்பாயிலிருந்த ஸ்ரீமான் கதிர்காமருடைய புத்திரர் முருகேசர். இவருடைய புத்திரர் ஸ்ரீமான் சரவணமுத்துமணியம். இவருடைய புத்திரர் ஸ்ரீமான் சின்னத்தம்பி இவர், அக்காலத்தில் செமினரியிற் கல்விகற்று 'இஸ்ரேல்" என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றனர். இக் காரணம்பற்றியே இவர்கள் வீட்டுக்கு இந்நாமம் வழங்கலாயிற்று. இவருடைய புத்திரர் ஸ்ரீமான் இளையதம்பி. இவருடைய புத்திரரே ஸ்ரீமான் முருகேசம்பிள்ளை இவர், யாழ்ப்பாணத்திலும் கொழும்பிலும் கல்விகற்று நியாயப்பிரமாணங்களிற் தேர்ந்து சில காலம் கொழும்பிற்றானே கடமை பார்த்து வந்தனர். இப்படி இருக்குங் காலத்தில் இவருக்குத் தேகசுகக் குறைவு ஏற்பட்டதால் யாழ்ப்பாணத்துக்குச் சென்று அவ்வூரிற்றானே தமது கட

மையை அதிக திறமையோடும் மிக்க நேர்மையோடும் பார்த்துப் பலராலும் நன்குமதிக்கப்பட்டு வருகின்றனர். வடமாகாணத்துள்ள தரணிமாருள் பலவிதத்தாலும் முதன்மை பெற்று விளங்கும் இவ்வுத்தமருடைய குணவிசேடங்களை அறியாதாரில்லை. இவர் இதுகாறும் யாழ்ப்பாணத்தில் கணக்கற்ற வழக்குகளை நடாத்திச் செயமடைந்திருக்கின்றனர். சுருக்கமாகச் சொல்லுகில் நம் நாட்டில், இவருக்கிருக்கின்ற மதிப்பும், கீர்த்தியும், அபிமானமும், அதிகமென்று சொல்லுதல் மிகையாகா. ஸ்ரீமான் முருகேசம்பிள்ளை சமயபக்தியும், பெருந்தன்மையும், பரோபகார சிந்தையுமுடைய பெருமகன் என்பதே உலக சம்மதம். இவர் பிரபல புரொக்கராயும் பாரியதனவந்தராயுமிருந்து காலஞ்சென்ற வேலாயுதர், சங்கரப்பிள்ளை யவர்களின் புத்திரி ஸ்ரீமதி அம்பிகை என்னும் மாதை விவாகஞ்செய்து மதியாபரணம், சுப்பிரமணியம், புவனேஸ்வரி, நாகபூரணி, என்னும் ஐந்து குழந்தைகளையும் பெற்றனர். தம்பதிகள் சுகசீவந்தர்களாய் வாழ்வார்களாக.

## K. Mathiaparanam Esq.

ஸ்ரீமான் கா. மதியாபரணம்:—இரண்டொரு வருடங்களுக்கு முன் காலஞ்சென்ற இவ்வுத்தமர், மானிப்பாய் என்னுமிடத்தில், பரம்பரையாயிருந்த காராளகுலசிங்க முதலியார் சந்ததியிற் றோன்றிய கார்த்திகேய உடையார், காராளபிள்ளையின் புத்திரராவர். இவர் சில வருடங்களாகப் போஸ்ற் மாஸ்டராயிருந்து உபகாரவேதனம் பெற்றவர். சிவதீட்சை பெற்றுச் சைவாசாரமும், சமய பக்தியுமுடையராயிருந்து, தம்மாலான சற்கருமங்களைச் செய்து வந்தனர். உதாரணமாக, கதிர்காமத்தில் மடங்கட்டுதற்கும், சைவபரிபாலன சபையை நன்கு நடாத்துதற்கும் அவாவுடையராயிருந்தனர். சமீபகாலத்தில் யாழ்ப்பாணத்தைப் பற்றிய சரித்திர மொன்றையும் அச்சிட்டனர். இவருக்கு சிவகாமிப்பிள்ளை, விசாலாக்ஷி, ராஜலக்ஷ்மி என்னும் மூன்று பெண்களும் சம்பந்தமூர்த்தி என்னும் ஓர் புத்திரரும் உண்டு. இவர் ஆனந்தக் கல்லூரியிலும், பரமேஸ்வரக் கல்லூரியிலும் கல்விகற்று, மாமனராகிய ஸ்ரீமான் செல்லமுத்துவோடு கடைபார்த்து வருகின்றனர்.

## T. Markandaya Aiyer. Inuvil

பிரமஸ்ரீ த. மார்க்கண்டையர்:—இப்பிராமணோத்தமர் இணுவிலைச் சென்ம ஸ்தானமாயுடையவர். கல்வியறிவிலும், விவேகத்திலும், கவிபாடுவதிலும் சிறந்தவர். காசி நகரிலுள்ள சிவன கோவிலில் அனேக வருடங்களாக அருச்சகராயிருந்தனர். தர்க்கரீதிப்படி குதர்க்கஞ் செய்பவர், எம்மிடம மிக்க அன்பு டையராயிருந்தனர். காசிக்குச் சென்று ஓர் அழகிய அம்பாளை யும் இலிங்கத்தையும் கொணர்ந்து, பெருங்காட்டுக் கந்தசுவாமி கோவிலுக்குப பக்கமாக வைத்துப் பூசை செய்து, ஒருகாலப் போசன முண்டு வந்தனா. இக்கோவிற கட்டிட வேலையில், முக் காற்பங்கும் முடித்தனர். தம்முடைய சுகயீனத்தைப் பொருட் படுத்தாமல் பத்தி வைராக்கிய ஞானங்கொண்டு கதிர்காமத்துக்குச் சென்று சுவாமி தரிசனை செய்து, தீர்த்தோற்சவம் முடிந்தவுடன் நிட்டை கூடினா. அப்பொழுது அங்கிருந்தோர் இவருடைய மரணத்தைக் குறித்துப் பெரும ஆச்சரியமுற்றனர். இப்புண் ணியாத்மாவுக்கு அத்தலத்திற்றானே சமாதியுங் கட்டப்பட்டன.

## M, Muttiah Reddiar. Moolakkari S India.

ஸ்ரீமான் மு. முத்தையா ரெட்டியார்:—இவர், திரு நெல்வேலி ஜில்லாவைச சார்ந்த மூலக்கரை என்னுங் கிராமத்தைச் சென்ம ஸ்தானமாயுடையவர். இவர் திருவாளர் முத்துரெட்டி யாரவாகளின் புத்திரராவர். அந்நாட்டில் இவர்களை "ராஜேந்திரா" குடும்பத்தின ரென்றும அழைப்பார்கள் ஸ்ரீமான் முத்தையா ரெட்டியார் தம் மூதாதையர்களைப் போல் விஷ்ணு பக்தியுடை யவர். பள்ளிக்கூடம், பஜனைமடம், முதலானவற்றை ஏற்படுத்தி ஜனங்களுக்குச் சமய பக்தியும் நல்லஞானமும் உண்டாதற் பொருட்டு அ னே க சற்கருமங்களைச் செய்திருக்கின்றாரென அறியலானோம. உதாரணமாக இவர், இந்நகரிற் சில வருடங் களாக ஸ்ரீராம நவமி உற்சவத்தைப் பக்தி சிரத்தையோடு செய்து வருகின்றனர். ஸ்ரீமான் முத்தையா தேசாபிமானமும், சாந்த குணமும், மனுஷத்தன்மையு முடையாராய் விளங்குகின்றனர். இவர், இங்குள்ள பிரபுக்கள் பலரோடும் சஞ்சரித்து வியாபார முறைகளை நன்கு நடாத்தி வருகின்றனர். தற்போது இவரு டைய புத்திரராகிய சுப்பையா என்னும் இளைஞன், ஆனந்தக் கல் லூரியில் கல்வி கற்கின்றனன. மகா புத்திசாலியாகிய இச்சிறு வன் நன்னிலையடைவன் என்பது திண்ணம்.

## R. Muttusamy Esq, Proctor & Notary.

பிறக்டர் ஆர். முத்துச்சாமி:—இவருடைய சந்ததி வரலாற்றைச் சொல்லுகில், வெகு காலத்துக்கு முன், முகமாலை யென்னு மிடத்தைச் சென்ம ஸ்தானமாகக் கொண்ட, இலங்கை நாதமுதலியார் சந்ததியில் முத்த உடையார், சிவகுருநாதர், நமசிவாய முதலியார் என்போருக்கும், தற்போது தமிழ் மக்களுள் பாரிய தனவந்தராயும், பிறவிச்செல்வராயும், பலபுத்திரருக்குப்பிதாவாயும், பிரபலமுற்று விளங்கும், புரொக்கர் இரத்தின சபாபதி முதலியாருடைய கனிஷ்ட புத்திரருமாவர். இவர் ரோயற் கல்லூரியில் கல்விகற்று சேம்பிறிஜ் பரீஷைகளிற் தேர்ந்து, தற்போது பிரசித்த நொத்தாரிசாகவும், பிறக்டராகவுமிருக்கின்றனர். இவர் மரபாலும், உத்தியோகத்தாலும், செல்வத்தாலும், விவாகம் பண்ணப்போகும் வழியாலும், உயர்வாய்க் காணப்படுவதால் யாம் இவரை மதித்து இப்புத்தகத்தில் எழுதலானோம். இனி இவரிடத்தில் காணப்படும் செயல்கள் எதுவோ அவைகளெல்லாவற்றையும் யாம் நன்கறிந்து அடுத்துவரும் மற்றோர் சரித்திரத்தில் மிச்சசொச்சமின்றி மிகவிரிவாய்க் கூறுவோம்.

## R. Mahadeva Esq. Proctor & Notary.

ஸ்ரீமான் பிறக்டர் மகாதேவா:—இவர் இப்பொழுது பிரபல நியாயதுரந்தரராகவும், பிரசித்த நொத்தாரிசாகவும் விளங்குகின்றனர். கறுவாக்காட்டி லிருக்கும் தனவான்களைச் சார்ந்தவர். இற்றைக்குச் சில வருடங்களுக்கு முன் அட்ட ஐசுவரியப் பிரபுவாயிருந்த இராமலிங்கச் சிறுப்பருடைய புத்திரராவர். இந்த இராமலிங்க மென்பவர் அக்காலத்தில் மதராஸ் வங்கிக்குப் பிரதம சிறுப்பாயிருந்து பலராலும் நன்குமதிக்கப் பெற்றனர். இவர், இயல்பாகச் சாந்தம், பொறை, அடக்கம் முதலாகிய நற்குணங்களையுடையவராயிருந்து, நன்மையான கருமங்களைச் செய்து சிவலோகஞ் சென்றனர். இவருடைய சந்ததி வரலாற்றை விசாரித்தபொழுது, வட்டுக்கோட்டையிலிருந்த மானுமுதலியார், பூததம்பி சுவாமினாதர், கதிரைவேல் என்போருடைய வழித்தோன்றலாயுதித்தாரென அறியலானோம். புத்திரராகிய மகாதேவா வுடைய குணத்தைப்பற்றிச் சொல்லுகில் இவரை யாம் பல வருடங்களா

யறிவோம். இவர் தமிழ் மக்களுள் பிரபலஸ்தராய் விளங்குகின்றனர். இப்பொழுது இவரிடத்துள்ள விசேட செயல்களை மாத்திரம் இங்கு கூறிமுடிப்பேம். ஸ்ரீமான் மகாதேவா நற்பழக்கமும், சைவாசாரமு முடையவர் விசேட தினங்களாயுள்ள புண்ணிய காலங்களையும், விரததினங்களையும் அனுஷ்டிப்பவர். இந்தியாவிலும், இலங்கையிலுமுள்ள திவ்விய க்ஷேத்திரங்களுக்குச் சென்று சுவாமி தரிசனை செய்பவர். தரும ஸ்தாபனங்களாயுள்ள ஆலயங்களிலும், சற்சனர் கூடியிருக்கும் சபைகளிலும் அபிமானமுடையார். உதாரணமாக, யாழ்ப்பாணத்தார் கதிரேசன் கோவிலைப்பற்றிப் பெரிதும் உழைத்து வருகின்றனர். வழக்கு விஷயமாக இவரிடஞ் செல்வோருக்கு ஒப்பீனியன் முதலான உபாய நெறிகளைச் சொல்பவர். தற்போது செட்டிப்பிள்ளைகளாலும் இல்லா மதத்தவர்களாலும் நன்கு மதிக்கப்பட்டு வருகின்றனர். இவர் காலஞ் சென்ற புரோக்கர் சங்கரப்பிள்ளையுடைய புத்திரி ஸ்ரீமதி Sinnathangam என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து Sivaraja, Meenamba, Ramalingam என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப் பெற்றனர். ஸ்ரீமதி சின்னத்தங்கம் மகா சாமர்த்தியமும், விவேகமும், நற்குணமு முடைய பிள்ளையாயிருந்து எம்மிடம் கல்விகற்ற மாணுக்கிகளுளொருவருமாவர். மறுபதிப்பில் விபரமாய்க் கூறுவேம். தம்பதிகள் இனிது வாழ்வார்களாக.

## **M. Manickkavasagar.** Vhidana Sittangerni

**ஸ்ரீமான் மாணிக்கவாசகர்:**—இவர் சித்தங்கேணி என்னுமிடத்தைச் சென்ம ஸ்தானமாயுடையவர் சைவ வேளாண்மரபிலே யுதித்த சிவநேயச் செல்வர்களைச் சார்ந்தவர். இவருடைய பெருந்தன்மைகளைச் சில வருடங்களாக யாமறிவேம். இவர் சமயபக்தியும், பரோபகாரமும், ஆளணியும், நாட்டாண்மையும், அதிகாரமு முடையவர். இவருடைய தமையனார் மகன், பிறக்டார் P கணபதிப்பிள்ளை யென்பவர், பிரபலநியாயதுரந்தரராயும், சற்குணசீலராயும், விளங்குகின்றனர். இவர்கள் குலாசாரமும், மதாசாரமும் பூண்ட யோக்கியர்களானதால் இவர்களுடைய பெருமையைக் குறித்து மேன்மக்கள் சரித்திர மென்னும் இப்புத்தகத்தில் சுருக்கமாய்க் குறிப்பிடலானேம். ஸ்ரீமான் மாணிக்கவாசகர் தற்போது வட்டுக்கிழக்கு விதானையாக கடமைபார்த்து வருகின்றனர். யாம்மறுபதிப்பில் விபரமாய்க் கூறுவேம்.

## **Markus S. Rockwood Esq.** "Kudsia" Rockwood Place.

ஸ்ரீமான் மார்க்கஸ் செல்லத்துரை ரொக்வூட்:— இவர், இலங்கைத் தமிழ்ப் பிரதிநிதியாகவும், பிரபல டாக்டராகவும் பாரிய தனவந்தராகவுமிருந்து உலகில் பெருங்கியாதியையும், கீர்த்தியையும் பெற்று விளங்கிய ஸ்ரீமான் றக்வூட் துரையவர்களுடைய கனிஷ்ட புத்திரராவர். இவர் பிறவிச் செல்வரானபடியால் சிறு பிராயம் முதல் நற்பழக்கமும், நற்குணமுமுடையவராய், ரோயல் கல்லூரியிற் கல்விகற்று, பரீஷைகளில் சித்தியடைந்து, இங்கிலாந்துசென்று உயர்தரக் கல்விகற்றனர். ஸ்ரீமான் செல்லத்துரை பெரும்பாலும் நல்லறிவும், நல்லொழுக்கமுமுடையர். உயர் குலத்தில் பிறந்த உத்தமனுகையால், உயர்வான செய்கையும், உயர்வான போக்கும், உயர்வான குணமும் உடையராய் விளங்குகின்றனர். இவர் மேலான வம்சத்திலுள்ள அன்னைக்குப் பிள்ளையாக வந்துதித்து, அன்னையிடம் நல்ல பழக்கங்களைப் பழகியதால் "தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்" என்றபடி இவரிடத்தில், இன்சொல், நகை, இரக்கம், பரோபகாரம், எளியவர்களிடத்தன்பு, இது முதலாகிய பெருங்குணங்கள் இயல்பாயுண்டு. யாம் பல வருடங்களாகப் பழகியதால் இவருடைய சிறந்த குணங்களை எழுதலானோம். இவருடைய மனைவியோ என்றால், மேலைத் தேசவாசியாயிருந்த போதிலும், கீழ்த்தேசமுறைகளை அனுசரித்து அதற்கேற்றபடி சகலகருமங்களையும் நன்கறிந்து, அதன்வழி ஒழுகும் ஆற்றலுடைய சுகுணவதி. ஸ்ரீமான் செல்வத்துரை தமிழ் சாகியத்தாருள் மிகவுமருமையான பிள்ளை. இவருடைய மனமும் நல்மனது. இவருக்கு அன்வினிகுமார் Gabriel என்றும், Sri Griffith என்றும், இரண்டு பிள்ளைகளிருக்கின்றனர். இந்தப் பிள்ளைகள் பிதாமாதாவைப்போல் சாந்தகுணமும், நற்பழக்க வொழுக்கமும், கல்வியில்விவேகமும், சாமார்த்தியமு முடையர்களாய்க் கல்விகற்கின்றனர். இந்தப் பிள்ளைகள் பிறந்த நாள் முதலாக, இவர்களுடைய திறமையையும், குணவிசேடத்தையும் யாம் நன்கறிவோம். இவர்கள் எம்மிடத்திலே தமிழ்க் கல்வி கற்றவர்கள். சுருக்கமாகச் சொல்லுகில் இந்தப் பிள்ளைகள் தங்கள் பேரனைப் போல் ஒரு காலத்தில் பிரபலமுற்று விளங்குவார்கள் என்பதற்குச் சந்தேகமில்லை. தற்போது கேபிறியல் என்பவர், கேம்பிறிச் பரீட்சைக்குச் சென்று உயர்தரக் கல்விகற்று வருகின்றனர்.

## Mudaliyar K. V. Markandan.

ஸ்ரீமான் கா. வ. மார்க்கண்டு முதலியார்:— இவர், மேன்மக்கள் மரபிலே யுதித்த சிதம்பர நாதர், கதிர்காமர், பெரியதம்பி, காசிநாதர், வயித்தியலிங்கமவர்களின் புத்திரராவர். தருமப் பிரபுவாய விளங்குமி இவ்வுத்தமரை இதுகாறு மறியாதாரில்லை யெனலாம். இவருடைய பெருமையைச் சொல்லுகில், சிவபுண்ணியங்களில் ஈடுபட்டுச் சிவாலயம், மடாலயம், வித்தியாலயம், தண்ணீர்ப்பந்தல் அன்னசத்திரம, முதலாயுள்ள சற்கருமங்களைச் செய்திருக்கின்றனர். இவருடைய புத்திரராகிய ஸ்ரீமான் தியாகராஜாவென்பவர்வட்டுக்கோட்டை தொத்தாரிஸ் சிதம்பரநாதபிள்ளையுடைய புத்திரி ஸ்ரீமதி இலக்குமியென்னும் பெண்மணியை விவாகஞ்செய்து ஓர் பெண்மகவைப் பெற்றனர். தற்போது இத்தரும ஸ்தாபனங்களை இவரும், இவருடைய தம்பி சோமசுந்தர மென்பவருமாகப் பரிபாலித்து வருகின்றனர். இவர்களும் பிதாவைப் போல் பெருந்தன்மையுடைய பிரபுக்களாய் விளங்குகின்றனர்.

## Mr. V. Manickkavasagar. Law Student

திரு வ. மாணிக்கவாசகர்:—இவ்விளைஞர் மானமுதலியார், பூதத்தம்பி வம்சத்துத் தோன்றிய, சீமை வர்த்தகர், ஸ்ரீமான் அ. வயித்தியலிங்க மவர்களுடைய புத்திரராவர். றோயல் கல்லூரியில் அதிக திறமையோடு கல்விகற்று கேம்பிறிஜ் பரீட்சைகளிற் சித்தியடைந்து தற்போது நியாய மாணவராயிருக்கின்றனர். இவர், அறிவாலும் ஒழுக்கத்தாலும் மற்று மெவ்வகையாலுஞ்சிறப்புடையவரென்பதே எமதுகொள்கை. ஆகவே மேன்மேலும்இவருக்குஅபிவிருத்தியுண்டாக நாம் ஆசீர்வதிக்கின்றோம்.

## Srimathi Moaheswari,

இலங்கைத் தமிழ் மக்களுள், இராஜாவாய் விளங்கியகௌரவ சேர். அருணாசலந் துரையவர்களுக்கும், மகிமை பொருந்திய ஸ்ரீமதி லேடி சொர்ணச்சிக்கும் சிரேஷ்ட புத்திரியாய் அவதரித்து கல்வியறி வொழுக்கங்களிலும், கற்பொழுக்கங்களிலும், சிறந்து

விவாகஞ்செய்து Pathmini, Namasivayam, Annapurani என்னும்பெயரையுடைய பிள்ளைகளைப்பெற்று முப்பத்தி நான்காம் வயதளவில் 1922-ம் ஆண்டு ஜனவரி மாதம் 31-ம் திகதி இவ்வுலக வாழ்வைநீத்துப் பரலோகஞ்சென்றனர் மகாலக்ஷ்மிக்கொப்பாய விளங்கிய மகேஸ்வரியின் மகிமை யாம் நன்கறிந்தமையால் எம மால்எழுதப்படும் "மற்றோர்" சரித்திரத்தில்மிகவிரிவாயக்கூறுவோம

## Srimathi, Manonemani. "Ponklar"

அழகிற் சிறந்த மற்றோர பெண்மணியின் சிறந்தை எம்மால் வர்ணித்துச சொல்ல முடியாது. கௌரவ சேர். அருணாசலம் இவ்விதமான பிள்ளைகளைப பெறுதற்கு என்ன தவஞ்செய்தாரோ யாமறியோம. இந்த மனோன்மணியையும் யாம நன்கறிவோம். மகேஸ்வரியைப்போல், கல்வியிலும், ஒழுக்கத்திலும், சிறந்து, பாரிஸ்டர் ஸ்ரீ பத்மநாதன் அவர்களை விவாகஞ்செய்து, சொற்ப வயதில் காலஞ்சென்றனர். இவ்விரு பெண்களும் இக்குடும்பத்திற்குத் தலைவிகளாயிருந்து, மின்னலைப் போற் தோன்றி மறைந்தனர். பூலோக இரம்பைகளாயிருந்த இப்பெண்ணரசிகளும் மண்ணுலகுக்கு இரையானார்கள். கூற்றுவன் யாரைவிட்டுவைத்தான்.

## Muttukumaru Esq. Proctor Puttalam.

சில வருடங்களுக்கு முன், புத்தளப்பகுதியில், "அடம்ஸ்" முத்துக்குமாரு, என்னும் நாமத்துடன் ஓர் பிரபு இருந்தானென வறிகிறோம். இவர் அப்பகுதியில், பிரபல நியாயதுரந்தரராயிருந்தாரென்றும, பிரபுக்கள் வமிசத்தைச்சார்ந்தவரென்றும், குணசாலியென்றும், கிறிஸ்து மதாபிமானியாயிருந்து, காலஞ்சென்றாரென்றும் அறியலானோம், இவரைப்பற்றியவிபரங்கள் அதிகம் தெரியாமையால் சுருக்கமாயெழுதலானோம். மறுபதிப்பில் கூறுவோம்.

**Mrs. T. Murugesu** "Villula" Torrington Place.

----<>

ஸ்ரீமதி மு. சிவகாமி ஆச்சி:—"அன்னை தயையுமடியாள் பணியுமலர்ப்பொன்னினழகும் புவிப்பொறையு" மென்றபடி கற்பொழுக்கங்களாலும், பதிவிரதா தர்மத்தாலும், தானதர்மங்களாலும், நற்குண நற்செயலகையாலும், சைவாசாரம், நித்தியகர்மானுஷ்டானம், சமயபக்தி, ஆலயவழிபாடு, சிவத்தியானம், முதலாகிய இன்னோரன்ன செயல்களாலுஞ் சிறந்தொழுகும் இவ்வம்மையாருடைய பிதாவழியை ஆராயும்பொழுது, வட்டுக்கோட்டை மாதுமுகலியார் வமிசத்துத்தோன்றிய சுவாமிநாதர் கதிர்வேலருடைய புதல்வன் திரு தம்பையாவுக்குப் புத்திரியாவர். இனி இவருடைய மாதாவழியை ஆராயும்பொழுது, கனகசூரியர் வமிசத்துத் தோன்றிய முருகேசு, பெரியதம்பியுடைய மகன் வைத்திய நாதரின் புத்திரியே ஸ்ரீமதி சிவகாமிப்பிள்ளை யுடைய தாயார். இங்ஙனமாகப் பிதா வழியாலும் மாதா வழியாலும் பிரபலஸ்தர்களாய் விளங்கிய மேன்மக்களின் மரபைச் சார்ந்த இப் பெண்மணி, நற்பழக்க வொழுக்க முடையாய் வளர்ந்து, வீரநாராயண முதலியார், முருகேசச் சட்டம்பியார் சண்முகத்தார் என்போருடைய வழித்தோன்றலாயுதித்த ஸ்ரீமான். தம்பையா முதலியாருடைய மகன், முருகேசுவை விவாகஞ் செய்து இல்லற தருமத்தை நடத்தி ஈசனருளால் Tambyah எனனும் ஓர் ஆண் மகவைப் புத்திரனைப் பெற்று ஸ்ரீமான் முருகேசு சிவபதமடைந்தனர். தன்னுடைய நாயகர் இறந்த பின்னர், இப் புனிதவதி, தருமசாஸ்திரங்களிலே விதித்தபடி, பெண்களுக்குரிய நாணம் மடம், அச்சம், பயிர்ப்பு, எனனும் நான்கையுமுடைய குலமகளாய், "காவற்றேன் பாவைபர்க் கழகு" என்னும் நீதிமொழிக் கிணங்கத் தன் மானத்தையும் மரியாதையையும் காப்பாற்றிய பதிவிரதா சிரோன்மணியாய், கற்புக்கரசியாய், மாதர்க்கணிகலமாய், பெண்களுள் நாயகமாய்,பெருமை யற்ற குணவதியாய் உலகில் நற்கீர்த்தியை நாட்டிய உத்தமியாய் விளங்குகின்றனர். ஸ்ரீமதி சிவகாமிப் பிள்ளையுடைய சிறந்த குணங்களையும், கற்பிலக்கணத்தின் பெருமையையும் கேள்விப்படாதோரில்லை யெனலாம், சிவானுபூதிச் செல்வி யாகிய இப் புண்ணியவதி இதுகாறும் செய்திருக்கின்ற தரும விஷயங்களோ அனந்தம். அவைகளை எழுதியடங்காது. ஆயினும் ஒருவாறு சுருக்கமாகச் சொல்லுகில். சிவா

லயம், மடாலயம், வித்தியாலயம், அன்னசத்திரம், தண்ணீர்ப் பந்தல் முதலான வற்றிற்கும், ஏழைக் கன்னியர்களுக்கும், இனசனங்களுக்கும் இரப்போருக்கும் சிவனடியார்களுக்கும் இல்லையென்னுது பொருள்கொடுக்கும் உத்தமி. கதிர்காமம்,முனீஸ்வரம், நல்லூர், சீகாழி, சிதம்பரம், திருச்செந்தூர், சேது, இராமேஸ்வரம் முதலாகிய புண்ணிய க்ஷேத்திரங்களைத் தரிசிக்கும் சிலாக்கியத்தைப் பெற்ற புண்ணியசாலி. பொதுவாக இவ்வம்மையார் சைவ சமய விருத்தியின் பொருட்டுப் பெருந்தொகைப் பொருள் செலவிட்டிருக்கின்றனர். சிவாலயங்களிலே பூசை, உற்சவம், பிராமண போசனம், அன்னதானம், முதலான வற்றை இது பரியந்தம் குறைவின்றி நடாத்திவருகின்றனர். இனி எப்படியாகுமோ அறியேம். தயவு தாட்சணியமுடைய இச் சீமாட்டியின் செயலை விரிக்கிற் பெருகும் ஆதலால் இவ்வளவில் முடிக்கின்றேம். இவ்வமையாருக்கு ஸ்ரீமந் நடராச மூர்த்தியின் திருவருளுண்டாகக்கடவது.

## N

## **Namasivaya Mudaliyar** "Jaffna House" Colombo

ஸ்ரீமான் நமசிவாய முதலியார்:—இவருடைய மூதாதைகளுக்கு சென்மஸ்தானம் முகமாலை. அவர்களுடைய பெயர்களாவன, இலங்கை நாத முதலியார், முத்த உடையார் சிவராமலிங்கம் என்னும் பெயர்களையுடைய பிரபுக்களாயும் மேன்மக்களாயும் விளங்கினுர்கள். சிவராமலிங்கமார்களுடைய புத்திரரே ஸ்ரீமான் நமசிவாயமுதலியார். இவர் அக்காலத்தில் செல்வச் சீமானுயிருந்து எண்ணில்லாத சற்கருமங்களைச் செய்து சிவலோகஞ் சென்றனர். உதாரணமாக இவர் தன்னுடைய காலத்தில் சிவாலயம் மடாலயங்களைத் தாபித்து, அவற்றிறகுப் போதிய பொருளையும் முதலாகக் கட்டிவைத்தனர். இதனுல் இன்றைக்கும் இவருடைய பெயர் உலகில் வழங்குகின்றன. இத் தருமஸ்தாபனங்களைப் புத்திரராகிய புரோக்கர் இரத்தினசபாபதி முதலியார் தம்மாலான மட்டும் பார்த்து வருகின்றனர். இவருக்குப்பின் இக்கருமங்கள் எவ்வாருகுமோ யாமறியேம் !

## W. D. Niles Esq. District, Judge, Colombo

டிஸ்திரிக் நீதிபதி ஸ்ரீமான் நயில்ஸ்:— தற்போது இராசதானியாகிய இக்கொழும்பு மாநகரில் "றிக்வெஸ்ற் கோடென்னும்" நீதிஸ்தலத்துக்குக் கொம்மிஷனராய் விளங்கும் இப்பேரறிஞருடைய சந்ததி வரலாற்றை இநதள்ளாரிடம் விசாரித்தபோது எமக்கு விபரமாயக் கூறுவாரில்லை. ஆகவே, யாம் ஒரு வயோதிகரிடம் சென்று விசாரித்தபொழுது அவர் ஆதியோடந்தமாகச் சிலவற்றைத் தெரிவித்தார். அதனை இங்கு தருகின்றோம். அதாவது புனாலைக் கட்டுவன் என்னுமிடத்தில் வேளாண் மரபிலேயுதித்த வேலாயுதர் என்று ஒருவர் இருந்ததாகவும், இவருக்கு கதிரேசர் என்று ஒரு புத்திரர் இருந்ததாகவும் அக்காலத்தில் இவர் மிஷனரியிற் சேர்ந்து கல்விகற்றுக் கிறிஸ்து மதத்தைத் தழுவி "Nathanielz Niles" என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றிருந்தன ரென்றும், இந்த நதானியல் நயில்சுக்கு ஜோன் நயில்ஸ் என்றும், டானியல் பூஅர் நயில்ஸ் என்றும், சாமுயூல் நயில்ஸ் என்றும், மூன்று புத்திரர்கள் உண்டென்றும் தெரிவித்தார். இந்த மூவருள் Danial Poor Niles என்பவர் வட்டுக்கோட்டை மிஷன் பாடசாலையில் கல்விகற்று அரங்கேறியதாகவும், அக்காலத்திருந்த பாதிரியாரைத் தமக்குத் துணையாகக்கொண்டு, வட்டுக்கோட்டையிற்றானே ஹைஸ்கூல் என்ற நாமத்துடன் ஓர் வித்தியாசாலையைத் ஸ்தாபித்துப் பல மாணவருக்குக் கல்வி கற்பித்து உலகில் நற்கீர்த்திபெறறு விளங்கினரென்றும் இவருடைய புத்திரரே இப்பொழுது நீதவானுயிருக்கின்றாரென்றும் அறியலானோம். ஆகவே ஸ்ரீமான W. D. நயில்ஸ் அவர்களுடைய திறமையைப் பற்றிப் பலரும் மெச்சியதால் இப்பேரறிஞரை யாமும் நன்குமதித்து எழுதலானேம். இவர் யாழ்ப்பாணத்திற பல காலம் பிரபல நியாயதுரந்தரராயிருந்து பிரக்கியாதி பெற்று விளங்கினார். இவருடைய திறமையை நன்குணர்ந்த அரசினர், டிஸ்திறிக் நீதிபதியாக நியமித்தனர். இவர் இதுகாறும் மட்டக்களப்பு, சிலாவம், திரிகோணமலை என்னுமிடங்களிற் கடமைபார்த்துப் பலராலும் நன்குமதிக்கப்பெற்றனர். வடமாகாணத்துள்ள நியாயவாதிகளுள் முதலாவதாக இவ்வுத்தியோகத்தைப் பெற்றவர் இவர் ஒருவரேயாம். இவர் ஆழ்ந்த அறிவும், அமைதியான போக்கும் விவேக புத்தியும், சாந்தகுணமும். மிக்க பொறுமையுமுடையாராய்க் காணப்படுகின்றனர்.

## Dr. S. L. Navaratnam, F.R.C.S. (Edin.) D.T.M. & H (Lon.)

ஸ்ரீமான் டாக்டர் நவரத்தினம்:—இவர் அராலிப் பகுதியில் தக்க குடும்பத்தைச் சார்ந்தவர். மலாய் நாட்டில் உத்தியோகமாயிருந்த திருவாளர் ஜே. வி. கந்தையா லம்பேட் அவர்களுக்கு அருமைப் புதல்வராக, ஆயிரத்து எண்ணூற்றுத் தொண்ணூற்றிரண்டாமாண்டு செப்டம்பர் மாதம் 23-ம் திகதி பிறந்தனர். இவர் கல்வியறிவொழுக்கங்களிலே சிறந்த யோக்கியராய், உயர்தரக் கல்விகற்று, ஒவ்வொரு பரீக்ஷைகளிலும் தேர்ந்து, இங்கிலாந்து சென்று வைத்திய முறைகளை நவீனமாகக் கற்று, விசேட பட்டங்களையும் பெற்றுத் தற்போது பிரபல டாக்டராய் விளங்குகின்றனர். சில வருடங்களுக்கு முன் "லங்கா நேசன்" என்னும் பிரசித்த ஆங்கிலப் பத்திரிக்குத் தலைவராயிருந்து நற் கீர்த்தி பெற்ற எமது நண்பர் ஸ்ரீமான் டாக்டர் சின்னதம்பியைப் போல் இவரும் உலகில் நற்கியாதி பெற்று வருகின்றனர். இவர் பெண்பாலார்க்குரிய வைத்திய முறைகளைச் செய்வதில், மகா சாமார்த்தியமுடையவர். நாம் அறிகிற வரையில் தற்போது உலகம் இவரையே விசேடமாகக் கைக்கொள்கின்றது. இவரிடத்தில் வைத்திய முறைக்குரிய இலக்ஷணங்களும் தயவு தாக்ஷணியம், இன்சொல் இரக்கம், இது முதலாகிய தன்மைகளும், சாந்தம், பொறை, அடக்கம், முதலாகிய நற்குணங்களும் இயல்பாகவே யுண்டு ஸ்ரீமான் நவரத்தினம் நோயாளரைப் பரிட்சிப்பதிலும், ஆப்பரேஷன் செய்வதிலும், அனுபவத்திலும், சிறந்தவர். இவருடைய குணமகிமைகளை வியந்து பாராட்டாதாரில்லை. ஸ்ரீமான் நவரத்தினம் இன்னுஞ் சிலகாலத்துள் இலங்கையில் முதன்மை பெற்ற டாக்டராய்க் கீர்த்திப் பிரதாபமுற்று விளங்குவார் என்பது பிரசித்தம். இவருக்கு விவாகம், மாதகலை ஜென்மஸ்தானமாய்க் கொண்டு, கோலாலம்பூர்ப் பகுதியில், சேவையர் ஆபீசில் உத்தியோகமாயிருந்த மிஸ்டர் எஸ். ஏ. சின்னதம்பியவர்களுடைய புத்திரி ஸ்ரீமதி Florence Nesaratnam என்னும் பெண்மணியைக் கைப்பிடித்து Durairaja Sakuntala, Nathan, Ponnambalam, Sarojini, என்னும் நாமத்தையுடைய குழந்தைகளைப் பெற்றனர். இவர் மனைவி நேசரத்தினத்தின் குணமகிமையைப் பற்றிச் சொல்லுகில், கல்வியறிவிலும், விவேகத்திலும், குடும்ப பாரத்தை நடாத்துதலிலும் குணத்திலுஞ் சிறந்த புனிதவதியாய் விளங்குகின்றனர்.



Dr. S. L. NAVARATNAM, F. R. C. S. (Edin)

D. P. M. & H.

Meenambal Press

## K. Namasivayam Esq, Proctor & Notary. Colombo

பிறக்டர் கு- நமசிவாயம்:—இவர் மானிப்பிள்ளை வமிசத்துத் தோன்றிய, விசுவலிங்கமுதலியார், சந்திரசேகர முதலியார், சண்முகம்பிள்ளை, ஆறுமுகம்பிள்ளை, அம்பலவாணர் குலவீரசிங்கமவர்களின் மூன்றாவது புத்திரராவர். இவர் பிதாவழியாலும், மாதாவழியாலும் மானிப்பாயிலுள்ள பிரபுக்கள் வமிசத்தைச் சார்ந்தனர். இவர் 1900-ம் ஆண்டு ஜூன் மாதம் பிறந்தவர். சிறுபிராயம் முதலாக இங்கேயுள்ள பிரதான கல்லூரிகளில் கல்விகற்று ஜூனியர் சீனியர் என்னும் கேம்பிரிஜ் பரீக்ஷைகளிற் தேர்ந்து, நியாயப்பிரமாணங்களையும் பிறவற்றையும் சட்டக் கல்லூரியில் கற்றுத் தேறி, தற்போது தத்துவம் பெற்ற கரணியாகவும் பிரசித்த நொத்தாரிசாகவும் கடமை பார்த்து வருகின்றனர். இவர் மிகவும் கஷ்டப்பட்டு, கல்வியை இடைவிடாமல் ஊக்கமாகக் கற்றதால் கடவுளதுவியைக் கொண்டு யாவரும் கணிக்கத்தக்க மேலான பதவியில் விளங்குகின்றனர். மானிப்பாயாருள் இவரைப் போல் படித்து ஒரே முறையில் பாஸ்பண்ணி அதிபாலிய வயதில் பிரகபிராசியாரேனோ இது காறும் இல்லையெனலாம். இவர் மிக்க சோமையும், சாந்தகுணமும், பரோபகாரமுமுடையர். எவர்களோடும் இனிய வார்த்தை பேசுபவர். இதனால் இவருக்குத் தொழில் விருத்தியும் உலகில் நற்பெயரு முண்டாகப் பெற்றனர். இன்னும் இவரிடத்தில் அநேக விசேட குணங்களுண்டு. இனி, சமய சம்பந்தமாகச் சொல்லுகில் ஒரு சிறிதாயினும் ஆலயவழிபாடின்றி இருக்க மாட்டார். வருடந்தோறும் ஸ்தலயாத்திரை முதலானவைகளையுஞ் செய்து வருகின்றனர். இவருக்கு விவாகம் அதாவது கொழும்பிலுள்ள ஆதிகாலத்துத் தமிழ மக்களுள், பிரபலஸ்தராய் விளங்கிய தில்லையம்பலம் சின்னத்தம்பியார் மகன் மயிலுப்பிள்ளைச் சிருப்பருடைய புத்திரர் ஸ்ரீமான் வைத்தியலிங்கத்தின் கனிஷ்ட புத்திரியாகிய ஸ்ரீமதி Balambikai என்னும் பெயருடைய பெண்மணியை விவாகஞ் செய்தனர். இந்தப் பெண்மணி எம்மிடம் கல்விகற்ற நாள் முதலாக யாம் நன்கறிவேம். ஸ்ரீமதி பாலாம்பிகை இயல்பாக, நற்பழக்கம் சாந்தகுணம், கல்வியறிவு குருவிஸ்வாசம், தெய்வபக்தி, சங்கீதஞானம் இது முதலாகிய அரும்பெருங் குணங்களுடைய உத்தமியாய் வாழ்கின்றனள்.

## S. Natesa Pillai Esq. B A B.L, Parameswara College

ஸ்ரீமான் நடேசபிள்ளை:—தற்போது பரமேஸ்வரக் கல்லூரித் தலைமை ஆசிரியராய் விளங்கும் இப்பெரியாருடைய பெருமையை இப்புத்தகத்தில் எழுதியடங்காது. ஆயினும் சுருக்கமாய் இங்கு சிலவற்றைக் கூறிமுடிப்போம். இவருடைய வரலாற்றை ஆராயும்பொழுது, எந்நாட்டினும் நன்னாடாய் விளங்குவதும், காவேரியாற்றையும், காட்சிக்குரிய கட்டிடங்களையும், நறுமணப் பூஞ்சோலைகளையும், மாடமாளிகை, கூடகோபுர மென்னும் விசித்திர மண்டபங்களையும், மிகவழகாயமைக்கப்பெற்ற அரண்மனையையும், அதிநூதனமாய்க் கட்டப்பெற்ற ஆலயம், தடாகம், கூபம், ஆகியவற்றையும், மந்திரி பிரதானிகளையும், வித்துவான்களையும், நாவலர், பாவலர், நாட்டியக்காரர் என்னும் பல திறத்தாரையும் இடமாகக்கொண்டு, "பொங்குபேரிபொருமுரசம் மிருதங்கமோடு திமில்படை காரியுந், சங்குதாளந் தகுமிசைக்காகளம் விங்குசீரொலி வேணுவும் வீணையும்" என்றபடி நானாவித வாத்தியங்கள் ஒலிப்பத், தம ஆணையாச் சக்கரத்தைச் செலுத்தி அரசுபுரிந்த வேந்தர்கள் இராஜ ராஜ சோழனது தேசமாகிய தஞ்சாவூரை வாசஸ்தானமாயும், நாகபட்டணத்தைச் ஜென்மஸ்தானமாயுங் கொண்டு, பிரபலஸ்தர்களாய் விளங்கிய பெரியார் சந்ததியில், சைவவேளாண் மரபிற்றோன்றிய, திருவாளர் சுப்பையா பிள்ளையின் அருந்தவப் புதல்வராவர் இவர், 1895-ம் ஆண்டு வைகாசி மாதம் ஜனன மானாரென அறியலானோம். இவர் இயல்பாக நற்பழக்கவொழுக்கமும், சைவாசாரமும், சமயபக்தியும், சாந்தகுணமும் உடைய நற்புதல்வராய் வளர்ந்து, தஞ்சாவூரிலுள்ள ஹைஸ்கூலிலும், அதன் பின்னர், திருச்சியிலுள்ள செண்ட். ஜோசப் கல்லூரியிலும் கல்வி கற்று, ஆங்கிலம் தமிழ் என்னும் இரண்டு பாஷைகளிலும், மிக்க வல்லுனராய், சென்னைக்குச்சென்று, உயர்தரக் கல்வி கற்று, நியாயப்பிரமாணங்களிலும், பிறவற்றிலும் தேர்ந்து, மகாபாண்டித்திய முடையராய் பி. ஏ. பி. எல். என்னும் பட்டங்களைப் பெற்றுச் சிலகாலம் தஞ்சாவூரிற்றானே வக்கீலாயிருந்து பலராலும் நன்கு மதிக்கப் பெற்றனர். இவருடைய கல்வியின் பெருக்கத்தையும் அறிவின்றிறத்தையும் போற்றத்தக்கது. இரண்டொரு வருடங்களுக்குமுன்னர் யாமும் எமது நண்பர், ஸ்ரீமான் வீ. எம். முத்துக்குமாரு முதலியாரவர்களும், அவர் குழந்தைகளுமாகச்

சென்னைக்குச் சென்று திரும்பி வரும்பொழுது தியாகராஜ ஸ்வாமிகளின் உற்சவத்தைப் பார்க்கும் பொருட்டாகத் தஞ்சா வூரிற் சில நாட்கள் தாமதிக்கும்படி நேர்ந்தன. அப்பொழுது அவ்வூரில் அந்தஸ்துடையர்களா யிருக்குஞ்சில கனவான்களை யும், உத்தியோகஸ்தர்களாயிருக்கும் பல பிரபுக்களையுஞ் சந் தித்து, அவர்களோடு சம்பாஷித்தற்கு சமயம் வாய்த்தது. அப் பொழுது ஸ்ரீமான் நடேசபிள்ளை யுடைய குணமகிமைகளை வியந்து பலரும் புகழ்ந்து பாராட்டிப் பேசியதைக் கேட்டுச் சந்தோஷமடைந்தோம். இத்தகைய இலக்ஷணங்களை யுடைய எமது நண்பர் ஸ்ரீமான் நடேசபிள்ளை, தமிழரசருக் கொப்பாய் விளங்கும் கௌரவ சேர். இராமநாதனவர்களுடைய கனிஷ்ட புத்திரி, ஸ்ரீமதிசுந்தரி என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து, தமிழகத்தாருட் புலமை வாய்ந்த பேரறிஞராய, பிரக்கியாதியுடன் விளங்குகின்றனர்.

## C. Namasivayam Esq., J. P. "Ayodhya"

காலஞ் சென்ற ஸ்ரீமான் நமசிவாயம்:—இவர் இவ் விலங்காபுரியிலுள்ள தமிழ மக்களுள்ளே தருமப் பிரபுவாயும், தரு மங் கொடுப்பதில் சிறந்த கொடைவள்ளலாயும், சைவ சமயத் தின் பொருட்டுச் சற்கருமங்களைச் செய்யும் சற்பாத்திரராயும், அட்டைஸ்வரியப் பிரபுவாயும், பிரக்கியாதி பெற்று விளங்கினர். சுருக்கமாகச் சொல்லில் இவர் தம்முடைய சீவிய காலத்தில் சிற் றரசருக் கொப்பாயிருந்தனர். ஸ்ரீமான் நமசிவாயம் ஆண்மையும் அறிவும் பரோபகாரசிந்தையும், பெருந்தன்மையும் உடையராக வாழ்ந்தனர். இனி இவருடைய கொடையின் சிறப்பைப் பற்றி சொல்லுகில் அதனை உலகம் அறியுமாதலால் யாம் சொல்லவேண் டுவதில்லை. கொடையிலும் பலவிதமான கொடைகளிருக்கின் றன. ஆகவே ஸ்ரீமான் நமசிவாயமவர்களிடத்தில் "பாத்திர மறி ந்து கொடுப்பதாகிய" குணமே மிக்க விசேடமாயிருந்தது. இவர் கல்விமான்களிடத்தில் மிக்க பிரீதியுடையர். உதாரணமாக, காலஞ் சென்ற வித்துவான் தாமோதரம் பிள்ளையையும், எம்மையும் போஷித்து வந்தனர். யாங்களிருவரும் ஒருமித்தெழுதிய "கதிர் காம புராணத்தை" தம்முடைய செலவிற்றானே அச்சிடுவித்துப் பரோபகாரமாயுபகரித்தனர் இன்னும் இது போன்ற எத்

தனையோ சற்கருமங்களைச் செய்திருக்கின்றனர். இதுவன்றியும் இவர் இங்கிருந்து குடும்பத்தோடு, காசிக்குச் சென்று ஸ்தலயாத்திரை, தீர்த்த யாத்திரையுஞ் செய்தனர். இங்கிலாந்துக்கும் போய் வந்தனர். "கொங்கோங்" வங்கிக்குப் பிரதம சிறுப்பாயிருந்து ஜே. பி. முதான பட்டங்களைப் பெற்று "போட் கொம்மிஷன்," றயில்வே "அட்வைசறிபோட்" முதலான வற்றில் மெம்பராயிருந் தனர். மரியாபரண முதலியார், கனகசபை முதலியார், காரா ள உடையார், சின்னதம்பியார் மகன் புரோக்கர் சிவகுரு நாகரு டைய புத்திரி சின்னச்சிப்பிள்ளை என்னும் மாதை விவாகஞ் செய்து Pathmavati, Sri Namasivayam, என்னும் பெயரை யுடைய பிள்ளைகளைப் பெற்று, இருபதா மாண்டு சூலாய மாதம் 29-ம் திகதி சிவபதமடைந்தனர். இப்பொழுது இவர் புத்திராகிய ஸ்ரீநமசிவாயம் என்பவர் பிதாவுடைய வேலையைப்பார்த்து வரு கின்றனர, "விளையும் பயிரை முளையிலே தெரியு" மென்றபடி அதிபாலிய வயசு முதல் எம்மிடம் கல்வி கற்றதால் இவருடைய குணமகிமையை யாம் நன்கறிவோம். பிதாவைப் போல் பெருந் தன்மையுடைய பிள்ளையாய்க் காணபபடுகின்றனர். ஸ்ரீமான் நமசிவாயம், தமிழரசர் வமிசத்துத் தோன்றிய தனபாலசிங்க முதலியார் மனபபுலிசிங்க முதலியார், கதிர்காமர், சுப்பிரமணியம் கதிரவேலருடைய புத்திராவர்.

## S. Nagendra Esq Auctioneer & Broker Colombo

ஸ்ரீமான் செ நாகேந்திரா:—இவர், இந்நகரில் பிரபலஸ் தர்களாய் விளங்கும் மானிப்பாயப் பிரபுக்களின் வமிசத்தைச் சார்ந்தவர். மதராஸ வங்கியில் பலகாலம் இரண்டாஞ் சிறுப்பா யிருந்து காலஞ் சென்ற திருவாளா சின்னத்தம்பியார மகன சிறுப் செல்லையா பிள்ளையவர்களுடைய இரண்டாவது புத்திராவர். இவர் 1890-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 2-ம் திகதி சென்னமான வர். சிறுபிராயம் முதலாக நற்பழக்க வொழுக்கமுடையராய் வளர்ந்து, வெஸ்லிக் கொலீச்சில் கல்வி கற்றுத் தற்போது ஜெனரல் புரோக்காரகவும் கொம்மிஷன் ஏஜண்டாகவும் கடமை பார்த்து வருகின்றனர். பிறவிச் செல்வர்களாய் வளர்ந்திருக்கும் இக் காலத்துச் சிறுவர்களுள், இவரைப்போல் சமயபக்தியும் சமயாசார மும் நற்குண நற்செய்கையும், பெருந்தன்மையும், சாந்தகுண மு

முடைய உத்தமரைக்காண்பதரிது. இவர் தெய்வபக்தியுள்ளவர். பிதா, மாதா, குரு, உபாத்தியாயர் என்னும் பெரியோர்களிடத்தன்புடையவர். சிவஸ்தலங்கள் எங்கெங்கு இருக்கின்றனவோ அவ்வவ்விடங்களில் இவரையும் இவருடைய மனைவியாரையுங் காணலாம். இவர் மற்றுஞ் சிறுவர்களைப் போல் வீண் விஷயங்களில் விருப்பமுடையவரல்லர். யாம் எமது அநுபவமாயிலாக இவரிடத்தி லுள்ள விசேட செயல்கள் பலவற்றைக் கண்டிருக்கின்றேம். இவர், கதிர்காமம், நல்லூர், முனீஸ்வரம், மருதடி, முதலாகிய க்ஷேத்திரங்களுக்கும் இந்தியாவிலுள்ள புண்ணிய ஸ்தலங்களுக்கும் செல்பவர் ஸ்ரீமான் நாகேந்திராவுடைய அரும் பெருங் குணங்களைப் பற்றி எழுதுகில் எவ்வளவும விரித்து எழுதலாம். ஆகவே நாம் சுருக்கமாய்க் கூறலானேம். முனீஸ்வராலயத்துக் கென்று ஓர் அழகிய விமான மொன்றை அமைப்பித்திருப்பதாக வும அறியலானோம். இதுவன்றியும் இவர் காப்பிராளைப் பிள்ளையார் கோவிலின் ஆதீன கர்த்தாவுமாவர். இவ்விஷய மிருப்ப இனி, இவருடைய தேகாப்பியாசத்தின் நிறமையைப் பற்றிச் சொல்லுகில், கிறிக்கெற் என்னும் பந்தாட்டத்தில் பெருங் கியாதி பெற்றவர். எத்தனையோ பரிசுகளையும் பெற்றிருக்கின்றனர். தமிழ் புனியனுக்கு கப்டனுமாவர். இவருக்கு விவாகம், இந்நகரிற் பாரிய தனவந்தராயும் சீமை வர்த்தகராயுமிருக்கும் ஸ்ரீமான் சி. சண்முகவர்களுடைய புத்திரி Srimati Kalvinayaki என்னும் பெண்மணியை விவாகஞ் செயதது. Rajeswari Chelliah, Vanendra, என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப் பெற்றனர். இவருடைய மனைவியின் குணவிசேடத்தைப பற்றிச் சொல்லுகில் பிதாமாதாவைப் போல் நற்பழக்கமும், நல்லொழுக்கமும், சாந்த குணமும் தெயவபக்தியுமுடைய குணசாலியாவார் இப்பெண்மணி கல்விக்கு நாயகமாயுள்ள தெய்வத்தின் பெயரையும் பெற்றனள்.

## A. Nagalingam. Appraiser H. M. Customs

ஸ்ரீமான் அ. நாகலிங்கம்:—இவர் உரும்பாராயென்னுமிடத்தில் சிவநேயச் செல்வர்களாய் கமம், புலம், ஆதியவற்றையுடைய பெரியார் சந்ததியைச் சார்ந்த திருவாளர் அப்பாத்துரையவர்களின் புத்திராவர். ஸ்ரீமான் நாகலிங்கம் நற்பழக்கவொழுக்கங்களிற் சிறந்த உத்தமராய், துறைமுகக் கந்தோரென்

னும் கஸ்ற்றம் ஆபீசில் லிகிதராகச் சேர்ந்து தமது கடமையை யதிகதிறமையோடு பார்த்து,பலராலும் நன்குமதிக்கப் பெற்று தற்போது இக்கந்தோரில் மிகப் பொறுப்பு வாய்ந்ததும் மேலான உத்தியோகமுமாகிய அபறெயிசர் என்னும் பதவியிலிருக்கின்றனர். ஸ்ரீமான் நாகலிங்கம் சொற்ப வயதுடையராயிருந்த போதிலும் கல்வியிலும், அறிவிலும், நற்குண நற்செய்கைகளிலும், நேர்மையிலும், விவேகத்திலும், பரோபகார சிந்தையிலும், சற்கருமங்களைச் செய்தலிலும், இன்சொல் இரக்கம், ஈகை, முதலான பெருந்தன்மைகளிலும் சிறந்தவர். ஸ்ரீமான் நாகலிங்கம் இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்னும் மூன்றையும் விருத்தி செய்யும் பொருட்டாக லங்கா சுபோத விலாச சபையென்னும் நாமத்துடன் விளங்கிய நாடக சபையைச் செவ்வனே நடாத்தி பற்பல சரித்திரங்களைப் பகிரங்கமாக நடித்துக் காண்பிக்கும்படி பிரயத்தனங்களைச் செய்து, சங்கீத ஞானத்தையும், தமிழ்ப்பாஷையையும் விருத்தி செய்தற்குக் காரணராயிருந்தனர். ஸ்ரீமான் நாகலிங்கமவர்களுக்கு விவாகம், வட்டுக்கோட்டையில் பிரபலஸ்தராயிருந்த ஸ்ரீ சதாசிவம் பிள்ளையவர்களின் புத்திரியை விவாகஞ் செய்து சற்புத்திர சந்தானங்களையும், சகல செல்வங்களையும் பெற்றனர். ஸ்ரீமான் நாகலிங்கம் நல்ல குலத்திலே யுதித்தமையால் நற்கருமங்களுக்கு உதவி செய்து வருகின்றனர். உதாரணமாக விவேகானந்த சபை, தமிழ் யூனியன், நாடக சபை, முதலான வற்றிற்கும் இதைபோன்ற பலவித சங்கங்களுக்கும், பள்ளிக்கூடங்களுக்கும் பொருளுதவி சரீர உதவி என்பவைகளைச்செய்து வருகின்றனர்.

## C. T. Navaratnam Esq, Proctor & Notary Colombo

ஸ்ரீமான் பிறக்டர் நவரத்தினம்:— இவர் நல்லூரைச் சார்ந்தவர். இவ்வூரில் பிரபல நியாயதுரந்தராயிருந்து பிரக்கியாதி பெற்று விளங்கிய எமது நண்பர், ஸ்ரீமான் பிறக்டர் கந்தையாவுடைய சகோதரராவர். இவருடைய தன்மைகளைப்பற்றி எமக்கு அதிகம் தெரியாது. ஆகவே யிங்கு சுருக்கமாக எழுதலானேம். யாம் ஒரு பெரும் மனுஷனுடைய வீட்டுக்குப் போயிருந்தேம். அப்பொழுது இவர் அப்பெரும் மனுஷனோடு சம்பாஷித்துச் சென்றபின்னர், இவரை இன்னாருடைய தம்பியென்றும், கந்தையாவுடைய கடமைகளைப் பார்த்து வருகின்றாரென்றும், வியப்பாய்க்கூறக் கேட்டுளேம். ஆகவே ஒருவருடைய குணமகிமைகளை யாம் நன்கறியாமல் எழுதுவது எமக்கு அழகல்ல. இதுகாறும் யாமறியாத பிரபுக்களும், உத்தியோகஸ்தர்களும் இல்லையெனலாம். யாம் நன்கு ஊடாடிப் பழகியவர்களை மாத்திரம் இப்புத்தகத்தில் குறிப்பிடலானேம். இவரைப்பற்றி மறுபதிப்பில் கூறுவேம்.

## N Nadaraja, Esq, B. A. Advocate, Colombo.

ஸ்ரீமான் அத்துவகாத் நடராஜா:—இவர் எந்நாட்டிலும் நன்னாடாய்ச் சிறந்துவிளங்குவதும் சைவப்பயிர் தழைத்தோங்கி வளர்வதுமாகிய காரை நகரில், வலந்தலையென்னுங் கிராமத்தில் குற்றமற்ற இலக்கணங்களையுடைய சைவ வேளாண் மரபில் பரம்பரையான செல்வர்களாய் அடிமை குடிமை ஐசுவரியம் பிரபுத்துவம் கீர்த்தி உத்தியோகம் தனதானிய சம்பத்து விளைநிலந் தோட்டம் ஆதிய, அணிகளோடு சிவானுபூதி செல்வர்களாய், பக்தி வைராக்கிய ஞானங்களிற் சிறந்த யோக்கியர்களாய், கல்வியறிவொழுக்க முடைய பேரறிவாளர்களாய விளங்கிய பெருமக்கள் வம்சத்திற் றோன்றியவரும், சிங்கப்பூர்ப் பகுதியிலுள்ள சேவையர் ஆபீசில் பலகாலம் உத்தியோகமாயிருந்து பற்பல சாதியார்களால் சன்மானிக்கப்பட்டவரும், சைவாசாரமுடையவரும் சற்குண சம்பன்னருமாகிய திருவாளர் நமசிவாயம்பிள்ளை யவர்களுக்குப் பூர்வ புண்ணியவசத்தால் இப்புவிமீது வந்துதித்த உத்தம புத்திரராவர். இவர் 1897-ம் ஆண்டு சொந்தவூராகிய வலந்தலை யென்னுமிடத்தைச் ஜெனனஸ்தானமாக வுடையவர். சிறுபிராயம் முதலாக நற்பழக்கமும் நல்லொழுக்கமு முடையவராய் வளர்ந்து யாழ்ப்பாணத்து சென்பற்றிறிக் என்னும் கல்லூரியிலும் அதன் பின்னர் கொழும்பிலுள்ள சென்ஜோசெப் என்னும் கல்லூரியிலும், கல்விகற்று மகா பாண்டித்திய முடையவராய் உயர்தரக் கல்விகற்று லண்டன் பி. எ. முதலான பரீட்சைகளில் முதன்மையாகச் சித்திவாய்ந்தனர். ஸ்ரீமான் நடராஜா கல்வியறிவிலும், விவேகத்திலும், சிறந்த கலாவல்லுனரானபடியால் நியாயப் பிரமாணங்களிற் சிறந்த ஞானமுடைய நிபுணராய் விளங்குகின்றனர். இந்நகரில் நியாயதுரந்தரர்களா யிருக்கும் பல்லாயிரவர்களுள் பிரக்கியாதி பெற்று, முதன்மையாய் விளங்குபவருளொருவராவர். "பொற்பறிவில்லாத பல புத்திரரைப் பேறலின்னோர் நற்புதல்வனைப் பெறுதல் நன்றாம்" என்னும் நீதி மொழிக்கிணங்க காலஞ்சென்ற திருவாளர் நமசிவாயம்பிள்ளை நல்லறிவோடு கூடிய நற்புதல்வனைப் புத்திரனைப் பெற்றனர். இதுபற்றியே தெய்வப்புலமைத்திரு வள்ளுவநாயனார் மக்கட் பேற்றின் திறத்தைக்குறித்துத் தமது அருமைத்திருவாக்கால் "பெறுமவற்றுள் யாமறிவதில்லை யறிவறிந்த மக்கட் பேறல்லபிற" என்ப

தனால் உணரச் செய்திருக்கின்றனர். எமது நண்பர் ஸ்ரீமான் நடராஜாவுடைய சாதுரியத்தையும், விவேக புத்தியையும், நேர்மை யையும், வளக்குகள் பலவற்றை யதிக திறமையோடு நடாத்தி வருவதையும் அறியாதாரில்லை. சுருக்கமாகச் சொல்லுகில் ஸ்ரீமான் நடராஜா, சைவாசாரம், சிவத்தியானம், சிவபக்தி, ஆலயவழிபாடு, இன்சொல் இரக்கம், ஈகை, சாந்தம், பொறை, அடக்கம், முதலா யுள்ள விசேட குணங்களையுடைய சற்குண சிலராவர். இந்தி யாவிலுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று ஸ்தலயாத் திரை, தீர்த்தயாத்திரை, செய்திருக்கின்றார். சைவசமய விருத் தியின் பொருட்டு சற்கருமங்களுக்கும் ஏழைகளுக்கும் இல்லை யென்னாது தருமங் கொடுப்பவர். ஆலயங்களிலே பூசை உற்சவ முதலியவற்றைக காலந்தோறும் விதிப்படி செய்கின்றவர். விவே கானந்த சபை அங்கத்தவருமாவா. ஸ்ரீமான் நடராஜா அவர் களுக்கு விவாகம், காரைநகர் வாசரான ஸ்ரீமான் கனகசபையவர் களின் புத்திரி **ஸ்ரீமதி தங்கம்மாள்** என்னும் பெண்பணியை விவா கஞ் செய்தனர். இப்பெண்ணரசியின் உத்தம குணங்களை சொல் லுமிடத்து, கல்வியறி வொழுக்கங்களிலும், நற்குண நற்செயகை களிலும், தன் நாயகனுடைய குறிப்பறிந்து ஏற்ற பணிகளைச் செய்தலிலும், குடும்ப பாரத்தை வகித்து நடாத்துதலிலும், விவே கத்திலும் சிறந்த புனிதவதி. மகா உத்தமியாய் விளங்கும் இப் பெண்மணி ஆகம சாஸ்திரங்களை நன்கு கற்று பாலபண்டிதர்க் குரிய பரீக்ஷையில் சித்தியடைந்த பண்டிதையுமாவர்.

## **Mr. C. S. Nadaraja,** H M. Customs

திருவாளர் சு. நடராஜா:—இவர் காலஞ் சென்ற ஸ்ரீமான் சுந்தரம்பிள்ளை யவர்களுடைய சிரேஷ்ட புத்திரராவர். இவர் ரோயல் கல்லூரியில் கல்விகற்றுத் தற்போது கஸ்ற்றம் ஆபீ சில் ஓர் லிகிதராயிருக்கின்றனர். இவ்விளைஞரை யாம் நன்கு மதி த்து இப்புஸ்தகத்தில் எழுதியதற்குப் பல நியாயங்களிருக்கின்றன. இதனை மற்றையோர்களுஞ் சிந்திப்பார்களாக. முதலாவதாக இவருடைய நற்பழக்க வொழுக்கங்களே எம்முடைய மனதைக் கவர்ந்தன. இரண்டாவதாக இக்காலத்துச் சிறுவருள் இவர் குணத்தினால் விசேடமாகத் தோற்றப்படுகின்றனர். மூன்

றாவதாக நற்குடியிலே யுதித்தனர். நான்காவதாக ஒரு குடும்பத்துக்குத் தலைப்பிள்ளையாயிருக்கின்றனர். ஐந்தாவதாகப் பலருக்கும் பரோபகாரியாயிருந்த ஒரு பெரும் மனுஷனுடைய பிள்ளையாயிருக்கின்றனர். ஆறாவதாக ஆபோடும் அன்பாய் ஊடாடுகின்றனர். ஏழாவதாக இவருடைய பிதா இறந்ததும், அரசாங்கத்தார் அன்னாரிடத்துள்ள அன்பு காரணமாய் இவ்விளைஞரை உடனே அழைத்து உத்தியோகத்தில் அமரச் செய்தனர். இக்காரணங்கள் பற்றியே யாமும் அபிமானமேற்பட்டால் இங்கு எழுதலானோம். ஆகவே "பெரியோரெல்லாம் பெரியருமல்லர் சிறியோரெல்லாஞ் சிறியருமல்லர்"

## I. A. Newton Esq. Apothicary "Private Hospital"

திருவாளர் அழகையா நீயூட்டன்:—இவருடைய பூர்வீகம் வல்வெட்டி. இவருடைய ஞாதிகள் சுதுமலை சுண்டிக்குளி, பருத்தித்துறை, ஆதிய விடங்களில் வசிக்கின்றனர். இவருடைய முதாதைகள் கல்வியறி வொழுக்கமுடையர்களாய் உத்தியோகங்களிலும், உபாத்தியாயத் தொழிலிலும், சிறந்து விளங்கினார்கள். உதாரணமாக அக்காலத்தில் தம்பியான் நீயூட்டன், என்றம பொன்னையா நீயூட்டன், என்றும் இருவரிருந்தனர். இவர்கள் யாழ்ப்பாணத்துள்ள கிறீஸ்தவர்களால் நடாத்தப்படும் புதினப்பத்திரிகைகள் சில வற்றிற்கு ஆசிரியர்களாகவும், அதன் பின்னர் பள்ளிக்கூடங்களில் போதகாசிரியர்களாகவும், கிறீஸ்து மதாபிமானிகளாகவும் பிரபலமுற்று விளங்கினார்கள். இவர்களுடைய வழித்தோன்றலாயுதித்தனர். அழகையா நீயூட்டன். இவர், தம்முடைய முதாதைகள் எவ்விதமாயிருந்தார்களோ, அவ்விதமாகவே யிருக்கின்றனர். இனி யாம் இவருடைய குணத்தைப் பற்றிச் சிறிது சொல்வோம். இவர் ஏறக்குறைய 18 வருடகாலங்களாய் கனந்தங்கிய ஸ்ரீமான் டாக்டர் இரத்தினமவர்களுடைய பிறைவேற் ஹொஸ்பிற்றல் என்னும் ஆசுபத்திரிக் கணித்தாயிருக்கும் மருந்துச் சாலையில் "அப்போத்திக்கரி" யாகக் கடமை பார்த்து வருகின்றனர். இவர் மிக்க நேர்மையும், சாந்தகுணமும், தேவபத்தியுமுடையர்.

## **K. Nagalingam**, General Merchant Colombo.

ஸ்ரீமான் கா. நாகலிங்கம்:—இந்நகரில் பிரபல வர்த்தகராய் விளங்கும் இப் பரோபகாரசீலர் புங்குடுதீவைச் சென்மஸ்தானமாயுடையவர். அந்நாட்டில் பலவித செல்வாக்குக்களையுடைய மேன்மக்களின் மரபைச்சார்ந்தவர். இவருடைய ஞாதிகளுட் பலர் கொடுவாய் ராச்சியப்பகுதியில் பெரும் உத்தியோகஸ்தர்களாயிருக்கின்றனர். இன்னுஞ் சிலர் உள்ளூரிற்றானே கிராமாதிகாரிகளாயும், தலைமைக்காறர்களாயு மிருக்கின்றனர். இவருடைய தகப்பனா பெயர் கார்த்திகேசு. இவர் புங்குடுதீவு கிழக்கிலே தக்க குடும்பத்தைச்சார்ந்த யோக்கியர். யாமறிகிற வரையில் தீவு ஏழுகோவிற் பற்றுள்ளும் மிக்கவிசேடமாயுள்ள தீவு, புங்குடுதீவு ஒன்றேயாம். இங்கு வசிப்போர் சாதிமரபாலும், சமயபக்தியாலும், ஒழுக்கத்தாலும், ஒற்றுமையாலும், மற்றும் எவ்வகையாலுஞ் சிறந்தவர்கள் என்பதற்குச் சந்தேகமில்லை. அநுபவத்திலும் இவ்விஷயம் ஒத்திருக்கின்றன. இதுவன்றியும் பட்டணப் பகுதியிலிருக்கும் பாரிய குடும்பத்தினர் எல்லாரும புங்குடுதீவு வாசிகளேயாம். இத்தன்மையுடைய பெருமக்கள் வசிக்கும இவ்வூரில் ஸ்ரீமான் நாகலிங்கத்துக்கு நடப்பும, நட்டாண்மையும், மதிப்பும் மரியாதையும், அதிக மென்று சொல்லலாம். ஸ்ரீமான் நாகலிங்கம் குலத்துக்கேற்ற குணமும், சமயாசாரமும், தேசாபிமானமும், தரும சிந்தையு முடையர். சற்கருமங்களாயுள்ள சிவ புண்ணியங்களைச் செய்திருக்கின்றனர். உதாரணமாக சிலவற்றைக் கூறுவேம். கலட்டி என்னுமிடத்திலுள்ள விநாயகர் ஆலயத் திருப்பணியைச் செய்து முடித்தனர். சிவன் கோவிற் றிருப்பணிக்குப் பெரும் பொருள் கொடுத்திருக்கின்றனர். அவ்வூரிலுள்ள சைவ வித்தியா சாலைகளுக்கும், மற்றும் ஆலயங்களுக்கும் போதிய துணைச் செய்துவருகின்றனர். கதிர்காம யாத்திரை வாசிகளுக்குப் பொருளுதவி சரீரஉதவி, என்பவைகளை வருடந்தோறும் செய்து வருகின்றனர். புகுங்குடுதீவு "ஐக்கிய சங்க மென்னும் மகாசபைக்குத்" தலைவருமாவர். இவருடைய சகோதரரே ஸ்ரீமான் கணபதிப்பிள்ளை.

## K. C. Nathan Esq, Proctor & Notary, Ratnapura.

ஸ்ரீமான் பிறக்டர் சிதம்பரநாதன்:—இவர் வட்டுக்கோட்டையில் சைவ வேளாண்மரபில், சிவபூஜாதுரந்தரர்களாயும் நைட்டிகர்களாயும், கல்விமான்களாயும், பிரக்கியாதி பெற்று விளங்கும் பாரிய குடும்பத்தைச் சார்ந்தவர். இவருடை பாட்டனார் பெயர் கந்தேசச் சட்டம்பியார். இவர் பரம் பரையான வித்துவாம்சர்களது சந்ததியிலுள்ளவர். புராண காவியங்களை அர்த்தம் பண்ணுவதில் அதிக சமர்த்தர். இவருடைய புத்திரரே ஸ்ரீமான் கந்தையாபிள்ளை. இவரும் தம்முடைய பிதாவைப் போல் கல்வியறி வொழுக்கங்களிற் சிறந்தவர். இவரை யாம் நன்கறிவோம். சைவ சித்தாந்த சாஸ்திரங்களை முறைப்படி கற்றவர். சிவாலயங்களிலே புராணபடனம், பிரசங்கம், ஆதியவற்றை அன்புடன் செய்பவர். ஸ்ரீமான் கந்தையாபிள்ளையுடைய சிரேஷ்ட புத்திரரே எமது நண்பராகிய அருவாளர் சிதம்பரநாதன். இவருடைய பெருமையைப் பற்றி எழுதுகில் வேண்டிய மட்டும் எழுதலாம். ஏனென்றால் "கற்றோர் கனமறிவார்" ஆகவே சிலவற்றை மாத்திரம் சுருக்கமாயிங்கு கூறுவோம். ஸ்ரீமான் சிதம்பரநாதன் யாழ்ப்பாணத்திலே கல்வி கற்று கேம்பிறிஜ் பரீக்ஷைகளிற் தேர்ந்து இந்துக் கல்லூரியைப் போன்ற கலாசாலைகளில் ஆசிரியராயிருந்து, மதுரைத் தமிழ் சங்கத்துப் பண்டிதர் பரீக்ஷயில் சித்திபெற்று, நியாயப் பிரமாணங்களையும பிறவற்றையும் நன்குகற்று அதிலும் சித்தியடைந்து, சில ஆண்டுகளாகக் கொழும்பிலே கடமை பார்த்து வந்தனர். தற்போது இரத்தினபுரியில் பிரபல நியாயதுரந்தரராய் விளங்குகின்றனர். இனி இவருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகில், இவரொரு பரமபக்தன். சைவாசாரங்களிற் சிறந்தவொழுகும் இயல் புடையர். புராணபடனம், கதாப்பிரசங்கம், அரிபஜனை, முதலானவைகளைச் செய்பவர். தேவாரம், திருவாசகம், திருப்புகழ், ஆதியவற்றைப் பண்ணுடன் ஓதுபவர். சைவசித்தாந்த சாஸ்திர வுண்மைகளையுள்ளபடி ஆராய்வு செய்பவர். கதிர்காம நாதனைக் கனவிலும் மறவாதவர். பரோபகாரமா யிதுகாறும் அனேக சற்கருமங்களையுஞ் செய்திருக்கின்றனர்.

## N. Neethi Raja, Esq, Broker, Colombo.

ஸ்ரீமான் புரோக்கர் நீதிராஜா :—இவ்வுத்தமர் சீர் கொழும்பை சென்மஸ்தானமாயுடையவர் தற்போது பிரபல புரோக்கர்மாராய் விளங்கும் மேன்மக்களுளொருவராவர். இவர் 1883-ம் ஆண்டு ஆடி மாதம் ஜெனனமானவர். இவருடைய முதாதைகளின் பூர்வீக வரலாற்றை ஆராயுமிடத்து, நாகபட்டணம், மஞ்சக்குப்பம், ஆகிய இடங்களிலிருந்து சங்கிலி ராசன் யாழ்ப்பாணத்தை அரசாண்ட காலத்தில நல்லூர, கள்ளியங்காடு, தெல்லிப்பழை, ஆகிய இடங்களில் குலாசாரம், பூண்ட மேன் மக்களாயச குடியேறிய பெரியார வழித்தோன்றலாயிருக்கனர். இவருடைய பந்துக்களுட் பலர், சென்னை முதலகிய இராசதானிகளில் பெரும் உத்தியோகஸ்தர்களாயும் பிரபலஸ்தா களாயும் விளங்குகின்றனா. கொழும்பிலும் ஞாதிகளுட் சிலர் மேலான உத்தியோகங்களிற் காணப்படுகின்றனா. இது நிற்க ஸ்ரீமான் நீதிராசாவுடைய சிறந்த குணங்களைப் பற்றி இங்கு சுருக்கமாகக் கூறுவோம். இவர் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த சற்பாத்திரராய, சமயபக்தியும், சைவாசாரமும், உடையயோக்கியராய் பரோபகாரம், பிரபுத்துவம், பெருந்தன்மை, சாந்தம், பொறை அடக்கம், முதலாகிய பெருங் குணங்களை உடையராய், ஆங்கில வர்த்தகக் கம்பனிகளுக்கு ஜெனரல் புரோக்கராகக் கடமை பார்த்து, நற்பெயரும நற்கீர்த்தியும் உண்டாகப் பெற்று, பிரபலஸ்தராய் விளங்குகின்றனர். தரும விஷயங்களையுஞ் செய்திருக்கின்றனர். இவர் 1921-ம் ஆண்டில் ஸ்தலயாத்திரை தீர்த்தயாத்திரை செய்யும்பொருட்டாக இராமேஸ்வரம் முதல், காசி பரியந்தமுள்ள பாடல்பெற்ற சிவஸ்தலங்கட்கும, புண்ணிய க்ஷேத்திரங்கட்குஞ் சென்று சுவாமிதரிசனஞ்செய்து மீண்டனர். நோய்வாய்ப்பட்டிருந்த அன்னையாது ஈமக்கடன்களை விமரிசையாகச் செய்யும் பாக்கியத்தையும் பெற்றனர். நற்குண நற்செய்கைகளையுடைய இவ்வுத்தமரை அறியாதாரில்லை. இவர் மிக்க நேர்மையும்,பரோபகார சிந்தையுமுடையர் என்பதற்கு,மனுஸ்மிருதியின்படி சொல்லப்பட்ட இலக்கணங்களை இவரிடத்திற் காண்கின்றோம். ஆகவே, யாம் இவரைப் பற்றி இன்னும் விரிவாய் மறு சரித்திரத்தில் விளக்கிக்காட்டுவோம்.

## C. Nagalingam Esq. Advocate Colombo.



ஸ்ரீமான் அத்வொகாத் நாகலிங்கம்:—இவர், இலிங்க நாமத்தையுடைய சகோதரருளொருவராவர். இந்நகரிலுள்ள பல்லாயிரம் அப்புக்காத்துமாருள் பிரபலஸ்தராய் விளங்குகின்றனர். சில காலங்களில் இவர் அரிட்டிங் நீதிபதியாகவும் நீதாசனம் வகித்திருக்கின்றனர். இவருடைய திறமையைப் பற்றிப் பலருஞ் சொல்லக் கேள்விப்பட்டிருக்கின்றோம். "கற்றாரைக் கற்றாரே காமுறுவர்" என்னும் வாக்கியத்திற் கிணங்க அறிவுடையோர்களால் நன்கு மதிக்கப்பட்டு வருகின்றனர். அதனைக் கண்டு, யாமும் இப்பெரியாருடைய புகழைக் குறித்து இப்புத்தகத்தில் எழுதத் துணிந்தோம். உதாரணமாக "பொன்னம்பலம் பிள்ளைகளைப் போல்" இலிங்க நாமத்தையுடைய சகோதரர்களும் ஒரு காலம், உலகில் முதன்மைபெற்று விளங்குவார்களென்பதே பலருடைய கொள்கை. இது நிற்க இனி, இவருடைய பூர்வீக வரலாற்றை அறியும்பொழுது, இற்றைக்குச் சிலவருடங்களுக்கு முன்னர் கொம்மேஷியல் கொம்பனியில் பிரதான லிகிதராயிருந்து பலராலும் நன்கறியப்பட்ட திருவாளர் செல்லப்பாவுடைய புத்திரராவர். இந்தச் செல்லப்பா என்பவர் நவாலியைச் சென்மஸ்தானமாயுடைய மேன்மக்கள் மரபிலே யுதித்தவர். இனி, இவருடைய மாதா வழியோ என்றால் உரும்பிராயென்னுமிடத்தில் பிரபலஸ்தர்களாய் விளங்கிய சின்னத்தம்பி மகன் சீனியருடைய புத்திரி யாவர். இவ்வம்மையாருக்குப் பெயர், மீனாக்ஷி என்றுஞ் சொல்வார்கள். ஸ்ரீமான் நாகலிங்கம் நல்லறிவோடு கூடிய நற்புதல்வராய் வளர்ந்து, யாழ்ப்பாணத்திலும் அதன் பின்னர் கொழும்பிலும் கல்விகற்றுச் சகலமான பரீக்ஷைகளிலும் தேர்ந்து, கல்வியில் மிக்க வல்லுனராகித் தற்போது பலரும் மதிக்கத் தக்க மாண்புடையராய் விளங்குகின்றனர். இவர் தம்முடைய தாய் மாமனாராகிய வயித்திலிங்க மவர்களின் புத்திரியை விவாகஞ் செய்து, சந்தானங்களாகப் பல குழந்தைகளைப் பெற்றனர். மறு பதிப்பில் விபரமாய்க் கூறுவேம்.

## Nadaraja Sinnetamby Esq B.A. Advocate Barnes Place

ஸ்ரீமான் அத்வொகாத் நடராஜா சின்னத்தம்பி:— இவர், சிறுபிராயம் முதலாக நற்பழக்க வொழுக்க முடையராய் வளர்ந்து, செந்தோமஸ் கல்லூரியில் கல்வி கற்று ஜூனியர், சீனியர், லண்டன் மற்றிக்குலேஷன், பீ. ஏ. முதலான பரீக்ஷைகளில் தேர்ந்து, தற்போது பிரபல நியாய துரந்தரராய் விளங்குகின்றனர் இவருடைய பூர்வீகம் ஆனைக்கோட்டை. இவர், பிதாவுடைய வழியால், கனகசூரியர் வம்சத்துத் தோன்றிய விஜைசிக்கம்பி, முருகேசர், ஆகியோருக்குப் பௌத்திரராவர். அன்றியும் இவ்வூரிற் பிரபல டாக்குத்தராயிருந்து பெருங் கீர்த்தி பெற்று விளங்கிய ஸ்ரீமான் சின்னத்தம்பியவர்களின் இரண்டாவது புத்திரராவர். இனி இவருடைய தாயார் வழியைச் சொல்லுகில், மானிப்பாயாருள், சகலமான செல்வாக்குக்களாலும் சிறப்புற்றுப், பாரிய தனவந்தர்களாயும் பிரபுக்களாயும், மேன்மக்களாயும் விளங்கிய, ஆறுமுகம், வேலாயுதர், பொன்னம்பலமவர்களுடைய பௌத்திரியாவர். ஆனைக்கோட்டை நொத்தாரிஸ், இராமலிங்கமவர்களுக்குப் புத்திரியுமாவர். இவ்வம்மையாருடைய பெயர் ஸ்ரீமதி பொன்னம்மா. இப்பொழுது நடராஜா விவாகஞ் செய்திருக்குமது இடமோ வென்றால் தம்பையா முதலியார் மகன் சுப்பிரமணியத்துடைய பேத்தி Lalita என்னும் நாமத்தையுடைய பெண்மணியை விவாகஞ் செய்திருக்கின்றனர். இந்தப் பெண்மணி இங்குள்ள தமிழ்ப் பெண்களுள் அதிக திறமையோடு ஜூனியர் சீனியர் என்னும் கேம்பிறிஜ் பரீக்ஷைகளில் தேர்ந்தனள். இவர்களுக்கு இந்த ஜூன் மாதம் ஆறாந் திகதி ஓர் ஆண்குழந்தை பிறந்திருப்பதாகவும் அறியலானோம். ஸ்ரீமான் நடராஜாவுடைய குணங்களைப் பற்றி யாம் நன்கறிவோம். இவர் தகப்பனாரைப் போல் விவேக புத்தியும், ஆழ்ந்த அறிவும் அமைதியான போக்குமுடையர். பந்தாட்டத்திலும் மகா சாமார்த்தியமுடையர். தற்போது தாயாரோடு வசிக்கின்றனர்.

## S. Nagendra "St. Edwins" Rosmead Place.

செ. நாகேந்திரா :— இவர், இந்நகரில் பாரிய தனவந்தராயும், தரும சீலராயும், இரக்கமுள்ள புண்ணிய வாளு

யும், பிரபலமுற்று விளங்கும் புரோக்கர் ஸ்ரீமான் செல்லமுத்துவுடைய மூன்றாவது புத்திராவர். இச்சிறுவனிடத்திலே சில விசேட குணங்கள் அமைந்திருப்பதால், அதனை இங்கு எழுதும்படி நேர்ந்தன. இவர், பால் மணமறப்பாலிய வயசு முதல் ஏபிடீர் கல்வி கற்றவர். ஆகவே அந்நாட்டொடக்கம் இந்நாள்வரையும் இவரிடத்துள்ள குணநிசயங்களைப் பற்றி யாம் நன்கறிவோம். அதனை இங்கு சொல்லாதிருக்கபடாது. எனென்றால், பிள்ளைகளுடைய குணங்களைப் பற்றிப் பிதா மாதாக்களிலும் பார்க்க, படிப்பிக்கும் உபாத்திமாரகளே நன்கறிவார்கள் இது பற்றியே "விளையும் பயிரை முளையிலே" தெரியு மென்று கூறிப்போந்தனர். ஆகவே இந்தப் பையனுக்கு நல்ல மனமும், பிதாவைப் போல் மனுஷத் தன்மையும, யோக்கியமும், மிக்க நேர்மையும், புத்திவிவேகமும், பிறருக்கு உதவி செய்தலாகிய பெருங் குணமு முடையராய்க் காணப்படுகின்றனா. தகப்பனார் இல்லாத காலத்தில், இந்தப் பையனும், பாலா என்னுஞ் சிறுவனுமே பிதாவின கீர்த்தி உலகில் விளங்கும் என அறியக்கிடக்கின்றது. தற்போது நாகேந்திரா கேம்பிறிஜ் கிளாசில் வாசிக்கின்றனர். இவருடைய நக்ஷத்திரம் அனுஷம். விரோதிகிருது வருடம் கார்த்திகை மாதம 6-ம் திகதி பிறந்தனர்.

## **R. Nadaraja Esq,** J P. Broker, "Harrison Crosfield" Ltd.

ஸ்ரீமான் புரோக்கர் நடராஜா :—இவருடைய பூர்வீகத்தைப் பற்றி ஆராயுமிடத்து, முகமாலை யென்னுங் கிழக்கு நாட்டை சென்மஸ்தானமாய்க் கொண்டு, இந்நகரில் பிரபலஸ்தர்களாய் விளங்கிய இலங்கை நாதமுதலியார், கதிர்காம முதலியார், முத்த உடையா முதலியார், சிவகுரு நாத முதலியார், நமசிவாய முதலியார், என்பவர்களுடைய வழித் தோன்றலாயுதித்த புரோக்கர் இரத்தினசபாபதிமுதலியாருடைய மூன்றும் புத்திராவர். இவர் 1892-ம் ஆண்டு ஜூன் மாதம் 18-ம் திகதி பிறந்தனர். இவருடைய சென்ம நக்ஷத்திரம் திருவாதிரை. இவர் ஆரம்பக் கல்வியை சிற்றிக் கொலீச் என்னும் பெயருடன் நடாத்திய மிஸ்டர் "லீ" அவர்களிடத்திலும், அதன் பின்னர் றோயல் கொலீச் முதலான பள்ளிக்கூடங்களிலும் கற்றனர். தற்போது "ஹரிசன் குறோஸ்பீல்" என்னுமோர் கம்பனிக்குப் புரோக்காயிருக்கின்றனர். இனி இவரிடத்துள்ள விசேட குணங்களை சொல்வேம்.

முதலாவதாக தமிழ் மகனுக்குரிய அடையாளங்களும், இரண்டாவதாக இந்துக்களுக்குரிய இலக்ஷணங்களையுமுடையர். இவரிடத்தில் சைவாசாரங்களுண்டு. இனி இவர் இதுகாறும் செய்திருக்கின்ற சற்கருமங்களைப் பற்றியும், உலகத்துக்கு ஏதாவது நன்மைகள் செய்திருக்கின்றாரா என்பதைப் பற்றியும், இனி இவருடைய தானதருமம், யோக்கியம், நேர்மை, பிரபுத்துவம், முதலாகிய இன்னோரன்ன செயல்கள் எல்லாவற்றையும் நன்காராய்ந்து எம்மால் எழுதப்பட்டு, இத்தான அடுத்துவரும் "மற்றோர்" சரித்திரத்தின் ஓர் பக்கத்தில் கூறுவேம். இவ்விஷயம் இவ்வளவிலிருக்க இவர், கௌரவ சேர், அருணாசலமவர்களின் புத்திரி ஸ்ரீமதி Sundari என்னும் பெண்மணியை விவாகஞ் செய்த பின்னரே ஜே. பீ. முதலான பட்டத்தையும் பெற்றனர். ஸ்ரீமதி சுந்தரி பிதா மாதாவைப் போல் நற்பழக்கமும், நல்லொழுக்கமும், நேர்மையும், கல்வியறிவும், பெருந்தன்மையும் குரு விசுவாசமும், உடைய குலமகளாய் விளங்குகின்றனர். இவர்களுக்கு Manonmani Nadeswari என்னும் நாமத்தையுடைய இரு குழந்தைகளுமிருக்கின்றனர்.

## Nannitamby Mudaliyar. Ward Place.

ஸ்ரீமான் நன்னித்தம்பி முதலியார்:— இவர் ஆதிகாலத்திருந்த பெரும் பிரபுக்களுள் ஒருவராவர். இவருடைய பரம்பரையைப் பற்றிச் சொல்லுகில், காராளதலசிங்க முதலியார் வமிசத்துத் தோன்றிய இரகுப்பிள்ளையின் புத்திரராவர். இவர் இறக்கும்பொழுது இவருக்கு வயசு ஏறக்குறைய நூற்றுக்குமேலாயிருக்கவேண்டும். இவரையாம் பார்த்திருக்கின்றேம். இவருடைய புத்திரி ஸ்ரீமதி செல்லாச்சி. இந்தப் பெண்ணை கௌரவ சேர் இராமநாதனவர்கள் விவாகஞ் செய்து Kamini. Rajendra, Mahesa, Rukmani, Sivaccolunthu, Vamadeva, என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப் பெற்று, இவ்வம்மையார் சிவலோகஞ் சென்றனர். இப்பெண்ணரசி, யாம் சிறுவயதில் பாடுகின்ற தேவாரங்களைப் பக்தி சிரத்தையோடு கேட்டு எம்மேல் மிக்க அன்புடையராயிருந்தனர். இத்துடன் யாம் விசேட கல்விகற்பதற்குத் துணையாயிருந்த புண்ணிய சாலியுமாவர்.

## T. Nagendra, University College. Colombo.

தி. நாகேந்திரா:—இவரைப் பற்றிச் சொல்லுகில், இவர் குலநலனுடைய பிரபுக்கள் வமிசத்தைச் சார்ந்தவர். இவருடைய முதாதையர்களின் நாமங்களாவன, அதாவது மதியாபரண முதலியார், கெங்காகுல ரத்தின முதலியார், கனகசபை முதலியார் காராள உடையார், சின்னத்தம்பியார், புரோக்கர் சிவகுரு நாதர், என்னும் பெயர்களையுடைய பெருமக்களின் வழித்தோன்றலாயுதித்த ஸ்ரீமான் புரோக்கர் தியாகராஜாவுக்கும் அவர் மனைவி ஸ்ரீமதி இராசம்மாவுக்கும் மிகவருமையாய் வந்துதித்த நற்புதல்வராவர். இவருடைய குணத்தின் பெருமையையும் பழக்க வழக்கத்தின் நிறைமையையும் மெய்ச்சத்தக்கது. "பெற்றோர் செல்லாப் பிள்ளைகளல்லா" ஆகவே பிள்ளைகளென்றால் எல்லாரும் பிள்ளைகளாக மாட்டார்கள். இவரோ என்றால், றோயல் கல்லூரியில் கல்விகற்று ஜூனியர், சீனியர், லண்டன் மற்றிக்குலேஷன் என்னும் கேம்பிறிஜ் பரீக்ஷைகளில் தேர்ந்து இப்பொழுது சர்வகலாசாலையில் உயர்தர கல்வி கற்கின்றனர்.

## Nainativoe Nagabooshani Amman Kovil.

நாலுபக்கமும் சமுத்திரத்தினால் சூழப்பெற்றிருக்கும், நயினாதீவு நாகபூஷணியம்மன் கோவில் மகத்துவத்தை எம்மால் சொல்ல முடியாது. இவ்வாலயம் மிகப் பழமை வாய்ந்தது. இதைப்பற்றிய ஐதீகங்கள் பல உண்டு. இவ்வாலயத்துக்கு அக்காலத்தில் செப்புத் தோ முதலான வைகளிருந்ததாயறியலானோம். சமுத்திரத்தின் மத்தியில் இப்பவும் ஓர் கருடனும் பாம்பும், இருப்பதைக்காணலாம். இவ்வாலயத்தைப் பற்றி முன்னோரால் எழுதப்பட்டிருக்குமோரா கல்லும் அவ்விடத்திலே காணப்படுகின்றன. இவ்வாலயத்துப் பிரதான அருச்சகராயிருந்தவர், பிரம ஸ்ரீ ஐயாக்குட்டிக்குருக்களேயாம். இவரொரு பரம பக்தன் என்றும அறியலானோம். இவருடைய புத்திரருளொருவர் பிரமஸ்ரீ சபாரத்தினக் குருக்கள். இவர் பரம்பரையாய் இக்கோவிலுக்குப் பூசகர்களாயிருந்த குருமார் சந்ததியிலுள்ளவர். இக்கோவிற் கருமங்களை வழக்கம் போல் இவரும் இவருடைய புத்திராகிய நடராச சர்மா என்பவருமாக இப்பொழுது பார்த்துவருகின்றனர்.

## N. S. N. Natchiappa Chettiar. Eastern Grocery Stores.

ஸ்ரீமான் நாச்சியப்பச் செட்டியார் :— இவருடைய ஜெனன தேசம் இராமநாதபுரம் ஜில்லாவைச் சார்ந்த கல்லல் என்னும் கிராமமாகும். நந்தன வருடம் கார்த்திகை மாதம் ஜெனனமானார். தமிழ் மொழி வழங்கும் நாடாகிய மதுரையிலே, ஆங்கிலம், தமிழ், என்னுமிரு பாஷைகளையும் பயின்றவர். அதன் பின்னர் ஆங்கில பாஷையில் உயர்தரக் கல்வியைச் சிலகாலம் இந்நகரிற் கற்றனர். இவர் வெள்ளைக்காறரோடு வெகு சாதுரியமாய் ஆங்கில பாஷையிற் பேசுந்திறனுடையவர். ஸ்ரீமாந் நாச்சியப்பச் செட்டியாருடைய சிறந்த குணங்களைச் சில வருடங்களாக யாமறிவோம். இவர் சாயாபிமானமும், பரோபகார சிந்தையும், சாந்த குணமுமுடையர். இவர் கல்வியின் அருமையையும், அதன் பெருமையையும், அறிந்ததால் "கற்றோர் கனமறிவர்" என்னும் நீதி மொழிக் கிணங்க எம்மைப் போன்றவர்களை ஆதரித்து வருகின்றனர். இவர் பல வருடங்களாக சீமை, வர்த்தகத் தொழின் முயற்சியில் ஈடுபட்டு வியாபார முறைகளை நடாத்தும், வழி துறைகளை நன்கறிந்திருந்தமையால் தற்போது பிறக்கோட்டையில், பழைய முனிசிப்பாலிட்டி ஆபீசுக்கு முன்னுவிருக்கும் புதிய கட்டடத்தில் "ஈஸ்றரேண் குறோசெறி ஸ்ரோஸ்" என்னும பெயருடன் சாய்ப்புக்கடையொன்றை ஸ்தாபித்துப பிரபலமாய் நடாத்திவருகின்றனர். ஸ்ரீமான் நாச்சியபபச் செட்டியார், முதலாவதாக திருவாளர் A V. R. A அடைக்கப்பச் செட்டியாரவர்களுடைய புத்திரியை விவாகஞ் செயது இருகுழந்தைகளைப் பெற்ற பின்னர், இரண்டாவதாக, கண்டிராமாணிக்கத்திலுள்ள திருவாளர் இராமசாமிச்செட்டியாரவர்களின் புத்திரி **ஸ்ரீமதி மாணிக்கம்** என்னும நாமத்தையுடைய பெண்மணியை விவாகஞ் செய்திருக்கின்றனர்.

## M Nadaraja, Esq. Ward Place, Colombo.

ஸ்ரீமான் மு. நடராஜா:—இவர், இந்நகரில் பெரும் பிரபுவாயும், சிவபுண்ணிய சீலராயும், பிரக்கியாதி பெற்று விளங்கிய ஸ்ரீமான் முத்துக் குமாரசுவாமியவர்களுடைய புத்திரராவர். தகப்பனுருடைய வழியால், வீரநாராயணமுதலியார் முருகேசச் சட்டம்பியார், சண்முகத்தார், தம்பையாமுதலியார், என்போருக்

குப் பௌத்திரராவர். தாயருடையவழியால் கௌரவ சேர் பொன்னம்பலம் இராமநாதனவர்களின் சிரேஷ்ட்ட புத்திரி ஸ்ரீமதி காமினி ஆச்சிக்குப் புத்திரருமாவர். இவர் இங்கேயுள்ள றோயல் கல்லூரி முதலான வற்றில் கல்விகற்றவர். பிறவியிலே மிக்க செல்வாக்குடையர். "செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்" என்றபடி செல்வர்களுக்கு உண்டான சிறந்த குணங்கள் இவரிடத்திலே இயல்பாயிருக்கின்றன. இவர் எத்தனையோ சற்கருமங்களையும், செய்திருக்கின்றனர். மிக்க நேர்மையும், யோக்கியமும், பிறருக்கு உதவி செயதலாகிய பெருங்குணமும், தெய்வ பக்தியுமுடையர் கதிர்காமஸ்தலத்துக்கும், இந்தியாவிலுள்ள விசேடஸ்தலங்கட்க்குஞ் சென்றிருக்கின்றனர். இவரிடத்துள்ள விசேட குணங்களினால் துரைமாரகளும், பெரும் உத்தியோகஸ்தர்களும், இவரை நன்கு மதித்து வருகின்றனர் இவர் பந்தாட்டத்திலும், டெனிஸ் விளையாட்டிலும் மகா சமர்த்தர். இத்தகைய ஸ்ரீமான் நடராஜா கதிரைவேற் சிறுப்பர மகன் ஸ்ரீமான் ஆறுமுகம் அவர்களுடைய புத்திரி ஸ்ரீமதி Parimalam என்னும் பெண்மணியை விவாகஞ் செய்திருக்கின்றனர். இந்தப் பெண்மணி பிதா மாதாவைப் போல் நற்பழக்க வொழுக்கமும், சாந்தகுணமும், தமிழறிவும், உடைய உத்தமியாவர். எம்மிடம் கல்விகற்ற மாணுக்கிகளுள் ஒருவருமாவர்.

## Mr S. Nagendra, Broker, "Skandhagri

ஸ்ரீமான் ப்றோக்கர் ச நாகேந்திரா:—இவர், பரோபகார சீலராய விளங்கும் திருவாளர் சி. சண்முகமவர்களுடைய புத்திரராவர். றோயல் கல்லூரியில் கல்விகற்று தற்போது ஜெனரல் புறோக்கராயிருக்கின்றனர். இவருடைய முதாதைகள் பெரும் பிரபுக்களாயும், சாதிமான்களாயுமிருந்தனர். அவர்களுடைய பெயர்களைச் சொல்லுகில், உலகநாதர், மாதவர், கதிர்காமர், தில்லையம்பலம், சின்னத்தம்பி, சண்முகம், சிவசங்கரம்பிள்ளை, என்போருடைய சந்ததியைச் சார்ந்தவர். இனி, இவர் விவாகஞ் செய்திருக்கும் பகுதி மானு முதலியார் பூதத்தம்பி, சுவாமிநாதர், கதிரவேலர் வமிசத்துத் தோன்றிய தம்பையாச் சிறுப்பர் மகன் திருவாளர் சிவசிதம்பரம் பிள்ளைக்கும் அவர் மனைவி மீனும்பாவுக்கும்

புத்திரியாகிய Srimati Sellachi என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து Anandeswaran என்னுமோர் ஆண்மகவைப் பெற்றனர். இந்தச் செல்லாச்சி யென்னும் பெண்மணி, பிதா மாதாவைப்போல், நற்பழக்கம், நல்லொழுக்கம், சைவாசாரம், முதலாகிய சிறந்த குணங்களையுடைய நன்மனையாளாய் விசாகத்திற பிறந்த உத்தமியாயவிளங்குகின்றனர். தம்பதிகள் இனிது வாழ்வார்களாக.

## V. Nadaraja Esq Colombo Municipality.

ஸ்ரீமான் நடராசா:—இவர், திரிகோணமலையைச் சென்மஸ்தானமாயுடையவர் தற்போது கொழும்பு முனிசிப்பாலிட்டி ஆபீசில் ஓர் பகுதிக்கு பிரதம கிளார்க்காயிருக்கின்றனர். இவருடைய முதாதைகள் அச்சுவேலி யென்னுமிடத்தைச் சார்ந்தோராவர். திரிகோணமலையில் பிரபல வர்த்தகராயும் கொந்திறாத்துக்காரராயுமிருந்த திருவாளர் வைரமுத்து அவர்களுடைய புத்திரருமாவர். மறுபதிப்பில் விபரமாயக் கூறுவோம்.

## Mr V. Narayna Pillai, Law Student, Wellawatta

திருவாளர் நாராயணபிள்ளை:-இவர் "செற்றில்மென்ட்" ஆபீசராயிருக்குந் ஸ்ரீமான் முதலியார் வல்லிபுரம் பிள்ளையவர்களுடைய அருந்தவப் புதல்வராவர். இவர் றோயல் கல்லூரியில் கல்விகற்றுக் கேம்பிறிஜ் பரீக்ஷை, லண்டன் மற்றிக்குலேஷன் பரீக்ஷை முதலானவற்றில் சித்தியடைந்து தற்போது சட்டக்கல்லூரியில், நியாயமாணவராயிருக்கின்றனர். சாவ கலாசாலையிலுஞ் சிலகாலம் கல்விகற்றவர் இவ்விளைஞர் பிதாவைப்போல், நற்பழக்கமும், நல்லொழுக்கமும், நேர்மையும், சாந்தகுணமும், குருபக்தியும், கல்வித் தேர்ச்சியும், வாக்குவல்லபமும், பேச்சுத் திறமையுமுடையர். இன்னுஞ் சிலகாலத்துள் இவர் பிரபல நியாயதுரந்தரராய்ப் பிரக்கியாதி பெற்று விளங்குவாரென எண்ணுகின்றேம். இவர் எம்முடைய மாணக்கருமாவர். ஆகவே இவருக்கு எல்லாம்வல்ல இறைவனுடைய அருள் உண்டாகும்படி ஆசீர்வதிக்கின்றேம்.

## S. A. Nalliah Esq, Proctor & Notory, Colombo.

ஸ்ரீமான் பிறக்டர் எஸ். ஏ நல்லையா:—இவ்விளைஞர் கொழும்புத்துறையை ஜென்மஸ்தானமாயுடையவர். வம்சபாரம் பரியத்தைச் சார்ந்த திருவாளர் அப்பாக்குட்டி அவர்களின் புத்திரராவர். எம்மிடம் இவர் முறைப்படி சங்கீதங் கற்றவர். அது முதலாக யாம் இவருடைய கல்வித் திறமையையும், விவேகத்தையும், நன்கறிவோம். ஆகவே, ஸ்ரீமான் நல்லையாவுடைய சிறந்த குணங்களையும் இவருடைய சாமார்த்தியத்தையும் குறித்துச் சில வற்றை இங்கு சுருக்கமாகக் கூறுவோம். இவர், குணத்திலும், நற்பழக்க வொழுக்கங்களிலும் சிறந்தவர். எல்லாருக்கும் நல்ல பிள்ளையாய், இப்பெயருக்கு தக்க செயலுடையவராய், கல்வி கற்று, கிளறிக்கல் முதலான பரீட்சைகளில் சித்தியடைந்து சில காலம், நீதிஸ்தலமு ஜெனரல் ஆபிசில், உயர்ந்த வேதனம் பெறும் உத்தியோகஸ்தராயிருந்தனர். இப்படி இருக்குங் காலத்தில் நியாயப் பிரமாணங்களையும் பிறவற்றையும் நன்குகற்று பரீக்ஷைக்குச் சென்று பாஸ் பண்ணி அரசாங்கத்திலிருந்து வெகுமதியாக ஒரு தொகைப் பணத்தையும் பெற்றனர். கிளறிக்கல் லயினிலிருந்து கல்வி கற்று இங்ஙனமாக, மேன் நிலைக்கு வருவது மிகக் கஷ்டம். ஆயினும் ஸ்ரீமான் நல்லையா விவேகியானதால் தம்முடைய அறிவை நல்வழியிற் செலுத்தி, பிரபல நொத்தாரிசாகவும், பிரக்கிராசியாகவும் வெளிவந்துள்ளார். இவருடைய செயல் யாவராலும் போற்றத்தக்கது. தற்போது பிரபலவர்த்தகராய் விளங்கும் திருவாளர் நா. வயித்தியலிங்கம் வாகனுடைய புத்திரியை விவாகஞ் செய்து வெள்ளவத்தையில் வசிக்கின்றனர்.

## Nevins Selvadurai Esq, B.A.M.B.E J.P

ஸ்ரீமான் நெவின்ஸ் செல்லத்துரை:—இவர் யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரியில் பல வருடங்களாக தலைமை ஆசிரியரா யிருந்து அனேக மாணவர்க்குக் கல்வி கற்பித்துக் கல்லூரியை நன் நிலைப்படுத்திப் பலராலும் நன்குமதிக்கப் பெற்ற யோக்கியராயும், பெருங் கல்விமானாயும் விளங்குகின்றனர். இவருடைய மூதாதைகள் வித்து வார்சர்களாயும் இலக்கண இலக்கியங்களில் மிக்க வல்லுனர்களாயும் விளங்கினோர்கள். இதற்கு உதாரண

மாக, பிரமஸ்ரீ இராமசாமி ஐயரவர்களால் இயற்றப்பட்ட யமக வந்தாதிக்கு, இவருடைய ஏகதாரையாகிய செளின்சரும் வேறு சில வித்துவான்களுமாக சாற்றுக்கவி கொடுத்திருக்கின்றனர். இதன் மூலமாய் இவர்களுடைய பெருமையை யாம் அறியலானோம். ஸ்ரீமான் செல்வத்துரை கண்டியிலுள்ள திறினிற்றிக் கல்லூரியில் சிலகாலம் வெறட்மாஸ்டராயிருந்தனர். தற்போது இப்பதவிகளினின்றும் இளைப்பாறி, பெறுதற்கரிய பெரும்பட்டங்களைப் பெற்று, வித்தியா சங்கம், கல்விக்கழகம் ஆகிய பற்பல சங்கங்களில் அங்கத்தவராயும் அறிவிலே சிறந்த பேரறிஞராயும் விளங்குகின்றனர். இவருடைய புத்திரர்களுட் சிலர் பெரும் உத்தியோகங்களில் காணப்படுகின்றனர்.

## P. K. Nadaraja Esq. Holland Ceylon Commercial Co.,

ஸ்ரீமான் பி. கே. நடராஜா:—இவர், கிழக்குக் கொக்குவிலை ஜென்மஸ்தானமாயுடையவர். தொடுவாய ராச்சியப் பகுதியில் பலவருடங்களாக பெரும உத்தியோகங்களிலிருந்து பலராலும் நன்கறியப்பட்டவர். சீமை வர்த்தக முயற்சியில் மிக்க அனுபவமுடையவர். இவருடைய விவேகத்தையும் சாமார்த்தியத்தையும் கேள்வியுற்றதுரைமார் இவரை மலாய நாட்டினின்றும் தருவித்து தங்கள் கம்பனியில் வைத்துக்கொண்டனர். அந்நாட்டொடக்கமிவர் காரிய கடமைகளைப் பார்த்துப் பலபிரபுக்களாலும் நன்குமதிக்கப் பட்டுவருதலைக் காண்கின்றோம். இவர் மிக்க பெருந்தன்மையான போக்கும் சாந்தகுணமுமுடையர். இவருடைய தன்மைகளைப் பற்றி விசேடமாய் ஒரு பெரும் பிரபுவாகிய கனவான் எமக்குத்தெரிவித்தனர். ஆகவே, யாமிவரைப் பார்க்கும்படி சென்றிருந்தோம். அப்பொழுது இவர் எம்மை வரவேற்று எம்முடன் சம்பாஷித்தளவில் "தக்கார் தகவிலரென்பது அவரவர் எச்சத்தாற்காணப்படும்" என்றருளியபடி தகைமையுடையராய்க்காணப்பட்டதால், யாமிவரை நன்குமதித்து இப்புத்தகத்தில் குறிப்பிடலானோம். இவர் புருஷலக்ஷணமும், நல்ல தோற்றமுமுடையர். எம்மாலெழுதப்படும் "மற்றோர் சரித்திரத்தில்" விரிவாய்கூறுவோம்.

## S. Perayiravar Esq, B.A. (Lon) Police Office, Colombo.

ஸ்ரீமான் பேராயிரவர்:—இவர், அராலி கிழக்கை சென்மஸ்தானமாய்க் கொண்டு 1899-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 8-ம் திகதி ஜெனனமானவர். இவருடைய ஜென்ம நக்ஷத்திரம் சித்திரை. இவருடைய மூதாதைகள் தக்கமரபைச்சார்ந்த மேன்மக்களாய் விளங்கினோர்கள். ஸ்ரீமான் பேராயிரவருக்கு இந்நாமம் இடப்பட்டிருப்பதால் பேராயிரமுடையானின் வழித்தோன்றலாயிருக்கலாமெனபதே துணிபு. இவருடைய பாட்டனார் பெயர் ஆறுமுகம். இந்த ஆறுமுகத்தாருடைய புத்திரர் சபாபதிப்பிள்ளை. சபாபதிப்பிள்ளையுடைய புத்திரரே ஸ்ரீமான் பேராயிரவர் இவர் வட்டுக்கோட்டை யாழ்ப்பாண கலாசாலையில் கல்வி கற்று கேம்பிறிஜ் பரீக்ஷைகளிற் தேர்ந்து லண்டன் பீ. ஏ. பட்டம் பெற்று கிளறிக்கல் பகுதியில் சேர்ந்து தற்போது பொலிஸ் ஆபீசில் உத்தியோகமாயிருக்கின்றனர் இவர் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்தயோக்கியர். சமயபக்தியும், சாந்தகுணமும், மிக்கநேர்மையும், பெருந்தன்மையும், மரியாதையான போக்கும், குருவிசுவாசமுமுடையர். ஸ்ரீமான் பேராயிரவர் இன்னுஞ் சிலகாலத்துள் மேலான பதவியைப்பெற்று பிரக்கியாதையுடன் விளங்குவாரென்பது எமது கொள்கை இவர், கார்த்திகேச உடையார் சந்ததியிற்றோன்றிய திருவாளர் மயிலாபரணமவர்களின் புத்திரி ஸ்ரீமதி Rajalakshmi என்னும் பெயரையுடைய பெண்மணியை விவாகஞ் செய்திருக்கின்றனர். இந்தப் பெண்மணியுடைய குணவிசேடத்தைப் பற்றிச் சொல்லுமிடத்து, நற்பழக்க வொழுக்கமும், சைவாசாரமும், தெய்வபக்தியும், தமிழறிவும், சங்கீத ஞானமும், சாந்தகுணமும், மிக்க பொறுமையும், குருவிசுவாசமுமுடைய குலமகளாய் விளங்குகின்றனர். இந்தப் பெண்மணி பிற்றில், வாத்தியம் வாசிப்பதில் மிக்க அவாவுடையராய் எம்மிடத்திலும் சிலவற்றைக் கேட்டறிந்தனர். இவர்களுக்கு முறைப்படி 1929-ம் ஆண்டு ஜூன்மாதம் 3-ம் திகதி திங்கட்கிழமை வெகு விமரிசையாக வெள்ளவத்தையில் விவாகம் நடந்தேறியது. தம்பதிகள் இன்புற்று இனிது வாழ்வார்களாக.

# P

## K. Pathmanathan Esq Head Shroff Imperial Bank

ஸ்ரீமான் சிருப்பர் க பத்மநாதன்:—இவ்வுத்தமர் அராலி வடக்கில் சைவசீலர்களாய் விளங்கிய மேன்மக்களின் மரபைச் சார்ந்தவர். இவருடைய முதாதைகள் பரம்பரை வைத்தியர்களாயும், மணிமந்திர ஔஷத மென்னும் முறைகளில் மிக்க வல்லுனர்களாயும் விளங்கினார்கள். அவர்களுடைய பெயர்களாவன, முறையே ஆறுமுகம், வைரமுத்து, என்னும் பெயரையுடைய பெரியார் வழித்தோன்றலாயிருக்க திருவாளர், கந்தையா பிள்ளையுடைய புத்திரராவர். இந்தக் கந்தையாபிள்ளை என்பவர் ஆங்கிலக் கல்விகற்று உத்தியோகமாயிருந்து சில வருடங்களுக்கு முன்னர் சிவபதமடைந்தனர். இனி இவருடைய மனைவியின் வழியைப் பற்றி ஆராயும் பொழுது அவ்வூரில் அந்தஸ்துடையர்களாயுஞ் சாதிமான்களாயுமிருந்தோர் மரபிலேயுதித்த கார்த்திகேசர் மகன் இளையதம்பியுடைய புத்திரியுமாவர். இவ்வம்மையாரை அம்மணி என்னும் நாமத்தால் அழைப்பார்கள். இத்தம்பதிகளுக்கு, பத்மநாதன், நடராசா, என்னும் பெயரையுடைய இரண்டுபுத்திரரும் ஆனந்தலக்குமி, இரஞ்சிதம் சொர்ணம் பபோ என்னும் பெயர்களையுடைய ஐந்து புத்திரிகளுமுண்டு. இத்தன்மையான இக் குடும்பத்துக்கு பத்மநாதன் தலைப்பிள்ளையாக, 1899-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 4-ந் திகதி பிறந்தனர். இவர், சிறுபிராயம் முதலாகப் பிதாமாதாக்களுக்குக் கீழ்ப்படிந்து நற்பழக்க வொழுக்கமும், சாந்தகுணமும், மிக்க பொறுமையுமுடைய நற்புதல்வராய் வளர்ந்து, சென்பற்றிக் கல்லூரியிலும், வெஸ்லிக் கொலீச்சிலும் கல்வி கற்று, மதராஸ் வங்கிக்குப் பிரதம சிருப்பாயிருந்த திருவாளர் சொக்கநாதனவர்களோடு கடமை பார்த்து வந்தனர். இப்படியிருக்குங் காலத்தில், சிருப் சொக்கநாதனவர்கள் இப்பதவியினின்றும் நீங்கும் பொழுது மிகப்பொறுப்பு வாய்ந்த இவ்வுத்தியோகத்தைப் பெறும் பொருட்டாக, பிரபுக்கள் பலரும் தங்களாலான பிரயத்தனங்களைச் செய்து, ஈற்றில் அனுகூலப்பட

தொழிந்ததை உலகம் நன்கறியும். அதன் பின்னர் பத்மநாதனு டைய நேர்மையையும், யோக்கியத்தையும், வேலைபார்க்கக் கூடிய திறமையையும், சாமர்த்தியத்தையும் நன்குணர்ந்த மேலதிகாரிகள் மிகப் பொறுப்பு வாய்ந்த பெரும்பதவியை இவருக்கே கொடுத்த னர். இவர் இப்பெரும் உத்தியோகத்தைப் பெற்று, அந்நாட் டொடக்கம் இந்நாள்வரையிலும், அதிகதிறமையோடு பார்த்து, வியாபாரிமார்களாலும், வைசியர்களாலும் மற்றும் ஏனையோர் களாலும் நன்கு மதிக்கப் பெற்று, நல்லபிள்ளை யென்கின்ற நாமத் தையுஞ் சிறுபராயத்திற்றனே பெற்றுக் கொண்டனர். இது, பற்றியே "ஈன்றபொழுதிற் பெரிதுவக்குந் தன் மகனைச் சான் றோன் எனக் கேட்டதாய்" என்பதனல் உணர்த்தப்பட்டது' இவ்விஷயமிருப்ப, இனி ஸ்ரீமான் பத்மநாதனுடைய சிறந்த குணங்களைப் பற்றிச் சிறிது ஆராய்வோம். இவர் சைவாசாரமும், சமயபக்தியும், ஆலயவழிபாடும், சிவாலயங்களிலே அபிஷேகம் உற்சவம், சமாராதனை ஆண்டிபரதேசிகளுக்கு அன்னம் படைத் தல், சைவசமய விருத்திக்கேற்ற சற்கருமங்களைச் செய்தல், ஸ்தல யாத்திரை, தீர்த்தயாத்திரை, முதலாகிய இனமோரன்ன செயல் களையுடையராய் ஏழைகளுக்கும், இரப்போருக்கும், இல்லையென் றுது தருமங்கொடுப்பவராய் ஈகை, இரக்கம், சாந்தம், பொறை, அடக்கம், இதுமுதலாகிய விசேடகுணங்களையுடையவராய் விளங் குகின்றனா. யாம் பலவருடங்களாக இவரோடு ஊடாடியதால் இவருடைய பெருந்தன்மைகளை யறிந்து எழுதலானேம். இவர் அனுதினமும் ஆலயவழிபாடு செய்து கடவுளைப் பக்தி சிரத்தை யோடு வணங்கிக் கையெடுத்து வந்ததையும் யாமறிவோம். ஆகவே "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்றபடி வணக்கத்தின் பலனைப் பெரும் பேற்றையடைந்தனர். இவர் தமக்கு ஏற்படும் இடைஞ் சல்களை சகித்து, ஈசனிடத்திலே முறையிட்டு பொறு மையோடிருந்தமையால், "பொறுத்தாரரசாள்வர்" என்பதற் கிணங்க, இவருடைய அமைதிக்கும் பொறுமைக்கும் தக்கபடி இவரை இப்பொழுது மேலான நிலையில் கடவுள் வைத்திருப் பதைக் காண்கின்றேம். ஆகவே "பெருமையுஞ் சிறுமையும் தான்றர வருமே" என்றூர் பெரியார். இது நிற்க செல்வம் வந்துற்ற

போது சிலர் தாங்கள் முன்னேயிருந்த நிலபரத்தை மறந்து அற்ப குணமுடையார்களாயிருக்கும் அனேகரையாம் இக்காலத்தில் காண்கின்றேம். ஸ்ரீமான் பத்மநாதனவர்களிடத்தில் இவ்வித மான குணங்களைக் காண்பது மிகவருமை. இவர் சிவபுண்ணியங் களிலீடுபட்டுச் சற்கருமங்களைச் செய்து வருகின்றனர். உதார ணமாக சிந்தும்பிட்டித் தெரு, சிவசுப்பிரமணியஸ்வாமி கோவில் சண்முகப்பெருமானுக்கு உகந்த நாளாகிய திருக்கார்த்திகைத் தினத்தன்று, ஆயிரக்கணக்காயுள்ள ரூபாவைச் செலவிட்டு சிதம் பரத்திலே ஸ்ரீமந் நடாராஜப் பெருமானுக்கு நடக்கின்ற பாவனை யாக அளவிறந்த திரவியங்களால் அபிஷேகஞ் செய்வித்துப் பூசை உற்சவமுதலானவற்றைச் சில வருடங்களாக அதிவிமரிசையோடு நடாத்திவருகின்றனர். யாழ்ப்பாணத்துள்ள சிவாலயங்களுக்கும் போதிய பொருளுபகரித்திருக்கின்றனர். விவேகானந்த சபை தமிழ் யூனியன், போன்ற பற்பல சங்கங்களில் அங்கத்தவரு மாவர். இத்தகைய இலக்கணங்களையுடைய பத்மநாதன் ஸ்ரீமான் குமாரசூரியரவர்களின் புத்திரி **ஸ்ரீமதி சிவகாமிப்பிள்ளை** என் னும் பெண்மணியை விவாகஞ் செய்து, சிவசுப்பிரமணியன் என் னுமோராண் மகவைப் பெற்றனர். இந்தப் பெண்மணியுடைய குணநிசயங்களைப் பற்றிச் சொல்லுகில், "கண்ணிரண்டு மொன் றையே நோக்கல்காண்" என்றபடி, நற்பழக்கமும், நல்லொழுக் கமும், சமயாசாரமும், புருஷபக்தியும், தெய்வசிந்தனையும், நற்குண நற்செய்கையுமுடைய நன்மனையாளாய விளங்குகின்றனர். தம் பதிகள் தீர்க்காயுளைப் பெற்று இனிது வாழ எல்லாம் வல்ல இறை வனருள் புரிவாராக.

## S. Padmanabha Aiyer, Saraswathi Book Depot

பிரமஸ்ரீ சி. பத்மநாப ஐயர்:—இவர் முனீஸ்வர மென்னும், திவ்விய ஸ்தலத்தைச் ஜென்மஸ்தானமாகவுடையவர். ஆங்கிலம், தமிழ், சமஸ்கிருதம், சிங்களம், ஆகிய பாஷைகளில் தேறிய பேரறிஞராய், பலபத்திரிகைகளுக்கு ஆசிரியராய், சரஸ் வதி புத்தகசாலைக்கதிபராய், யாவராலும் நன்குமதிக்கப் பெற்ற யோக்கியராயும், விவேகியாயும், விளங்குகின்றனர்.



HON'BLE MR I. X. PEREIRA M.L.C.

Meenambal Press, Colombo,

## Hon Mr. I X. Pereira M.L.C Colombo.

கௌரவ ஸ்ரீமான் ஐ. எக்ஸ். பெரைரா:—இவ்வுத்மர் இலங்கைச் சட்ட நிரூபண சபை அங்கத்தவராயும், இலங்கையிலிருக்கும் ஏழு லக்ஷம் இந்திய மக்களின் சுவதந்திரங்களைக் காப்பாற்றி வரும் கனவானாயும், பரதவ குலத்ததிபராயும், இந்திய மாதாவின் அபிமான புத்திரராயும், பாரிய தனவந்தராயும், பிரக்கியாதி பெற்று விளங்குகின்றனர். இவர் தூத்துக்குடியை ஜென்ம ஸ்தானமாகக் கொண்டு 1888-ம் ஆண்டு ஏப்பிரல் மாதம் 26-ம் திகதி ஜெனனமானார். அவ்வூரில் அடிமை குடிமை ஆட்சி அதிகாரம், செல்வம், கீர்த்தி, பரோபகாரம், பிரபுத்துவம், முதலானவற்றை அந்தஸ்துக்களாயுடைய பிரபுக்களைச் சார்ந்தவர். இவர், சிறுபராயம் முதலாக நற்பழக்க வொழுக்க முடையராய், சாந்தம், பொறை, அடக்கம் முதலாகிய உத்தம குணங்களை அணிகலமாயுடைய சற்புத்திரராய் வளர்ந்து, தூத்துக்குடி "சென்பிரான்சிஸ் சேவியர் ஹைஸ்கூலிலும்" கொழும்பு "சென்பெனடிக் கல்லூரியிலும்" கல்விகற்று அதிசமர்த்தராய், உயர்தரக்கல்வியில் தேர்ந்த பேரறிஞராய, விவேகபுத்தியும், அரசியல் ஞானமும் உலகியல் ஞானமுமுடையராய், எப். எக்ஸ். பெரைரா கம்பேனிக்கு அதிபராய அரசாங்கத்தாராலும், பல பிரபுக்களாலும், மேன்மக்களாலும், சம்மானிக்கப் பெற்றவராய், விளங்குகின்றனர். இவருடைய சிறந்த குணங்களைப் பற்றி உலகம் நன்கறியும். ஆகவே இங்கு சுருக்கமாய்க் கூறலானோம். இவர் தூத்துக்குடி முனிசிப்பாலிட்டிக்குச் செயர்மனாகவும் வக்கீலாகவுமிருந்து காலஞ்சென்ற திருவாளர் எக்ஸ். மோத்தா அவர்களின் புத்திரி ஸ்ரீமதி Margaret Kanikai Ammal என்னும் பெண்மணியைக் கைப்பிடித்து ஐந்து குழந்தைகளைப் பெற்றனர். இரண்டாவதாக எம். பீ. கோமஸ் கம்பனிக்கதிபராயிருக்கும் ஜி. கோமஸ் அவர்களுடைய புத்திரி Margaret என்னும் பெண்மணியை விவாகஞ் செய்திருக்கின்றனர். ஸ்ரீமான் பெரைரா இதுகாறும் இந்திய மக்களின் சுவயவாழ்வைக்கருதிப் பலதுறைகளிலு மீடுபட்டு, அரசாங்கத்தா

ரோடு ஆக்ஷேபஞ் செய்து அரும் பெருஞ் சகாயங்களைச் செய்திருக்கின்றனர். சுருக்கமாகச் சொல்லுகில் இந்திய மக்களுக்காக சட்ட சபை மூலம் உழைத்து வருபவர் இவரொருவரேயல்லாமல் வேறு யாருமில்லை. ஆகவே சமீபகாலத்தில் நடைபெறப்போகும் தேர்தலில் இந்தியமக்கள் இவரையே தெரிவு செய்வார்களென எதிர்பார்த்திருக்கின்றோம்.

## S. Pathmanathan Esq, Broker, Colombo.

திருவாளர் ச. பத்மநாதன்:—இவருடைய பூர்வீகத்தையும் விருத்தாந்தங்களையும் பற்றிச் சொல்லுகில், இற்றைக்குச் சிலவருடங்களுக்குமுன் இக் கொழும்புமாநகரில், பாரிய தனவந்தராயும் பரோபகார சீலராயும், தருமப் பிரபுவாயும், வொல்காட் கம்பனிப் புறோக்கராயுமிருந்து எண்ணில்லாத சற்கருமங்களைச் செய்து சிவலோகஞ் சென்ற ஸ்ரீமான் ஆறுமுகம் வேலாயுதர் சங்கரப்பிள்ளையவர்களுடைய கனிஷ்ட புத்திரராவர். இவர் பரபவ வருடம் சித்திரை மாதம் இரண்டாந் திகதி சனிக்கிழமை செனனமானவர். இவர் சிறுபராயமுதல் நற்பழக்க வொழுக்க முடையராய் வளர்ந்து, சென்தோமஸ் கல்லூரியில் கல்விகற்று தமையனாரோடு சிலகாலம் வொல்காட் கம்பனியில் உதவிப் புறோக்கராயிருந்து, தற்போது "கீல் அன்வால் டொக்" என்னும் பெயரையுடைய ஓர் கம்பனிக்குப் புறோக்கராயிருக்கின்றனர். இவருடைய தாயார் வழியைப் பற்றிச் சொல்லுகில், அவர்களும் மானிப்பாயில் குல நலனுடைய மேன்மக்களாய் விளங்கினார்கள். சுவாமிநாதபிள்ளை யுடைய மகன் மநியாபரண முதலியாருக்குப் பௌத்திரருமாவர். இனி இவருடைய குணநிசயங்களைப் பற்றிச் சொல்லுகில் பாலியர்களுக்குச் சிறந்த ஆபரணம் அடக்கம், என்றபடி அந்த ஆபரணத்தை ஆதாரமாகக் கொண்டு "உத்தமனாயிரு" என்னும் நீதிமொழிக்கிணங்க, எல்லாருக்கும் நல்ல பிள்ளையாய், சாந்தகுணமுடையவராய் வீண் கூட்டம், வீண் நாட்டம், வீண் பேச்சு முதலானவைகளுக்குச் செவி கொடாமல் யாவரும் மதிக்கத்தக்கதாக தானும் தன்பாடுமாய் யோக்கியமும்நேர்மையும்

பெருந்தன்மையும், பரோபகாரமும், உடையராய் விளங்குகின்றனர். யாம் இவருடைய தன்மைகளைப் பற்றி இவர் பிறந்த நாள் முதலாயறிவேம். ஆகவே யிங்கு சுருக்கமாய் எழுதலானேம். இன்னும் இவரிடத்தில் அனேக விசேட செயல்களுண்டு அவைகளை விரிக்கிற் பெருகுமாதலால், மறு சரித்திரத்தில் கூறிவேம். இவர் இங்கிருந்து பம்பாய், கல்கத்தா, காசி முதலான இடங்களுக்குச் சென்றவர். "தியோசெபிக்கல்" சொசைட்டி என்னும் பிரமஞான சங்கத்தில் பிரமையுடையவர். இவருக்கு விவாகம் ஆதாவது, கௌரவ சேர். பொன்னம்பலம் இராமநாதனுடைய புத்திரராகிய பாரிஸ்டர் ஸ்ரீமான் இராஜேந்திராவுக்கும் அவர் மனைவி ஸ்ரீமதி பகவதி அம்மையாருக்கும் மிக வருமையாய் வந்துதித்த Balambikai என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து Nadeswari என்றுமோர் பெண்மகவைப் பெற்றனர். ஸ்ரீமதி பாலம்பிகையுடைய விசேட குணங்களைப் பற்றிச் சொல்லுகில், இந்தப் பெண்மணியைப் போல், நற்குண நற்செய்கைகளையுடைய உத்தமியை இக்காலத்துச் சிறுமியர்களுட் காண்பது மிக வருமை இந்தப் பெண்மணி கல்வியாலும், அறிவாலும், பழக்க வழக்கத்தாலும், சிறப்புடையர். பாலிய வயசிலிருந்து எம்மிடம் கல்வி கற்றனர். ஆங்கிலம், தமிழ், சங்கீதம், ஆகிய வற்றிலும், வாத்தியம் வாசிப்பதிலும் அதிக திறமையுடையர். ஆகவே இத்தம்பதிகள் இனிது வாழ எல்லாம் வல்ல இறைவன நருள்புரிவாராக.

## Sriman Ponnambala Mudaliyar. Colombo.

ஸ்ரீமான் பொன்னம்பல முதலியார்:—இப்பெரியார் மானியமபதியில் பிரபுக்களாயும், மேன்மக்களாயும், பிரக்கியாதி பெற்று விளங்கிய தில்லையம்பலம் அருணாசலமார்களுக்குப் புத்திரராவர். அக்காலத்திலிருந்த தமிழ்மக்களுள் இப்பெரியார் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த யோக்கியராய் விளங்கினர். இதுவன்றியும் இவர் அரசாங்க உத்தியோகஸ்தராயிருந்து இராசவாசல் முதலியார் என்னும் பட்டத்தையும், ஜே. பி. என்னும் பட்டத்தையும் பெற்றிருந்தனர். இவ்வுத்தமர் பெரும் பொருளைச் செலவிட்டு,சிவாலயமொன்றைக் கட்டிக் கும்பாபிஷேகம் பண்ணுவித்து, நித்திய பூசைக்காக மானிபங்களை யேற்படுத்திச் சிவலோகஞ் சென்றனர். இதனால் பொன்னம்பலவாணேசருடைய பெருமை எக்காலத்தும் வழங்கத்தக்கதாயிருக்கின்றது.

## S. Pararajasingam, J. P. M.C.B.R.A.S. Broker, Volkart Bro's

ஸ்ரீமான் புரோக்கர் பரராஜசிங்கம்:—இவருடைய பூர்வீகம் மானிப்பாய் அவ்வூரில், செல்வத்தாலும், கீர்த்தியாலும், மதிப்பாலும், மரபாலும் தானதருமங்களாலும் சிறந்து விளங்கிய சிவபுண்ணிய சீலர்களுடைய சந்ததியைச் சார்ந்தவர். இற்றைக்குச் சிலவருடங்களுக்குமுன் இவ்வூரில் பாரியதன வந்தராயும் சிறந்த கொடைவள்ளலாயும், மானிப்பாய் இந்துக் கல்லூரி ஸ்தாபகராயும் அதன் அதிபராயுமிருந்து பிரக்கியாதி பெற்று விளங்கிய ஆறுமுகம் வேலாயுதர் சங்கரப்பிள்ளையுடைய சிரேஷ்ட புத்திரராவர். இவர் 1896-ம் ஆண்டு ஜூன் மாதம் 25-ம் திகதி "சொர்ண வில்லா" என்னும் மாளிகையில் பிறந்து நற்பழக்க வொழுக்கமுடையராய் வளர்ந்து செந்தோமஸ் கல்லூரியிலும், வெஸ்லிக் கல்லூரியிலும் கல்வி கற்றுத் தற்போது வொல்காட் கம்பனிக்குப் புரோக்கராயிருக்கின்றனர். இவர் தம்முடைய பிதாவைப் போல் மிக்க நேர்மையும், பிரபுத்துவமும், நல்மனதும், சாந்தகுணமு முடையர். தேசாதிபதியால் பெரிதும் சன்மானிக்கப்பட்டு சமதான நீதிவான் பட்டத்தையும் பெற்றனர். சமயசம்பந்தமாயுள்ள எக்கருமங்களிலும் ஊக்கமுடையர். ஏழைகளுக்கும் இயப் போருக்குமியன்ற உதவிகள் செய்பவர். தற்போது மானிப்பாய் இந்துக்கல்லூரி அதிபருளொருவராகவும், கைத்தொழிற்சங்கம், போல்டி றீகிளப், கமபஹா, பிளோறல் எகசிபிஷன, மக்சைஸ் அட்வைசறிபோட், புரோக்கேர்ஷ் யூனியன், லோகன்றி பிறடக்ற் அசோசியேஷன், ஓறியன்கிளப், தமிழ் யூனியன், முதலாயுள்ள பற்பல சங்கங்களிலும், சபைகளிலும் அங்கத்தவராயிருக்கின்றனர். இதுவன்றியுமிவர் இலங்கையிலுள்ள வித்துவான்கள சமுகமளிக்கும் றோயல் ஏஷியாற்றிக் சொசைட்டியிலும மெம்பராவர். இத்தகைய இலக்ஷணங்களையுடைய ஸ்ரீமான் பரராஜசிங்கத்துக்கு விவாகம், இலங்கை தமிழ் மக்களுள் இராஜனுக்கொப்பாய் விளங்கிய கௌரவ சேர் பொன்னம்பலம் அருணாசலமவர்களின் புத்திரி ஸ்ரீமதி **Pathmavti** என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து, **Nadesan, Lalita** என்னும் பெயர்களையுடைய இருகுழந்தைகளைப் பெற்றனர் இந்தப்பிள்ளைகள் எம்முடைய மானுக் கருமாவார்கள் இனி இவருடைய மனைவி பத்மாவதியின் உத்தம குணங்களைப்பற்றிச் சொல்லுகில், பிதா மாதாவைப்போல் நற்பழக்

கம், நல்லொழுக்கம் சைவாசாரம் முதலாகிய சிறந்தகுணங்களையுடையர். பொதுவாக அருணாசலமவர்களுடைய பிள்ளைகளே பல விதத்திலும் சிறந்தவர்கள். அதிலும் பெண்பிள்ளைகள் மிக்க விசேடமானவர்களென்பது உலகப்பிரசித்தம். ஆகவே, துரையவர்களும் லேடியவர்களும் மிகவருமையாய் சொர்ண விக்கிரகங்கள்போல், தேவகன்னியர்களுக்கொப்பாகப் பெற்றெடுத்த இக்குலமணிகளின் பெருமையை எம்மால் எழுதியடங்காது.

## **Dr. S. Ponnusamy,** Jaffna, Apothicaries Co.,

ஸ்ரீமான் டாக்டர் பொன்னுச்சாமி:—இவர் யாழ்ப்பாணத்து நவாலிப்பதியில் குலாசாரம் மதாசாரம பூண்ட மேன்மக்கள் மரபிலே யுதித்த திருவாளர் சிற்றம்பலமவர்களுடைய நற்புதல்வராவர். இவர் ஆங்கில வைத்திய முறைகளைக் கற்று அதில் அதிக தேர்ச்சியும் வைத்தியத்தில் மிக்க அனுபவமுமுடையராய், பலராலும் நன்கு மதிக்கப்பெற்ற யோக்கியராய் சாந்தம், பொறை, அடக்கம், பரோபகாரம் பிரபுத்துவம் பெருந்தன்மை ஆதிய பல குணங்களையுடைய உத்தமராய் விளங்குகின்றனர். எமது நண்பராகிய ஸ்ரீமான் பொன்னுச்சாமியவர்களுடைய பெருமையைச் சொல்லுமிடில் "எல்லா நம் மாணிடவராவரோ இப்புவியில் கல்லெல்லாம் மாணிக்ககல்லாமோ" என்னும் வாக்கியத்திற் கிணங்க மனுஷத்தன்மையும் நற்குண நற்செய்கையுமுடைய பிரபுவாவர். இவர் பறங்கித் தெருவில் "அபபோத்திக்கரீஸ்" என்னும் நாமத்துடன் ஓர் மருந்துச்சாலையை ஸ்தாபித்து மருந்து வகைகளையும், மற்றுமுண்டான சாய்புச் சாமான்களையும் அழைப்பித்து அனேக வருட காலங்களாக அதிகதிறமையோடு நடாத்தி வருகின்றனர் இதுகாறும் இவர் எத்தனையோ சற்கருமங்களையுஞ் செய்திருக்கின்றனர். உதாரணமாக ஆனைக்கோட்டை மூத்த நயினார் கோவிலில் ஓர் திருவிழாவை அதிவிமரிசையாக நடாத்திவருகின்றனர். ஸ்ரீமான் பொன்னுச்சாமி இயல்பாக நல்மனதுடையர் ஆகவே மனம்போல வாழ்வு என்றபடி ஆண்டவனருளால், நன்மனையாளையும் நல்லறிவோடு கூடிய நற்புதல்வர்களையும் பெற்றனர். இவருடைய ஜேஷ்ட புத்திரரே ஸ்ரீமான் டாக்டர் திபாகராஜா.

## Dr. S. C. Paul M.D F.R.C.S. Rao Mahal, Ward Place.

திருவாளர் டாக்டர் சாமுவேல் செல்லையாபோல்:- இப்பெரியார், யாழ்ப்பாணத்து மானிப்பாய், உடுவில்என்னுமிடங்களில் மேன்மக்களாயும் பிரபுக்களாயும் விளங்கிய இராமநாதர். வேலாயுதர், காத்திப்பிள்ளை என்போருடைய வழித்தோன்றலாயுதித்த டாக்டர் வில்லியம் போல் அவர்களுடைய புத்திரராவர். இந்த வில்லியம்போல் வட்டுக்கோட்டையைச் சென்மஸ்தானமாயும் ஆனைகோட்டையை வாசஸ்தானமாயுமுடைய சம்பந்தர். கதிர்காமரின் புத்திரியை விவாகஞ்செய்தனர். ஆகவே புத்திரராகிய ஸ்ரீமான் டாக்டர்போலின பிதாமாதாவுடைய வழியிலேயுதித்த ஞாதிகளநேகர் இப்பவும் பிரபலஸ்தர்களாக வட்டுக்கோட்டை அராலி, மானிப்பாய், உடுவில், பறங்கித்தெரு, ஆதியவிடங்களில் வசிக்கின்றனர். இவ்வுத்தமர் 1882-ம் ஆண்டு பிப்பிரவரி மாதம் 28-ம் திகதி பிறந்தனர். சிறுபிராயம் முதல் நற்குணநற்செய்கைகளிலும் கல்வியறிவிலும் விவேகத்திலும் சிறந்த யோக்கியராய் யாழ்ப்பாணத்துச் சென்றல் கொலீச்சிலும், வெஸ்லிக் கொலீச் செந்தோமஸ் கொலீச், பிரசிடென்சி கொலீச், ஆதிய பற்பல வித்தியாசாலைகளில் கல்விகற்ற பேறிஞராய், ஆங்கில வைத்திய சாஸ்திர முறைகளையும், ஆயுள்வேத முறைகளையும் மதாசிலுள்ள மெடிக்கல் கொலீச்சிலே கற்றுச்சகலகலைகளிலும், மகாபாண்டித்தியமுடையராய் இங்கிலாந்து முதலிய மேலைத் தேசங்களுக்குச் சென்றுஅதிநுட்பமாயும் நூதனமாயுமுள்ள நவீன முறைகளைத் தெரிந்துவைத்திய முறையில் கைதேர்ந்தவராய் பெறுதற்கரிதான பெரும்பட்டங்களைப் பெற்று 1902-ம் ஆண்டு முதலாக இலங்கை அரசாங்க வைத்தியராகவும், பிரபல டாக்டராயும், விளங்குகின்றனர். ஸ்ரீமான் டாக்டர் போல் அவர்களின் திறமையையும் சத்திர வைத்தியத்தின் சாதுரியத்தையும் அறியாதார் எத்தேசத்திலுமில்லை யெனலாம் உலகில் பெரும் புகழ்பெற்று விளங்கும் இப்பெரியாருடைய சரித்திரத்தின் பிரபாவத்தை எம்மால் சொல்லவும் இப்புத்தகத்தில் எழுதவும் அடங்காது. ஆகவே ஒருவாறு சுருக்கமாகச் சொல்லுகில் தேசாதிபதியவர்களாலும், அரசர்களாலும் ஊரவர்களாலும், பற்பல சமயத்தவர்களாலும் சாதியார்களாலும் நன்குமதிக்கப் பெற்ற உத்தமராய், சற்குணசம்பன்னராய் பாரிய தனவந்தராய், அறிவிலும் அனுபவத்திலும் சிறந்த மேதா




DR. S. C. PAUL, M.D., F.R.C.S.

வியாய் உலகியல் ஞானம் அரசியல் ஞானமுடைவராய் சாந்தம், பொறை, அடக்கம் பரோபகாரம், பிரபுத்துவம், பெருந்தன்மை சிவகாருண்யம் முதலாகிய பற்பல குணங்களை அணிகலமாகக் கொண்டு உலகில் பிரக்கியாதி பெற்று சந்திரனைப் போல் விளங்குகின்றனர். இப்படிப்பட்ட ஒரு பெருமகானுடைய பெருமையை என்னென்றுதான் சொல்வோம். இவர் உலகில் சர்வாதிகாரம் படைத்த குலமகனாய், பற்பல சங்கங்களுக்கு அதிபராய், கிறிஸ்து மதாபிமானியாய், ஜெனரல் ஆசுப்பத்திரிக்குத் தலைவராய், வைத்திய மாணவரைப் பரீட்சை செய்பவராய், தமிழ் மக்களுள்ளே முதன்மை பெற்று விளங்குகின்றனர். இவர் காலஞ் சென்ற டாக்டர் அசரப்பா அவர்களின் புத்திரியை மணந்து ஆறு ஆண்களையும் மூன்று பெண்களையும் சந்தானங்களாகப் பெற்றனர். தற்போது இவர் புத்திரரும் எமது மாணாக்கருமாகிய மில்றோய் அசரப்பாபோல் என்பவர் பிதாவைப்போல் பட்டங்களைப் பெற்று வைத்திய முயற்சியில் சிறந்து, சற்குணவானாய் விளங்குகின்றனர்.

## G. G. Ponnambalam Esq, Barrister-at-law Colombo.

ஸ்ரீமான் பாரிஸ்டர் பொன்னம்பலம்: — இவர், மாணிப்பாய் நவாலி என்னுமிடத்துள்ள பிரபுக்கள் வமிசத்தைச் சார்ந்தவர். தபாற் கந்தோரில் உத்தியோகம் பெற்றுப் பலவிடங்களிலும் போஸ்ற் மாஸ்ற்றராயிருந்து நற்கியாதி பெற்று விளங்கிய திருவாளர் காங்கேயபிள்ளையவர்களின் அருமைப் புதல்வராவர். அன்றியும் இவர் எமது நண்பராகிய மணியோடர் சின்னையாவுக்குப் பௌத்திரனென்றும் அறியலானோம். இவ்விளைஞர் கல்வியை இடைவிடாமல் ஊக்கமாகக் கற்று, கேம்பிறிஜ் பரீக்ஷைகளிற் தேர்ந்து, வித்தியாகர்த்தராலும் மேலதிகாரிகளாலும் நன்கு மதிக்கப்பட்டுப் பற்பல பரிசுகளையும் வெகுமதிகளையும் வழங்கப் பெற்று, ஆனந்தக் கல்லூரி, சென்யோசெப் கல்லூரி, என்னும் கலாசாலைகளிற் சிலகாலம் ஆசிரியராயிருந்து, உயர்தரக் கல்வி கற்கும் பொருட்டாக ஸ்கொலஷிப் மாணவராய் இங்கிலாந்து முதலிய மேலைத்தேசங்களுக்குச் சென்று, நியாயப்பிரமாணங்களை ஐயந்திரிபறக்கற்று, மகா பாண்டித்திய முடையவராய் பட்டங்களைப் பெற்றுக் கல்வியிலே சிறந்த பேரறிஞராய்த் தற்போது பிரபல நியாயதுரந்தரராகவும், கிறிமினல் வளக்குகளில் அதிக திறமை

யுள்ள லோயராகவும், பிரக்கியாதிபெற்று விளங்குகின்றனர். இவர் இங்கேயுள்ள லோயர்மாருள், விவேகத்தாலும், புத்திசாதுரியத்தாலும், வாக்குவல்லபத்தாலும், பேச்சுத்திறமையாலும், சாதுரியமுடையவர். இவருடைய திறமையைப் பற்றிப் பலரும் வியந்து பேசுகின்றார்கள். உதாரணமாக இவர் எத்தனையோ வளக்குகளை வென்று அதினால் நற்கீர்த்தியுண்டாகப் பெற்றனர். சுருக்கமாகச் சொல்லுகில் இன்னுஞ் சிலகாலத்துக்குள் இவர் மேலான பதவியைப் பெற்று நம தமிழ் மக்களுள் பிரக்கியாதியுடன் விளங்குவாரென்பது திண்ணம். ஸ்ரீமான் பொன்னம்பலம் மேன்மகனானதால் தம்முடைய குலாசாரம் மதாசாரங்களின்றும் பிறம்பாமல் மூதாதையர்களைப் பின்பற்றிச் சைவாசிலரா யொழுகுகின்றனர். மறு சரித்திரத்தில் இவரைப்பற்றிக் கூறுவோம்.

## **Mr. M. Ponniah,** Head Overseer. Selangor F.M.S.

Manager, Killaan Subramaniaswamy Kovil

ஸ்ரீமான் பொன்னையா:—தற்போது கொடுவாய்ப்பாசசியப் பகுதியில், கிள்ளான் என்னுமிடத்தில் ஹெட் ஓவசியராய் பிரபலமுற்று விளங்கும் இவ்வுத்தமவர், எந்நாட்டினும் நன்னாடாய் விளங்கும் புங்குடுதீவைச் சார்ந்தவர். பரோபகாரம், பிரபுத்துவம், முதலானவற்றையுடைய மேன்மக்கள் மரபிலே, சைவாசிலர்களாயும் சிவநேசச் செல்வர்களாயும் பிரக்கியாதி பெற்று விளங்கிய உத்தமர்களின் சந்ததியிலே தோன்றியவர். இவ்வூருக்குத் தலை தலைமுறையாகத் தலைமைக்காரர்களாயும், உத்தியோகஸ்தர்களாயுமிருந்த பசுபதி உடையார் முத்துவேலுவின் புத்திர சிகாமணியாவர். அன்றியுமிவர் மாதாவுடைய வழியால் சரவணையிலிருந்த விதானை கார்த்திகேயருக்குப் பௌத்திரருமாவர். இவருடைய தாயாரை திருமேனிப்பிள்ளை என்னும் நாமத்தால் அழைப்பார்கள். புத்திரராகிய ஸ்ரீமான் பொன்னையா யாழ்ப்பாணத்திலே கல்விகற்று தம் மூதாதையர்களைப் போல் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்து, சிலவருடங்களுக்குமுன் சிங்கப்பூர்ப் பகுதிக்குச் சென்று, கடவுளுதவியால் உத்தியோகம் பெற்று ஏராளமான திரவியத்தைச் சம்பாதித்து எல்லையில்லாத் தானதருமங்களைச் செய்து எத்திசையும் பிரக்கியாதிபெற்று விளங்குகின்றனர். கிள்ளானிலிருக்குந் தமிழ் மக்களுள் மதிப்பாலும் மரியாதையாலும், செல்வாக்காலுஞ், சிறந்தவரிவரொருவரேயாம். இவருடைய பெரு

மையைப் பற்றிப் பலரும் வியந்து கூறக்கேட்டுளேம். இவர் பரோ பகாரசிந்தையும் பெருந்தன்மையுமுடையரென்றும், கொடையிலே சிறந்த வள்ளலென்றுங் கேள்வியுற்றதால் இவரை யாம் நன்குமதித்து இங்கு எழுதலானேம். தற்போது கிள்ளானிலிருக்கும் சுப்பிரமணிய சுவாமி கோவிலுக்குத் தரும கர்த்தாவுமாவர். இவ்வாலயத்தில் தம்முடைய சொந்தச் செலவிற்றனே ஓர் விநாயகரையும் பிரதிஷ்டை செய்வித்திருக்கின்றனர். இவர், வண்ணார்பண்ணை வாசரான, சபாபதிப்பிள்ளையுடைய புத்திரி ஸ்ரீமதி செல்லம்மா ளென்னும் பெண்மணியை விவாகஞ் செய்து புத்திர சந்தானங்களையும் பெற்றனர். ஸ்ரீமதி செல்லம்மாளுடைய குணவிசேடத்தைப் பற்றிச் சொல்லுகில் இந்தப் பெண்மணி பர்த்தாவுக்கேற்ற பதிவிரதையென்றும், குணத்திலே சிறந்த குணசாலியென்றும் அறியலானேம். ஆகவே இத்தம்பதிகளுக்கு யீசனருள் உண்டாகக்கடவது

## S. Periyathamby Esq, B. A. C. S. Office. Colombo.

ஸ்ரீமான் பெரியதம்பி:— புலோலிக்கணித்தாயிருக்கும் துன்னாலை தெற்கில், பிரபலஸ்தர்களாய் விளங்கிய மேன்மக்கள் பரம்பரைச்சார்ந்தவர். இவருடைய சிறந்த குணங்களைப்பற்றி எறக்குறைய பதினெட்டு வருடகாலங்களாயறிவேம். இவர் நீங்கில் எனவழங்கும் குறிச்சியில், பழவளவு என்னும் நாமத்தையுடைய இல்லத்தில் ஜெனனமானவர். இவருடைய தகப்பனார் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த யோக்கியராயும், சோதிட சாஸ்திரங்களில் வல்லுனராயுமிருந்தனர். இக்காரணம்பற்றி அவ்விடத்துள்ள ஜனங்களெல்லாரும இவரை வெகுமானித்து, சாத்திரியார் என்று அழைக்க ஒருப்பட்டனர். ஆகவே இவருக்கு இந்நாமம் உலகில் வழங்கலாயிற்று. இவருக்குப் புத்திரர் மூவர். சிரேஷ்ட புத்திரராகிய ஆறுமுகமென்பவர், அனுராசபுரத்தில் பிரபல நொத்தாரிசுவாயிருக்கின்றனர். கணபதிப்பிள்ளை யென்பவர் அத்வகாத்தாயிருந்து காலஞ்சென்றனர். அவரின் கனிஷ்ட சகோதரரே ஸ்ரீமான் பெரியதம்பி. இவர், இயல்பாகவே நற்பழக்கவொழுக்கமுடையராய் வளர்ந்து, றோயல் கொலீச்சில் கல்விகற்று, கேம்பிறிஜ்பரீக்ஷை, லண்டன் பரீக்ஷை, பி. ஏ. பரீக்ஷை, கிளறிக்கல் பரீக்ஷை, என்னும் பலவித பரீக்ஷைகளிற் சித்தியடைந்து,

அரசாங்கத்தில் உத்தியோக நியமனம்பெற்று தற்போது இராச மாளிகைத் ஆபீசில் கடமைபார்த்து வருகின்றனர். இவர் சைவ சித்தாந்த சாஸ்திரங்களையும், சமயகுரவர்களால் அருளிச்செய்யப் பட்ட தமிழ்வேதத்தின் சாரங்களையும், அதனருமை பெருமை யையும், அற்புதங்களையும், ஆராய்ந்து "சைவத்திற் சமயம் வேறி ல்லை" சைவசமயமே சமயம் என்பதற்கிணங்க சைவாசாரமும் சமயபக்தியுமுடையராய், அறிவிலே சிறந்த பேரறிஞராய், விவே கானந்த சபை அங்கத்தவராய் விளங்குகின்றனர். இவர் அவ் வூரில், சகல வளங்களாலும், சிறப்புற்று விளங்கிய ஓர் பாரிய குடும்பத்தில் குலமகளுய் வந்துதித்த ஆனந்தா மாப்பாணர், சின் னர் வேலுப்பிள்ளையுடைய புத்திரி ஸ்ரீமதி நாகரத்தினம் என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து ஓர் பெண் மகவையும், ஓர் ஆண் மகவையும் பெற்றனர். இவருடைய தாயார் பெயர் சின்னத்தங் கம். ஸ்ரீமதி நாகரத்தினம் பிதாவழியால் அதிகாரம் படைத்த சின் னர்முருகேசு, சின்னர்கணபதிப்பிள்ளை ஆதியோரையும், மாதா வுடைய வழியால் பிரக்கியாதிபெற்ற பிரபுக்களாயும், குலமக்களா யும் விளங்கிய சப்கலெக்டர் கனகசபை,முதலியார் சபாபதிப்பிள்ளை ஆதியோரையுஞ் சார்ந்தனர். ஆகவே தம்பதிகள் இனிது வாழ் வார்களாக

## S. Ponnambalam Esq, Broker,"Naga Villa"Bambalapitiya

---

ஸ்ரீமான் புரோக்கர் பொன்னம்பலம்:—இவர், இற்றைக் குச்சிலவருடங்களுக்குமுன் இம்பீரியலென வழங்கும் மதராஸ் வங்கியில் இரண்டாஞ் சிறுபபாயிருந்து பெருங்கீர்த்திவாய்ந்த திருவாளர் சின்னத்தம்பியார் மகன் செல்லையாவுடைய சிரேஷ்ட புத்திரராவர். ஸ்ரீமான் செல்லையா உயர்குலத்துத் தோன்றிய உத்தமராகையால் தாம் ஈட்டிய பொருளைக்கொண்டு சற்கருமங் களாயுள்ள சிவாலயம், மடாலயங்களைத்தாபித்துச் ஸ்தலயாத்திரை முதலானவைகளைச்செய்து பாகதியடைந்தனர். புத்திரராகிய ஸ்ரீ மான் பொன்னம்பலம் இங்கேயுள்ள கலாசாலைகளிற் கல்விகற்று "ஹெண்டேர்சன்" கம்பனிக்குப் புரோக்கராய் இருக்கின்றனர். இவருடைய குணவிசேடத்தைப்பற்றிச் சொல்லுகில் பிரபுக்கள் வமிசத்திலே தோன்றிய தமிழ் மக்களுள், இவரைப்போல் சாந்த குணமுடைய யோக்கியரைக் காண்பதரிது. இவர் இயல்பாக

சாந்தம், பொறை, அடக்கம், பரோபகாரம், பெருந்தன்மை, முதலா கிய சிறந்த குணங்களையுடையவர். அன்றியும இவர் திருவாதிரை நக்ஷத்திரத்தில் பிறந்ததால், தெய்வபக்தியும ஆன்ம இரக்கமுமுடை யர். பிதுர்கடன், மாதுர்கடன், முதலானவற்றைப் பக்திசிரத்தை யோடுசெய்பவர் புகழ், ஆரவாரம, முதலானவற்றை விரும்பாத வர். "வித்தாரமும் கடம்பும் வேண்டாமடை நெஞ்சே செத்தா ரைப்போலதிரி" என்னும நீதிமொழிக்கிணங்க மௌட்டிகத்தன் மைகளொன்றுமில்லாமல், தானும தன்பாடுமாய் அமைந்தியும் பொறுமையுமுடைய உத்தமராய விளங்குகின்றனர். இவர் ஸ்த லயாத்திரையின் பொருட்டு வருஷந்தோறும் இந்தியாவிலுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் செல்பவர். இராமேஸ்வரம் முதல் காசிவரியந்தமுள்ள சிவஸ்தலங்களுக்குச் சென்று, கங்கை முத லான புண்ணிய தீர்த்தங்களையுமாடினவர். இலங்கையில் மிகப் புராதனமாயுள்ள, கதிர்காமம், நல்லூர், முனீஸ்வரம், திருக்கேதீஸ் வரம், சிவனடிபாதம், முதலாகிய திவ்வியஸ்தலங்களுக்கு தவறாது செல்பவர் தருமவிஷயமாகச் சொல்லுகில் எக்கருமங்களுக்கும் இல்லையென்னாது பொருள்கொடுக்கின்றவர். இவருடைய பிதாவி னால் ஸ்தாபிக்கப்பட்ட கரப்பிராணைப் பிள்ளையார்கோவிற்கருமங் களை இவரே பரிபாலனஞ் செய்துவருகின்றனர். இவர், இக் கொழும்புமாநகரிலுள்ள தமிழ்மக்களுள் பிரபுவாயும், தருமசீலரா யும் பிரக்கியாதி பெற்றுவிளங்கிய மயிலுப்பிள்ளைச் சிறுப்பாவர் களுடைய புத்திரன் ஸ்ரீமான் வைத்தியலிங்கச் சிறுப்பாவர்களு டைய சிரேஷ்ட புத்திரி **ஸ்ரீமதி சுந்தரி** என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து, Nageswari, Skantanathan, Dhanesan, Mahendra, Srikanti, என்னும் பெயர்களையுடைய சந்தானங்க ளைப்பெற்றனர். ஸ்ரீமதி சுந்தரியின் குணமகிமையைப் பற்றிச்சொல் லுகில் இப்பெண்ணரசி பிரபல முற்று விளங்கிய தருமசீலர்களு டைய சந்ததியில் திருகசீரிடத்திலே செனித்ததால் தருமங்கொடுக் கின்ற உதாரகுணமும், பெருந்தன்மையான போக்கும குடும்ப பாரத்தை நடாத்துந் திறமையும், சமயாசாரமும், தெய்வபக்தியும், சாந்தகுணமும, மிக்கநேர்மையும், சாமார்த்தியமும், வாக்குறுதியும் சங்கீத ஞானமுமுடைய குலமகளாய் விளங்குகின்றனர். இவர் களுடைய பிள்ளைகளைப் பற்றிச் சொல்லுகில் இவர்கள், நற்பழக்க

மும் நல்லொழுக்கமும் சாந்தகுணமுமுடையர்களாவர். சிரேஷ்ட புத்திரியாகிய நாகேஸ்வரி என்னும் பெண்மணி கல்வியில் மிக்க திறமையுடையர். எத்தனையோ பரிசுகளையும் பெற்றிருக்கின்றனர். இந்தப் பெண்மணி எமது மாணாக்கியுமாவர். மறு சரித்திரத்தில் விரிவாய்க் கூறுவோம்.

## Dr. V. K Paramanayagam L R C P & S, L F P & L (Glas)

M O Municipal Free Dispensary

ஸ்ரீமான் டாக்டர் பரமநாயகம்:—இவர், வண்ணார் பண்ணையை ஜென்மஸ்தானமாகவுடையவர். பணபலத்தால், உத்தியோகத்தாலும், மதிப்பாலும், மற்றுமெவ்வகையாலுஞ் சிறந்து விளங்கிய பெரும் பிரபுக்கள் வமிசத்தைச் சார்ந்தவர். இவருடைய மூதாதைகள் சைவாசாரங்களிற் சிறந்த யோகியர்களாயும் பிரபல உத்தியோகஸ்தர்களாயும் விளங்கினார்கள். இப்பவும் இவருடைய ஞாதிகளிற் சிலர் யாழ்ப்பாணத்திலும் இந்தியாவிலுமிருக்கின்றனர். இவர் இங்கிலாந்து முதலிய மேலைத் தேசங்களுக்குச் சென்று உயர்தரக் கல்விகற்று, அங்கு வைத்தியப் பரீட்சைகளில் தேர்ந்து அரும்பெரும் பட்டங்களைப் பெற்றுத் தற்போது முனிசிப்பாலிற்றியினர் சார்பாயிருக்கும் தொர்மதரும வைத்தியசாலைக்குத் தலைவராயிருக்கின்றனர். இவருடைய சகோதரர்கள் காலஞ்சென்ற டாக்டர் இராசநாயகம், வீரநாயகமென்போர் எம்மிடத்தில் மிக்க அன்பு விசுவாசமுடையர்களாயிருந்தனர். ஸ்ரீமான் பரமநாயகமும் அவர்களைப் போல், பெருந்தன்மையுமுடையாரென அறிகிறேம். யாம் இவரோடு அதிக சிநேகமில்லாமையால் இவருடைய சிறந்த குணங்களைப்பற்றி விஸ்தாரமாயெழுத இடம் பெறவில்லை. எமது சிநேகர்களாயிருக்குஞ் சில பிரபுக்கள் இவரைப்பற்றி நன்மையாயக் கூறியதாலும், காலஞ் சென்ற இவர் மனைவி ஸ்ரீமதி ஏகாம்பா எமமுடைய மாணாக்கிகளுளொருவராயிருந்தமையாலும் நன்றியறிதலுக்கு அறிகுறியாக இங்கு எழுதலானோம். ஸ்ரீமதி ஏகாம்பா, தமிழ்ப்பெண்களுள் நாயகமாய், சற்குணசாலியாய், இல்லறதருமத்தை நடாத்திச் சந்தானங்களாக ஓர் ஆண் மகவையும் Arunthati, Indrani, என்னுமிரு பெண்களையும் பெற்றுச் சிவகதியடைந்தனள். ஸ்ரீமதி ஏகாம்பா காலஞ்சென்ற சிறுப் சொக்கநாதனவர்களுடைய புத்திரியாவர். "மற்றோர் சரித்திரத்தில்" விபரமாய்க்கூறுவோம்.

## The Private Hospital, Union Place, Colombo.

கொம்பனித்தெருவிலுள்ள "பிறைவேற் ஹொஸ்பிற்றல்" என்னும் பிரத்தியேக ஆசுப்பத்திரியானது கனம் பொருந்திய கவுன்சில் மெம்பர் ஸ்ரீமான் டாக்டர் இ. வி. இரத்தினமவர்களுடைய சொந்த ஸ்தாபனமாகும். இங்கு, கனவான்களும் தனவான்களும், உத்தியோகஸ்தர்களும், சுதேசிகளும், மற்றுமுண்டான பற்பல சாதியார்களுந், சமயத்தார்களும், தங்கள் தங்கள் வசதிக்கும் இயல்புக்கும் தக்கதாக வைத்தியஞ் செய்வித்துச் சிகிச்சை பெறுதற்கு விசேட கனமாய் விளங்குகின்றது. இவ் வாசுபத்திரிக்கு முதலாவதாயுள்ள பிரதான டாக்டர் ஸ்ரீமான் இரத்தினம் F.R C S., M M C மற்றவர் ஸ்ரீமான் டாக்டர் முத்தையா M B B.S. L.R.C P (Lon.) M R C S (Eng.) M.M C மற்ற டாக்டர் சி. சிவப்பிரகாசம். இவருக்கு அடுத்த டாகடர் பிலிமோறியா இவர்கள் வைத்தியத்தில் திறமையுள்ளவர். இன்னும் இவர்களைப் போல் எத்தனையோ டாக்டர்மார் இங்கு கடமை பார்த்து வருகின்றனர்.

## R. C. Proctor Esq, Interpreter Mudaliyar, Supreme Court.

ஸ்ரீமான் ஆர் சி பிறக்டர்:—இவர் சங்கானையில் நல்ல மரபிலே, தக்க குடும்பத்தை சார்ந்தவர். இவருடைய பிதாவாகிய ஸ்ரீமான் சின்னத்தம்பி பெரியவர் பிரபல நியாய துரந்தரராயிருந்தனர். புத்திரராகிய ஸ்ரீமான் செல்வத்துரை 1876-ம் ஆண்டு மே மாதம் 14-ம் திகதி ஜெனனமாகி சற்பாத்திரராய் வளர்ந்து "சென்றல் கொலீஜ" என்னும் மத்திய கல்லூரியில் கல்விகற்று அரசாங்க உத்தியோகஸ்தராய் சுப்பிறீம்கோடு முதலான வற்றில் (துவிபாஷகர்) அதாவது தலைக்குமுதலியாராயிருந்து தற்போது மிக்க மேலான பதவியில் சுப்பிறீம்கோட்டு றிஜிஸ்றாராயிருக்கின்றனர். இவர், சாந்தகுணமும், மிக்க பொறுமையும், பெருந்தன்மையுமுடைய பெருமனுஷன். இவரைப்பற்றி விசேடமாய்ப் பலருஞ் சொல்லக் கேள்விப்பட்டேம். ஆகவே மறுபதிப்பில் விபரமாய்க் கூறுவேம்.

## Paikiasothy Saravanamuttu Esq, C. C. S
District Judge, Kegalla

திருவாளர் பாக்கியசோதி சரவணமுத்து:—இவருடைய வரலாற்றைச் சொல்லுகில், இற்றைக்குச் சில வருடங்களுக்கு முன் இவ்வூரில் பிரபல டாக்டராயிருந்து பெருங் கீர்த்தி பெற்றுச் காலஞ்சென்ற ஸ்ரீமான் வீ. சரவணமுத்து அவர்களுடைய புத்திரருளொருவராவர். இனி இவருடைய முதாதைகளின் பூர்விகத்தைப் பற்றிச் சொல்லுகில், வலிகாமம் வடக்கைச் சார்ந்த பன்னாலை என்னுங் கிராமத்தில் கதிர்காம சேகரமுதலியார் என்றொருவர் இருந்தார். இவருடைய வமிசத்தில் முத்தர், வேதாரணியர், என்போர் தோன்றினார்கள். இவர்கள் உடுவில் என்னுமிடத்தை வாசஸ்தானமாயுஞ் சென்மஸ்தானமாயுங் கொண்டனர். இப்பெரியார்களுக்கும் இவர் பௌத்திரராவர். அன்றியும் இவர் தாயாருடைய வழியால், வட்டுக்கோட்டையிலிருந்த இஞ்சினீர் "ஆம்ஸ்ரோங்" முத்துக்காணியவர்களுக்குப பௌத்திரருமாவர். இங்ஙனமாக ஸ்ரீமான்பாக்கியசோதி பிதா வழியாலும், மாதா வழியாலும், உயர் குலத்துத் தோன்றிய மேன்மக்களின் பரம்பரைச்சார்ந்தவர். இவர் 1892-ம் ஆண்டு பிறந்தனர். நற்பழக்க வொழுக்க முடையராய வளர்ந்து சென்ற்தோமஸ் கல்லூரியில் கல்விகற்று, அதன்பின் இங்கிலாந்து சென்று கேம்பிரிட்ஜில் உயர்தரக்கல்வி கற்று பீ. ஏ. முதலான பெரும் பட்டங்களையும் பெற்றனர். சிவில் சேர்விஸ் பரீக்ஷைக்குச் சென்று அதிலும் சித்தியடைந்தனர். அதன் பின்னர் 1919-ம் ஆண்டில் உத்தியோக நியமனம் பெற்று, உப ஏஜண்டாகவும், நீதிபதியாகவும் கடமை பார்த்து பலராலும் நன் மதிப்புப்பெற்று, தற்போது உத்தியோக உயர்வடைந்து கேகாலையில் டிஸ்திறிக் நீதிபதியாயிருக்கின்றனர். யாம் சென்தோமஸ் கல்லூரியில் கல்விகற்கும் பொழுது இவரும் அங்கு கற்றனர். அக்காலத்திலிருந்து, இவருடைய குணவிசேடங்களை யாமறிவோம். இவர், சாந்தம், பொறை, அடக்கம், முதலாகிய விசேடகுணங்களையுடையவர். இவருக்கு விவாகம் ஆனாவது, புத்தளப் பகுதியில் இறவுண் பிறக்டராகவும், பிரபல நியாயதுரந்தரராகவுமிருந்த அடம் முத்துக்குமாரு அவர்களுடைய புத்திரி ஸ்ரீமதி Sybil Thaugam என்னும் பெண்மணியைக் கைப்பிடித்து புத்திர சந்தானங்களையும் பெற்றனர்.

## Dr. K. Ponniah, L.M.S. (Madras) L.R.C.P. & S.J., M.O. Kandy.

ஸ்ரீமான் டாக்டர் பொன்னையா:—இவர், தெல்லிப் பழையைச் சென்மஸ்தானமாயுடைய திருவாளர் கார்த்திகேச பிள்ளையவர்களின் அருந்தவப் புதல்வராவர். இவர் 1885-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 10-ம் திகதி செனனமானவர். சென்னை முதலான விடங்களில் கல்வி கற்று எல் எம் எஸ். பட்டம்பெற்று இலங்கையின் நாளுபகுதிகளிலும் மெடிக்கல் ஆபீசராயிருந்து பலராலும் நன்குமதிக்கப் பெற்று, செக்கன கிறேட் டாக்டராக இங்கிலாந்து முதலிய மேலைத்தேசங்களுக்குச் சென்று, வைத்திய முறையில் தேர்ந்து உயர்வான பட்டங்களைப்பெற்றுத் தற்போது கண்டியில் பிரபல டாக்டராகக் கடமை பார்த்து வருகின்றனர். இவர் பகிரங்கப் பகுதியில் பிரதம கிளக்காயிருந்து பலராலும், நன் கறியப்பட்ட திருவாளர் தில்லையம்பல முதலியாரவர்களின் புத்திரி ஸ்ரீமதி விசாலாக்ஷி என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து Rupavathi, Wijayam, Yoganathan, Bala Subramaniam, எனனும் பெயர்களையுடைய புத்திர சந்தானங்களைப் பெற்றனர். இவர் மனைவி ஸ்ரீமதி விசாலாக்ஷியின் குணமகிமைகளைப் பற்றிச் செல்லுங்கால்,இந்தப் பெண்மணி பிதா மாதாவைப்போல் சாந்தகுண மும், நற்பழக்க வொழுக்கமுமுடைய உத்தமியாய் வாழ்கின்றனர்.

## Hon. Mr. K. Balasingham, Advocate, M.L.C.

கௌரவ ஸ்ரீமான் பாலசிங்கம்:—இப்பெரியார் உடுப் பிட்டியை பூர்வீக ஸ்தானமாயும் நல்லூரை வாசஸ்தானமாயுடைய வர். இவர் உயர்குலத்தோன்றிய சந்திரசேகரமாப்பாண முதலி யார், கதிர்காம பூபமுதலியார், என்போருடைய வழித்தோன்றலா யுதித்த நீதவான் கதிரவேற்பிள்ளையவர்களுடைய புத்திர சிகாமணி யாவர். தற்போது ஸ்ரீமான் பாலசிங்கம் தமிழ் மக்களுள் பிரபல நியாய துரந்தரராயும,பெருங் கல்விமானுயும்,சட்டசபையிலேயுள்ள மந்திராலோசனை சபையின் அங்கத்தவராயும், பலராலும போற்றத் தக்க மாண்புடையராய் எத்திசையும் கீர்த்திப்பிரதாபமுற்று விளங் குகின்றனர். "குலத்தளவே யாகுங்குணம்" என்றபடி குலதில கர்களாய் விளங்கிய பெரும்பிரபுக்கள் வமிசத்திற்றோன்றிய உத்த மரானதால், சாந்தம் பொறை, அடக்கம், பரோபகாரம், ஏழைக

ளிடத்தன்பு முதலாகிய சிறந்த குணங்களை அமையப் பெற்றனர். ஸ்ரீமான் பாலசிங்கம் தம்முடைய பிதாவைப்போல் சிலகாலம், டிஸ்றிக் கோட்டு நீதிபதியாகவும் கடமை பார்த்துப் பெருங்கியாதி பெற்றனர். 1914-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 16-ம் திகதி முதல் இதுபரியந்தம் அரசியல் விஷயமாக சட்டசபையில் எத்தனையோ கருமங்களை ஆக்ஷேபித்திருக்கின்றனர். ஸ்ரீமான் பாலசிங்கம், சோஷல் சேர்விஸ், வித்தியா சங்கம், முதலாகிய சங்கங்களிலும் சபைகளிலும் அங்கத்தவராவர்.

## R

## N. Ratnasabapathy Mudaliyar, Broker

ஸ்ரீமான் புறோக்கர் இரத்தினசபாபதி முதலியார்:- யாம் இதுவரையில் அனேகருடைய சரித்திரங்களை இயன்றவரையில் இங்கு எழுதலானேம், இப்பொழுது இவரையும் பற்றிச் சிறிது கூறுவேம். ஸ்ரீமான் இரத்தினசபாபதி இங்கேயுள்ள தமிழ்மக்களுள் வயசினுலும், செல்வத்தினுலும், அனுபவத்தினுலும், மற்றுமெவ்விஷயங்களினுலுஞ் சிறந்த மனுஷன் என்று சொல்லலாம். இவர் ஏறக்குறைய இலங்கையிலிருக்கும் எல்லாப் பிரபுக்களாலும், துரைமார்களாலும், நன்குமதிக்கப் பெற்றவர். இது காறும் இவரையறியாத வெள்ளைக்காறருமில்லை யெனலாம். இனி இவருடைய பூர்வீக வரலாற்றைக் கூறுவேம். அதாவது வெகுகாலத்துக்குமுன் புகமாலை யெனுமிடத்தைச் சென்மஸ்தானமாயுடைய இலங்கை நாத முதலியார், கநாகாம முதலியார், முத்த உடையார்முதலியார், நமசிவாய முதலியார், என்போருடைய வழித்தோன்றலாயுதித்தனர். இவர்கள் அக்காலத்தில் செல்வச் சீமான்களாயிருந்து சிவாலயம், மடாலயம், முதலானவற்றை ஸ்தாபித்துச் சிவபுண்ணிய சீலர்களாய் விளங்கினர்கள். இத்தருமஸ்தாபனங்களை இரத்தினசபாபதி முதலியார் பார்த்து வருகின்றனர். இவர் பிறவிச் செல்வரானதால் பெருந்தன்மையுடையராய் விளங்குகின்றனர். இதில் எஞ்சிய விஷயங்களை இத்துடன் அடுத்து வரும் மற்றோர் சரித்திரத்தில் கூறுவேம். ஸ்ரீமான் இரத்தினசபாபதி 1858-ம் ஆண்டு ஜனவரி மாதம் 2-ம் திகதி பிறந்தனர். றேயல் கல்லூரியில் கல்விகற்றனர். தற்போது "பொசன்குவேற்" கம்பனிக்குப் புறோக்கராயிருக்கின்றனர்.

**Hon. Sir P. Ramanathan,** KT.K.C.C.M.G. M.L.C. Colombo.

---

கௌரவ சேர் இராமநாதன்:—சிவபுண்ணிய சீலராய் விளங்கும் இப்பெரியார், இற்றைக்குச் சிலவருடங்களுக்கு முன் இராசவாசல் முதலியாராயிருந்து உலகில் பெருங் கீர்த்திபெற்றுச் சற்கருமங்களைச் செய்து இப்பூவுலகில் தமபெயரை நாட்டிச் சென்ற, திருவாளர் பொன்னம்பலமவர்களுக்குப் புண்ணிய வசத்தால் வந்துதித்த புத்திர சிகாமணிகளுளொருவராவர். இவ்வுத்தமர் 1851-ம் ஆண்டு ஏப்பிரல் மாதம் 16-ம் திகதி ஜெனனமானார். பிதாவைப்போல் எத்திசையும் பிரபலமுற்றுப் பெருங் கீர்த்திமானும், கலாவல்லுனராயும், பிரஜைகளுக்குத் தலைவராயும், ராஜாம்சம் பெற்ற மஹானும், விளங்குகின்றனர். பதினாறு கலைகளையுடைய சந்திரனுக்கொப்பாய் விளங்கும் இந்த மஹானுடைய பெருமையையும் இவருடைய பிரபாவத்தையும் சிற்றறிவுடையோனாகிய எம்மால் சாமாந்தியமாய் கூறவியலாது. ஆகவே இங்கு சிலவற்றை மாத்திரம் சுருக்கமாய்க் கூறத்துணிந்தேதம். இப்பெரியார் சகலமான கலைக்ஞானங்களையும் இளமையிற்றானே கற்று சமஸ்த சாஸ்திரங்களிலும் பகாபாண்டித்திய முடையவராய் 1873-ம் ஆண்டில் பிரபல நியாயதுரந்தரரானார். 1879-ம் ஆண்டில் சட்டநிரூபணசபைத் தமிழ் பிரதிநிதியானார். அக்காலங்களில் அற்றோணிஜெனரலாகவும், 1892-ம் ஆண்டு தொடக்கம் 1906-ம் ஆண்டு வரையில், சொலிசிற்றர் ஜெனரலாகவுமிருந்து இலேப்பாறி உலகத்துக்கு நன்மை செய்யத்தொடங்கினார். மருதனாமடத்தில் மேலோர் பெண்பாடசாலையையும், திருநெல்வேலியில் மேலோர் பிரமாண்டமான கலாசாலையையும ஸ்தாபித்தனர். இதுவன்றியும் சிவன் கோவிற் றிருப்பணி வேலையை முழுதும் வைரம்பாய்ந்த கருங்கற்களால் மிகவழகாய் அமைப்பித்திருக்கின்றனர். ஆன்ம சுகத்துக்கும் அறிவு விருத்திக்கும் ஏற்றதாகிய அரும் பெரும் நூல்களை இயற்றியுள்ளார். இவருடைய முதற்றார மனைவியார் பெயர் **ஸ்ரீமதி செல்லாச்சி.** இரண்டாவது மனைவியாரின் நாமம் **லீலாவதி.** இத் தம்பதிகள் நீடுழிவாழ எல்லாம் வல்ல இறைவனருள் புரிவாராக.

## **Lady Ramanathan,** Principal, Ramanathan College.

ஸ்ரீமதி லீலாவதி அம்மையார்:— இப்பெண்ணரசி கனம்பொருந்திய கௌரவ ஸ்ரீமான் இராமநாதனவர்களுடைய தர்மபத்தினியாவர். இவ்வம்மையாருடைய அருமையையும், பெருமையையும், கல்வியின்றிறத்தையும், கற்பொழுக்கங்களின் இயல்பையும், பதிவிரதா தர்மத்தின் சிறப்பையும், யாழ்ப்பாணத்துச் சைவப்பெண்களின் கல்வி விஷயமாகப்பட்டு வரும் பிரையாசத்தையும் இவ்வளவென்று எடுத்துரைக்க எம்மால் இயலாது. இப்பெண்ணரசி சமயாசாரங்களிலும் சாஸ்திர சம்பிரதாயங்களிலும், சிறப்புற்று, சீர்திருத்த விஷயமாகப் பற்பல சபைகளையுஞ் சங்கங்களையும் ஆங்காங்கு ஸ்தாபித்து, பெண்மணிகளுக்குச் சமயபோதனைகளையும், இல்லற தர்மத்துக்குரிய வீட்டுப்பணி, கணவரிடத்தொழுகும் பான்மை என்னும் சிறப்புவிதிகளையும் இத்துடன் தேசம் செழிப்பாதற்குரிய, கைத்தொழில், கமத்தொழில், கதராடை, நூல் நூற்றல் என்பனவற்றால் அடையத்தகும் பிரயோசனத்தையும், குறித்து அவ்வப்போது பிரசங்கித்து ஜனங்களுக்கு நல்லறிவுச் சுடர் கொழுத்தி சைவப் பெண்களை நன்னிலைப்படுத்தி இப்பாடசாலைக்குத் தலைமை ஆசிரியராய் விளங்குகின்றனர். இவ்வம்மையார், சமயாபிமானம், சாதியாபிமானம், பாஷாபிமானம், தேசாபிமானம், என்னும் பேரபிமானங்களையுடையர் இவ்வம்மையாருடைய நன்முயற்சியால் இப்பொழுது நம் யாழ்பாண நாடு பலவிதத்திலும் உயர்வடைதலைக் காண்கின்றேம்.

## **S. Ratnakaram Esq**, Proctor & Notary, Colombo.

ஸ்ரீமான் பிறக்டர் இரத்தினகரம்:—இவர் எந்நாட்டினும் நன்னாடாய் விளங்கும் மானிப்பாயில், பெரும் பிரபுக்களாயும், மேன்மக்களாயும், விளங்கிய பெரியார் சந்ததியைச் சார்ந்தவர். இவருடைய மூதாதைகளைப் பற்றிச் சொல்லுகில், கெங்காகுலரத்தின முதலியார், மதியாபரண முதலியார், கனகசபை முதலியார், தன்மாவாதர், முத்துத்தம்பி, என்போருடைய வழித்தோன்றலாயுதித்த திருவாளர், T. K. சிவராம் அவர்களுடைய அருந்தவப் புதல்வராவர். அன்றியும் இவர் மாதாவுடைய வழியால், இந்நகரிற் பிரபலஸ்தர்களாயும் சிவபுண்ணிய சீலர்களாயும்

விளங்கிய தம்பையா முதலியார், சுப்பிரமணியம் ஆதியோருக்குப் பௌத்திரருமாவர். இவருடைய தாயாரை ஆனந்தாச்சி என்றும் அழைப்பார்கள். ஸ்ரீமான் இரத்தினசபாபதி, 1900-த்தாம் ஆண்டு அக்டோபர் மாதம் பிறந்தனர். இவர் வெஸ்லிக் கொலீஜ்ஜில் கல்விகற்றுக் கேம்பிறிஜ் பரீக்ஷைகளிற் தேர்ந்து, நியாயப்பிரமாணங்களிலும் பிறவற்றிலும், வல்லுனராய், தற்போது பிரபல நொத்தாரிசாகவும், நியாயதுரந்தாராகவும் கடமை பார்த்துப் பலராலும் நன்கு மதிக்கப்பெற்று வருகின்றனர். இவர், நற்பழக்கமும் நல்லொழுக்கமும் சைவாசாரமும், சமயபக்தியும், பரோபகாரமும், பெருந்தன்மையுமுடையவர். இவ்விளைஞருடைய அருமையையும், பெருமையையும், யாம் நன்கறிவேம். இவர், இங்கேயுள்ள பிரக்கிராசிமாருள் மிக்க நேர்மையும், வாக்குறுதியுமுடையவர். இவர் இந்நகரிற பிரபல வர்த்தகராயிருக்கும் திருவாளர் அப்பையாவுடைய புத்திரி ஸ்ரீமதி தையல்நாயகி என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து ஆனந்தாச்சி, செல்லம்மா, என்னும் பெயர்களையுடைய இரு குழந்தைகளைப் பெற்றனர். ஸ்ரீமதி தையல்நாயகி பிதா மாதாவைப் போல், நற்பழக்க வொழுக்கமுடைய நன்மனையாளாவர். தம்பதிகள் இனிது வாழ்வார்களாக.

## J. S. Raja Esq, Analyst, Chemical Laboratory, Maradana.

திருவாளர் ஜே. எஸ். ராஜா:—இவர் தஞ்சா வூரிலுள்ள கருந்தட்டாங்குடி என்னுமிடத்தை ஜென்மஸ்தானமாயுடையவர். இரண்டாம வருணத்தவராகிய க்ஷத்திரிய வமிசத்திற் றோன்றிய திருவாளர ஞானகிராம ராஜா அவர்களுடைய அருந்தவப் புதல்வராவர். இவர் இந்நகரிலுள்ள மெடிக்கல் கல்லூரியில் கல்விகற்று, தற்போது ரசாயன வஸ்துக்களையும் பிறவற்றையும் பரீக்ஷிக்கின்ற நிபுணராய் விளங்குகின்றனர். இவர் வைத்தியம், ஜோதிஷம், சங்கீதம, என்பவற்றில் அதிக ஞானமும், அபேக்ஷையுமுடையவர் அன்றியும் இவா சாந்தம், சற்குணம், பொறை, அடக்கம், முதலாகிய இன்னோரன்ன பலகுணங்களையும், சைவாசாரம், சமயபக்தி, பரோபகாரம், பெருந்தன்மையுமுடையவராய் பிரபல முற்று 'பலராலும், நன்குமதிக்கப்பட்ட பேரறிஞராயும், யோக்கியராயும், விளங்குகின்றனர். இவர் இந்நகரிலுள்ள பற்பல சங்கங்களில் அபிமானம் பூண்ட அங்கத்தவருமாவர்.

## Dr. W. S. Ratnavale. M.R.C.S.(Eng.) L.R.C.P (Lon.) D T M (Lon.) C P.M. (Lon.)

ஸ்ரீமான் டாக்டர் இரத்தினவேல்:—இவ்வுத்தமருடைய வரலாற்றையும் குணவிசேடத்தையும் பற்றிச் சொல்லுகில், இவர் மானிப்பாய் தெல்லிப்பழை மல்லாகம் ஆகிய இடங்களில் மேன்மக்களாயும் பிரபுக்களாயும் விளங்கிய பெருமக்களின் வமிசத்தைச் சார்ந்தவர். இற்றைக்குச் சில வருடங்களுக்கு முன் இவ்வூரிற் பிரபல நியாயதுரந்தரராகவும் சைவ பரிபாலன சபை அங்கத்தவராகவும் இருந்து பல பிரபுக்களாலும் நன்குமதிக்கப்பெற்றுக் காலஞ்சென்ற பிறக்டர் நாராயணசாமியவர்களுக்கும், நவேகார் வயித்தியலிங்கத்துக்கும் சகோதரராகிய போஸ்ற்மாஸ்டர் சித்திரவேலு அவர்களுடைய புத்திரராவர். அன்றியும் இவர் மல்லாகத்திலிருந்த இஞ்சினியர் சபாபதிப்பிள்ளைக்கு மருகராவர். மானிப்பாயில் பிரபலஸ்தராய் விளங்கிய மில்லர் அவர்களுக்குப் பௌத்திரருமாவர். இவர் 1876-ம் ஆண்டு மார்ச்சு மாதம் 9-ம் திகதி பிறந்தனர். இவர் நற்பழக்கமும், நல்லொழுக்கமும், சாந்த குணமுமுடைய யோக்கியராய் வளர்ந்து, வட்டுக்கோட்டையிலுள்ள கலாசாலையிலும் அதன் பின்னர் கல்கத்தாவிலுள்ள வைத்திய கல்லூரியிலும் கல்விகற்றுப் பரீக்ஷைகளிற் தேர்ந்து லண்டன் முதலாகிய இராசதானிகளுக்குச் சென்று, வைத்தியத்தைப் பற்றிய விசேட முறைகளை நன்கறிந்து, தற்போது மிகப்பொறுப்பு வாய்ந்த உத்தியோகத்தில் பிரபலமுற்று விளங்குகின்றனர். ஸ்ரீமான் இரத்தினவேல் இதற்கு முன்பாகக் கண்டி புத்தளம் இடங்களிலும் இலங்கையின் பிரதான பட்டணங்களிலும் கடமைபார்த்து உலகிலுண்டான சகல ஜனங்களாலும் சன்மானிக்கப் பெற்றனர். ஆகவே யாமறிந்தவரில் ஸ்ரீமான் இரத்தினவேலுவைப் போல் பரோபகார சிந்தையும், நலமனதும் பொறுமையும் பெருந்தன்மையுமுடைய யோக்கியரைக் காண்பது மிக அருமை. "நாளுமினிய மிருக்கிற பூமாதும் நண்ணுவாள்" என்றபடி இவர் மனுஷரோடு இதமான வார்த்தைகள் பேசும் இயல்புடையர். இவர் போஸ்மாஸ்டராயிருந்த சவரிமுத்துவுடைய புத்திரி **Madeline** என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து, **Dharmaraja, Kamala, Selvaraja, Packiam, Karunaraja, Rajakumaran, Alagaraja, Nesaraja,** என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப் பெற்றனர். எஞ்சியவற்றை மறுபதிப்பில் கூறுவேம்.



Dr. W. S. Ratnavale, M.R.C.S. (Eug) L.R.C.P. (Lon)
D. T. M. (Lon) C. P. M. (Lon)
Judicial Medical Officer Colombo

Meenambal Press.

தேசத்தொண்டும் பொதுஜன சேவையும் புரிந்து

உலகப் பிரசித்திபெற்ற உத்தமராய் விளங்கும்



சாது

ஸ்ரீமான் டாக்டர் இ. வி. இரத்தினம் F. R. C. S.

Meenambal Press.

## Dr. E. V. Ratnam, F.R.C.S. M.M.C.

ஸ்ரீமான் டாக்டர் இ. வி. இரத்தினம்.—எத்திசையும் பிரபல முற்றும் பெருங் கீர்த்தி வாய்ந்த பேரறிஞராய் விளங்கும் இப்பெரியார், கல்வியறி வொழுக்கங்களிற் சிறந்த யோக்கியராய் கொடையிலே சிறந்த கொடை வள்ளலாய், பரோபகாரம், பிரபுத் துவம் பெருந்தன்மை, ஆன்ம இரக்கம், ஜீவகாருண்ணியம் சாந் தம், பொறை, அடக்கம், பகுத்தறிவு, முதலாகிய இன்னோரன்ன குணங்களையுந் செயல்களையுமுடைய உத்தமராய், நம் தமிழ் மக்க ளுள் பிரக்கியாதி பெற்று நேத்திரம் போல் விளங்குகின்றனர். இப்பெரியாருடைய அருமையையும், பெருமையையும், பூர்வீக வரலாற்றையும், இவர் உலகத்துக்காகவும், நம் தமிழ் மக்களுக்காக வும், பட்ட பிரயாசையையும் பற்றிச் சொல்லுகில் இப்புத்தகத்தில் எழுதியடங்காது. ஆகவே, சிலவற்றை மாத்திரம் கூறுவோம். இவர் 1876-ம் ஆண்டு வைகாசி மாதம் பிறந்தனர். இவருடைய ஜென்ம நக்ஷத்திரம் விசாகம். இவருடைய மூதாதைகள் உடுவில் என்னுங் கிராமத்தில் உயர்குலத்துத் தோன்றிய வேளாண் செட்டி மரபில் உதித்தனர். அவர்களுடைய நாமங்களாவன அதாவது நாயன் மூர்த்திச் செட்டியார், பெத்தப்பெருமாள் செட்டியார், சங்கர மூர்த்திச் செட்டியார், என்போருடைய வழித்தோன்றலா யுள்ள வர்த்தகராய வேலுப்பிள்ளையின் சகோதரர் ஸ்ரீமான் இளைய தம்பியுடைய புத்திரராவர். இவர் வட்டுக்கோட்டை சாஸ்திரகலா சாலையிலும், சென்றல் கல்லூரியிலும், கல்விகற்று கேம்பிறிஜ் பரீ க்ஷைகளிற் தேர்ந்து மெடிக்கல் கொலீஜில் உயர்தரக் கல்விகற்று வைத்திய பரீக்ஷையில் சித்தியடைந்து, கொழும்பு, கண்டி முத லான இடங்களில் வேலை பார்த்த பின், இங்கிலாந்து சென்று பெறு தற்கரிய பெரும்பட்டங்களைப்பெற்றுத் தற்போது பிரபல டாக்ட ராகவும், கவுன்சில் மெம்பராகவும், கண்ணியமவாய்ந்த புண்ணிய சீலராகவும், நல்லறிவும் நற்சிந்தையுமுடைய பிரபுவாகவும் விளங் குகின்றனர். இப்பெரியார் தருமவிஷயமாகச் செய்திருக்கின்ற செயல்களைக் குறித்துச் சொல்லுகில், ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங் களை எண்ணினாலும் இவருடைய தருமவிஷயங்களை எண்ணமுடி யாது. சுருக்கமாகச் சொல்லுகில் ஒருவேளைக்காயினும் இவரு டைய போசனத்தைச் சாப்பிடாத ஏழைமக்கள் இல்லை யென லாம். இனி சிவாலயங்கள் மடாலயங்கள் வித்தியாலயங்கள் விஷ

யமாகப் பெரும் ஒத்தாசைகள் செய்திருக்கின்றனர். உதாரணமாகப் பெருமாள் கோவிற் சந்நிதியிலிருக்கும் அரசடிப்பிள்ளையார் கோவிலைப் பழுதறப் புதுக்குவித்துப் பெரும்பொருள் செலவிட்டுக் கும்பாபிஷேகஞ் செய்வித்திருக்கின்றனர். இப்பவும் இவருடைய புண்ணியத்தால் இவ்வாலயத்தில் பூசை முதலியன நடைபெற்று வருகின்றன. இதுவல்லாமலும் நல்லூர் கந்தசுவாமி கோவிலில் உதயகாலப்பூசையும் இவருடைய பெயரால் நடைபெற்றுவருகின்றன. கதிர்காமத்துள்ள மடாலயத்துக்கும், இதுபோன்ற சற்கருமங்களுக்கும், விவேகானந்தசபை, விவேகானந்த வித்தியாலயம் போன்ற சபைகளுக்கும் சங்கங்களுக்கும் இன்னும் அளவிடமுடியாத எத்தனையெத்தனையோ நல்விஷயங்களுக்கும் இல்லையென்னாது ஏராளமாய் கொடுத்திருக்கின்றனர். இவர் சைவசித்தாந்த சாஸ்திரவுணர்ச்சியுடைய மெய்ஞானியுமாவர். இவர் ஞானிகள் யோகிகளிடத்தன்பும் யோகசாதனையுமுடையவர். சமரசஞானமும் சன்மார்க்க நிலையும், எம்மதமும் சம்மதமாகக் கொள்ளும் பான்மையுமுடையர். வறிய குடும்பங்களிலுள்ள கன்னியர்களையும் கரைசேர்த்திருக்கின்றனர். இனி ஸ்தலயாத்திரை விஷயமாகச் சொல்லுகில் கதிர்காமம் திரிகோணசலம் முதலான இடங்களையும் இந்தியாவில் சேது இராமேஸ்வரம் முதலாயுள்ள ஸ்தலங்களையும் தரிசித்திருக்கின்றனர். முனிசிப்பல் கவுன்சிலில் ஏறக்குறைய 18 வருடகாலங்களாக அங்கத்தவராயிருந்து, சென் போல்ஸ் வாட்டிலுள்ள ஜனங்களுக்குத் தம்மாலான சகாயங்களைச்செய்து மருந்துச்சாலை முதலானவைகளை ஏற்படுத்தி சுகாதாரங்களுக்கேற்ற வசதிகளையும் உண்டாக்கி வைத்தனர். பிளேக் வியாதிபரவியகாலத்திலும் அரிசிப்பஞ்சம் உண்டானகாலத்திலும் பால்கட்டும் விஷயத்திலும் இந்தப்புண்ணியவான் ஏழைஜனங்களுக்காகப் பட்டபிரயாசை கொஞ்சமல்ல. இவ்விஷயம் நிற்க இலங்கையிலிருக்கும் நம்தமிழ்மக்களுடைய சுவதந்திரங்களைப் பெறும் பொருட்டாக முயற்சித்த அபிமான புத்திரருள் காலஞ்சென்ற சேர். அருணாசலம் ஒருவராவர். மற்ற ஒருவர் டாக்டர் இரத்தினம். இவ்விருவரும் அரசியல் ஞானமும் உலகியல் ஞானமும் படைத்த மேதாவியர்களானதால் பலதுறைகளிலும் மீடுபட்டு தமிழ் மக்களுடைய சுவய உரிமைகளை காப்பாற்றி வந்தனர். ஏழைமக்களின் குறைகளை நீக்கியருளும் பொருட்டாக அபிமான புத்திரர்களாய் அவதரித்த இவ்விரு புண்ணியவான்களும் ஒருமித்துப் பொது விஷயமா

கவும் உலக விஷயமாகவும், செய்திருக்கின்ற அரும் பெருஞ் செயல்களை எம்மால் எழுதியடங்காது. உலகம் தாரசுக்குச் சமமா யிருப்பதால் இவர்களுடைய செயலை உலகமே நன்கறியும். இவர் கள் பொது ஜன சேவையிலீடுபட்டு, தங்கள் காலத்தையும், கரு த்தையும் போக்கி, தங்கள் பொருளையும், செலவிட்டு ஊருக்காக ஊழியஞ்செய்த உத்தமர்களாவர். இதுநிற்க ஸ்ரீமான் இரத்தினம் அபிமானங் கொண்டு தமிழ்ச் சாதியார் பொருட்டுப் பெருந்தொகை யான பணஞ் செலவிட்டு "தேசநேசன்" என்னும் தினசரிப் பத் திரிகையையும் நடாத்தி வந்தனர். இத்தன்மைத்தான இப்பெருந் தகையாளர் காலஞ்சென்ற "சிற்றி" அவர்களின் புத்திரி ஞேசம்மா என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து சற்புத்திரசந்தானங்க ளாக Nesamani, Padmavati, Raja, Kumaran, Mahesa, Leela என்னும் நாமங்களுடைய பிள்ளைகளைப் பெற்றனர்.

**K Rajaratnam Esq,** Architect & Building Engineer

ஸ்ரீமான் கா. இராஜரத்தினம் இஞ்சினியர்:— இவர் ஆனைக்கோட்டையில் ஐஸ்வரியவான்களாயிருந்த மேன்மக் களின் மரபிற்றோன்றிய திருவாளர் காசிபிள்ளையுடைய சிரேஷ்ட புத்திரராவர், இவருடைய தாயார் பெயர் தங்கம். இவர் உயர் குலத்திலே பிறந்த உத்தமரான படியால் நற்பழக்க முடைய யோக் கியராய் வளர்ந்து ஆங்கிலம், தமிழ், என்னும் இரண்டு பாஷைகளை யும் நன்குகற்று முனிசிபாலிற்றியில் அனேக வருடகாலம் உயர் ந்த உத்தியோகத்திலிருந்து வந்தனர். இப்படி இருக்குங் காலத் திலே அரசாங்கத்தில் அடிமைத்திறம் பூண்டு உழைக்க ஒருப்படா தவராய் அப்பதவியைத் தமக்கு வேண்டாமென விடுத்து சுய அதிகாரமும் சொந்த முயற்சியும் சுயேச்சையான வாழ்வு முடைய ராய் விளங்குகின்றனர். இவர் சிற்ப சாஸ்திரங்களிலும் கட்டிடங் களை அமைப்பதிலும, கணிதப்பகுதியிலும் வல்லுனராயிருந்த மையால் இதுகாறும் எத்தனையோ கட்டிடங்களைப் புதிது புதிதாய் அமைப்பித்திருக்கின்றனர். சுருக்கமாகச் சொல்லுகில் பெரும்பா லும் இந்நகரில் கட்டப்பட்டிருக்கும் பாரிய கட்டுமானங்களுக்குத் தலைவராயிருந்து கணகற்ற வீடுகளையும் பங்களாக்களையும் அழ காய்க் கட்டி முடிப்பித்திருக்கின்றனர். ஸ்ரீமான் இராஜரத்தினம்

விவேக புத்தியும் பரோபகார சிந்தையுமுடையர். இப்பொழுது இவரை அண்டி இவருடைய சகாயத்தால் எத்தனையோ ஏழைகள் சீவிக்கின்றனர். இவர் மட்டக்களப்புப் பகுதியில் ஓர் தக்க குடும்பத்திற் றோன்றிய சோமநாதபிள்ளையுடைய புத்திரி Julie என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து, Rajambal, Rajendran, என்னும் பெயரையுடைய பிள்ளைகளைப் பெற்று வெள்ளவத்தையில் வசிக்கின்றனர் குறிப்பு முதலானது மற்றோர் சரித்திரத்தில வரும்

**S Rasaratnam Esq.** Broker, Darley Butler & Co,

ஸ்ரீமான் புறோக்கர் இராசரத்தினம்:—இவர் யாழ்ப்பாணத்து மானிப்பாய் பகுதியில் சிவதேயச் செல்வர்களாய விளங்கிய பிரபுக்கள் வமிசத்தில் தக்க குடும்பத்தைச் சார்ந்த காரார் சிங்க முதலியார் சின்னத்தம்பி ஆராச்சியார் காசிநாதபிள்ளை என் போருடைய வழித்தோன்றலாயுதித்த ஸ்ரீமான் சுப்பிரமணியமவர்களுடைய புத்திரராவர். இவர் 1877-ம் ஆண்டு மார்ச்சு மாதம் 27-ம் திகதி ஜெனனமாகி நற்பழக்க வொழுக்கமுடையவராய் வளர்ந்து வட்டுக்கோட்டையிலுள்ள மிஷன் பாடசாலையிலும் அதன் பின்னர் றோயல் கல்லூரியிலும் கல்விகற்று நிஜின்ற ற ஜெனரல் ஆபீசில் உத்தியோகமாயிருந்து பலராலும் நன் குமதிக்கப்பெற்றனர். அப்பொழுது சகோதரராகிய பிரமஸ்ரீ சின்னையா ஐயரவர்களும் இந்த உத்தியோகமாயிருந்தனர். இவ்விஷய மிருப்ப ஸ்ரீமான் இராசரத்தினம உத்தியோகமாயிருக்குங் காலத்தில் இக்கந்தோருக்கு கௌரவ ஸ்ரீமான் சேர் அருணாசலந்துரையவர்களே தலைவராக இருந்தனர். அப்பொழுது ஸ்ரீமான் இராசரத்தினம் தமது கடமையை அதிக திறமையோடு பார்த்து ஸ்ரீமான் அருணாசலமவர்களாலும் மற்றுமுண்டான பெரிய உத்தியோகஸ்தர்களாலும் சந்மானிக்கப் பெற்று இப்பதவியினின்றும் விலகி டாளிபட்லர் கம்பனிக்குப் புறோக்கராக நியமனம் பெற்று அங்கும் தமது கடமையை அதிக திறமையோடு பார்த்து துரைமாராலும் வர்த்தகராலும் நன்குமதிக்கப் பெற்று, அதனால் ஏராளமான திரவியத்தைச் சம்பாதித்துப் பாரிய தனவந்தராகவும் பிரபுவாகவும் பிரக்கியாதியுடன் விளங்குகின்றனர். தருமவிஷயமாகச் சொல்லுகில் "இட்டார் பெரியோர்" என்பதற் கிணங்க எக்கருமங்களுக்கும் இல்லை என்னது பொருள் கொடுப்பவர். இவர் சுவாமிநாதபிள்ளை

## R. Rajendra Esq., Barrister-at-law, Colombo.

ஸ்ரீமான் பாரிஸ்டர் இராஜேந்திரா:—இவர் எத்திசையும் கீர்த்திப் பிரதாபமுற்று விளங்கும் காருண்ணிய வள்ளலாகிய கௌரவ சேர் பொன்னம்பலம் இராமநாதனவர்களுடைய சிரேஷ்ட புத்திரராவர். இவர் இங்கிலாந்து முதலிய மேலைத்தேசங்களுக்குச் சென்று கேம்பிறிஜ் என்னுமிடத்தில் உயர்தரக் கல்விகற்றுப் பாரிஸ்டர் பட்டம் பெற்றுத் தம் பிதாவைப் போல் சகல கலைகளிலும் தேர்ந்து, சிலகாலம் கிறவுண் கவுன்சில் உத்தியோகஸ்தராகவும் அதன் பின் பிரபல நியாயதுரந்தரராகவு மிருந்து பலராலும் நன்குமதிக்கப் பெற்றனர். ஸ்ரீமான் இராஜேந்திரா தமிழறிவும், ஆகம வுணர்ச்சியும், சமயாசாரமும், சமயபக்தியுஞ் சங்கீத ஞானமுமுடையர். பிதாவைப்போல் ஆழ்ந்த அறிவும் அமைதியான போக்கும், தண்ணளியான வார்த்தையும் பெருந்தன்மையும், பரோபகார சிந்தையும், பிரபுத்தன்மையுமுடையர். இவர் இப்பொழுது பிதாவுடைய பக்கலிலே யிருந்து சமஸ்த காரியங்களையும் மேற்பார்வையிட்டு ஒன்றுக்கு இரண்டு கோவிற் கருமங்களையும் பிறவற்றையும் அதிக திறமையோடு நடாத்தி வருகின்றனர். இவர் காலஞ்சென்ற சதாசிவமவர்களுடைய புத்திரி ஸ்ரீமதி Bhagavati என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து Balambikai, Ananda, என்னும் இரு பெண்மணிகளைப் பெற்றனர். இக் குழந்தைகள் கல்வியிலும் பழக்க வழக்கத்திலும் சிறந்து எமதிடம் பலகாலம் கல்விகற்றனர். ஸ்ரீமதி பகவதியம்மையாரைப் பற்றிச் சொல்லுங்கால் இவ்வுத்தமியைப்போல் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த குலஸ்திரீயை நம தமிழ் மக்களுட் காண்பதரிது. மற்றோர் சரித்திரத்தில் விபரமாய் கூறுவேம்.

## Mudaliyar C. Rasanayagam, Retired, C.C.S

ஸ்ரீமான் இராசநாயக முதலியார்:—இப்பெரியாருடைய பூர்வீகத்தின் வரலாற்றை ஆராயும் பொழுது இவருடைய முதாதைகள் சண்டிருப்பாயை ஜென்மஸ்தானமாயும் நவாலிப் பதியை வாஜஸ்தானமாயுங் கொண்டனரென, அறியலானேம். அன்றியும் இவர் உயர்குலத்துத் தோன்றிய இருமரபிலுந்துய்ய முதலியார் வமிசத்தைச் சார்ந்த அம்பலவாண இறைசுவார் வீர

சிங்க உடையார் என்போரின் வழித்தோன்றலாயுதித்த திருவாளர் செல்லப்பாபிள்ளையின் புத்திரராவர். இப்பெரியார் கல்வியறி வொழுக்கங்களிலே சிறந்த யோக்கியராய், அரசாங்க உத்தியோ கம் பெற்று பலமாகாணங்களிலுள்ள கோடு கச்சேரி முதலான வைகளில் பிரதான உத்தியோகஸ்தராயிருந்து அதிக நிறமையோடு கடமைகளைப் பார்த்துப் பலராலும் சன்மானிக்கப் பெற்று உத்தி யோக உயர்வடைந்து வடமாகாணத்தில் சிலகாலம் உப ஏசண்டா யிருந்து அரசசேவை புரிந்து இராசவாசல் முதலியார் என்னும் பட்டம்பெற்று தற்போது இப்பதவிகளின்றும் இளைப்பாறி உப கார வேதனம் பெற்று வருகின்றனர். ஸ்ரீமான் இராசநாயக முத லியாரவர்களுடைய குணவிசேடத்தையும் கல்வியறிவின் நிறத் தையும் அறியாதாரில்லை யெனலாம். பரோபகார சீலராய விளங் கும் இப்பெருந்தகையாளர் வேதாகம வுணர்ச்சியும் இலக்கண இலக்கியங்களிற் போதிய அறிவும் பழைய சரித்திர வாராய்ச்சியு முடையர். இவர் சுருதி, யுக்தி, அநுபவம் என்பவற்றிறக்கிசைய பல நூல்களையும் இயற்றியுள்ளார் இவர் ஆரிய திராவிட பாஷாபி விருத்திச்சங்கம், மதுரைத் தமிழ்ச்சங்கம், சைவசித்தாந்த சமாஜம், முதலாகிய பற்பல சங்கங்களுக்கும் சபைகளுக்கும் தலைவராயிருந்து பலரையும் உற்சாகப் படுத்தி கல்வியை ஊக்கமாகக் கற்பிக்கும் படி யேற்பாடுகளைச் செய்த உத்தமருமாவா.

## **The Late Ramalingam**, Shroff, Madras Bank

காலஞ்சென்ற இராமலிங்கச் சிருப்பர்:—இவர், வட்டுக்கோட்டை மாறு முதலியார், பூதத்தம்பி, சுவாமிநாதர் மகன் கதிரவேலருடைய புத்திரராவர். இவர் இவ்வூரிலுள்ள தமிழ் மக்களுள் குலாசாரம், மதாசாரம், பூண்ட பிரபுவாயும் மத ராஸ் வங்கிக்குப் பிரதம சிருப்பாயு மிருந்து சிவலோகஞ் சென்ற னர். இவருடைய புத்திரரே ஸ்ரீமான் பிறக்டர் மகாதேவா. இவர் விவேகானந்த சபைக்கு உப அக்கிராசனராகவும் கதிரேசன் கோவிலுக்குப் பஞ்சாயத்தாராகவுமிருக்கின்றனர் "மற்றோர்சரித் திரத்தில்" குறிப்புரை கூறுவோம்.

## A. Ramanathan Esq., Proctor, S. C. "Ponklar"



ஸ்ரீமான் அருணாசலம் இராமநாதன்:--இவர் காலஞ் சென்ற கௌரவ ஸ்ரீமான் சேர் அருணாசலந்துரையவர்களுடைய கனிஷ்ட புத்திரரும் மேல் மாகாணத்துத் தமிழ்ப் பிரதிநிதி கௌரவ ஸ்ரீமான் மகாதேவாவின் அரிய சகோதரருமாவர். இவர் பிதாவைப்போல் கடும் விவேகியானதால் கேம்பிறிஜ் பரீக்ஷைகளில் சித்தியடைந்து நியாயப் பிரமாணங்களைக்கற்றுப் பிரபல நியாயதுரந்தரரானார்; அக்காலத்தில் இவர் சிலோன் லோஸ்றுடன யூனியனுக்குச் செக்ரிட்டரியாகவும் 1922-ம் ஆண்டில் ஏற்பட்ட தமிழ் மஹாஜன சபைக்குக் காரியதரிசியாகவும் கடமை பார்த்தவர். இலங்கையின் சீர்திருத்த விஷயமாக டொனமோர் கமிஷன் விஜயஞ்செய்த காலத்தில் இராச்சிய பரிபாலன விஷயமாக அவர்களுக்கு வாக்குமூலங் கொடுத்தவர்; இப்படியான திறமையுள்ள எமது நண்பர் இராமநாதனுடைய தாரதம்மியத்தையும், இவருடைய யோக்கியத்தையும்பற்றி உலகம் அறியும். இன்னும் அநேக விஷயங்களிருக்கின்றன. ஆகவே இவர் ஒரு பெரும் பிரபுவுடைய பிள்ளையாயிருப்பதாலும் ஒரு காலத்தில் சட்டசபை அங்கத்தினராய் வரக்கூடிய ஏதுக்கள் இருப்பதாலும், இவருடைய தன்மைகளையுந், செயல்களையும்பற்றி மறுசரித்திரத்தில் விஸ்தாரமாய்க்கூறத் தீர்மானித்திருக்கின்றோம். அன்பர்கள் அதனையும் அவலோடு எதிர் நோக்குவார்களாக! இவர், இந்நகரிற் பாரியதனவந்தராயும் வர்த்தகராயுமிருந்த செ. வைரமுத்துவுடைய மகள் ஸ்ரீமதி Vamadevi என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து சற்புத்திர சந்தானங்களையும், அளவு கணக்கற்ற திரவியங்களையும் ஒருங்கேபெற்ற பாக்கியசாலியாவர். இனி வாமதேவியுடைய குணத்தைப்பற்றிச் சொல்லுகில் இந்தப் பெண்மணி கல்வி தேர்ச்சியும், மகா சாமார்த்தியமும், புத்திவிவேகமும், சமயாபிமானமும், அழகும் ,குணமும், தோற்றமும் உடையர். சாடிக்குமூடி வாய்த்தாற்போல் சகல இலக்கணங்களையுமுடைய நற்குடும்பம்.

## **K. Ratnam**, "Padmagiri" Barnes Place.

கே. இரத்தினம் ;— இவ்விளைஞர், ஸ்ரீமான் டாக்டர் இரத்தினமவர்களுடைய இரண்டாவது புத்திரராவர். இவர் 1911 ஆண்டு ஜூலாய் மாதம் முதலாந் திகதி பிறந்தவர், இவருக்குப் பெயர் குமாரசிங்கம். குமாரன் என்றும் அழைப்பார்கள் இனி இவரிடத்திலுள்ள விசேட செயல்களைப்பற்றி சொல்லுங்கில் இவர் வயதிலே குறைவாயிருந்தபோதிலும் அறிவிலே சிறந்தவர். நற் பழக்கமும் நல்லொழுக்கமும் உடையவர். பிதாவிடத்தில் என் னென்ன விசேட குணங்களுஞ் செயல்களுமுண்டோ அந்தக் குணங்களுஞ் செயல்களும் இவரிடத்திலே உண்டு. உதாரணமாக இவருடைய, உடை, நடை, பாவனை, உருவம், தோற்றம், செயல், குணம் முதலானவைகளே போதிய சான்றாகும். இவர் றோயல் கல்லூரியில் கல்விகற்று கேம்பிறிஜ பரீசைக்ஷயிற் தேறியவர். சகல மான வாத்தியங்களையும் அதிக திறமையோடு வாசிக்கும் இயல் புடையர். புத்திக்கூர்மையும், பெரியோர் நட்பும், பேச்சுத்திறமை யும் வாக்குசாதுரியமும் உடையவர். எத்தனையோ டிபேற்றுக் களில் பலராலும நன்குமதிக்கப்பெற்றவர்; ஒருகாலம் தமிழ மக்க ளுள் இவர் மிக்க மேலான பதவியில் பெரும உத்தியோகஸ்தரா கப் பிரக்கியாதிபெற்றுப் பிரபலஸ்தராய விளங்குவாரென்பது நிச் சயம். ஆகவே எமது அருமையான மாணுக்கருக்கு திடசரீரமும், தீர்க்காயுளும், கல்வித் தேர்ச்சியும், நற்கியாதியும் உண்டாகும்படி ஆசீர்வதிக்கின்றேம்.

## **N. Ramakrishna Reddiar**, Manager, C Aerated Water Co.

ஸ்ரீமான், இராமகிருஷ்ண ரெட்டியார் :— இவர் மூலைக்கரைப் பட்டியெனவழங்குமோர் கிராமத்தை ஜென்மஸ்தா னமாகவுடையவர்; தற்போது கொழும்பு அரேட்டர் வாட்டர்

கம்பெனிக்குத் தலைவராயிருக்கின்றனர். ஸ்ரீமான் செட்டியாரவர்களுடைய அந்தஸ்துக்களைப்பற்றிச் சொல்லுகில் மேற்கூறிய கிராமத்தில் குடியிருக்கும் பல்லாயிரம் விஷ்ணு பக்தருள் இவர் மரபாலும், கீர்த்தியாலும், செல்வத்தாலும், பிரக்கியாதிபெற்று விளங்கிய "தெற்குகரண்மனைப்" பண்ணையுடைய வம்சத்திற்றோன்றியவர். இவருடைய பிதாவின்பெயர் நாராயணஸ்வாமி செட்டியார். இவர்கள் இயல்பாகப் பெருந்தன்மையுடைய பெரும் பிரபுக்களாவர். குணத்திலும், கொடையிலும் சிறந்த பெருமக்கள் என்பது பலருடைய சித்தாந்தம். ஸ்ரீமான் இராமகிருஷ்ண செட்டியாரவர்களுடைய மைத்துனரே கௌரவ ஸ்ரீமான் குமாரசாமி செட்டியார்; இவர் இந்தியாவில் பிரக்கியாதிபெற்ற பெரும் பிரபு. தற்போது மதறாஸ் சட்டசபை அங்கத்தவராயிருக்கின்றனர்.

**Rajaturai Ratnam** Medical Student Barnes Place.

இராஜதுரை இரத்தினம்:— மெடிக்கல் கொலீஜ்சில் வைத்திய மாணவராயிருக்கும் இவ்விளைஞர் உலகப் பிரசித்தி பெற்ற கனம் ஸ்ரீமான் டாக்டர் இ. வி. இரத்தினமவர்களுடைய சிரேஷ்ட புத்திரராவர். இவர் 1907-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 12-ம் திகதி பிறந்தவர். அதிபாலிய வயசுமுதல் நற்பழக்கவொழுக்கமுடையவராய் வளர்ந்து, றோயல் கல்லூரியிலும், செந்தோமாஸ் கல்லூரியிலும் கல்விகற்று ஜூனியர், சீனியர், மற்றிக்குலேஷன் முதலாகிய கேம்பிறிஜ பரீக்ஷைகளில் சித்தியடைந்து தற்போது உயர்தரக் கல்விகற்கின்றனர். இவர் சாந்தகுணமும், மிக்க நேர்மையும், விவேகமும கல்வியில் ஊக்கமுமுடையர்; இன்னுஞ் சில காலத்துள் தம் பிதாவுடைய ஸ்தானத்தில் பிரக்கியாதியுடன் விளங்குவர் என்பது திண்ணம். இவருடைய அருமையையும், குணத்தின் பெருமையையும் யாம் நன்கறிவேம்; பிதா, மாதா, குரு உபாத்தியாயர்என்னும பெரியோர்களிடத்தில் பயபக்தியும், அன்பு விசுவாசமுமுள்ள குணசாலியாவர்; அன்றியும் இவர் எமது அருமையான மாணுக்கருளொருவருமாவர். இவருக்கு ஆண்டவர் அருள் செய்வாராக.

## The Late Dr. W. G. Rockwood, M. D.

Tamil Representative fo the Legislative Council.

காலஞ்சென்ற கௌரவ ஸ்ரீமான் றொக்வூட் துரை:- இற்றைக்குச் சில வருடங்களுக்குமுன் இத்தேயத்தில் பிரக்கியாதி பெற்றுப் பெருங் கீர்த்திமானாய் விளங்கிய இப்பெரியார், அளவெட்டி யெனனுமிடத்தைப் பூர்வீகஸ்தானமாயுடையவர். இவருடைய ஞாதிகளுட்பலர் பெரும் பிரபுக்களாயும் அரசாங்க உத்தியோகஸ்தர்களாயும், பிரபல நியாய துரந்தரர்களாயும் பிரபலமுற்று விளங்கினார்கள். இப்பெரியார் 1843-ம் ஆண்டு மார்ச்சு மாதம் 13-ந் திகதி ஜெனனமாகிக் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த யோக்கியராய், உலகம் போற்றத்தக்க மாண்புடையாராய கண்ணியம்வாய்ந்த புண்ணியசீலராய், தமிழச் சாதியத்தாருக்குப் பிரதிநிதியாய், பிரபல டாக்டராய், பாரிய தனவந்தராய பிரக்கியாதி பெற்று விளங்கினார். இவர் உலகத்துக்காக எத்தனையோ பொது நன்மைகளைச் செய்திருக்கின்றனர்; உதாரணமாக வடமாகாணத்துப் புகைரதப் பாதையும், சிலாவத்துப் புகைரதப் பாதையும் இவருடைய முயற்சியால் திறக்கப்பட்டன. ஸ்ரீமான் றொக்வூட் தமிழ் மக்களுக்காகப் பெரிதும் உழைத்துப் பரோபகாரமாயப பல விதமான சற்கருமங்களை ஏற்படுத்தி தம்முடைய பெயரையும், புகழையும், கீர்த்தியையும் இப்பூவுலகில் நிலைநாட்டி மனைவி மக்கள் சுற்றமித்திரர் என்னும் பலர் சூழ்ந்திருப்ப 1909-ம் ஆண்டு மார்ச்சு மாதம் 27-ம் திகதி இவ்வுலகவாழ்வை நீத்துப் பரலோகஞ் சென்றனர்

## Dr. H. Ratnaraja, M R C S L.R.C.P (Lon) M O Municipality

ஸ்ரீமான் டாக்டர் இரத்தினராஜா:--இவர் மானிப்பாயில் தக்ககுடும்பத்தைச் சார்ந்தவர்; அரசாங்கத்தில் பிரபல டாக்டராயிருந்து பெருங் கீர்த்திபெற்று விளங்கிய திருவாளர் ஹலக் சரவணமுத்துவுடைய புத்திரசிகாமணிகளுளொருவராவர். இவர் இராசவாசல் முதலியாராயிருந்த முருகேசருக்குப் பௌத்திரருமாவர்; 1890-ம் ஆண்டு மே மாதம் 12-ம் திகதி பிறந்தனர்; இவர் செந்தோமஸ் கல்லூரியிலும், மெடிக்கல் கல்லூரியிலும் அதன்

பின்னர் இங்கிலாந்திலுள்ள கல்லூரிகளிலும் கல்விகற்று வைத்தியப் பரீக்ஷைகளில் தேர்ந்து சுகாதார முறைகளை நன்கறிந்து பலவிதமான பட்டங்களைப்பெற்று செந்மேரிஸ் ஹொஸ்பிற்றல், பிறொம்டன் ஹொஸ்பிற்றல், பெத்தூல்கிறீன் ஹொஸ்பிற்றல் முதலாயுள்ள ஆசுப்பத்திரிகளில் கடமைபார்த்துப் பலராலும் நன்குமதிக்கப் பெற்றனர்; இவருடைய திறமையையும். விவேகத்தையும் கேள்வியுற்ற இலங்கை அரசினர் இவரை இங்கிலாந்திலிருந்து வரவழைத்து முனிசிப்பாலிற்றியின் சார்பாயுள்ள சுகாதார வைத்தியருள் ஒருவராக நியமித்தனர். ஸ்ரீமான் இரத்தினராஜா தம்முடைய பிதாவைப்போல் சாந்தம், பொறை, அடக்கம், பரோபகாரம், பெருந்தன்மை ஆதிய சிறந்தகுணங்களையுடைய யோக்கியராயும், குணசாலியாயும் விளங்குகின்றனர்; இக்குடும்பத்தாருடைய அருமையையும் பெருமையையும் அறியாதாரில்லை. இவர்களுடைய பிதா மாதாக்கள் தெய்வபக்தியும், குருபக்தியுமுடைய சன்மார்க்கர்களாயும் எம்மிலே மிகுந்த பற்றுடையர்களாயுமிருந்து காலஞ்சென்றனர். "பண்ணிய பயிரிற் புண்ணியந் தெரியும்" என்றபடி இவர்களுடைய பிள்ளைகுட்டிகள் சீர்சிறப்பாயிருக்கின்றனர்; ஸ்ரீமான் இரத்தினராஜா Vasanthi அலென் Baskaran என்னும் பெயர்களையுடைய இரு குழந்தைகளைப் பெற்றனர்.

## Ram Lal Chatram.

ஏறக்குறைய நாற்பது வருடங்களுக்கு முன் வடஇந்தியாவிலிருந்து வியாபார நோக்கமாயிங்குவந்த இப்புண்ணிய சீலருக்குத் தெய்வாதீனமாய்க் கிடைக்கப்பட்ட பொருளைத் தருமவிஷயத்திற் செலவிட்டுத் தம் பெயர் வழங்கும்படியாக ஓர் சத்திரத்தைக் கட்டி மானியங்களை யேற்படுத்திச்சென்றனர் எமது நண்பராகிய ஸ்ரீமான் கனகசபையவர்களே இவருக்குச் சுவீகார புத்திரராவர்; இவருடைய புத்திரரே C. R. Maharaja இவர் பிதாவைப்போல் சங்கீதஞானமும் பெருந்தன்மையுமுடையர்.

## Mrs. W. G Rockwood, "Pembroke" Horton Place.

காலஞ்சென்ற மிசேஸ் றொக்வூட்:— ஸ்ரீமதி முத்தம்மாள் என்னும் பெயரையுடைய இம்மாது சிரோன்மணி தமிழுகத்தாருட் செல்வத்தாலும், கீர்த்தியாலும், பிரபுத்தன்மையாலும் மேன்மையுற்றுத் தம் ஆயுள்பரியந்தம் அளவுகணக்கற்ற புண்ணியங்களைச்செய்து உலகில் நற்கியாதிபெற்று விளங்கினர். தருமசொரூபியாய் விளங்கிய இக்குலமணியின் பெருமையை ஆங்கில பாஷையில் மிகச்சுருக்கமாய் ஒருவர் எழுதியிருக்கின்றார்; அது போதியதன்று, ஆகவே மேன்மைபொருந்திய இவ்வம்மையாரின் சரித்திரம் தமிழ்ப்பாஷையில் எழுதப்பெற்றிருந்தால் தமிழ் உலகத்துக்கும், தமிழ் சாதியாருக்கும் பயன்படுவதுமன்றிப் பிறசாதியாராயுள்ள பலருக்கும் உபயோகப்படுமென மதித்து எழுதலானேம். இங்ஙனம் எழுதுதற்குக்காரணம் யாம் ஒருமுறை கஷ்டத்துக்குள்ளாயிருக்கும் பொழுது, இவ்வம்மையார் எம்மேலன்புகூர்ந்து எமக்கு ஓர் அற்ப உதவிபுரிந்தனர். "சின்ன ஓர் பொருள் தந்தோரைச் சீவனுள்ளளவும் உள்ளத்துன்னவே வேண்டும்" என்று மேலோர் உரைத்தவண்ணம் நன்றியறிதலின் பொருட்டாகப் பெருமைவாய்ந்த இப்பெண்ணரசியின் விசேட செயல்களையும் தயாளகுணத்தின்சிறப்பையும் அன்புபற்றி, யாம் இப்புத்தகவாயிலாக வெளியிடத் துணிந்தேம்; ஆகவே இது குற்றமாகாது; இது நிற்க, இப்புனிதவதியாருடைய பூர்வீக வரலாற்றை அறிகிற பொழுது மூளாய் என்னுமிடத்தில் மேன்மக்கள் பரம்பரைச்சார்ந்த சின்னமுதலியார் என்றொருவர் இருந்தார். இவருடைய புத்திரர் ஸ்ரீமான் கதிரைவேற் பிள்ளை. இந்தக் கதிரைவேற் பிள்ளை கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த யோக்கியராய், ஆங்கில விற்பத்தியுடையராய்கற்பிட்டியென்னுமிடத்தில் ஆசிரியராயிருந்தாரென்றும் இவ்வம்மையார் இவருடைய புத்திரிகளுளொருவரென்றும் அறியலானேம். இதுவன்றியும் இவ்வம்மையாருடைய மாதாவழியை ஆராயுமிடத்து மதியாபரண முதலியார், கெங்காகுலரத்தின முதலியார், கனகசபை முதலியார் என்போருக்குப் பௌத்திரியுமாவர். இனி இவவுக்கு நெருங்கிய ஞாதிகளைப்பற்றிச் சொல்லுகில் தம்பிப்பிள்ளை, தன்மாவரதர் முத்துத்தம்பி ஆதியோர் உறவினராவர். இம்மாது சிரோன்மணி 1857-ம் ஆண்டு மார்ச்சு மாதம் 15-ம்



The Late Mrs. W. G. Rockwood.

திகதி ஜெனனமாகி, நற்பழக்க வொழுக்கமுடையராய் வளர்ந்து தமிழ் பிரதிநிதியாகவும், பிரபல டாக்டராகவுமிருந்து எத்திசையும் புகழ்பெற்ற கௌரவ ஸ்ரீமான் ஹுக்வூட் துரையவர்களை விவாகஞ்செய்து நான்குபுத்திரர்களையும், நான்குபுத்திரிகளையும் பெற்று 1925-ம் ஆண்டு ஆகஸ்ட்டு மாதம் 29-ந் திகதி சுற்றமித்திரர் மத்தியில் இவ்வுலகவாழ்வைநீத்து மேலுலகஞ்சென்றனர். கற்புக்கரசியாய் விளங்கும் ஸ்ரீமதி தையல்நாயகி சிரேஷ்ட புத்திரியாவர்.

## M. Ramalingam Esq., Selvakande Estate, Balangoda.

ஸ்ரீமான் மு. இராமலிங்கம்:— இவர் ஆனைக்கோட்டையை ஜென்மஸ்தானமாகவுடையவர். பிரபல டாக்டராயிருந்து பெருங் கீர்த்திவாய்ந்த எமது நண்பர் ஸ்ரீமான் டாக்டர் M. சின்னத்தம்பி M. D. அவர்களுடைய அரிய சகோதரருமாவர். இவர் பகிரங்க வேலைப்பகுதியின் சார்பாய் கண்டிமுதலான இடங்களில் பலகாலம் உத்தியோகமாயிருந்து பலராலும் நன்குமதிக்கப் பெற்றவர்; ஸ்ரீமான் இராமலிங்கமவர்களுடைய பெருந்தன்மையையும் உத்தமகுணங்களையும் பற்றிச் சொல்லுகில் இவரைப்போல் தகுதியும், மனுஷத்தன்மையும், பிரபுத்தன்மையுமுடைய ஒரு யோக்கியரை காண்பது மிக அருமை; ஆனைக்கோட்டையில் சகலவளங்களாலுஞ் சிறப்புற்றுப்பெருமைவாய்ந்த மேன்மக்களாயும், பரோபகார சீலர்களாயும் பிரபலமுற்று விளங்குவோர் ஸ்ரீமான் முருகேசுவின் பிள்ளை குட்டிகளேயாவர். ஸ்ரீமான் இராமலிங்கம் குலமகனாதால் தம்முடைய ஊரில் தம்முடைய நிலத்தில் ஓர் சைவப் பள்ளிக்கூடத்தையுஞ் ஸ்தாபித்தனர்; இவருடைய மனைவி **ஸ்ரீமதி தங்கம்மாள்**, குணத்திலே சிறந்த குணசாலி, சாந்தம், பொறை, அடக்கம் முதலாகிய பெருந்தன்மைகளையுடைய குலமகளாவர். இத்தம்பதிகள் மகேஸ்வரியென்னுமோர் பெண்மணியையும், செல்வநாயகமென்னுமோர் ஆண்மகவையும் பெற்றனர். இந்தப் பிள்ளைகள் பிதா மாதாக்களைப்போல் சாந்தகுணமும் நற்பழக்கவொழுக்கமுமுடைய நற் பிள்ளைகளாவர்.

## A. Ramasamy Reddiar, General Store's Shorts Rd.

ஸ்ரீமான் அ. இராமசாமி ரெட்டியார்:—இவர் திருநெல்வேலியைச்சார்ந்த மூலைக்கரைப்பட்டியென்னுங் கிராமத்தில் பிரபலஸ்தர்களாயும், விஸ்னுபக்தர்களாயுமுள்ள பெருமக்களின் வம்சத்திற் றோன்றிய திருவாளர் அய்யப்ப ரெட்டியாரவர்களின் அருந்தவப் புதல்வராவர். இவ்வுத்தமர் திருவனந்த புரத்துக் கணித்தாயுள்ள சுசீந்திரமெனனும் திவ்விய க்ஷேத்திரத்தை ஜென்மஸ் தானமாகவுடையவர்; கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த யோக்கியர் இவர், சில வருடங்களுக்கு முன் இந்தியாவினின்றும் இராசதானியாகிய இக்கொழும்புமா நகரையடைந்து பற்பல கம்பேனிகளில் கடமைபார்த்து வந்தனர். இப்படி இருக்குங் காலத்தில், வியாபார முயற்சியில் ஈடுபட்டு நாளொருவண்ணம் பொழுதொரு மேனியாக தொழில் முறையை விருத்திபண்ணி ஈசனருளால் ஏராளமான திரவியத்தைச் சம்பாதித்துப் பலவிடங்களிலும் வியாபார சமுதாயங்களை ஏற்படுத்தி, கண்டி, கொழும்பு முதலான விடங்களிலும், பிறநாடுகளிலும், ஸ்டோர் கம்பேனி முதலானவற்றை ஸ்தாபித்துப் பொருளை ஈட்டிய பாரிய தனவந்தராயும் பற்பல ஸ்தாபனங்களுக்கு அதிபராயும், பிரபல பெருந்துரைமார்களாலும், உத்தியோகஸ்தராலும் நன்குமதிக்கப்பெற்று, இந்நகரிலுள்ள ரெட்டியபிள்ளைகளுக்கும் அவ்வகுப்பினரால் ஸ்தாபிக்கப்பட்ட மஹாஜன சபைக்குந் தலைவராய், இந்தியமக்களுள் பிரதானியாய், மேன்மையுற்றுத் தற்போது கொம்பனித்தெருவில் பிரபலஸ்தராய் விளங்குகின்றனர். இவர் தேசாபிமானமும், மதாபிமானமும் பரோபகார சிந்தையுமுடையவர்; இவருடைய ஜேஷ்டருளொருவர், தற்போது திருவனந்தபுரம் ராஜாசமஸ்தானத்தில் ஏதோ ஒரு உத்தியோகத்தில் இருப்பதாகவும் அறியலானோம். இத்தகைய அந்தஸ்துக்களுடைய ஸ்ரீமான் ரெட்டியாரவர்களுக்கு முனைங்குபட்டி எனுங் கிராமத்தில் சகல சம்பத்துக்களையுமுடைய பிரபுக்கள்வம்சத்திலே மேன்மக்களாயும் ஜாதிமரபிலே உயர்ந்தவர்களாயுமுள்ளோர் சந்ததியில், "முனைஞ்சேத்திப்பண்ணையென" வழங்கும் ஓர் பாரிய குடும்பத்தைச்சார்ந்த குருவாரெட்டியாரவர்களின் புத்திரி ஸ்ரீமதி சுப்பம்மாள் என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து ஜானகியம்மாள், ஜானகிராமன் என்னும் பெயர்களையுடைய மூன்று குழந்தைகளைப் பெற்றனர்.

## H. Rajanathan Esq, Proctor & Notary, Colombo·

ஸ்ரீமான் பிறக்டர் ராஜநாதன்:—இவர், மானிப்பாயிலே நற்குடியிலே நல்ல கோத்திரத்திலே, பிரபுச்கள் சந்ததியிலே தோன்றிய உத்தம குணசீலன். இவருடைய நாலாந்தலைமுறைக்கு முற்பட்டோர் சண்டிருப்பாயை சென்மஸ்தானமாய்க் கொண்டிருந்தனர். சரவணமுத்து மணியமவர்களின் காலம் முதலாக மானிப்பாயை வாசஸ்தனமாயக் கொண்டு பிரமுற்று விளங்கினார்கள். இந்தச் சரவணமுத்து மணியகாரனுடைய மகன் "ஹல்லக்" முருகேசா. இவர் அக்காலத்தில் இராசவாசல் முதலியாராயிருந்து பெருங் கீர்த்தி பெற்றனர். இவருடைய புத்திரர் ஹலக் சரவணமுத்து. இவர் பிரபல டாக்டராயிருந்து அரசாங்கத்தில் பெரும் பதவிகளைக் கையாண்டு உலகில் நற்கியாதி பெற்றுக் காலஞ்சென்றனர். இவருடை புத்திரரே ஸ்ரீமான் இராஜநாதன். இவர், 1884-ம் ஆண்டு மார்ச்சு மாதம் பிறந்தனர். சிறு பிராயம் முதலாகப் பிதா மாதாக்களிடம் நற்பழக்க வொழுக்க முடையவராய் வளர்ந்து செந்தோமஸ் கல்லூரியிலும், சட்டக் கலாசாலையிலும், கல்வி கற்று உயர்தரப் பரீட்சைகளிலும் நியாயப்பிரமாணங்களிலும் தேர்ந்து 1906-ம் ஆண்டு முதலாகப் பிரபல நியாய துரந்தரராகவும், பிரசித்த நொத்தாரிசாகவும் கடமை பார்த்து, தம்முடைய பிதாவைபபோல் உலகில் நற்கியாதி பெற்று வருகின்றனர் ஸ்ரீமான் இராஜநாதன் இதுகாறும எத்தனையோ அரும் பெரும், வழக்குக்களை நடாத்தி அதனால் நற்பெயருண்டாகப் பெற்றனர். அன்றியும் வழக்கு விஷயமாக ஆலோசனை கேட்போருக்குத் தம்முடைய அனுபவத்திற்கும் ஆதாரத்துக்குமிணங்க நியாயப்பிரமாணங்களைச் சொல்லும் வல்லபமுடையர். எந்த வழக்குக்களையும நன்றாக யோசித்து அதற்கேற்ற வுபாய நெறிகளை அனுசரித்துப் புத்திவிவேகத்தாலும், சாதுரியத்தாலும், வெற்றி பெறும் பான்மையுடையவர். ஸ்ரீமான் இராஜநாதன் சமயபக்தியும், சன்மார்க்கமுமுடைய யோக்கியரானதால் தம்மைப் பெற்று வளர்த்த பிதா மாதாக்களுடைய சிராத்தம் முதலான வற்றைச் செய்து வருகின்றனர். இனித் தரும விஷயமாகச் சொல்லுகில் ஏழைகளுக்கும் இரப்போருக்கும் சற்தருமங்களுக்கும், மார்க்க சமந்தமாயுள்ள எக்கருமங்களுக்கும் இல்லை யென்னமல் அன்போடு

உதவி செய்யும் ஆற்றலுடையவர். ஸ்தலயாத்திரை தீர்த்தயாத்திரைகளைச் செய்பவர். தமிழ் யூனியனைப் போன்ற பற்பல சங்கங்களிலும் சபைகளிலும் அங்கத்தவராவர். இக்குடும்பத்துக்குத் தலைவராகிய ஸ்ரீமான் இராஜநாதன் தம் பிதா மாதாவுடைய பெருமையையும் தம்முடைய மதிப்பையும் மரியாதையையும் காப்பாற்றிய உத்தமராய் யாவராலும் நன்குமதிக்கப் பெற்ற யோக்கியராய் விளங்குகின்றனர். இக்குடும்பத்தில் குலாசாரம், மதாசாரம், பூண்ட பிரபு இவரொருவரேயாவர். எமது நண்பராகிய ஸ்ரீமான் இராஜநாதனுடைய சிறந்த குணங்களைப் பற்றி எழுதுகில் எவ்வளவும்எழுதலாம். ஏனென்றால் இவர், அவ்வளவு பொறுமையும் சாந்தகுணமும், பரோபகார சிந்தையுமுடையர். இவர் எத்திசையும் கீர்த்தி பெற்ற கௌரவ சேர் இராமநாதனவர்களுடைய புத்திரி **ஸ்ரீமதி சிவக்கொழுந்து** என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து, Rani, Mangavarkarasi, Devajanaki, Saravanamuttu, Devasenapathy, Parameswaran, Ehambaran, Bala Subramaniam, என்னும் பெயர்களையுடைய சந்தானங்களைப் பெற்றனர். ஸ்ரீமதி சிவக்கொழுந்தின் குணமகிமைகளைப் பற்றிச் சொல்லுகில் இந்தப் பெண்மணி பிதா மாதாவைப்போல் கல்வியறிவொழுக்கமும், கடவுள் பக்தியும், பரோபகார சிந்தையுமுடைய மகா உத்தமியாய் வாழ்கின்றனர்.

## K. Rasanayagam Esq., Hydro Electric Scheme.

---

ஸ்ரீமான் கே. இராசநாயகம் :— இவர், உரும்பராயென்னுமிடத்தில் ஓர் தக்க குடும்பத்தைச்சார்ந்தவா. திறசேரியில் அநேக வருடகாலங்கள் உத்தியோகமாயிருந்து நற்கியாதி பெற்றுத் தற்போது ஹைட்ரோ எலெக்றிக்கல் ஆபீசில் கடமை பார்த்து வருகின்றனர். இவர் சமயாபிமானம் பெரிதுமுடையர். விவேகானந்த சபைக்குத் தனாதிகாரியாயிருந்து சபையை நன்னிலைப்படுத்தியவர்; ஸ்ரீமான் இராசநாயகம், இயல்பாகச் சாந்த குணமும் மிக்க நேர்மையுமுடைய யோக்கியராவர்.

## **Hon. Mr. S. Rajaratnam,** Advocate M. L. C.



கௌரவ ஸ்ரீமான் அத்வகாத் இராசரத்தினம்:—இவர் கோப்பாய் இருபாலை உடுப்பிட்டி என்னுமிடத்தில் அடிமை குடிமை, ஆட்சி, அதிகாரம், செல்வம், செல்வாக்கு, கீர்த்தி, உத்தியோகம், பிரபுத்வம் முதலானவற்றோடு கூடிய பெரும் பிரபுக்களின் வமிசத்தைச் சார்ந்தவர். கொழும்பிலும், யாழ்ப்பாணத்திலும் பிரபல நியாயதுரந்தரராயிருந்து பலராலும் நன்மதிக்கப் பெற்றுத் தற்போது வடமாகாணத்துச் சனப்பிரதிநிதியாயிருக்கின்றனர்; சட்ட நிரூபணசபை அங்கத்தவரான பின்னர், உலக விஷயமாகவும், பொது விஷயமாகவும், கல்வி விஷயமாகவும் திரிகரண சுத்தியோடு பெரிதும் உழைத்திருக்கின்றனர். உதாரணமாக யாழ்ப்பாணத்துள்ள குடிவகைகளெல்லாவற்றையும் ஒரே காலத்தில் இல்லாதொழியும்படி செய்து வைத்தனர். மற்ற விஷயம், யாழ்ப்பாணத்துள்ள சைவ நன்மக்கள் சாதிவிட்டுச் சமயம் விட்டு படுகுழியில் விழுந்து, பார்த்தோர் சிரித்துக் காறியுமிழும் வண்ணம் பாழ்போக விடாமல், கிராமங்கள்தோறும் சைவப்பள்ளிக்கூடங்களையும், சபைகளையும் ஸ்தாபிக்கும்படி ஜனங்களுக்கு நற்புத்திபுகட்டிய பெரும் கிளர்ச்சிசெய்து வைத்தனர் "மேன்மைகொள் சைவநீதி விளங்குக வுலகமெலாம்" என்றபடி சமயாபிமான மேலீட்டால் சற்கருமங்களைச் செய்து வருகின்றனர்.

## **V Rasiah Esq.,** Building Contractor, Nugegoda



ஸ்ரீமான் வ. இராசையா:—இவர் திரிகோணமலையைச் சென்மஸ்தானமாகவுடையவர்; கர வருஷம் ஆவணி மாதம் 28-ம் திகதி செனனமானவர், இவருடைய பிதாவின் பெயர் வயித்திய லிங்கம். தற்போது இவர் பலவித கட்டிடங்களுக்குக் கொந்திருத்துக்காரராகவும், ஒப்பந்த வேலைக்காறராகவும் பிரபலமுற்று விளங்குகின்றனர், இவருடைய மனைவி பெயர் ஸ்ரீரேங்கம். இத்தம்பதிகள் இருபேரும் குணத்திலே சிறந்த குணசாலிகளாவர்.

**S. Ragunatha Aiyer,** Clerk, Municipality, Colombo.

பிரமஸ்ரீ இரகுநாதையர்:—இவர் நல்லூரைச் சார்ந்தவர்; இவருடைய பிதா பிரமஸ்ரீ சுப்பையாகுருக்கள் இவர் செட்டித்தெருப் பிள்ளையார் கோவிலில் அருச்சகராயிருந்தவர். புத்திரராகிய இரகுநாதையர் கல்விகற்றுத் தற்போது கொழும்பு முனிசிப்பாலிற்றியில் உத்தியோகமாயிருக்கின்றனர். இவர் மிகவும் அருமையானகுணசாலி. இவர் முனீஸ்வரத்திலுள்ள சோமசுந்தரஐயரவர்களின் கனிஷ்ட புத்திரியை விவாகஞ் செய்திருக்கின்றனர்.

**V. Ramanathan,** Sub Editor "Hindu Organ"

எமது நண்பராகிய ஸ்ரீமான் வை. இராமநாதனவர்களைப்பற்றிச் சொல்லுகில் இவர் வண்ணார்பண்ணையிலோர் தக்க குடும்பத்தைச் சார்ந்தவர். சைவசித்தாந்த சாஸ்திரவுணர்ச்சியும், ஆங்கில அறிவும், சங்கீத ஞானமும், சாந்தகுணமும், சமயபக்தியுமுடையவர். தற்போது இந்துசாதனக் காரியாலயத்தில் கடமைபார்த்து வருகின்றனர் இவர் சில கீர்த்தனங்களையும் இயற்றியுளளார.

**Dr. John Rockood,** Lieunt. Col A D C. to the Governor

ஸ்ரீமான் டாக்டர் ஜோன் றொக்வூட்:--இவர் காலஞ்சென்ற கௌரவ ஸ்ரீமான் டாக்டர் றொக்வூட் துரையவர்களின் இரண்டாவது புத்திரராவர். இவர் 1881-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 29-ம் திகதி பிறந்தவர்; இவருடைய தமிழ்ப் பெயர் இராசதுரை. இவர் றோயல் கல்லூரியிலும், மெடிக்கல் கல்லூரியிலும் கற்றபின் இங்கிலாந்துசென்று L.R.C.P.&S. (Edin) L.F.P.&S. (Glas) என்னும் பெரும் பட்டங்களைப்பெற்று, பேர்லின், பாரிஸ் லண்டன், முதலாகிய விடங்களிலுள்ள ஆசுப்பத்திரிகளில் வேலை பார்த்து மிக்க அனுபவமும் தேர்ச்சியுமடைந்தனர்; அதன்பின் சிலோன் மெடிக்கல் கொலீச்சில் கற்கும் மாணவருக்கு லெக்ஷறராகவும், பரீக்ஷகராகவுமிருந்தனர். அதுமுதல் சிலோன் மெடிக்கல்கோர்ப்சுக்கு தலைவருமானார். இராசகுமாரன் இலங்கைக்கு




Lieut. Colonel. John Rockwood,

Commanding Medical Corps,

Formerly Extra A. D. C, to Previous Governors.

Meenambal Press.

விஜயஞ்செய்த காலத்தில் இவர் தேசாதிபதியவர்களுக்கு மந்திரியாகவும், A. D. C. யாகவுமிருந்தனர். இவ்விதமான ஓர் பெரும் உத்தியோகத்தைத் தமிழ்மக்களுள் யாரும் பார்த்ததேயில்லை. கவுணருக்குச் சமத்துவமாயிருக்கக்கூடிய தகுதியும், சங்கையும் திறமையுமிருந்தமையால் அவ்வுத்தியோகத்தையும் பெற்றிருந்தனர், இதுவன்றியும் இவர் இலங்கையிலுள்ள பலவிதசங்கங்களுக்குக் காரியதரிசியாகவும், அக்கிராசனராகவுமிருந்தவர், தமிழ்யூனியனை ஸ்தாபித்தாருள் ஒருவராவர், கிறிக்கெற் என்னும் பந்தாட்டத்துக்கு இவரே தலைவராவர். இது விஷயமாக, பம்பாய, மதராஸ் முதலான இடங்களுக்கு தம கூட்டத்தாரோடு சென்று, அவர்களால் நனகுமதிக்கபபெறறு மெடலகளும, விருதுகளும் பெற்றவர். இவா காலஞ்சென்ற தியாகராஜாவின் புத்திரி Sivakolundu என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து Leela, Girija, Chandra. Nadaraja என்னும் பெயாகளையுடைய பிள்ளைகளைப் பெறறனர். ஸ்ரீமதி சிவக்கொழுந்துவுடைய குணத்தைப்பற்றிச் சொலலுகில், இந்தப் பெண்மணி பிறவிச் செல்வர்களாயுள்ள பெரும பிரபுக்களைச் சாாந்தமையால் குலத்துக்கேற்ற குணமும், நற்பழுக்க வொழுககமும், சைவாசாரமும், சாந்தமும், பொறுமையுமுடைய குணசாலியாய் விளங்குகின்றனர்.

## M. C. Raju Esq, Proctor & Notary, Colombo.



பிறக்டர் எம். சந்திரராஜு:--இவருடை வரலாற்றைப் பற்றிச சொல்லுகில் இவருடைய பெற்றோர்களுக்குப் பூர்வீகம் இந்தியா. ஜாதியில் தெலுங்கராவர். நாயிறு அல்லது நாயுடு எனபாாகள். இவருடைய பிதாவககுப் பெயர் மாஸ்ற்றர் மாரியப்பர். இவர் பட்டாளத்திலே யிருந்தவர். மாதாவுக்குப் பெயர் சுப்பம்மாள். இந்தச் சுப்பம்மாவோடு பிறந்த சகோதரர்கள், றிச்சட்வற்சன் முத்துச்சாமி, துரைச்சாமி, சாரங்கபாணி, வெங்கிட்டம்மாள், பங்காரம்மாள். இது நிறக காலஞ்சென்ற பீஒறன் சன்ஸ் துரைச்சாமியுடைய தாயாரும், ராஜுவுடைய தாயாரும். சகோதரர்களாவர். இக்குடும்பத்தைச் சார்ந்தோருள் அனேகர், பெரும்உத்தியோகஸ்தர்களாகவும்இருக்கின்றனர். அரிசிப்பஞ்சம் உண்டானபோது ஏழைமக்களுக்காகப்பாடுபட்டவர். பிரபலமுற்று

விளங்கும் ஸ்ரீமான் ராஜூவுடைய சகோதரருள் Mr. Samy என்பவர் ஹற்றனில் போஸ்ற் மாஸ்ற்றராயிருந்து காலஞ்சென்றனர் Partnasarathi அனெவிஸஸ் ஆபீசில் இருக்கின்றனர் Selvadurai என்பவர் டாக்டராயிருக்கின்றனர். Navaratnam இறந்தனர். மேற்கூறிய மிஸ்ற்றர் ராஜூ மதராசில், எல்லூர்ப்பகுதியில் சோல்ற் இன்ஸ்பெக்டராயிருக்கும் துரைச்சாமியுடைய மகளை விவாகஞ் செய்து புத்திர சந்தானங்களைப் பெற்றனர். பொதுவாக மிஸ்ற்றர் ராஜூ நல்ல சுபாவமும் நற்குணமுமுடையவர்.

## Brahma Sri Rasaiyer Govt School, Slave Island.

பிரமஸ்ரீ இராசையர்:—இவருடைய பூர்வீகம் கணபதி அக்கிரகாரம். ஸ்ரீவத்ஸ கோத்திரத்திலே யுதித்தவர். இவருடைய பேரனார் பெயர் மீனாக்ஷி சுந்தர சாஸ்திரிகள். இவர் சமஸ்க்ருத சாஸ்திரங்களிலும் சங்கீதத்திலும் நிறைமையுள்ளவர். இவருடைய புத்திரர் வித்வான் பிரமஸ்ரீ சுப்பையர் இவருடைய புத்திரரே பலராலும் நன்கறியப்பட்ட இராக்கினசாமி ஐயர். இவர் சாவசித்து வருடம் வைகாசி மாதம் 30-ம் திகதி சனிக்கிழமை சதைய நக்ஷத்திரத்திலே செனனமானவர். இந்துக்கல்லூரியிலும் செங்தோமஸ் கல்லூரியிலும் ஆங்கிலங் கற்று அரங்கேறியவர். இலக்கண இலக்கிய பாடங்களைக் குமாரசாமிப் புலவரிடத்திலும் சிறகைலாய பிள்ளையிடத்திலும் கற்று, மதுரைத் தமிழ் சங்கத்துப் பண்டித பரீக்ஷைக்குச் சென்றவர். அதன்பின் திருவையாற்றிலே "கல்யாணமால்" என்னும் கலாசாலையில் சாஸ்திர பாடங்களையும், சங்கீதத்தில் பிரக்கியாதி பெற்ற கிருஷ்ண ஐயரவர்களடத்தில் சங்கீத சாஸ்திரங்களையும் வீணை பிற்றில் முதலான வாத்தியங்களையும் முறைப்படி கற்றுப் பலமாணவருக்குச் சிக்ஷை சொல்லி பெரும் பிரபுக்களாலும் வித்துவான்களாலும் சன்மானிக்கப் பெற்றவர். 1927-ம் ஆண்டு டிசம்பர் மாதம் பல்லாயிரவர் ஒன்று கூடிச் சென்னையில் நடாத்திய அகில சங்கீத மகா நாட்டிறகு விஜயஞ் செய்யும்படி அக்கூட்டத்தவரால் அழைக்கபபெற்றுப் போயிருந்தவர். இலங்கையிலுள்ள வித்துவான்களின் சார்பில் பிரதிநிதியாகச் சென்று, மகா வித்வ சிரோன்மணிகளது சபாமத்தியில் பிரசங்க மாரி பொழிந்து பிற்றில் வாத்தியம் வாசித்துச் சபையோரை குதூகலிக்கச் செய்தவர். இலங்கையிலுள்ள கலாசாலைகளில் பிள்ளைகளுக்குச் சங்கீதம் கற்பிக்க வேண்டுமென்ற எழுச்சிசெய்து நிர்ணயப்படுத்தி அனுகூலமாக்கியவரும் இவரே. இவர் பிரமஸ்ரீ சபாபதிக்குருக்களவர்களின் புத்திரி ஸ்ரீமதி வாலாம்பிகை என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து கொம்பனித்தெரு அரசினர்பாடசாலையில் ஆசிரியராயிருக்கின்றனர். மறுபதிப்பில் வரும்

## C. Rajaratnam Esq., Deputy Shroff, Imperial Bank.

திருவாளர் இராசரத்தினம்;—தற்போது இவர் இம்பீரியல் வங்கிக்கு இரண்டாஞ் சிருப்பாயிருக்கின்றனர். இந்துக் கல்லூரியிலே கல்விகற்றவர் இவருடைய குணத்தின் பெருமையை வெகுகாலமாக யாம் நன்கறிவோம். உதாரணமாக யாம் சென்சஸ் ஆபீசில் உத்தியோகமாயிருக்கும் பொழுது இவரும் அக்கந்தோரில் உத்தியோகமானூர். அதுமுதலாயிவரோடு சிநேகமானோம் இவர சாந்தகுணமும், விவேகபுத்தியும், பரோபகார சிந்தையுமுடையர் 1892-ம் ஆண்டு செனனமானவர் இவருடைய மூதாதைகளின் வரலாற்றை அறியும்பொழுது ஒரு பகுதி நல்லூரையும் மற்றொரு பகுதி வடக்குராலியையுஞ் சார்ந்தனரென அறியக்கிடக்கின்றது. இவருடைய பிதாவின் பெயர் செல்லப்பா. இவர வேளாண்செட்டி மரபிலேயுதித்தவர். வெகுகாலமாகக் கறுவாக்காட்டிலேயுள்ள மிஷன் பாடசாலையில் உபாத்தியாயமாயிருந்தவர். இவருடைய மனைவி பெயர் சின்னத்தங்கம், இவ நல்லூரிலுள்ள கைலாயப்பிள்ளையார் கோவிலுக்குப் பின்புறமாயிருந்த மயிலர் என்பவருடைய புத்திரியாவர். இத்தம்பதிகள் Rajaratnam, Duraiappah, Gnanam, என்கின்ற மூன்று புத்திரர்களையும், ஐந்து புத்திரிகளையும் பெற்றனர். இருவர் சிங்கப்பூரிலிருக்கின்றனர், மாணிக்கமென்ற மூத்தபெண்ணை வடக்குராலி கதிரைவேறபிள்ளை என்பவர் கைப்பிடித்தனர். மற்றபெண்ணை ஹென்றி என்பவரும், இதற்கடுத்தபெண்ணை காரைநகர் சின்னத்துரை என்பவரும், இன்னுமொன்றைச் சிங்கப்பூரிலுள்ள டிறெசரும், மற்றதையோர் பென்ஷனரும் விவாகஞ்செய்தனர். இதுநிற்க செல்லப்பா வாத்தியாருடைய முதற்றாரத்துப்பிள்ளைகளுட்பெரும்பாலார் கல்விகற்று ஆங்காங்கு, உத்தியோகமாயிருக்கின்றனர். இரண்டாஞ் சிருப்பாகிய இராசரத்தினம் நீர்கொழும்பில் வர்த்தகராயிருந்த பொன்னுச்சாமி மகள் ஸ்ரீமதி சிவபாக்கியம், என்னும் பெண்மணியைச் சைவாகம முறைப்படி விவாகஞ்செய்து ஒரு ஆண்மகவையும், இரு பெண்களையும் பெற்றனர். இவர் மனைவி கல்வியழகும், நற்குணமுமுடைய நன்மனையாளாவர்.

# S.

## Prof. C. Suntheralingam, B.A.(Oxon) B.Sc.(Lon) Bar-at-Law

---

ஸ்ரீமான் செ. சுந்தரலிங்கம்:—இவர் உரும்பராயென்
னுமிடத்தில் ஓர் பாரிய குடும்பத்தைச்சார்ந்த திருவாளர் செல்லப்
பாபிள்ளையவர்களுடைய புத்திரருளொருவராவர். இவர் 1895-ம்
ஆண்டு ஆவணி மாதம் 19-ம் திகதி ஜெனனமானவர். இவர்
ஆரம்பகல்வியைச் சிலகாலம் யாழ்ப்பாணத்திலும், அதன் பின்
னர் கொழும்பிலும் கற்று ஒவ்வொரு பரீட்சைகளிலும் சித்தி
பெற்று ஆசிரியர்களுடைய உள்ளத்திலே அருள் உண்டாகும்படி
யொழுகிக் கல்வியை இடைவிடாது ஊக்கமாகக்கற்று வரலாயி
னர். அதன் பின்னர் இங்கிலாந்து முதலிய மேலைத்தேசங்களுக்
குச்சென்று உயர்தரக்கல்வியாகிய தத்துவ சாஸ்திரங்களையும்,
நியாயப்பிரமாணங்களையும் நன்குகற்றுப் பெறுதற்கரிய பெரும்
பட்டங்களையும் பெற்றனர். இத்துடன் சிலோன் சீவில் சேர
வில் என்னும் பரீட்சைக்குச்சென்று அதிலும் சித்தியடைந்தனர்.
இங்ஙனமாகப் பலவித கலைக்ஞானங்களிலும் மகா பாண்டித்திய
முடையவராய் வந்ததும், ஊவா மாகாணத்துக்கு உப ஏஜண்டா
கவும், நீதிபதியாகவும் நியமனம் பெற்றனர். இப்படியாயிருக்குங்
காலத்தில், தாம் கற்ற கல்விக்கும், தம்முடைய அறிவுக்கும்,
திறமைக்கும் இவ்வுத்தியோகம் தமக்கு தகுதியற்றதெனக் கண்டு,
இப்பதவியைவெறுத்து, இகபரமிரண்டிற்கும் ஏதுவாகிய ஞானப்
பாலையூட்டுதற்குத் துணிந்தனர். இராஜபதவியைத் துரும்பாக
மதித்துத்தள்ளிய ஸ்ரீமான் சுந்தரலிங்கம், கல்வியை விருத்திசெய்
யும் பொருட்டாகச் சிலகாலம் ஆனந்தக்கல்லூரியில் போதகாசிரி
யராகக் கடமைபார்த்து வந்தனர். இவருடைய கல்வித் திற
மையை நன்குணர்ந்த அரசினர், இவரை அழைத்துச் சர்வ
கலாசாலையில் மிகக மேலான பதவியாகிய கணித சாஸ்திராசிரியரா
கவும், தத்துவசாஸ்திராசிரியராகவும் நியோகித்தனர். தற்போது
ஸ்ரீமான் சுந்தரலிங்கம் தாம் வருந்திக்கற்ற கல்வியை அழகு பெற
விருத்திசெய்து பலருக்கும் பயன்படுமாறு கற்பித்து வருகின்ற
னர். இதுபற்றியே "மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்"
என்றார் பெரியோர். உதாரணமாக ஒரு விளக்கிலே பலவிளக்கும்



PROF C SUNTHERALINGAM, M A.

அப்பல விளக்கிலே பற்பல விளக்குமாக எண்ணில்லாத விளக்குக்கள் ஏற்றப்படுகிற தன்மையாய் இருத்தல்போல ஒருவருக்குக்கற்பிக்கின்ற கல்வியால், அவரொருவரிடத்திலே பலரும், அப்பலரிடத்திலே பற்பலருமாக எண்ணில்லாதவர் கல்வி கற்றுக்கொள்ளுதற்கு ஏதுவாயிருக்கின்றனர். இதனை வேதாகமங்களில், "தானமெல்லவற்றுள்ளுந்தக்க வித்தியாதானமே சிறந்தது சாற்றுங்காலே" என்றும் உபநிஷத்துக்களில் வித்தியா தானத்தின் விசேடத்தையும் அதன் சிறப்பையும், விரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றன. இதனை "ஸர்வேஷாமேவதானாநாம் வித்யாதானம் பரம் ஸ்மிருதம் வித்யயா! பராணநாமுக்தி தஸ்மாத் தத்தானமுத்தமம்" என்னும் வேதவாக்கால் உணர்த்தப்பட்டது. ஆகவே ஸ்ரீமான் சுந்தரலிங்கம் கல்விசம்பந்தமாகச் செய்துவரும் செயல்கள் அனைத்தையும் உலகம் போற்றுகின்றது. இவ்விஷயமிருப்ப ஸ்ரீமான் சுந்தரலிங்கமவர்களுடைய குணநிசயங்களைப்பற்றிச் சொல்லுகில் அறிவிலே சிறந்த பேரறிஞரானதால் சாந்தம், பொறை, அடக்கம் சைவாசாரம் சமயபக்தி ஆலயவழிபாடு, பரோபகாரம் பெருந்தன்மை முதலாகிய இன்னோரன்ன சிறந்த குணங்களை அணிகலமாயுடையவர். யாழ்ப்பாணத்தில் இலிங்கநாமத்தையுடைய சகோதரர்களால் இலங்கைத் தமிழகத்தார் பெருங் கீர்த்தியையும் பெருஞ் சிலாக்கியத்தையும் பெற்றுயவராகளென்பது திண்ணம்.

இத்தகைய இலட்சணங்களையுடைய எமது நண்பர் ஸ்ரீமான் சுந்தரலிங்கம், வர்த்தகத்துறையில் சபகலைகடாயிருந்த திருவாளர் கனகசபையவர்களுடைய புத்திரி ஸ்ரீமதி Kanagambikai என்னும் மாது சிரோன்மணியை விவாகஞ்செய்து, Gnanalingam, Lingambikai, Lingawathi, என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப்பெற்றனர். ஸ்ரீமதி கனகாம்பிகையின் குணமகிமையைப் பற்றிச் சொல்லுகில், கல்வியிலும், அறிவிலும், குணத்திலும், நற்பழக்க வொழுக்கத்திலும், சங்கீதஞானத்திலுஞ் சிறந்த புனிதவதியாவர். தம்பதிகள் இனிதுவாழ எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக.

## M. Somaskanda Kurukal, High Priest, Muneeswaram

பிரமஸ்ரீ மு. சோமாஸ்கந்தக் குருக்கள்:— இலங்கையில் பிரதான குருசிரேஷ்டராய் பிரபலமுற்று விளங்கும் இப் பிராமணோத்தமரின் மூதாதையர்களுக்கு பூர்வீகமாயுள்ள ஜென்மஸ்தானம் காஞ்சீபுரம். இவர் ஆதிசைவப்பிராமண குலத்திலே கௌசிக கோத்திரத்திலேயுதித்த பிரமஸ்ரீ முத்துச்சாமிக் குருக்களவர்களின் அருந்தவப் புதல்வராவர். அன்றியும் இவர் வேதாகமாதி சமஸ்த சாஸ்திரங்களிலே மகா பாண்டித்தியம் பொருந்திப் பெருங்கீர்த்திமானாய் விளங்கிய பிரமஸ்ரீ நா. குமாரசுவாமிக்குருக்களவர்களுக்குப் பௌத்திரருமாவர். இந்தக் குமாரஸ்வாமிக்குருக்களவர்களே, திருக்கேதீஸ்வராலயத்தையும், முனிஸ்வராலயத்தையும் செவ்வனே கட்டிக் கும்பாபிஷேகஞ் செய்துவைத்தனர். பௌத்திரராகிய பிரமஸ்ரீ சோமாஸ்கந்தக் குருக்களவர்கள் தம் பேரனைப்போல்கல்வியறிவொழுக்கங்களிற்சிறந்தயோக்கியராய் சமஸ்த சாஸ்திரங்களிலும் மகா பாண்டித்தியமுடையராய், நவீனஸ்தலங்களுக்குப் பிரதிஷ்டா குருவாய் இலங்கையிலேயுள்ள சிவாலயங்களுக்கு துவஜாரோகணக் குருவாய், பிரபுத்தன்மையும், பெருங்குணமுமுடைய மகா புனிதராய், முனிஸ்வராலயத்துப் புராதன தர்மகர்த்தாவாய், சுப்பிரமணியஸ்வாமி கோவிற் பிரதாஞசிரியராய், உலகில் பிரக்கியாதிபெற்று விளங்குகின்றனர். தற்போது பிரமஸ்ரீ சோமஸ்கந்தக் குருவுக்குச் சமானாய்க் குருத்துவத்தில் நிறைமையுள்ளோர் இங்கில்லையெனலாம். இவருடைய பெருமையைபபற்றிச் சொல்லுகில் "அந்தணரென்போரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகலான்" என்பதற்கிணங்க சாந்தம், பொறை அடக்கம், பரோபகாரம் முதலாகிய இன்னோரன்ன சிறந்த குணங்களையும், குருலெக்ஷணங்களையுமுடைய மஹான். ஆகவே இவர் தருமஸ்சொரூபன் என்பதற்குச் சந்தேகமில்லை. இவர் தொல்புரத்துச் சுந்தரஐயருடைய சிரேஷ்ட புத்திரியை விவாகஞ்செய்து வடிவாம்பா என்னுமோர் பெண்மகவைப் பெற்றனர்.

**K. S. Sriniwasa Sarma,** Priest, Pilliar Kovil, Mutwal.

பிரமஸ்ரீ க. சோ. ஸ்ரீநிவாச சர்மா:— இவர் சங்கானையை சென்மஸ்தானமாகவுடையவர். பிதாவின் பெயர் க. சோமசுந்தரக் குருக்கள். மாதாவுடைய பெயர் சுந்தரம்மா. இந்தப் பெண்மணி மகாவித்வ சிரோன்மணியாய் விளங்கும் வடலியடைப்பு அருணாசல சாஸ்திரிகளின் சிரேஷ்ட புத்திரியாவர். இவ்வம்மையார் பிதாவைப்போல கல்வித்திறமையுடையவராயிருந்து காலஞ்சென்றனர். புத்திரராகிய ஸ்ரீநிவாச சர்மா தம் மூதாதையர்களைபோல் சமஸ்த சாஸ்திரங்களிலும் பாண்டித்திய முடையராய்த் தற்போது முகத்துவாரம் பிள்ளையார் கோவிலுக்குப் பிரதாகுசிரியராயிருக்கின்றனர் இவர் சோதிடசாஸ்திர விற்பன்னராயிருந்து காலஞ்சென்ற பிரமஸ்ரீ நா சபாபதி குருக்களவர்களின் கனிஷ்ட புத்திரி ஸ்ரீமதி லலிதாம்பாள், என்னும் பெண்மணியை விவாகஞ்செய்தவர். இந்தப் பெண்மணி கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த மகா உத்தமியாவர். தம்பதிகள் இனிது வாழ்க.

**The Late Mr. S. Sivasangaram,**

"Skandha Giri" Kynsey Road.

காலஞ்சென்ற மிஸ்டர் சிவசங்கரம்:—இவர் இந்நகரிலுள்ள தமிழ் மக்களுள் சகல வளங்களாலுஞ் சிறப்புற்று விளங்கிய பெரும பிரபுககளின் சந்ததியைச் சார்ந்தவர். உலகநாதர், மாதர், கதிர்காமககணக்கா, தில்லையம்பலம், சின்னத்தம்பி ஆதியோருடை வழித்தோன்றலாயுதித்த சண்முகமவர்களின் புத்திரராவர். இவர் உலகிலுள்ள பற்பல சாதியார்களாலுஞ் சமயத்தார்களாலும் சன்மானிக்கப்பெற்றவர். தம்மாலியன்ற புண்ணியங்களையுஞ் செய்தவர். இவர் சிறுப்பு முருகேசபிள்ளையுடைய மூன்றுவது புத்திரியை விவாகஞ்செய்து சந்தானங்களைப் பெற்று 1904-ம் ஆண்டு மே மாதம் 23-ம் திகதி இறந்தனர். இவருடைய புத்திரரே ஸ்ரீமான் புரோக்கர் சண்முகம். இவர் தமிழ் மக்களுள் கண்ணியம்வாய்ந்த பெரும் பிரபுவாய் விளங்குகின்றனர்.

## Soma Deva Kasinathan Esq..

Colonial Secretary Office.



திருவாளர் சோம தேவா காசிநாதன்:—இவ்வுத்தமர் பிரபலமுற்று விளங்கிய வோர் குடும்பத்தைச் சார்ந்தவர். 1891-ம் ஆண்டு ஜூலைமாதம் பிறந்தனர். இங்குள்ள கலாசாலைகளில் கற்று, அரசாங்க உத்தியோக நியமனம்பெற்று றிஜிஸ்ற்றூ ஜெனரல் ஆபீசில் பலவருடங்களாக கடமைபார்த்துப் பலராலும் நன்கு மதிக்கப்பெற்றவர். இவருடைய விவேகத்தையும், திறமையையும், சாதுரியத்தையும் நன்குணர்ந்த அரசினர் இவரை இக்கச்சேரியினின்று உயர்ந்தஸ்தானமாகிய இராசமாளிகைத்தர் ஆபீசுக்கு மாற்றினார்கள். ஸ்ரீமான் காசிநாதன் தமது கடமைகளை ஊக்கத்தோடும்; மிக்க நேர்மையோடும் பார்த்து மேலதிகாரிகளாலும், துரைமார்களாலும் சன்மானிக்கப் பெற்றனர். இவர் இயல்பாகவே சாந்தம், பொறை, அடக்கம், பரோபகாரம், பிரபுத்வம் பெருந்தன்மை, ஏழைகளிடத்தன்பு, இரக்கம், தெய்வபக்தி முதலாகிய சிறந்த குணங்களை அணிகலமாயுடைய மகாயோக்கியர் குருவென்ற முறையில் எம்மிடத்திலே மிக்க அன்பு விசுவாசமுடையவர். சங்கீதத்திலும் வாத்தியங்களிலும் மிக்க விருப்புடையவர்; சமயாபிமானம் சாதியாபிமானம் பாஷாபிமானம் என்பவற்றில் அதிகமுறையும் ஊக்கமுமுடையவர். இவர் மானியம்பதியில் பிரபலமுற்று விளங்கிய கெங்கா தலாத்தினா முதலியார், மதியாபரண முதலியார் தன்மாவரதர் என்போருடைய வழித்தோன்றலாயுதித்த திருவாளர் இரத்தினசிங்கமவர்களின் புத்திரி ஸ்ரீமதி செல்லாச்சி யென்னும் பெண்மணியை விவாகஞ்செய்து, Saraswathi, Nadaraja என்னும் இரு குழந்தைகளைப்பெற்று தற்போது காறப்பிட்டியாவிலுள்ள அரசினர் வங்களாவில் வசிக்கின்றனர். ஸ்ரீமதி செல்லாச்சி கற்பழுக்கமும், நல்லொழுக்கமும், சாந்தகுணமுமுடைய குலமகளாவர் இத்தம்பதிகள் இனிதுவாழ எல்லாம் வல்ல இறைவனருள் புரிவாராக.



S. Pararajasingam Esq., J. P. M. R. C. S.

Meenambal Press.

டைய பிள்ளைகளைப் பெற்றனர். இவர்களைப்போல் நற்பழக்க வொழுக்கமுடைய பிள்ளைகளைக்காண்பது மிக அருமை இவர்கள் எம்முடைய மாணாக்கர்களுமாவர். ஸ்ரீமதி பொன்னம்மாவுடைய குணமகிமையைப்பற்றிச் சொல்லுகில் இப்பெண்ணரசி இந்துக்களுள் ஓர் சிறந்த சீமாட்டி, நற்குணமும், நற்செய்கையும், நல்மனதும், பரோபகார சிந்தையும், பிரபுத் தன்மையுமுடைய தலைவியாவர். இவர் தந்தையுடைய வரலாற்றைச் சொல்லுகில் யாழ்ப்பாணத்தில் பெரும்பிரபுக்களாயும், சாதிமான்களாயும் பிரபலமுற்று விளங்கிய வேலாயுதர் பொன்னம்பலமவர்களின் சிரேஷ்ட புத்திரியுடைய மகளாவர் இச்சரித்திரத்தில் "குறிப்புரை" வரும்

## The Late Mr. T Sockanathan.

Head Suroff, Imperial Bank.

---

காலஞ்சென்ற ஸ்ரீமான் த. சொக்கநாதன்:—இவ் வாதார கல்வியறி வொழுக்கங்களிலே சிறந்து இம்பீரியலென வழங்கும் நகரான் வங்கிக்குப் பிரதம சிறப்பாயிருந்து தமது கடமையை அங்குள்ளாரனையோடுபார்த்து உலகில் நற்கியாதிபெற்றனர். ஸ்ரீமான் சொக்கநாதன், சைவாசாரங்களிலும், சித்தாந்தசாஸ்திரங்களிலும் கண்மையுடையவர். ஒருமுறை தூத்துக்குடியில் நடைபெற்ற சைவசித்தாந்த சமாஜத்தில் அக்கிராசனமேவகித்து அங்குள்ளார் யாவர்களாலும் நன்கு மதிக்கப்பெற்றவர். இன்னொருமுறை கடலூரில் நடைபெற்ற சமாஜத்துக்குப் பல்லாயிரம் வித்துவான்கள் சமுகமாயிருந்தனர். அப்பொழுது யாமும் சிலவிஷயங்களைப் பேசும் பொருட்டாகச் சென்றிருந்தோம் அதேசமயத்தில் ஸ்ரீமான் சொக்கநாதனவர்களும், எமது நண்பராகிய வித்துவான் தாமோதரம்பிள்ளையவர்களும், சமுகமாயிருந்ததையும், அவ்விடத்தில் இவர்களுக்கு நடைபெற்ற மரியாதைகளையுங் கண்டு அகமகிழ்ந்தேம். இத்தன்மையுடைய ஸ்ரீமான் சொக்கநாதனின்பெருமையை என்னென்று சொல்வோம் இவர், ஸ்ரீமான் நல்லசாமிபிள்ளை B. A B L அவர்களோடும், சைவசித்தாந்தி ஸ்ரீமான் முத்தையாபிள்ளையவர்களோடும், காசிவாசி செந்திநாதையரவர்களோடும், இன்னும்பல வித்துவாம்சர்களோடும், நெருங்கிய சிநேகமுடையராயிருந்தனர் தம்முடைய காலத்தில் அளவுகணக்கற்ற புண்ணியங்களைச்செய்து, முகத்துவாரம், பிள்ளையார்கோவிலையும்,

பரிபாலித்துச் சிவலோகஞ் சென்றனர். இவர் Thambvah, Visvanathan, Ehamba, என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளையும் பெற்றனர். இவர்களுள் ஸ்ரீமான் தம்பையா மாத்திரம் பிதாவைப்போல், சாந்தகுணமும் பெருந்தன்மையும் சமயாசாரமும், பிரபுத்தன்மையுமுடைய யோக்கியராய் விக்னேஸ்வராலயத்துத் தரும கர்த்தாவாய் பிரபலமுற்று விளங்குகின்றனர்.

## R. Sivagurunathar Esq., J.P. Proctor & Notary

Chairman U. D. C, Jaffna

ஸ்ரீமான் சிவகுருநாதர்:— இவர் யாழ்ப்பாணத்திலே பெருங்கீர்த்திபெற்று விளங்கிய பிரபுக்களின் சந்ததியிலே தோன்றியவர். இவர் சாந்தம், பொறை, அடக்கம், சைவாசாரம் முதலாகிய இன்னோரன்னபல குணங்களையுடையவர். ஸ்ரீமான் சிவகுருநாதரின் பெருமையை ஏறக்குறைய இருபது வருடங்களுக்கு மேலாக யாமறிவோம் இவர் 1911-ம் ஆண்டில் இந்து வியாய மாணவராய் இருக்குங்காலத்தில் விவேகானந்தசபையின் பொருட்டுப் பெரிதும் உழைத்தவர். இவர் 1885-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 13-ம் திகதி வருஷப்பிறப்பிலன்று பிறந்தவர், யாழ்ப்பாண இந்துக் கல்லூரியிலே ஆரம்பக்கல்விகற்றவர், பிரசித்த நொத்தாரிசாகவும், பிரபல நியாயதுரந்தரராகவும் சித்தியடைந்து 1922-ம் ஆண்டில் லோக்கல்போட் மெம்பரானார். தற்போது பட்டின பரிபாலன சங்கத்துத் தலைவராயிருக்கின்றனர்; வடபிரதேசப் பிரதிநிதித் தேர்தலுக்கும் புறப்பட்டு நின்றவர். இவர் ஸ்ரீமான் நாகலிங்கத்துக்கு மருகரும் பிறவுண் சின்னத்தம்பிக்குப் பௌத்திரருமாவர்.

## Mr. S. Somasundaram, Asst Broker, Pappe & Co.

திருவாளர் சோமசுந்தரம்:—இவருடைய பெருமையைப்பற்றிச் சொல்லுகில், இக்கொழும்புமா நகரிலுள்ள தமிழ்மக்களுள் செல்வச்சீமானும், தருமப்பிரபுவாயும், கொடையிலே சிறந்த கொடைவள்ளலாயும்; சற்கருமங்களைச்செய்யும் புண்ணியபாத்திரவாயும், ஏழைகளிடத்தன்பு, இரக்கம், சீவகாருண்ணியம்; பச்சாத்தாபம், பரோபகாரம், முதலாகிய இன்னோரன்ன குணங்

கலைகளையுஞ் செயல்களையுமுடைய பெரும் பிரபுவாய், எத்திசையும் பெருங்கீர்த்திபெற்று விளங்கும் ஸ்ரீமான் புரோக்கர் செல்லமுத்து வுடைய சிரேஷ்ட புத்திரராவர். இவர் 1905 ஆண்டு செப்டம்பர் மாதம், நாலாந்திகதி பிறந்தவர். தற்போது பிதாவுடைய உத்தி யோகத்தைப் பார்த்துவருகின்றனர். இவர் புரோக்கர் இராஜரத் தினமவர்களுடைய புத்திரி ஸ்ரீமதி Nageswari என்னும் பெண் மணியை விவாகஞ் செய்து சகல சம்பத்துக்களையும் பெற்றனர். இத்தம்பதிகள் எமது மாணாக்கராவார்கள், இவர்கள் நற்குண நற் செய்கையுடைய நல்லபிள்ளைகளாவர்.

**M. Somasundaram Esq.,** Landed Proprietor Hedgescourt.

ஸ்ரீமான் மு. சோமசுந்தரம்:—இவர், இந்நகரைச்சென் னைப்பட்டணமாயுடையவர். இவருடைய மூதாதைகள் தமிழ்மக்க ளுள் சிறந்தமேன்மக்களாயும், பிரபுக்களாயும், உத்தியோகஸ்தர் களாயும், வித்துவ சிரோன்மணிகளாயும், பிரபலமுற்று விளங்கி னார்கள். உதாரணமாக அவர்களுடைய பெயர்களைச் சொல்லுகில் விசுவசிங்க முதலியார், எதிர்மன்னசிங்கமுதலியார், வீரசிங்கமுதலி யார், சண்முக உடையார், வித்துவான் பீதாம்பரம்பிள்ளை என் போருடைய வழித்தோன்றலாயுதித்த பிறகடர் முத்துக்குமாரு அவர்களுடைய அருந்தவப்புதல்வராவர். எத்திசையும் கீர்த்தி பெற்று விளங்கிய சங்கரபண்டிதர் சிவப்பிரகாசபண்டிதர் ஆதி யோருக்கும் பரசமயக்கோளரியாய் விளங்கிய ஆறுமுகநாவலரவர் களுக்கும் சொந்தக்காரராவர். சிவபூஜாதுரந்தரர்களாயும், பிரக்கி யாதிபெற்ற வித்துவான்களாயுமிருந்த பெரியோர்களைப் பார்த்தவ் வியமாயுடைய ஸ்ரீமான் சோமசுந்தரமவர்களின் அருமையை யும்பெருமையையும் பற்றிச்சொல்லுகில், இவர் தம்முடைய மூதா தையர்களைப்போல் சைவாசாரங்களிலும் சமயபக்தியிலுஞ் சிறந் தவர். எப்பேர்ப்பட்ட வித்துவான்கள் வந்தாலும் அவர்களை ஆத ரித்துத் தக்கப்படி கனம் பண்ணும் ஆற்றலுடையவர், நல்லஞா னமும், நல்லமனதும், பரோபகாரச்சிந்தையும், புருஷலக்ஷணமும் செந்தளிப்பான முகமும், தோற்றமுமுடைய பிரபுவாவர். இவர்

கௌரவசேர் இராமநாதனவர்களுடைய புத்திரி ஸ்ரீமதி ருக்மணி யென்னும் மாதை விவாகஞ்செய்து, **Muttukumarau** என்றும், **Mahadeva,** என்றும், இரண்டு புத்திரர்களைப்பெற்றனர் இந்தப் பிள்ளைகள் கல்வியறிவொழுக்கங்களிலே சிறந்தவர்கள். சிறுபிராயத்திற்றானே சகலமான பரீக்ஷைகளிலும் தேர்ந்து நியாயமாணவர்களாயிருக்கின்றனர். இவர்கள் கல்வியிலும், குணத்திலும், புத்திசாதுரியத்திலும் பழக்க வழக்கத்திலும் விசேடமானவர்கள். ஸ்ரீமதி ருக்மணி ஆச்சியுடைய மகிமையைப் பற்றிச் சொல்லுகில் பிதா மாதாவுடைய சுகுணங்களை அமையப்பெற்ற தலைமகளாவர்

## Sabapathi Kurukal, High Priest



வடகோவையைச் ஜென்மஸ்தானமாயுடைய இப்பிராமணோத்தமர் வடமொழி தென்மொழி இரண்டிலும் வல்லவர், இத்துடன் ஜோதிடம், மாந்திரீகம், விஷவைத்தியம் என்பவற்றிலும் மகா சாமர்த்தியமுடையர். இவருக்குப் புத்திரர் இருவர் மூத்தமகனின் பெயர் சதாசிவக் குருக்கள், இளைய மகனின் பஞ்சாக்ஷர ஐயர் இவர்கள் பிதாவைப்போல் சாஸ்திரங்களிலும் விற்பத்துடையர்களாவர். ஷை குருக்கள் 1929-ம் ஆண்டு ஜூலாய் மாதம் 25-ம் திகதி வியாழக்கிழமை சிவபதமடைந்தனர்.

## S. Suppiah Esq., Chief Clerk, C. C. Co Kandapola.



ஸ்ரீமான் சுப்பையா:—இவர் புலோலியென்னுமிடத்திலே தக்க குடும்பத்தைச் சார்ந்தவர். இவருடைய பிதாவின் பெயர் சின்னத்தம்பியாபிள்ளை. மாதாவின் பெயர் முத்துப்பிள்ளை தற்போது இவர் கந்தப்பளையிலிருக்கும் கொம்மேஷியல் கொம்பனிக்குப் பிரதம கிளாக்காயிருக்கின்றனர். இவர் தெய்வபக்தி, குரு பக்தி, மாதுர்பக்தி என்னும் பரமபக்திகளையுடைய உத்தமகுண சீலன். இவர் சங்கரத்தையைச் ஜென்மஸ்தானமாயுடைய வர்த்தகர் வேலுப்பிள்ளையுடைய புத்திரி **ஸ்ரீமதி கமலாச்சி** என்னும் குணவதியைத் துணைவியாய்க்கொண்டு சற்புத்திரசந்தானங்களைப் பெற்றனர். தம்பதிகள் இனிது வாழ்வார்களாக.

## Sandrasegaram Pillai, Mutuwal Temple.



காலஞ்சென்ற சந்திரசேகரம் பிள்ளை :— இவ்வுத்தமர் கொம்மிஷன் எஜண்டாயிருந்து தாம் ஈட்டிய பொருளைக் கொண்டும் ஊரிலே சேகரிக்கப்பட்ட பொருளைக்கொண்டும் முகத்துவாரத்திலோர் விநாயகராலயத்தை அழகாய்க்கட்டிச் சிவபதமடைந்தனர். இவருக்கு மனைவிமக்களில்லை; ஆகவே இவருடைய தம்பியாரின் மகனார் சண்முகத்துக்கே இக்கோவில் உரித்தென்றும் சொக்கநாதனுடைய பூசாந்தரத்தில் ஏடுபட்டு நம்பிக்கைக்காக எழுதிவைத்தாரென்றும் பேசிக்கொள்ளுகிறார்கள். எமக்கு விஷயம் புலப்படவில்லை. சொக்கநாதனுடைய மரபென்ன? சந்திரசேகரம் பிள்ளையுடைய குலகோத்திரமென்ன? என்றும் கேட்கின்றார்கள் விஷயம் இங்ஙனமிருப்ப கறையான் புற்றெடுக்கப் பாம்பு குடிகொண்ட தன்மைபோலாயிற்றென்றுஞ் சொல்லுகிறார்கள். ஆகவே இல்லாதது பிறவாது.

## K. Somasuntheram, Esq., C C. S. A G A Colombo.

நீதிபதி ஸ்ரீமான் க சோமசுந்தரம்:—இவர்; யாழ்ப்பாணத்து சீரணியபதியிலோர் பெருங்குடும்பத்தைச்சார்ந்தசரவணமுத்து அவர்களின் பௌத்திரரும், இலங்கை யரசாங்கத்தாரின் ஆயத்துறையில், உத்தியோகமாயிருந்து பலராலும், சன்மானிக்கப்பெற்ற ஸ்ரீமான் கந்தையாவுடைய புத்திரசிகாமணியுமாவர். இந்தக் கந்தையாபிள்ளையை அறியாதோர் எத்தேசத்திலுமில்லையெனலாம். இவர் யாவருக்கும் பரோபகார சீலராயிருந்து காலஞ்சென்றனர். எம்முடையபிதாவுக்கு உற்ற சினேகருமாவர். புத்திரராகிய ஸ்ரீமான் சோமசுந்தரம், 1897-ம் ஆண்டு மார்ச்சு மாதம் 15-ந் திகதி பிறந்தவர், இவர் இத்தேயத்திற்றானே கல்வி கற்று கேம்பிறிஜ் பரீக்ஷை, லண்டன் பரீக்ஷை, முதலான வைகளில் தேர்ந்தபின், பிதாவுடைய நன்முயற்சியால், சிவில் சேர்விஸ் பரீக்ஷைக்குச் சென்று அதிலும் அதிக திறமைசோடு சித்தியடைந்து 1921 ஆண்டு முதலாகப் பலவிதமான பெரும் உத்தியோகங்களை கையாண்டு, அரசாங்கத்தாராலும் ஊரவர்களாலும் நன்குமதிக்கப்

பெற்று வருகின்றனர். இவரை இங்கிலே பார்த்துக் கொண்டு வரும்பொருட்டாக ஸ்ரீமான் கந்தையா பட்ட பிரயாசை கொஞ்ச மல்ல, ஆகவே "தந்தை மகற்காற்று முதவி அவையத்து முந்தியி ருப்பச்செயல்" என்றபடி தன்மைந்தனுக்குச் செய்யவேண்டிய கடமையை முடித்துச் சிவலோகஞ் சென்றனர். ஸ்ரீமான் சோம சுந்தரம் பிதாவைப்போல், சாந்தகுணமும், மிக்கபொறுமையும், பெருந்தன்மையும், ஆதரவும், மனுஷரோடு இதமானவார்த்தை கள் பேசுமியல்புமுடையராய் விளங்குகின்றனர். இவர்காலஞ் சென்ற டாக்டர் சின்னத்தம்பியுடைய கனிஷ்ட புத்திரி ஸ்ரீமதி Nagulamba என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து, Rohini, Padmini, என்னும் இரு குழந்தைகளைப் பெற்றனர். ஸ்ரீமதி நகுலாம்பா நற்பழக்கமும், நல்லொழுக்கமும், சங்கீத ஞானமு முடைய நற்குணசாலியாவர். இந்தப் பெண்மணி எம்முடைய மாணாக்கியுமாவர்.

## Dr. V. Sivalingam L. M. S. Medical Officer, Ratnapura

ஸ்ரீமான் டாக்டர் சிவலிங்கம்:—இவர் வயித்தியலிங் கமவர்களுடைய புத்திரராவர், யாழ்ப்பாணத்திலே நல்ல குடிப்பி றப்பிலே தோன்றியவர். மெடிக்கல் கொலீச்சில் கல்விகற்றுப் பிர பல டாக்டராய் நியமனம்பெற்றுத் திரிகோணமலையில் மெடிக்கல் ஆபீசராயிருந்தவர் அவ்வூரிலேகொடியபிளேக் நோய்பரவியகாலத் தில் ஏழைகளுக்காகப் பெரிதும் உழைத்தவர் தற்போது இரத்தின புரியில் டாக்டராகயிருக்கின்றனர். இவர் சாந்தகுணமும் மிக்க பொறுமையுமுடைய யோக்கியராவர். இவர் காலஞ்சென்ற தில் லையம்பல முதலியாரின் மூன்றாவது புத்திரி ஸ்ரீமதி Pakiam என் னும் பெண்மணியை விவாகஞ்செய்து சந்தானம் பெற்றனர். இந் தச்சுகுணவதியின் பெருமையை பிறந்தநாள்முதலாகயாமறிவோம். எம்மிடத்திலே கல்விகற்ற மாணாக்கியுமாவர் இவ்வுத்தமி நற்பழக் கவொழுக்கமும் சாந்தகுணமும் பிதாமாதாவைப்போல் பெருந் தன்மையுமுடைய குலமகளாவர். இவர் 1898-ம் ஆண்டு ஆக ஸ்ட் மீ 8-ம் உ பிறந்தனர்.

## V T. S Sivagurunathan Head Master, Ananda College

ஸ்ரீமான் சிவகுருநாதர்:—தற்போது ஆனந்தக் கல்லூரித் தலைமை ஆசிரியராகவும், விவேகானந்தசபைக் காரியதரிசியாகவும், பிரபலமுற்று விளங்கும் இப்பேரறிஞர் புலோலியில் உயர் குலத்துத் தோன்றிய பிரபுக்களின் சந்ததியைச் சார்ந்தவர். இக் கல்லூரியிற் கற்கும் பல மாணவருக்கு நற்கல்வி கற்பிக்கின்ற ஞான குருவாயும், சைவாசாரமும், சமயபக்தியுமுடைய யோக்கியராயும், பரோபகார சீலராயும் விளங்குகின்றனர். இவர் ஆங்கிலந் தமிழ் என்னும் இரண்டு பாஷைகளிலும் நிறைவுள்ளவர். அறிவு விருத்திக்கேற்றதாகும் நூல்கள் பலவற்றைச் செய்திருக்கின்றனர். வடமாகாணத்துள்ள சைவப் பள்ளிக்கூடங்கள் விஷயமாகவும், வித்தியா விஷயமாகவும் உழைத்துவருகின்றனர். தம்மாலியன்ற பொருட்சகாயங்களையும் பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்குப் பரிசுகளையும் கொடுத்து உற்சாகப்படுத்தி வருகின்றனர்.

## K. Sundaram Pillai B. Sc (Lon) Barnes Place

ஸ்ரீமான் சுந்தரம்பிள்ளை:—எமதுநாட்டுக்கருமொருவராகிய இவருடைய உத்தம குணநிச்சயங்களைக் கூறும்படி நேரிட்டால் இச்சரித்திர நூல் கூறுமிடத்தில் பின்னொரு காலத்தில் வாய்ப்பதாகும். ஆகவே சிலவற்றைக் கூறிமுடிப்போம். ஒரு தந்தையும் தாயும் சந்ததி வேண்டி இயற்றொணாத் தவங்கள் செய்து நல்லறிவோடு கூடிய நற்புதல்வனைப் பெறவேண்டுமென்பதே அவர்களுடைய கருத்து. இதுபற்றியே திருவள்ளுவநாயனாரும் "பெறுமவற்றுள் யாமறிவதில்லை யறிவறிந்த மக்கட்பேறல்ல பிற" என்னும் வாக்கால் மக்கட்பேற்றின் சிறப்பைக் கூறிப் போந்தனர். இவ்வாறு நற்குணங்கள் ஸ்ரீமான் காராளபிள்ளை முதலியாரும் அவர் மனைவி ஸ்ரீமதி சின்னத்தங்கமும் பூர்வஜென்மத்திற் செய்த தபோபலத்தால் மதியும் ஆண்மையும் மாசிலாவொழுக்கமும் வாய்ந்த சுந்தரம்பிள்ளையைப் புத்திர சிகாமணியாகப் பெற்றனர். இவர் 1904-ம் ஆண்டு மே மாதம் 28-ம் திகதி பிறந்தவர். சிறுபிராயம் முதலாக நற்பழக்க வொழுக்கமும் பிதா, மாதா குரு உபாத்தியாயர் என்னும் பெரியோர்களிடத்தன்பும் பணிவுமுடையராய்

வளர்ந்து மானிப்பாய் இந்துக்கல்லூரியிலும் அதன் பின்னர் ஆனந்தக் கல்லூரியிலும் கல்விகற்று கேம்பிறிஜ் பரீக்ஷைகளிற் சித்தியடைந்து சர்வகலாசாலையில் உயர்தரக் கல்வி கற்று B. Sc என்னுமோர் பட்டத்தையும் பெற்றனர். யாமறிந்தளவில் சுந்தரம்பிள்ளையைப்போல் கல்வியறிவிலும் விவேகத்திலும் மற்றுமுண்டான எக்கருமங்களிலும் இவருக்குச் சமத்துவமாயுள்ள யோக்கியரை இக்காலத்து வாலிபருட் காண்பது மிக அருமை. தற்போது ஜோன் பிள்ளைக்குப் புரோக்கராயிருக்கின்றனர். இவ்விளைஞர் பாரிய தனவந்தராய் விளங்கும் ஸ்ரீமான் கார்த்திகேசுவுடைய புத்திரி ஸ்ரீமதி Rukmani என்னும் மாதை விவாகஞ் செய்து சின்னத்தங்கம்மையெனும் ஓர் பெண்மகவைப் பெற்றனர். இத்தம்பதிகள் இனிது வாழ எல்லாம் வல்ல இறைவனருள் புரிவாராக. மற்றோர் சரித்திரத்தில் விபரமாயெழுதுவேம்.

## A. R. Subramaniam Esq. B A District Judge

நீதிபதி ஸ்ரீமான் சுப்பிரமணியர்:—இவர் காரைநகரைச் சென்மஸ்தானமாயுடையவர். 1877-ம் ஆண்டு மேமாதம் 9-ந் திகதி பிறந்தவர். இவருடைய பிதாவின் பெயர் இராமநாதர் மகன் அம்பலவாணர். இந்த அம்பலவாணர் சைவ வேளாண் மரபிலே பிறந்தவர். இவர் சிவபுரத்தில் ஏறக்குறைய ஐம்பது வருடகாலங்களாக உபாத்தியாயராயிருந்து பல மாணவர்களுக்குக் கல்வி கற்பித்துத் தமிழ்ப்பாஷையை விருத்திபண்ணி வந்தவர். ஸ்ரீமான் சுப்பிரமணியவர்களுடைய பூர்வோத்தரங்களை யாமறியும் பொழுது அவர்களுடைய பிறவியிலே பரம்பரையான சைவர்களாயும் உயர்குலத்துத் தோன்றிய மேலோர்களாயிருந்து சைவ சித்தாந்த சாஸ்திரங்களையும் புராண காவியங்களையும் நன்கு கற்றுப் புலமை வாய்ந்த பெரியோர்களாயும் பிரசித்தியாகப் பெற்று விளங்கினோர்களென அறிகின்றேம். ஸ்ரீமான் சுப்பிரமணியம் ஆரம்பக்கல்வியைத் தம் பிதாவிடத்திலே கற்றபின், தெல்லிப்பழைப் போதனவித்தியாசாலைக்குச் சென்று நான்கு வருடம் வரையில் ஆங்கிலம் தமிழ் என்னும் இரு பாஷைகளையும் கற்றுப் பரீக்ஷைகளிற் தேர்ந்து 1897-ம் ஆண்டு இரண்டாங்கிளாஸ் தராதரப் பத்திரத்தையும் பெற்றனர். அக்காலத்திலிருந்தப்பள்ளிக்

கூடத்திலே ஆங்கில பாஷையைக் கட்டாயக் கல்வியாய்க் கருத வில்லை. ஆயினுஞ் சிறுகப்பயிற்றி வந்தார்கள். இப்படியிருக் குங் காலத்தில் ஸ்ரீமான் சுப்பிரமணியம் விவேகியாயிருந்தமையால் கற்கத்தா யூனிவேர் சிற்றியில் நடைபெறும் என்றென்ஸ் பரீ க்ஷைக்குச் சென்று அதிலும் சித்தியடைந்து உபாத்திமைக்குரிய சேட்டிபிக்கற்றையும் பெற்றனர். அதன்பின் வட்டுக்கோட் டைச் சாஸ்திரசாலையிற் சேர்ந்து கொஞ்சககாலத்துள் B. A. பரீக்ஷைக்குத் தயார்செய்து 1903-ம் ஆண்டு, அதிலும்சித்திபெற் றனர். அதன்பின் சென்ஜோன்ஸ் கல்லூரியில் இரண்டு வருடங் களாக உதவியாசிரியராயிருந்தனர். அதன்பின் சட்டக்கல்லூ ரியிற் கல்விகற்று நியாயப் பிரமாணங்களிலும் பிறவற்றிலும் மிக்க வல்லுனராய் 1910-ம் ஆண்டு முதல் 18 வருடகாலம் வரையும் யாழ்ப்பாணத்துக் கோடுகளில் கடமைபார்த்துப் பலராலும் நன்கு மதிக்கப்பெற்றனர். இவர் யாழ்ப்பாணத்துள்ள நியாயதுரந்த ரருள் சிவில் கிறிமினல் என்னும் இருபகுதியிலும் மிகத்திறமை யுடையராதலால் கிறவுன் அத்வக்காத்தாகவும் அயிட்டிங் பொலீஸ் நீதிபதியாகவும் டிஸ்திறிக் நீதிபதியாகவும் நிதாசனம் வகித்தனர். தற்போது திரிகோணமலையில் டிஸ்திறிக் நீதிபதியாயிருக்கின்றனர். இவர் யாழ்ப்பாணச்சங்கத்து அங்கத்தவருளொருவர். வட்டுக் கோட்டை யாழ்ப்பாணக் கல்லூரிப் போஷகருள் உப அக்கிரா சனருமாவர். பிறபகுதியில் விபரமாய்க் கூறுவேம்.

## R. Sabanayagam Esq, Proctor & Notary, NationalBank

ஸ்ரீமான் பிறக்டர் சபாநாயகம்:-இவருடைய மூதாதை களுக்குப் பூர்வீகம் சண்டிருப்பாய். காலாந்தரத்தில் நவாலியை வாசஸ்தானமாய்க்கொண்டனர். இவர் உயர்குலத்துத்தோன்றிய இருமரபுந்துய்ய முதலியார் வம்சத்தில் உத்தியோகஸ்தர்களாயும் அதிகாரம் படைத்த மேன்மக்களாயும் விளங்கிய அம்பலவாண இறைசுவார் வீரசிங்க உடையார் செல்லப்பா ஆதியோரின் பௌத் திரரும் இராசவாசல் முதலியார்ப் பட்டம் பெற்று வடமாகாணத் தில் உப ஏசண்டாயிருந்த எமது நண்பர் ஸ்ரீமான் இராசநாயகம் C.C.S. அவர்களுடைய துவிதீய புத்திரருமாவர். இவர் 1902-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 24-ம் திகதி ஜெனனமானவர். இவரு டைய ஜென்ம நாள் உத்திரம். கல்வியறிவொழுக்கங்களிலே

மேம்பட்ட பிதாவின் புத்திரரானதால் குலத்துக்கேற்ற குணமும் செயலுமுடைய நற்புதல்வராய் வளர்ந்து கேம்பிறிஜ் பரீக்ஷைகளிற்றேர்ந்து நியாயப்பிரமாணங்களைச் சட்டக் கல்லூரியிற்கற்று அதிலும் சித்தியடைந்து அரசாங்கத்தில் வெகுமதியாகப் பரிசுகள் பெற்றுச் சிலகாலம் மாத்தளையில் பிரபல நொத்தாரிசாகவும் நியாயதுரந்தரராகவும் கடமை பார்த்துப் பலராலும் சன்மானிக்கப் பெற்றுத் தற்போது நேஷனல் வங்கிக்குச் ஷ்ருப்பாயிருக்கின்றனர். இவர் கல்வியிலும் அறிவிலும் விவேகத்திலும் புத்திசாதுரியத்திலும் சமயபக்தியிலுஞ் சிறந்தவர். இவர் காலஞ்சென்ற சிறுப் சண்முகம் ஜே.பி. அவர்களுடைய புத்திரி ஸ்ரீமதி Veda-nayaki என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து Vadivamba அல்லது Chitra என்னும் பெயரையுடைய ஓர் பெண்மகவைப் பெற்றனர். இவர் மனையாளரும் இக்குலமணியுடைய உத்தம குணங்களை சிறுபிராயமுதலாக யாம் நன்கறிவோம். இவ்வுத்தமியின் நக்ஷத்திரம் மிருகசீரிடம். பிதா மாதா குரு உபாத்தியாயர் என்னும் பெரியோர்களிடத்தன்பும், சாந்தகுணமும், மிக்க பொறுமையுமுடையர். அன்றியும் இப்பெண்மணி கேம்பிறிஜ் பரீக்ஷையிற் றேர்ந்த கலைமகளுமாவர்,

**A. Subramaniam, Esq,** Chief Clerk, Standard Oil Co,

திருவாளர் ஆ. சுப்பிரமணியம்:—இவர் இந்நகரிற் பிரபலமுற்று விளங்கிய பம்பலப்பிட்டி ஆறுமுகமவர்களின் புத்திரராவர். 1890-ம் ஆண்டு மே மாதம் 27-ம் திகதி பிறந்தவர். யாம் செந்தோமஸ் கல்லூரியிற் கல்வி கற்கின்ற காலத்தில் எம்மோடு கூட ஒரே வகுப்பில் கற்றவர். இவருடைய குண விசேடங்களைப் பற்றி அக்காலமுதலாயறிவோம். இவர் விவேகமும் சாந்தமும், மிக்க பொறுமையுமுடையவர். தற்போது, கடவுள் உதவியால் மேலான உத்தியோகத்திலிருக்கின்றனர். இத்தன்மைகளையுடைய எமது நண்பர் சிலாவப்பத்தில் பிரபல டாக்டராயிருந்த பலவேசம் அவர்களின் புத்திரி ஸ்ரீமதி செல்லம் என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து வெள்ளவத்தையில் வசிக்கின்றனர்.

## Dr. T. Sivapragasam, L.M.S. Private Hospital.

திருவாளர் தி. சிவப்பிரகாசம்:—பிரபல டாக்டராய் விளங்கும் எமது நண்பருடைய பெருமையைச் சொல்லுகில் இவர் நவாலியம்பதியிலோர் தக்க குடும்பத்தைச் சார்ந்தவர். இவருடைய பிதா ஸ்ரீமான் தில்லையம்பலப்புசலியார். இவர் பகிரங்கப் பகுதியில் உத்தியோகராயிருந்து பலராலும் நன்குமதிக்கப்பெற்ற போதகர். இதற்கு, செந்தோமஸ் கல்லூரியில் யாங்கள் இருவரும் ஒன்றாய் ஒரே வகுப்பிலே படித்தோம். அக்கால முதலாகச் சகோதரங்களைப் போல் ஐக்கியமுடையவர்களாயிருந்தோம். இவருடைய முன்னோர் செய்த புண்ணிய வசத்தால் இவர் இப்பொழுது மேலான ஸ்திதியிலிருப்பதைக் காண்கிறோம். எம்முடைய அனுபவத்தில் டாக்டர் சிவப்பிரகாசம் கல்வியிலும் விவேகத்திலும், வைத்தியத்திலும், திறமையுள்ளவர் என்பதற்குச் சந்தேகமில்லை. இவர் கைச்சித்தியுமுடையவர். இவருடைய திறமையைப் பற்றி எமக்குப் பலரும் சொல்லியிருக்கின்றனர்

## V. S. N. Sanmugam Esq, Nelson Place, Wellawatta

ஸ்ரீமான் சண்முகம்:—இவர் காலஞ்சென்ற ஓவசியர் நாகமுத்து அவர்களின் புத்திரராவர். இவருடைய பூர்வீகம் அராலி. உயர் குலத்துக் தோன்றிய விசுவநாதர். சண்முகம் என்போருக்குப் பௌத்திரருமாவர். இவர் 1894-ம் ஆண்டு மே மாதம் ஏழாந்திகதி பிறந்தவர். கண்டியிலிருக்கும் திறினிற்றிக்கல்லூரியில் கல்விகற்றுத் தற்போது சிமைவர்த்தகராய் விளங்குகின்றனர். இவருடைய குண விசேடத்தைப்பற்றிப் பல வருடங்களாக யாமறிவோம். இவர் மிக்க பொறுமையும் சாந்தகுணமும் கண்ணளியுமுடையர். இவர் வேதாரணியருடைய புத்திரி ஸ்ரீமதி Pushpavathi என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து Kandsamy, Chandrasegaram, Kulasegaram, Nagamuttu, Ranie, Thangamma, என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப் பெற்றனர்.

## Mr. P, Sinnadurai, Cutler Palmer & Co.

திருவாளர் சின்னத்துரை:— இவருடைய ஜென்மஸ்தானம் திரிகோணமலை. விய வருடம் கார்த்திகை மாசம் பதினோராந் திகதி பிறந்தவர் இவருடைய பிதாவின் பெயர் பண்டாரம். திரிகோணமலை செழிப்புற்றிருந்த காலத்திற் குடியேறியவர். இவர் புத்திரராகிய சின்னத்துரை இங்கிலீஷ் கல்வி கற்று தற்போது "கட்லர் பாமர்" என்னும் கம்பெனியில் கடமை பார்த்து வருகின்றனர். இவருடைய மனைவி பெயர் பார்வதிப் பிள்ளை, தகப்பனார் பெயர் வைரமுத்து. இந்த பெண்மணி சமயாசாரங்களிற் சிறந்தொழுகும் சுகுணவதியாவர். திருவாளர் சின்னத்துரை சன்மார்க்கராதலால் 500 ரூபா வரையிற் செலவிட்டு ஓர் அழகிய மயில்வாகனத்தைப் பக்திபூர்வமாய் அமைப்பித்துக் கோயப்பணிக்கென ஸுப்பிரமணியாலயத்துக்குக் கொடுத்திருக்கின்றனர். இவருக்கு ஈசன் அருள் உண்டாகக் கடவது

## T. Sanmukam Esq., Devon House

ஸ்ரீமான் த. சண்முகம்:— இவர் யாழ்ப்பாணத்து அராலியம்பதியில் வீரநாராயண முதலியார் புத்திரரான சட்டம்பியார் சண்முகத்தார் வழித்தோன்றலாயுதித்தவரும் கொழும்புமாநகரில் பாரியதனவந்தராய்க் கறுவாக்காட்டில் வசித்தவரும், சிவாலயம் மடாலயம், அன்னசத்திரம் முதலானவைகளை ஸ்தாபித்துப் பல புண்ணியங்களைச் செய்து தேசமெங்கும் பிரக்கியாதிபெற்றுவிளங்கியவருமான ஸ்ரீமான் தம்பையா முதலியாரவர்களின் அருந்தவப் புதல்வருமாவர். "எந்த நல்லானந்தா னிரப்போர்க் கீந்தென்றவன் மைந்தர்தம்மீகைமறுப்பரோ" என்றபடி ஸ்ரீமான் சண்முகம் தருமவிஷயங்களில் பிதாவிலும் பன்மடங்கு மேம்பட்டவருள்ள தருமசீலராவர். தருமஸ்தாபனங்களாயுள்ள சத்திரம் சிவாலயம் முதலானவற்றைப் பரிபாலித்து வருகின்றனர். இவர், நமசிவாய முதலியாரின் புத்திரி கமலாச்சி என்னும் மாதை முதற்றாரமாகவும், இராமலிங்கச் சிறப்பர் புத்திரியை இரண்டாந்தாரமாகவும் மணஞ்செய்தவர்.

## Mr. S. Sivanathan, Rosmead Place.

திருவாளர் சிவநாதன்:—இவர், தருமசீலராய் விளங்கும் ஸ்ரீமான் புரோக்டர் செல்லமுத்து அவர்களின் இரண்டாவது புத்திரராவர். 1910-ம் ஆண்டு நவம்பர் மாதம் 16-ம் திகதி கார்த்திகை நக்ஷத்திரத்திலன்று ஜெனனமானவர். இவர் நற்பழக்க வொழுக்கமுடையவராய் றோயல் கல்லூரியிற் கல்விகற்றுச் சிலகாலம் ஷோ வொலஸ் கம்பனியில் புரோக்கராயிருந்தனர். இவர் மிக்க சாந்த குணமுடையவர், எம்டித்திலே கல்விகற்றவர். இவர் கௌரவ ஸ்ரீமான் சேர் அருணாசலமவர்களின் பௌத்திரி ஸ்ரீமதி Padmini என்னும் பெண்மணியை விவாகஞ்செய்தவர். இந்தப்பெண்மணி மாதாவாகிய மகேஸ்வரியைப்போல் சிறந்தகுணங்களையுடைய குணசாலியாவர். தம்பதிகள் நீடூழிவாழ்க.

## Mr. R. Segarajasingam, J P

இவர் இரத்தினசபாபதி முதலியாருடைய மூத்தமகன். லோககல் கவுன்மேண்டுப போட் மெம்பராகவும், ஷோவொலஸ் புரோக்கராகவுமிருந்து காலஞ்சென்றனர். இவருடைய புத்திரன் Namasivayam, இவர் கல்வியில் திறமையுள்ளவர்.

## Mr. S. Segarajasingam, Shroff, Daily News Office

திருவாளர் செகராஜசிங்கம்:— இவர் மானிப்பாயில் பிரபலமுற்று விளங்கிய ஓர் பாரிய குடும்பத்தைச் சார்ந்தவர். இவருடைய பாட்டனார் பெயர் மிச்சல் சதாசிவம், தகப்பனாருடைய பெயர் செல்லப்பா. தாயாருடைய பெயர் செல்லாச்சி. இவ கார்த்திகேசஉடையார் காராளப்பிள்ளை மகன் முத்துவேலருடைய மகள். செகராஜசிங்கம் 1901-ம் ஆண்டு ஜூன் மாதம் 28-ம் திகதி பிறந்தனர். இவருடைய சகோதரர் பெயர் Durai-raja தற்போது இவர்கள் டெயிலிநியூஸ் ஆபீசில் சிறுப்பாயிருக்கின்றார்கள். இந்தப் பிள்ளைகள் மிக்க நேர்மையும் யோக்கியமுமுடைய நற் புதல்வர்களாவர். மறுபதிப்பில் விபரமாய் வரும்.

## Mr. C. Suntheram, I. S. O. Chief Appraiser.

காலஞ்சென்ற ஸ்ரீமான் சுந்தரம்பிள்ளை:—இவர், நல்லூரைச் சென்மஸ்தானமாக வுடையவர். அரசாங்கத்தில் உத்தியோகம் பெற்று அப்ரெயிசராயிருந்தவர். அரிசிப்பஞ்சம் ஏற்பட்டகாலத்தில் ஏழைமக்களுக்கு பெரிய உதவி செய்தவர். இராசாங்கத்திற் செல்வாக்கும் உலகில் நற்கீர்த்தியும் ... பெற்று இருபத்திநான்காம் ஆண்டு மேமாதம் 12-ந்உ 66-வயதில் இறந்தனர். இவர், தமதுடைய சொந்தச்செலவில் லக்ஷக்கணக்கா யுள்ள திரவியத்தைச் செலவிட்டு கைலாயப்பிள்ளையார் கோவிலையுங் கட்டிமுடித்தனர். இவருடைய பிள்ளைகள், Meenambikai, Saraswathi, Manonmani, Maheswari, Kamalam, Nadaraja, Tyagaraja.

## E. Sellayah Esq. Asst. Govt. Printer

ஸ்ரீமான் செல்லையா:—இவர் யாழ்ப்பாணத்துக் கொக்குவிலைச் சார்ந்தவர். இவருடைய பிதாவாகிய முதலியார் ... இளையதம்பியென்பவர், கோப்பாயில் போலீஸ்முதலியாராயிருந்து ஊரவர்களாலும், அரசாங்கத்தாராலும் நன்கு மதிக்கப் பெற்றவர். ஸ்ரீமான் செல்லையாவுடைய தாய்மாமனும் மூத்தவராகிய ... தார் வைத்தியலிங்கமென்பவர் அக்காலத்திலே அரசாங்கத்தில் அதிகாரமுடைத்த உத்தியோகஸ்தராகவும், கொடையாளியும் ஆசிரியராகவும் பிரக்கியாதிபெற்று விளங்கினார். மற்றொருவர் இலங்கைச் சைவபரிபாலனசபை அக்கிராசனராகவும் பிரபல நியாயதுரந்தரராகவும் பிரபலமுற்று விளங்குகிறார். இங்ஙனம் பிரபலஸ்தர்களாய் விளங்கிய மேன்மக்களையுடைய ஸ்ரீமான் செல்லையா யாழ்ப்பாண நகரிலே 1875-ம் ஆண்டு மே மாதம் 30-ம் தேதி பிறந்து யோக்கியராய் வளர்ந்து வெஸ்லிக் கல்லூரியிற் கல்விகற்றுத் தற்போது அரசாங்க அச்சியந்திரசாலைக்கு உப தலைவராயிருக்கின்றனர் இவரோடு யாம் சம்பாஷித்தளவில் பெருந்தன்மையுடைய பிரபுவாக காணப்பட்டனர். இவர் ஏறக்குறைய முப்பது வருடகாலங்களாய் இக்கந்தோரிற்றானே இருக்கின்றனர். இவர் சுது




E. SELLAYAH ESQ.,

Asst Govt. Printer

Meenambal Press

மலே நொத்தாரிஸ் சிவரத்னத்தின் சகோதரராகிய ஆசிர்வாதம் என்பவரின் புத்திரி தங்கராணி என்னும் மாதை விவாகஞ்செய்து Walter, Mahesa, Iris Maheswari, Edward Mahadeva Allen Padmanabha, George Raja, Leslie walter, Dori-Saraswati, என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப் பெற்றனர். புத்திரர்கள் கேம்பிரிஜ் பரீட்சைகளிற் சித்தியடைந்து நியாயமான வராயிருக்கின்றனர். இவர் நற்குணமும், விவேகமும் கல்வியிற் சிறந்த திறமையுமுடையவர்.

## W. Sangara Pillai Esq Broker, Volkart Bros

காலஞ்சென்ற ஸ்ரீமான் சங்கரப்பிள்ளை:—இவர் உயர் குலத்துத் தோன்றியபெருமையர். தமவிஷயங்களிலும் பிறருக்குக் கொடுப்பதாகுங் கொடையிலும் சிறந்தவர். இவரைக் "கர்ணவதாரம்" என்று சொல்லவேண்டும். புரோக்கர் உத்தியோகத்தை இங்குள்ளாருக்குப் பழக்கிவைத்தவரும் இவரே. இவர் வாணிப்பாயிலே ஓர் பிரமாண்டமான வித்தியாசாலையை ஸ்தாபித்துள்ளார். இது எல்லாவற்றிலுஞ் சிறந்த புண்ணியமாகும். இதனால் சந்திர சூரியர் உள்ளவரையும் இவருடைய பெயரும் வாணிப்பாய் இந்துக்கல்லூரியுடைய பெயரும் விளங்கத்தக்கதாயிருக்கின்றது. இத்தருமசீலருக்குப் புத்திரர் Pararajasingham J. P. புரோக்கர் துரைச்சாமி, புரோக்கர் பத்மநாதன்.

## S Sathasiva Kurukal. Sivan Kovil, Colombo.

பிரமஸ்ரீ சதாசிவக்குருக்கள்:—இவர், சுன்னுகத்துப் பிள்ளையார்கோவிலுக்குப் பக்கலிலேயுள்ளவர். இவருடைய மூதாதைகளுக்குப் பூர்வீகமாயுள்ள தேசம் ஜகந்நாதம். வெகுகாலத்துக்குமுன்னேவந்து சுன்னுகத்திலே குடியேறினார்கள். அவர்களுடைய சந்ததியிலே சிதம்பரநாத ஐயர் உதித்தனர். இவருடைய புத்திரரே சாதாசிவக்குருக்கள். இவர் சிவன் கோவிலில் ஏறக்குறைய முப்பது வருடகாலம் குருசிரேஷ்டராயிருந்து சன்மானிக்கப்பெற்றனர். இவரை அறியாதாரில்லை. இவருடைய மனைவி பெயர் ஸ்ரீமதி தங்கம்மா. இப்பெண்மணி சாந்தகுணமுள்ள மகா உத்தமியாவர். தற்போது சிவன்கோவிலில் தாமசிக்கின்றனர்.

## Mr. M. G Sankara, Shorts Road.

கொம்பனித்தெருவிலே பிரபலஸ்தராயும் பாரிய தனவந்தராயும் விளங்குகின்ற ஸ்ரீமான் அ. இராமசாமி செட்டியாரவர்களுடைய மைத்துனரும், மூலைக்கரைப்பட்டி வாசரான குருவா செட்டியாரவர்களின் புத்திரருமாவர். இவர் 1908-ம் வருடம் செப்டம்பர் மீ 3-ம் உ பிறந்தவர். ஆனந்தக்கல்லூரியிற் கற்றுத் தற்போது மைத்துனருடைய கருமங்களைப் பார்த்து வருகின்றனர். நல்ல ஞானமும் நற்பழக்கமு முடையவர்.

## The Late T. K. Sivaram Esq.

"Rama Vasam" Summer Place

காலஞ்சென்ற ஸ்ரீமான் சிவராம்:—இவர் புரோக்கர் முத்துத்தம்பியவர்களின் புத்திரராவர் தம்பாலவர்களுக்குப் பௌத்திரருமாவர். மானியம் பங்காளருட் பெரிய பிரபுவாய் விளங்கினர். தான தருமங்களிலும் கொடையிலுஞ் சிறந்தவர். சமயபக்தியுஞ் சங்கீத ஞானமு முடையவர். லங்காசுபோத விலாச சபையின் உப அக்கிராசனருமாவர். இவருடைய புத்திரரே ஸ்ரீமான் பிறக்டர் இரத்தினகாம்.

## N. S. Sathasiva Kurukal, Priest Perumal Kovil, Jaffna

பிரமஸ்ரீ நா. சதாசிவக்குருக்கள்:—இவர் வடகோவையில் தாரண வருடம் வைகாசிமாதம் ஜெனனமானவர். இவருடைய ஜென்மநக்ஷத்திரம் உத்திராடம். இவர் வடமொழி தென்மொழி இரண்டிலும் வல்லவர். மூதாதையர்களைப்போல் சோதிடம், மாந்திரீகம் விஷவைத்தியம் என்பவற்றில் மிக்க திறமையுள்ளவர். இவருடைய மனைவி பெயர் விசாலாக்ஷி. இந்தப் பெண், பிரமணமுதலியாரின் பேத்தியாவர். இத்தம்பதிகளுடைய புத்திரரே இராமநாதசர்மா. தற்போது பிரமஸ்ரீ சதாசிவக்குருக்கள் பெருமாள்கோவிலுக்குப் பிரதானாசிரியராயிருக்கின்றனர்.

கல்வியில் மிக்க வல்லுனரான



ஸ்ரீமான், ஆர். ஸ்ரீ பத்மநாதன் M. A. L. L B.

## Mr. R. Sri Pathmanathan. M. A. Barrister-at-Law.

ஸ்ரீமான் ஸ்ரீபத்மநாதன்:— இவர் 1889-ம் ஆண்டு ஜூன் மாதம் 20-ம் திகதி பிறந்தவர். செல்வம் கீர்த்தி பரோபகாரம் முதலானவற்றில் மேம்பட்ட பிரபுக்களின் வம்சத்திலே தோன்றியவர். இவருடைய முதாதைகளுக்குப் பூர்வீகம் முகமாலை. அவர்களுடைய நாமங்கள் இலங்கைநாத முதலியார், கதிர்காம முதலியார், முத்தஉடையார் சிவகுருநாதர், நமசிவாய முதலியார் என்போருடைய வழித்தோன்றலாயுதித்த இரத்தின சபாபதி முதலியாரின் இரண்டாவது புத்திரராவர் இவர் றோயல் கல்லூரியிற் கல்விகற்றுச் சகலமான பரீட்சைகளிலும் தேர்ந்து இங்கிலாந்து முதலிய மேலைத்தேசங்களுக்குச் சென்று பலவருடங்கள் தாமசித்து ஒக்ஸ்போட் நியூ கொலீச்சிலும், பாரிஸ் யூனிவேஷிற்றி முதலான கலாசாலைகளிலும் கல்விகற்றுப் பெறுதற்கரிய பெரும் பட்டங்களைபெற்றுக் கல்வியிலே மிக்க வல்லுனராய் கற்றோர் மற்றோராகிய சமஸ்தர்களும் மெச்சக்கூடிய மகா வித்துவ சிரோன்மணியாய் வந்துளார். சுருக்கமாகச் சொல்லுகில் இவருக்குச சமத்துவமாயுடைய கல்விமானைக் காண்பது மிக வருமை இவரைப்போல் சாதுரியமாய் பேசக்கூடியவர்களும் லெக்ஷர்பண்ணக் கூடியவர்களும் இல்லையெனலாம். இவர் மகா தைரியசாலி, அஞ்சாநெஞ்சுடையவர், எவ்விஷயத்தையும் பேசக்கூடிய திறனுடையவர். கௌரவசேர இராமநாதனுடைய கீர்த்தியை நிலைநாட்டத்தக்க மாண்புடையாரிவரே. இவருடைய திறமையை அறியாதாரும் கேள்விப்படாதோரும் இல்லை, இவர் அரசியல் விஷயமாகவும்உலகியல் விஷயமாகவும்உழைத்துவருகின்றனர். இரத்தின சாபதியுடைய பிள்ளைகளுள், இவர் மிக்க நேர்மையும், யோக்கியமும், பெருந்தன்மையும், பரோபகாரசிந்தையும், பிரபுதன்மையுமுடையவர். இவர் ஒருவராலேயே இக்குடும்பத்தாருடைய பெருமை விளங்க ஏதுவாயிருக்கின்றது. உதாரணமாக, மிஸ்டர் ஸ்ரீ பத்மநாதன் டொனமோர் கம்மிஷன் வந்த காலத்தில் வாக்குமூலங்கொடுத்ததில், விசாரணைச் சங்கத்தார் பெரிதும் நன்குமதித்தனர். இவர் வெள்ளவத்தை தமிழ் யூனியனையும், ஓல்சிலோன் தமிழ் கான்பிரன்சையும், ஸ்தாபித்து ஜனங்களை ஐக்கியப்படுத்தி உலகத்துக்குவேண்டும் நன்மைகளைபெற ஏற்பாடு

செய்தனர். இதுவன்றியும்மேன்மாகாணத் தமிழ்ப்பிரதிநிதித்தோ தலுக்கு முற்பட்டு நின்று பிரசங்கமாரி மொழிந்தவர். இவர் முதலாவதாக கொரவசேர் அருணாசலமவர்களின்புத்திரி மனோன் மணி யென்னும பெண்ணை விவாகஞ்செய்தவர். இரண்டாவதாக Yvonne Coulet, (B Litt, Paris) என்னும் மாதை மணந்து Leela, Ratna, Mahendra. என்னும் பெயர்களையுடைய பிள் ளைகளைப் பொற்றனா. இவர்கள் எம்முடைய மாணாக்கர்களுமாவர். ஸ்ரீமதி இவோனைப்போல் கல்வித்திறமையும், சாந்த குணமும், யோக்கியமும், சாதுரியமுமுடைய குணவதியைக் காண்பது மிகவருமை.

**Dr K. Somaskandar**, L R C P & S, M O. H Negombo

**ஸ்ரீமான் டாக்டர் சோமாஸ்கந்தர்:**—இவர், மாணாப் பிள்ளை வமிசத்துத் தோன்றிய சிவலிங்க முதலியார் சந்திரசே கர முதலியார் சண்முகத்தார் ஆறுமுகம் பிள்ளை அம்பலவாணர் பிள்ளை ஆதியோர் வழித்தோன்றலாயுதித்த ஸ்ரீமான் குலவீரசிங் கமவர்களினது துவிதீயபுத்திரராவர். இவர் 1896-ம் ஆண்டு பிறந்த வர். தருமகுண சீலராய் விளங்கிய தமது பிதாவைப்போல் சாம யாசாரங்களிற் சிறந்த யோக்கியராய குணத்திலே சிறந்த குணசா லியாய் வளர்ந்து கல்விகற்றுத்தேறியபின் மெடிக்கல் கல்லூரியில் உயர்தரக்கல்விகற்று ரொக்பெல்லெர்ஸ் ஸ்கொலஷிப் மாணவராய அமேரிக்காவுக்குச் சென்று சுகாதாரத்துக்கேற்ற நவீனமுறை களை விசேடமாயக்கற்று கண்ணியம் வாய்ந்த டாக்டர்மாருள் ஒருவராய அரசாங்கத்தில் உத்தியோக நியமனம்பெற்றுத் தற் தற்போது நீர்கொழும்பில் சுகாதார வைத்தியராகவும் ஏர்பன கவுன்சில் மெம்பராகவுமிருக்கின்றனா. இவர் உயர்குலத்துத் தோன்றிய உத்தமர். சாந்தம், பொறை, அடக்கம் முதலாகிய பெருந் தன்மைகளையுடைய யோக்கியர். டெல்மேஜ வீட்டுப் புரோக்கரும், சிவபுண்ணியசீலரும். பாரிய தனவந்தரும், பரோ பகார சீலருமாகிய ஸ்ரீமான் சிவ, தியாகராஜாவுடைய சிரேஷ்ட புத்திரி ஸ்ரீமதி Naguleswari என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து Wignaraja என்னுமோர் ஆண்மகவைப்பெற்றனர். இத் தம்பதிகள் இனிதுவாழ எல்லாம் வல்ல இறைவனருள் புரிவாராக

## A. P. Suppiah Arunachalam Chettiar Merchant

திருவாளர் அ. பெ. சு. அருணாசலஞ்செட்டியார்:- இவருடைய பூர்வீகம் இந்தியா. இந்நகரில் பாரிய வர்த்தகராயுந் தனவந்தராயுமிருந்து காலஞ்சென்ற சுப்பையா செட்டியாரவர்களின் புத்திரராவர். அன்றியும் இவர் பிரபலஸ்தராய் விளங்கிய பெருமாள் செட்டியாருக்கு மகன்முறை பூண்டவர். திருவாளர் அருணாசலம் 1899-ம் ஆண்டு கார்த்திகை மாதம் ஜெனனமானவர். இவருடைய ஜென்ம நக்ஷத்திரம் உத்திரட்டாதி. இவர் நற்பழக்க வொழுக்கமுடையராய வளர்ந்து, சென்றல் கொலீச்சில் ஆங்கிலக் கல்விகற்றவர். தறபோது பாரிய தனவந்தராகவும், வர்த்தகராக வும் விளங்குகின்றனர். இவர் சமயாபிமானமும், சாந்தகுணமும் தருமசிந்தையுமுடையவர். இவருடைய தாயார் பெயர் பிரமநாயகம். இம்மாது தெய்வபக்தியுடைய உத்தமி. இவர் காலஞ்சென்ற முத்தையாச் செட்டியாரவர்களின் புத்திரி ஸ்ரீமதி Laxshmi என்னும் பெண்மணியை விவாகஞ்செயது Ratnavale என்னு மோர் மகவைப்பெறறனர். இவருடைய மனைவி லெக்ஷ்மி கல்வியறிவிலும், புத்திசாதுரியத்திலும், விவேகத்திலும் சிறந்த பெண் மணியாகும்.

## V. Sangara Pillai Esq, Head Shroff, C. T Club

ஸ்ரீமான் சங்கரப்பிள்ளை.—இவருடைய சென்மஸ்தானம் ஆனைக்கோட்டை. இவர் 1892-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 15-ம் திகதி பிறந்தவர். இவருடைய பிதாவுக்குப் பெயர் விசுவலிங்கம். இவருடைய பிதா தன்மாவரத உடையார். இவருடைய பிதா சண்முகம், இவருடையபிதாவயிரவநாதா, இவருடையபிதா குருநாதர், இவருடைய பிதா மாதர். இவர்களுடைய பூர்வீகம் புன்னாலைக்கட்டுவன். ஸ்ரீமான் சங்கரப்பிள்ளை இந்துக்கல்லூரியிலும், சென்ஜோசப் கல்லூரியிலும், கல்விகற்றவர். மதராஸ் வங்கியில் பலகாலம் உதவிச்சிறுப்பாயிருநதவர். அதன் பின் கோல்பேஸ் ஹொட்டலில் சிலகாலம் சிறுப்பாயிருந்தவர். தற்போது "சிலோன் ரேப் கிளப்" என்னும் குதிரைப் பந்தைய ஆபீ

சில் பிரதம சிறுப்பாயிருக்கின்றனர். இவர் ஏராளமான திரவியத்தைச் சம்பாதித்துப் போதிய காணி பூமிகளை வெள்ளவத்தையில் வாங்கியிருக்கின்றனர். இவர் சாந்தகுணமும் பரோபகார சிந்தையுமுடையவர். இவர் ஐசுக் கொம்பனியில் உத்தியோகமாயிருந்த அம்பலவாணரின் புத்திரி ஸ்ரீமதி அன்னம்மாள் என்னும் மாதை விவாகஞ்செய்து தன்பாலவாதா, நடராஜா, செல்வநாயகம், என்னும் பெயர்களையுடைய புத்திரசந்தானங்களைப் பெற்றனர். இவருடைய மனைவி அன்னம்மாள் எம்முடைய மாணாக்கிகளுளொருவராவர். இந்தப் பெண்மணி நற்பழக்கமும், நல்லொழுக்கமும், சாந்தகுணமும், குருவிசுவாசமுமுடைய குணசாலியாவர். ஸ்ரீமதி அன்னம்மாளை ஏற்றபின்னரே சகலமான செல்வங்களையும் சங்கரப்பிள்ளை பெற்றனர்.

## M. Sivaccollunthu, Orange Hill Estate, Balangoda

ஸ்ரீமான் சிவக்கொழுந்து:—இவர் தற்போது பலாங்கொடையிலுள்ள ஒரேஞ்ஹில் என்னும் தேயிலைத் தோட்டத்துக்கு அதிபராயிருக்கின்றனர். ஆனைக்கோட்டையில் மேன்மக்களாய் விளங்கிய கனகசூரியர் வழித்தோன்றலாயுதித்த விநாசித்தம்பி மகன் முருகேசருடைய புத்திரருள் ஒருவரும் பிரபலஸ்தராயிருந்து பெருங் கீர்த்திபெற்ற சின்னத்தம்பி யவர்களுடைய அருமைச்சகோதரருமாவர். உலகப்பிரசித்திபெற்ற இக்குடும்பத்தாரின் பெருமையையும், இவர்களுடைய சிறந்த குணங்களையும்பற்றி, யாம் நன்கறிந்தமையால் சுருக்கமாய் கூறத்துணிந்தோம். ஸ்ரீமான் சிவக்கொழுந்துவுடைய உதாரகுணத்தைப்பற்றிச்சொல்லுகில், இவரும் கூடியவரையில் தம்முடைய மூதாதையர்களுக்கிலக்காய், மற்றைய சகோதரர்களைப்போல் சமயபக்தியும், சன்மார்க்கமுமுடையராய் விளங்குகின்றனர். இவர் உயர்குலத்துத் தோன்றிய திருவாளர் காசிப்பிள்ளையுடைய புத்திரி ஸ்ரீமதி வடிவாம்பிகை என்னும் மாதை விவாகஞ்செய்து, Somasundram, Jeganathan, Mahadevan, Kanthimati, Kamlambikai, Kailainayaki, Dayanithi, என்னும், பெயர்களையுடைய பிள்ளைகளைப்பெற்றனர்.

## Sree Namagal Gana Sabah, Colombo.

ஸ்ரீநாமகள் கான சபா:—இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்னும் முத்தமிழை வளர்த்தற் பொருட்டாகத் திருவாளர் S. K. வடிவேல் பிள்ளை அவர்களுடைய விடா முயற்சியாலும், அபிமானமேலீட்டாலும் ஆரம்பிக்கப்பெற்றன. இச் சபையார் இதுகாறும் அநேக சரித்திரங்களை நாடகரூபமாய் நடித்துப் பலரையும் மகிழுவித்திருக்கின்றனர். உதாரணமாக "மங்களசுந்தரி அல்லது கற்பின்வெற்றி" என்னும் சரித்திரத்தை (16-5-29)ல் நடாத்தியபொழுது யாம் கண்ணுற்றேம். இதற்கு ஆசிரியர் எஸ். கே. வடிவேல் பிள்ளை இவர் வெகுசிரமப்பட்டு அநேகரை நாடகமுறையில் பழக்கியிருக்கின்றனர். இவருடைய செயல் போற்றத்தக்கது. இச்சபை என்றும் நிலைபெற ஈசன் அருள்புரிவாராக.

## T. V. Saravanamuttu Esq., Excise Supt Colombo.

திருவாளர் சரவணமுத்து:— எக்சைஸ் சுப்பிறிண்டெணாய்ப் பிரபலமுற்று விளங்கும் தருமசோதி வேதாரணியமவர்களின் முதாதைகளைப்பற்றி ஆராயும்பொழுது வலிகாமம் வடக்கிலே பன்னாலையென்னும் கிராமத்தில் கதிர்காமசேகர முதலியார் என்பவர் இருந்தார். இவருடைய வழித்தோன்றலாயுதித்த உடுவிலைச் சென்மஸ்தானமாய்க்கொண்ட முத்துத்தம்பி மகன் வேதாரணியருக்குப் பௌத்திரரும், பிரபல டாக்டராயிருந்து பெருங்கீர்த்திபெற்றுக் காலஞ்சென்ற ஸ்ரீமான் சரவணமுத்து அவர்களுக்கு அருந்தவப் புதல்வருமாவர். மாதாவுடைய வழியால் வட்டுக்கோட்டை ஆமஸ்ரோங் முத்துக்கமாணியவர்களுக்குப் பௌத்திரருமாவர். இவர்கள் நல்ல குடியிலே நற் கோத்திரத்திலே யுதித்த மேன்மக்களாவார்கள். இவர் 1890-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 31-ம் திகதி பிறந்தவர். "குலத்தளவே யாகுமாங் குணம்" என்றபடி, சிறுபராயம் முதலாக நற்பழக்க வொழுக்கமுடையராய் வளர்ந்து, செந்தோமஸ் கல்லூரியிற் கல்விகற்று கேம்பிறிஜ் பரீக்ஷைகளில் சித்திபெற்று அரசாங்கத்தில் மேலான

உத்தியோகத்தைப் பெற்றனர். இவர் பிதாவைப்போல் பிரபுத் தன்மையும், யோக்கியமும், மிக்கநேர்மையும், சாந்தகுணமும், பொறுமையுமுடையர். சுமார் 29 வருடங்களுக்குமுன் செந்தோமஸ் கல்லூரியில் யாம கல்விகற்கும் பொழுது இவரும் ஆங்கு கற்றனர். அக்காலமுதல் இவருடைய பெருமையையும், சாமர்த்தியத்தையும் நன்கறிவோம். ஸ்ரீமான் சரவணமுத்து, கிறவுண் கவுன்சிலராகவும் பிரபல நியாயதுரந்தரராகவுமிருந்து பிரக்கியாதி பெற்று விளங்கிய "சிற்றி" அவர்களின் புத்திரி Pearly என்னும் பெண்மணியைக் கைப்பிடித்து சந்தானங்களைப்பெற்றனர். இந்தப் பெண்மணி அழகிலும், குணத்திலும, கல்வியிலும் சிறந்த உத்தமி. ஸ்ரீமதி பேளியைப்போல் அருமையான பிள்ளையைத் தமிழ்ப்பெண்களுட் காண்பது மிகவருமை. சிறுபிராயம் முதல் எம்மிடத்திலே கல்விகற்ற மாணுக்கியுமாவா.

## Sri Renganathan Esq., Duputy Shroff, Eastern Bank·

Sea Street, Pillair Kovil Manager

திருவாளர் ஸ்ரீ ரெங்கநாதன்:— இவருடைய விருத்தாந்தத்தைப்பற்றிச் சொல்லுகில் கௌரவ எதிர்மன்னசிங்க முதலியாருக்குப் பேட்டனும், பிறகடர் துரைசாமிக்குப் பௌத்திரனும் உலகில் நற்கியாதிபெற்ற பிறக்டா முத்துசாமிக்குப் புத்திருமாவர். இலங்கையிலுள்ள தமிழ் மக்களுள் காலஞ்சென்ற முத்துச்சாமி குணத்தாலும், மதிப்பாலும், கொடையாலும் சிறந்த யோக்கியராய் விளங்கினுா. புத்திரராகிய ஸ்ரீ ரெங்கநாதன் நற்குணமும், சைவாசாரமுமுடைய நற்புதல்வராய் வளர்ந்து ஆங்கிலக் கல்விகற்றுத் தற்போது ஈஸ்றேண் வங்கியில் இரண்டாஞ் சிறுப்பாயிருக்கின்றனர். இவா பிதாவைப்போல் மரியாதையும், யோக்கியதையுமுடையவர். செட்டித்தெரு முத்துவிநாயகர் ஆலயத்தைப் பரிபாலித்து வருகின்றனா. இவ்வாலயம் இவருடைய மனேஜ்மெண்டுக்குள் வந்தபின்னர் எத்தனையோ சீர்திருத்தங்களைச் செய்திருக்கின்றனர் இக்கோவில் விஷயமாக இரவும் பகலும் இதே சிந்தனையாயிருந்து பாவங்களை விலக்கிப் புண்ணியங்களை அனுஷ்டித்துக் கோவிற கருமங்களைக் காலாகாலங்களில் விதிப்படி நடாத்தி வருகின்றனர். "மறுசரித்திரத்தில் இவரைப் பற்றிக் குறிப்புரைகூறுவோம்."

## Soma Tyagaraja Esq. Havelock Town.

ஸ்ரீமான் தியாகராஜா சோமசுந்தரம்:— இவர் இந் நகரிலேயுள்ள பெரும் பிரபுக்களின் சந்ததியைச் சார்ந்தவர். இவருடைய மூதாதைகள் பாரிய தனவந்தர்களாயும், பிறவிச் செல்வர்களாயும் பிரபலமுற்று விளங்கினார்கள். முகமாலையைப் பூர்வீகஸ்தானமாய்க்கொண்ட இலங்கைநாத முதலியார், கதிர்காம முதலியார், முத்துஉடையார், சிவகுருநாதர், நமசிவாய முதலியார் என்னும் பெயர்களையுடை பெருமக்களின் வழித்தோன்றலாயுதித்த பாரிஸ்டர் தியாகராஜாவுக்குப புத்திரராவர். இவர் சிலகாலம் இந்தேயத்திலும் பலகாலம் இங்கிலாந்திலும் கல்விகற்றவர். ஸ்ரீமான சோமசுந்தரம், சாந்தகுணமும் மிக்க நேர்மையுமுடையவர். இவர் மற்றுஞ் சிறுவர்களைப்போல வீண் டாம்பீகங்களை விரும்புபவரல்லர். பிரபுவுடைய பிள்ளையானதால் "தாறெடுங்கத் தன்குலமொடுங்க" என்றபடி அமைதியும், மரியாதையும், யோக்கியதையுமுடைய உத்தமராவர் இவர் விவேக புத்தியுடையவர், பிறர்புத்திகேளார், தன சொயபுத்தியின் வலிமையைக்கொண்டு நீதிமுறையா யொழுகும் ஆற்றலுடையவர். இவர் வட்டுக்கோட்டைமாறுமுதலியார்பூதத்தம்பி வம்சத்திறசேரனறிய சுவாமிநாதர், ஆறுமுகத்தார், அருணாசலம் புத்திரராகிய சீமை வாத்தகர் ஸ்ரீமான வைத்தியலிங்கமவர்களின் புத்திரி ஸ்ரீமதி Ambikai என்னும் மாதுசிரோன்மணியை விவாகஞ்செயதவர். இந்தப பெண்மணி பிதாமாதாவைப்போல் சாந்தம், பொறை, அடக்கம் முதலாயுள்ள விசேட குணங்களையுமுடைய மகா உத்தமி. இந்தப்பிள்ளை எமது மாணாக்கிகளுளொருவருமாவர், தம்பதிகள் இனிதுவாழ்க.

## Siva Sangara Aiyer Aiyadurai Aiyer, Araly.

பிரமஸ்ரீ ஐயாத்துரை ஐயர்:—இவர் அராலியைச் ஜென்மஸ்தானமாகவுடையவர். சர்வசித்து வருடம் கார்த்திகை மாதம் பிறந்தவர், பாரத்துவாஜ கோத்திரத்திலேயுதித்த சிவசங்கர ஐயரவர்களின் இரண்டாவது புத்திரராவர். இவர் கல்வியறிவொழுக்கங்களிலே சிறந்த நைட்டிகரும் சிவபூஜாதுரந்தரருமாவர் இவருடைய மனைவி பெயர் பார்வதவர்த்தனியம்மாள், இத் தம்பதிகள் பரமேஸ்வரி என்னுமோர் பெண் மகவைப்பெற்றனர்.

## **Sambanthamoorthy**, Asst. Broker, Pappe & Co.,

திருவாளர் சம்பந்தமூர்த்தி:—இவர் மாணியம்பதியில் உயர்குலத்துத்தோன்றிய வேளாண் மரபிலேயுதித்த மநியாபரணமவர்களின் நற்புதல்வராவர். இவருடைய மூதாதைகளின் நாமங்களைச் சொல்லுகில், காராள குலசிங்க முதலியார், கார்த்திகேச உடையார், காராளபிள்ளை என்போரின் வழித்தோன்றலாவர். இவர் 1903-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 29-ம் திகதி பிறந்தவர். பிதாவைப்போல் சமயாசாரமும் தமிழறிவுமுடையவர். அனந்தக் கல்லூரியிலும், பரமேஸ்வரக் கல்லூரியிலும் கல்விகற்று கேம்பிரிஜ் பரீக்ஷையிற் றேர்ந்து தற்போது பப்பி அன் கோ, வில் கடமைபார்த்து வருகின்றனர். இவருடைய தாயார் பெயர் **நாகம்மா,** இவ்வுத்தமி பிரக்கியாதிபெற்ற புண்ணியசீலராய விளங்கும் ஸ்ரீமான் செல்லப்புத்துரையுடைய தங்கையாவர்.

## **V Sundaram Esq** , Broker, Darly Butler Co ,

ஸ்ரீமான் ப்ரோக்கர் சுந்தரம்:—இவர் அராலியைச் சென்மஸ்தானமாயுடையவர். இவருடைய பிதாவின் பெயர் வைரவநாதர். இவர் வமிசபாரம்பரியந்தைச்சார்ந்த குலமகன். மெர்க்கின்றைலில்வங்கிப் பிரதம ஷிறாப்பாயிருந்த ஸ்ரீமான்கார்த்திகேசுவுக்குச்சகோதரராவர். தற்போது இவர் டார்லி பட்லர் என்னுங் கம்பனியில் புரோக்கராயிருக்கின்றனர். இவருடைய செயல்களைப்பற்றிச் சொல்லுகில், பிறருக்கு உதவிசெய்தலாகிய பெருங்குணமும் வாக்குசாதுரியமாய்ப் பேசும் வல்லமையும் சாமர்த்தியமுமுடையவர். மதராஸ் வங்கியில் ஷிறாப்பாயிருந்த ஸ்ரீமான் சீனிவாசகமவர்களின் ஏகபுத்திரி ஸ்ரீமதி நித்திய லக்ஷ்மி யென்னும் மாதை விவாகஞ்செய்து Jaganathan, Pathmanathan, Kirubambikai. Balambikai, என்னும் பெயர்களையுடைய சந்தானங்களைப் பெற்றனர். இவருடைய மனைவி நற்பழக்கவொழுக்கமும், சாந்தகுணமும், சங்கீத ஞானமுமுடைய மகா உத்தமியாவர்.

WELL-KNOWN PHILANTHROPIST.



## A. SELLAMUTTU Esq.,

*Broker* PAPPE & Co.

*Manager*, Manipay Hindu College & Keerimalai Thuravikal Ashrama,
*President* Tamil Dramatic Society
*Vice-president*, Vivekananda Society & Saiva Paripalana Sabai,
Founder of 'The Sellamuttu Block' at the Manipay Hospital
Interested in Religious & Charitable Work.

Meenambal Press

## A. Sellamuttu Esq, Broker H. J Pappe & Co. Colombo.

ஆதிசிவன் மைந்தனெனும் ஆறுமுகவள்ளலாராற்றுதவ நற் பயனதால் அருமை நற்புதல்வனும், பெருமைநல்லறமதேயானநற் சொரூபமாகி, நீதியோடு பூரணச் சந்திரனென வேயுலகில் நீழறம் புரியவேண்டி, நிகரிலா யாட்பாண மானிப்பாய்நன்னகரில் நிறை செல்லமுத்தென்ன வநதோதி யுயாகல்வி நல்லொழுக்கமுஞ் செல் வமும் உயாவுற வாழ்ந்துமேலாம், உத்யோக முறையினில் வித் யாசமில்லாத உயர்தரப்புரோக்கராகி, மேதினியிலில்லறம் புரிவதே நலமென்று மேலோருரைத்தவண்ணம் மிக்ககற்பினளானதையல் நாயகியம்மை மெல்லியரை மணமியற்றி, கோதில் பல சந்ததிகள் நீடுபெற வாழும் நறகொடை வள்ளல் பெருமைதன்னைக் குவலய மெலாம் புகழுமிவருலகின்வாட்கையைக் கூறிமகிழ்வார் தேவரே!

*ஸ்ரீமான் புரோக்கர் செல்லமுத்து:—இக்கருமசீலா, யாழ்ப்பாணத்து மானியம்பதியில், அடிமை, குடிமை, ஐஸ்வரியம கீர்த்தி, பரோபகாரம, பிரபுதவம, முதலானவற்றோடுகூடிய பெரும்பிரபுக்களின் வம்சத்திறறோன்றிய திருவாளர் விஞாசித்தம்பி வேலாயுதர் ஆறுமுகமவாகளின அருந்தவப புதல்வராவர். யா 1877-ம் ஆண்டு பிப்ரவரிமாதம் நாலாந் திகதி பிறந்தவர். வெஸ்லிக் கல்லூரியில் கல்விகற்றவர். தற்போது பப்பி அன்கோ என்னும் கமபனிக்குப்புரோக்காாயும் பங்காளராயுமிருக்கின்றனர். இறநதுறக்த சிலவருடங்களுக்குமுன பிரபலபுரோக்காாயிருந்து எத் திசையும புகழ்பெறற ஸ்ரீமான் சங்கரப்பிள்ளையின் சகோதாரு டைய புத்திரருமாவர் இவர் இலங்கையிலுள்ள தமிழ்மக்களுள், கல்வியறிவொழுக்கங்களாலும, தானதருமங்களாலும், நறகுண நற்செய்கையாலும், மனுஷத்தன்மையாலும, மதிப்பாலும், நடபபா லும், நேர்மையாலும், யோக்கியத்தாலும், பிறருக்குதவிசெய்யும பெருங்குணத்தாலும, கொடையாலும, செல்வத்தாலும், சிறந்த சீமானுகவும், சறபாத்திராகவும், பிரபலமுற்று விளங்குகின்றனர். இவருடைய பெருமையைச்சொலலுகில் "எல்லாரும் மானிடவரா வாரோ இப்புவியில் கல்லெல்லாம் மாணிக்ககல்லாமோ" என்னும் வாக்கியத்திறகிணங்க, இவா மானிடவருள் மகாபுண்ணியவான். நல்லறிவும் நற்சிந்தையுமுடையவர். இவருடைய புகழையும் கீர்த் தியையும தருமத்தின் இயல்பையும மனஆர்வத்தையும் உதார*

குணத்தையும் அறியாதாரில்லை. இவர் இன்சொல் ஈகை இரக்கம் ஏழைகளிடத்தன்பு சிவகாருண்யம் முதலாகிய இன்னோரன்ன சிறந்த குணங்களை யுடையவர். தேசாதிபதியவர்களாலும் ஊரவர்களாலும், ஏனையமற்றையோர்களாலும் நன்குமதிக்கப் பெற்றவர். "அறத்தான் வருவதேயின்பம் மற்றெல்லாம் புறந்தபுகழுமில" என்னும்வாக்கியத்துக்கு இலக்காய "மேலுலகம் இல்லெனினுமீதலே நன்று" என்றபடி தருமவிஷயங்களிலும சிவபுண்ணியங்களிலும் ஈடுபட்டு அளவுகணக்கற்ற தருமச் செயல்களைச் செய்திருக்கின்றனா. அவைகளைக் கணக்கிட்டு எழுதியடங்காது. ஆயினும் சிலவற்றை மாத்திரம் இங்கு கூறுவோம். அதாவது மானிப்பாயில் வெகுகாலத்துக்கு முன்னராக ஸ்தாபிக்கப் பட்ட "Green Hospital" வில் தருமத்தின் பொருட்டாகப் பெருந் தொகையான பணத்தைச் செலவிட்டு தம் பெயராவழங்கிவருமபடி ஓர் கட்டிடத்தைக்கட்டி மருநதுசசாலையை ஸ்தாபித்திருக்கின்றனர் இது எல்லாவற்றிலும் சிறநத புண்ணியமாகும. இவருடைய நாமத்தால் எத்தனையோ ஏழைமக்கள் சிகிச்சை பெற்றுவருகின்றனர். மானிபபாயில எத்தனையோ பிரபுககளிருந்தும இநதவிதமான செயலை எவருஞ் செயததேயில்லை. இவவிஷயமிருப்ப இனி மற்றவிஷயம் Manipay Hindu College. பலமாணவர் கல்வி கற்றற்குரிய தானமாய் விளங்கும் இக்கலாசாலைக்குச் சொந்தக்காரரும மானேசசரும இவரே. இவ்வித்தியாசாலையின் அபிவிருத்தியை நோக்கி தம கைபபொறுபபாக மேலதிகமாய அதிக பணத்தைச செலவிட்டு மிகக விசேடமாய நடத்தவருகின்றனர். இவருடைய மானேஜ்மெண்டுக்குள் வந்தபின்னா எத்தனையோ சீர்திருத்தங்களைச் செயது பள்ளிக்கூடத்தை மேன்நிலைக்குக் கொண்டுவந்திருக்கின்றனா. இனி பறிபுண்ணியங்கள விஷயமாகச்சொல்லுகில் சிவாலயப் மடாலயங்களுக்கும ஏழைகளுக்கும் ஒத்தாசைகள் செய்திருக்கின்றனர். உதாரணமாக வடமாகாணத்திலுண்டான வெள்ளப்பெருக்கினால் இடருற்ற ஜனங்களுக்கு உண்ண உணவும் உடுக்கவஸ்திரமும் கொடுத்தவர். பிரித்தானிய யுத்தத்தில் காயப்பட்டோருககாக, யுத்தநிதி சேர்த்துக கொடுத்தவர். விவேகானந்த சபை, துறவிகள் ஆச்சிரமம், கதிர்காம மடாலயம், யாழ்ப்பாணத்தார் கதிரேசன்கோவில், செட்டித்தெரு பிள்ளையார் கோவில், மாவிட்டபுரம் கந்தசுவாமி கோவில், கீரிமலைச் சிவன்கோவில், சுதுமலைப் புவனேஸ்வரியம்மன் கோவில். முனிஸ்வராலயம்

திருவாலங்காடு முதலாகிய புண்ணிய க்ஷேத்திரங்களின் திருப்பணியின் பொருட்டு பெருந்தொகையாய்ப்பொருள் உபகரித்த புண்ணிய சீலராவர். இனி ஏழைமக்கள் விஷயமாகவும், இரப்போர் விஷயமாகவும் வித்துவான்கள் விஷயமாகவும் இல்லையென்னாது ஏராளமாகக் கொடுத்திருக்கின்றனர். இதுபோல் இப்பவும் கொடுத்துவருகின்றனர் எத்தனையோ ஏழைக்குமர்களைக் கரைசேர்த்திருக்கின்றனர். இனி யாத்திரை விஷயமாகச்சொல்லுகில் காசிபரியந்தம் சென்றவர், இங்கிலாந்துக்கும் போய்வந்தவர் ஸ்ரீமான் செல்லமுத்துவுக்குச் சமதத்துவமாய தருமங்கொடுக்க வாவது ஏழைகளுக்கு உத்தாசைகள் செய்யவாவது முற்பட்டு வருவோர் எவருமில்லையெனலாம். இதுபற்றியே "நட் புநடலையும் கொடையும்பிறவிக்குணம்" என்றார் பெரியோர். இட்டார்பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்" என்று ஔவைப் பிராட்டியாரும் கூறிப்போந்தார். இதனை மறையோர் சிந்திப்பதில்லை. இத்தகைய இலக்கணங்களையுடையஸ்ரீமான் செல்லமுத்து, விவேகானந்தசபை, துறவிகள் ஆச்சிரமம், சைவபரிபாலனசபை, தமிழ் யூனியன், டிறமாறிக் கிளப், ஒறியன்கிளப், தமிழ்லீக் முதலாயுள்ள சங்கங்களிலும் சபைகளிலும் பிரதான அங்கத்தவராயும் அக்கிராசனராயுமிருக்கின்றனர். சுருக்கமாகச்சொல்லுகில் தமிழ்மக்களுடைய பெருமையை விளக்க ஏதுவாயிருப்பவர் இவரொருவரேயாம். தேசாதிபதியாகிய Sir Herbert Stanly அவர்கள் ஒருமுறை தம்முடைய பிரசங்கத்தில் ஸ்ரீமான் செல்லமுத்துவைக் குறித்து, "Among the distinguished sons of Jaffna who possessed the worlds' goods Mr. Sellamuttu was one who made use of his wealth by Contributing to that great work." என்று புகழ்ந்துபாராட்டிப் பெரிதும் கனம் பண்ணியிருக்கின்றனர். இத்தகைய ஸ்ரீமான் செல்லமுத்துவின் புகழைக்குறித்து உலகிலுள்ள பெருமக்கள் வாயாரவாழ்த்துவதையும் போற்றுவதையும் காண்கின்றோம். ஆகவே இவருடைய தயாள குணத்தின் பெருமையை பேசுவதிலும், பாக்கப் புஸ்தகங்களில் எழுதப்பெற்றிருந்தால் எழேழுதலைமுறைக்குப் பயனபடுவதுமன்றி, மற்றையோர்களும் ஸ்ரீமான் செல்லமுத்துவுடைய முன்மாதிரியைப் பின்பற்றி நல்வழிப்படுதற்கு ஏதுவாயிருக்குமென்பதே எமது அபிப்பிராயம். உதாரணமாக முற்காலத்திருந்த சிபிச்சக்கிரவர்த்தியையாவது கர்ணனையாவது கண்டோர்யாருமில்லை. அவர்களுடைய சரித்திரங்

களைப் புத்தக வாயிலாகவே அறியலானோம். அத்தன்மைபோல் இத்தருமசீலருடைய பிரபாவத்தை எழுதிவைத்தால் இதனை வாசிப்போருக்குப் பெருமகிழ்ச்சியைக் கொடுக்குமென்பதற்கு ஐயமில்லை. இதுபற்றியே ஔவையாரும், "நல்லோரைக்காண்பதுவும் நல்லோருடையசொல்லைக்கேள் என்றும், நல்லோருடையகுணமகிமைகளைப்பேசு என்றும், 'நல்லோருடன் சினேகஞ்செய் என்றும் கூறிப்போந்தனர் இதற்கு இலக்காய் ஸ்ரீமான் செல்லமுத்து சமயாசாரமும், சாதியாபிமானமும் தமிழறிவுமுடையவர். "கற்றோரே கற்றோரை காமுறுவர்" என்றபடி எம்மைப்போன்ற போதாசிரியர்களிடத்திலும், நூலாசிரியர்களிடத்திலும், கல்விமான்களிடத்திலும். மிக்க அன்பு விசுவாசமுடையவர். உதாரணமாக ஸ்ரீமான் நமசிவாயம் இருக்கின்றகாலத்தில் எல்லோரையும் ஆதரித்துவந்தனர். அத்தன்மைபோல் அபிமான புத்திரராகிய ஸ்ரீமான் செல்லமுத்து எங்களைப்போஷித்து வருகின்றனர். இப்புத்தகத்தை எழுதி அச்சிடுதற்குப் பெருந்துணையாளராயிருந்த செல்வச்சீமானுமிவரே! இதனால் இவருடையபுகழும் கீர்த்தியும் மறைபொருளாகாமல் கல்லின்மேல் எழுதிய எழுத்துக்குச் சமமாய் இப்புஸ்தகமிருக்குமென்பதற்குச் சந்தேகமில்லை. ஸ்ரீமான் செல்லமுத்துவுக்கு விவாகம் அதாவது மானும்பிள்ளை விசுவலிங்கமுதலியார் வம்சத்திற் றோன்றிய ஆறுமுகம் அம்பலவாணருடைய புத்திரன புஷ்பாக்கா குலவீரசிங்கமவர்களின் மூன்றாவது புத்திரி ஸ்ரீமதி Thaiyalnayaki என்னும் மாது சிரோன்மணியை விவாகஞ்செய்து Somasundram, Sivanathan, Nagendra, Baleswari, Sangara Pillai, Rajeswari, Rajasingam, Balendra, SundaresWari, Yogeswari, என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப் பெற்றனர். இந்தப் பிள்ளைகள் பிதாமாதாவைப்போல் நற்குணமுடையவர்கள் ஸ்ரீமதி தையல்நாயகியம்மாளின் சிறந்தகுணங்களைப்பற்றிச் சொல்லுமிடத்தில் இவ்வுத்தமி நற்பழக்க வொழுக்கமும், சாந்தகுணமும், மிக்கபொறுமையும், தருமசிந்தையும் நல்மனது முடைய குணசாலியாய், சகலமான பாக்கியங்களையும் ஒருங்கமையப்பெற்ற புண்ணியசாலியாய், பிதாவைப்போல் சமயாசாரங்களிற் சிறந்த உத்தமியாய், இரக்கமுள்ள நற்றயாய் விளங்குகின்றனர்.

## Dr. C. Sivasithamparam

L R C P & S. (Edin) L F P &S. (Glas) L.M S. (Ceylon)
First Grade Medical Officer



ஸ்ரீமான் டாக்டர் சிவசிதம்பரம்:—இவர் முல்லைத்தீவுப்பகுதியில் பிரக்கியாதி பெற்று விளங்கிய பெரும்பிரபுக்கள் வம்சத்தில் குற்றமற்ற இலக்கணங்களையுடைய சைவவேளாண்மரபிலேயுதித்த ஸ்ரீமான் கணபதிப் பிள்ளையவர்களின் அருந்தவப் புதல்வராவர். அன்றியும் இவருடைய மூதாதைகளைப்பற்றி அறியும்பொழுது பாரிய தனவந்தர்களாயும், உத்தியோகஸ்தர்களாயும் முதலிமார்களாயும், விளங்கினோர்களென அறியக்கிடக்கின்றது. அவர்களுடைய பெயரைச்சொல்லுகில், குமாரசேகர முதலியார் என்றும், மயில்வாகன முதலியாரென்றும், சோமநாத வன்னியனாரென்றும், கந்தஉடையாரென்றும், முருக உடையாரென்றும், பிரபலஸ்தர்களாய் விளங்கினோர்கள். இவர் பிதாவாகிய ஸ்ரீமான் கணபதிப் பிள்ளை கோடு கச்சேரிகளில் உத்தியோகமாயிருந்து உபகாரவேதனத்துடன் உலகில் நன்மதிப்புண்டாகப் பெற்றிருந்தனர். ஸ்ரீமான் கணபதிப்பிள்ளை சமயாசாரங்களிலே சிறந்தவர். பதிபுண்ணியங்களைப் பக்திசிரத்தையுடன் செய்தபுண்ணியசீலன். உதாரணமாக வீரகத்திப்பிள்ளையார் கோவிற்றிருப்பணியை புரற்றுவித்தவரும் இவரே. ஸ்ரீமான் சிவசிதம்பரம் உயர்குடிப்பிறந்த உத்தமரானதால், தம் மூதாதையர்களுக்கு இலக்காய் சமயாசாரமும் சாந்தகுணமுமுடையயோசகியராய வளர்ந்து கல்விகற்று இங்கிலாந்து முதலிய மேலைத்தேசங்களுக்குச் சென்று பெரும் பட்டங்களைப் பெற்றுப் பலவிடங்களிலும் உத்தியோகமாயிருந்து உலகில் பிரக்கியாதியுடன் விளங்குகின்றனர். இவர், எமது நண்பராகிய ஸ்ரீமான் வல்லிபுரமுதலியாரவர்களுககுச் சகோதரருமாவர். இத்தகைய இலககணங்களையுடைய ஸ்ரீமான் சிவசிதம்பரம் பிரபலடாக்டரும் துணைவிவாசருமான திருவாளர் கைலாயபிள்ளையவாகளின் இரண்டாவது புத்திரியாகிய ஸ்ரீமதி திரிபுரசுந்தரி எனனுமம்மாதை விவாகஞ்செய்து, Maheswari, Balasingham, Thilagavati, Nadaraja, Sabanayagam, என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப் பெற்றுத் தற்போது ஹெறந்தலை ஆசுப்பத்திரிக்குத் தலைவராயிருக்கின்றனர்.

ஸ்ரீமான் சந்திரசேகரம் பிள்ளை, சிவபுண்ணியங்களிலீடுபட்டு ஆன்மார்த்த விஷயமாகச் சற்கருமங்கள் பலவற்றைச் செய்திருப்பதாக வுமறியலானோம். அவற்றுளொன்றை உதாரணமாக இங்கு கூறுவேம். அதாவது மிகப்புராதானமாயுள்ள அரசசேகரப்பிள்ளையார் கோவிற்றிருப்பணியைத் தம்பொருள்கொண்டு பக்திசிரத்தையோடு முற்றுவித்த புண்ணிய சீலருமாவர். இவர் குலாசாரம் மதாசாரம் பூண்ட மேன்மகனும் மலையான வர்த்தகராயும் பாரிய தனவந்தராயும் விளங்குகின்ற திருவாளர், சுப்பா பிள்ளையவர்களுடைய புத்திரியை விவாகஞ்செய்தவர். இவருக்குத் தீர்க்காயுளும் பெருவாழ்வும், சற்புத்திரசந்தானங்களும் உண்டாகும்படி ஆசீர்வதிக்கின்றேம்.

## S. Somasundaram Esq. Amateur Photographic Co.,

ஸ்ரீமான் சோமசுந்தரம்:—இவர், வைசிய மரபைச் சார்ந்தவர். பெருமாள் கோவிலுக்கணித்தாயிருக்குந் திருவாளர் சின்னையாச்செட்டியாருடைய சிரேஷ்டபுத்திரராவர். இவர் சாந்தகுணமும், பெருந்தன்மையுமுடைய யோக்கியர். ஸ்ரீமான் சின்னத்தம்பியுடைய புத்திரி ஸ்ரீமதி மீனும்பாளென்னும் பெண்மணியைவிவாகஞ்செய்து, Balasingham, Sivagurunathan Pathmavati, என்னும பெயர்களையுடைய பிள்ளைகளைப் பெற்றுச் சிவலோகஞ்சென்றனள். ஸ்ரீமதி மீனும்பாளைப்போற் குணசாலியைக் காண்பது மிக அருமை.

## A. Suppiah Pillai General Merchant, Kyman's Gate.

---

திருவாளர் சுப்பையா பிள்ளை:-இவர் திருநெல்வேலியிலோர் தக்க குடும்பத்தைச்சார்ந்த இளையதம்பி மகன் அருணசலம் பிள்ளையுடைய புத்திரருளொருவராவர். இவர் சைவாசாரமும், சமயபக்தியும், சாந்தகுணமும், பரோபகாரசிந்தையுமுடையவர். இவருடைய குணவிசேடங்களைப்பற்றி ஏறக்குறைய இருபது வருடங்களாக யாமறிவேம். தற்போது கயிமன்ஸ் கேற்றில் வியாபார ஸ்தலங்களையேற்படுத்திப் பிரபல வர்த்தகராய்

விளங்குகின்றனர். இவர் குலமகனுனதால் சற்கருமங்களை இயன்றமட்டும் செய்துவருகின்றனர். உதாரணமாக, விவேகானந்த சபைக்கும், சிவாலயங்களுக்கும், பொருளுதவிகள் செய்திருக்கின்றனர். இவர் கோண்டாவில் வாசரானஉபாத்தியாயர் ஸ்ரீமான் செல்லப்பா பிள்ளையவர்களின் புத்திரி ஸ்ரீமதி பாறுவதிப்பிள்ளை யென்னும் மாதை விவாகஞ்செயதவர். தம்பதிகள் புத்திரசந்தானங்களைப் பெற்று இனிதுவாழ எல்லாம்வல்ல இறைவனருள் புரிவாராக மறுசரித்திரத்தில் குறிப்புரை கூறுவோம்.

## S. Sanmugam Pillai, Cigar Merchant, Pettah

---

ஸ்ரீமான் சண்முகம்பிள்ளை:—இவர் ஆனைப்பந்தியைச் சார்ந்த பாவட்டங்காட்டுச் சின்னத்தம்பியார் மகன் செல்லப்பா பிள்ளையுடைய புத்திரருளொருவராவர். தற்போது பிறக்கோட்டைப்பகுதியில் பிரபல வர்த்தகராய் விளங்குகின்றனர். இவருடைய சகோதரரே ஸ்ரீமான் பொன்னம்பலம் பிள்ளை. இவர், வர்த்தக முயற்சிக்குத் துணையாளாகவும், மேலாளாகவுமிருந்து தொழிலை விருத்திபண்ணிவருகின்றனர். இவ்விருசகோதரர்களுடைய சிறந்த குணங்களை ஆராயுமிடத்து இவர்கள் ஒற்றுமையுஞ் சமயபக்தியுமுடையர்களாய் சிவபுண்ணியங்களிலீடுபட்டுச் சற்கருமங்களைச் செய்திருப்பதாக அறியலானோம். தாங்கள் ஈட்டிய பொருளைக்கொண்டும், ஊரவர்களுடைய உதவியைக்கொண்டும், அத்தியடியிலுள்ள நடராஜ கணபதியின் ஆலயத்தைப் பழுதறப் புதுக்குவித்து வைரம்பாய்ந்த கறகளால் காப்பக்கிரக மண்டபம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், வசந்தமண்டபம், ஸ்தம்ப மண்டபம், முதலானவைகளை நவீனமாய் அமைப்பித்து, நித்திய நைமித்தியங்களையும், விசேட பூசை உற்சவங்களையும், நடாத்திச் சமயபக்தியை வளர்த்து வருகின்றனர். சிவபுண்ணியங்களைச் செய்தவர் மேலுலகங்களாகிய புண்ணிய லோகங்களிலே போய் இன்பத்தையடைவரென்பது வேதாகம நூற்றுணிபு. ஆகவே இவ்விரு சகோதரர்களும் சறபுத்திர சந்தானங்களைப் பெற்றுச் சுகசீவந்தர்களாய் மேன்மேலும் புண்ணியச் செயல்களைச்செய்யும் பொருட்டு எல்லாம் வல்ல இறைவனருள்புரிவாராக.

## S. Somasundram Esq, Proctor & Notary Colombo

ஸ்ரீமான், பிறக்டர் சோமசுந்தரம்:— இவருடைய விருத்தாந்தத்தைப்பற்றிச் சொல்லுங்கில், ஆதிகாலத்திலே தமிழரசர்கள், வித்துவான்கள், பிரபுக்கள், சாதிமான்கள் எனனும் பல சிறந்தார்கள் வசிக்கப்பெற்றதும், கலியுக வரதராகிய சண்முகப் பெருமான் எழுந்தருளப் பெற்றதுமாகிய நல்லூர்ப்பதியில் செல்வம், கீர்த்தி, உத்தியோகம் முதலானவற்றையுடைய பிரபுக்கள் வம்சத்திலே வந்துதித்த ஸ்ரீமான் எம். சபாபதிமுதலியாரவர்களின் அருந்தவப் புதல்வராவர். இவர் சிறு பிராயம் முதலாக ஸ்ரீமான் சுந்தரம்பிள்ளை C. C. S அவர்களோடிருந்து றோயல் கல்லூரியிற் கல்விகற்று கேம்பிறிஜ் பரீக்ஷைகளிற் சித்தியடைந்து நியாயப் பிரமாணங்களிற் தேர்ந்து பிரசித்த நொத்தாரிசாகவும் பிரபல நியாயதுரந்தரராகவும் பிரக்கியாதியுடன் விளங்குகின்றனர். ஸ்ரீமான் சபாபதி முதலியாருக்குப ஞாவீகம் புலோலி. இவர், யாழ்ப்பாணத்துப் பொலீஸ்கோட்டில் இன்ரப்பிறிற்றர் முதலியாராயிருந்தவர். இவருடைய சகோதரர்களின் நாமங்களைச் சொல்லுங்கில் முதலாவது Thaivanippillai, இரண்டாவது Thamboo, மூன்றாவது Sabapathy Mudaliar, நான்காவது Sinnathangam, ஐந்தாவது Appapillai, ஆறாவது Kulandavel, ஏழாவது Sub Collector Kanagasabai, எட்டாவது Gopal, ஒன்பதாவது Arumugam இவர்கள் எல்லோரும் ஆங்காங்கு வாக்குப் பட்டுச் சந்தான விருத்தியாகிப் பெருநிலையிற் காணப்பட்டனர். இவ்வளவு இனசனக்கட்டுள்ள ஸ்ரீமான் சோமசுந்தரம் காலஞ்சென்ற கந்தருக்குப் பௌத்திரருமாவர். இவருடைய தாயாருக்குப் பெயர் மாணிக்கம். இந்த மாணிக்கம்மாள் ஸ்தலயாத்திரை, தீர்த்தயாத்திரை முதலானவைகளைச் செய்து கடவுள் பக்தியிற் சிறந்த உத்தமியாயும், கற்பாஸ்திரியாயும் விளங்குகின்றனர். புத்திரராகிய ஸ்ரீமான் சோமசுந்தரத்துடைய பெருமையைச் சொல்லுங்கில் இவர், சமயபக்தியும் சைவாசாரமுமுடையவர், சற்கருமங்களுக்கும் ஏழைகளுக்கும் உதவி செய்கின்றவர், வருடந்தோறும் ஸ்தலயாத்திரை செய்பவர், சாந்தம் பொறை அடக்கம், பிரிய வசனம், பெருந்தன்மை, பரோபகாரம், யோக்கியம் இது முதலாகிய இன்னோரன்ன சிறந்த குணங்களையுஞ் செயல்களையுமுடைய

உத்தமர். மகாத்மா காந்தியைப்போன்ற தேசாபிமானிகளால் பெரிதும் சன்மானிக்கப் பெற்றவர். இந்நகரிலிருக்கும் பல்லாயிரம் பிறக்டர்மாருள் இவர் முதன்மைபெற்றவர்; இவருடைய சாதுரியத்தையும், நேர்மையையும், உண்மைப்பற்றுதியையும், வியந்துகூறுந்தரமில்லை. இதனால் ஸ்ரீமான் சோமசுந்தரம் உலகில் நற்கீர்த்தியையும், புகழையும், நற்பேரையும், நாட்டு நகரத்தாராலும், மற்றையோர்களாலும் நன்குமதிக்கப்பெற்று வருகின்றனர். இவர், சுந்தரம் பிள்ளையுடைய சிரேஷ்டபுத்திரி ஸ்ரீமதி Meenambikai என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து, Pathmavati, Srikanta, Rajeswaran, Leelavati, என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப் பெற்றனர். ஸ்ரீமதி மீனாம்பிகை பிதாமாதாவைப் போல், கல்வியறிவொழுக்கங்களிலும், கற்பொழுக்கங்களிலும், சிறந்த உத்தமியாய் விளங்குகின்றனர்.

**R. Sanmugam Esq.**, Broker, Tarrant & Co.,

ஸ்ரீமான் ஆர். சண்முகம்:—இவர் ஆனைக்கோட்டையில் உயர் தலத்துத்தோன்றிய பெருமை பிரபுக்களின் வம்சத்திலேயுதித்த ஸ்ரீமான் நொத்தாரிஸ் இராமலிங்கமவர்களுடைய சிரேஷ்ட புத்திரராவர். குருநாதர், வைரவநாதர் சண்முகத்தார், தனமாவதி உடையார் என்போரின் வழித்தோன்றலுமாவர். ஸ்ரீமான் சண்முகம் சென்ற்தோமஸ் கல்லூரியிற் கல்விகற்று டாறன் கம்பனிக்குப் புரோக்கராக நியமனம்பெற்றுத் துரைமார்களாலும் மற்றைய ஏனையோர்களாலும் சன்மானிக்கப்பெற்ற யோக்கியராயும், குணவந்தராயும் விளங்குகின்றனர். ஸ்ரீமான் சண்முகத்துடைய தயாளகுணத்தின் பெருமையைச் சொல்லுங்கால் "வித்தாமும் கடப்பும் வேண்டா பட்ட நெஞ்சே செந்தாமரைப்போல நீர்" என்னும் நீதிமொழிக்கிணங்க சாந்தம், பொறை, அடக்கம், ஏழைகளிடத்தன்பு, இன்சொல், ஈகை, இரக்கம் இதமுதலாகிய சிறந்த குணங்களையுடைய உத்தமராய் பெருந்தன்மையுடைய பிரபுவாய் குணத்திலே சிறந்த குணசாலியாய் விளங்குகின்றனர். ஸ்ரீமான் சண்முகம் இயல்பாக புகழ், ஆரவாரம், தற்பெருமை முதலாகிய வீண் விஷயங்களை விரும்பாத மகாயோக்கியர். சைவசமய விருத்தியைக் குறித்துச் செய்திருக்கின்ற உதவிகளோ அனந்தம்.

ஆன்மலாபத்தைக் கருதி சிவாலயம், மடாலயம், வித்தியாலயம் முதலானவற்றிற்குப் போதிய பொருளுதவிகள் செய்திருக்கின்றனர். ஏழைகளுக்கும், இரப்போருக்கும் இல்லையென்னுது தருமங்கொடுக்கின்றவர், தரும விஷயமாக இதுகாறும் இவர் செய்திருக்கின்ற செயல்களை எழுதியடங்காது. தற்போது தம்முடைய சொந்தப் பொறுப்பில் ஓர் கம்பேனியை ஸ்தாபித்து நடாத்தி வருகின்றனர். இவர் உலகப் பிரசித்திபெற்ற வித்தியாதரிசி ஸ்ரீமான் தம்பாபிள்ளையவாகளுடைய புத்திரியை விவாகஞ்செய்து புத்திர சந்தானங்களைப்பெற்று பம்பலப்பிட்டியில் வசிக்கின்றனர்.

## T. Sabanayagam Esq., Broker, Colombo.

திருவாளர் சபாநாயகம்:— இவருடைய ஜென்மஸ்தானம் ஆனைக்கோட்டை, பிதாவின் பெயர் தில்லையம்பலம், தாயார் பெயர் ஸ்ரீமதி பொன்னம்மா. தமையனார் பெயர் ஸ்ரீமான் செல்லத்துரை. இவர் செல்வாக்குடைய உத்தமர், சபாநாயகம் செந் தோமஸ் கல்லூரியிற் கல்விகற்றுப் புரோக்கராயிருக்கின்றனர். இவர் அருமையான குணசாலி, கிறிக்கற் என்னும் விளையாட்டில் மகாதீரன். இவர் ஸ்ரீமான் இராமலிங்கத்துடைய புத்திரி Maheswari என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து Mahendra என்னுமோர் மகவைப்பெற்றனர். இந்தப் பெண்மணி நற்பழக்க வொழுக்கமுடைய மகா உத்தமியாவர்.

## The Late Mr Sivagurunathar, Broker, Colombo.

ஸ்ரீமான் சிவகுருநாதர்:— ஏறக்குறைய முப்பது வருடங்களுக்குமுன் "புரூடன்பேர்க்" கமபனிக்குப் புரோக்கராயிருந்து உலகில் நற்கியாதியுண்டாகப்பெற்ற ஒரு பெரும்மனுஷன். இவர் கெங்கா குலரத்தின முதலியார் மநியாபரண முதலியார் கனகசபை முதலியார் காரான உடையார் சின்னத்தம்பியின் புத்திரராவர் இவருடைய புத்திரரே ஸ்ரீமான் புரோக்கர் தியாகராசா. இவருடைய தமக்கை ஸ்ரீமதி சின்னச்சிப்பிள்ளை. இந்தப்பெண்ணை எமது நண்பர் ஸ்ரீமான் நமசிவாயம் விவாகஞ்செய்து புத்திரசந்தானங்களைப்பெற்றுச் சிவலோகஞ் சென்றனர்.

## W. D. N. Selvadurai Esq , Proctor & Notary.

ஸ்ரீமான் பிறக்டர் செல்வத்துரை:— இவர் உலகப் பிரசித்திபெற்ற ஸ்ரீமான் நெவின்ஸ் செல்வத்துரைப்பிள்ளையுடைய புத்திரருளொருவராவர். இவருடைய பாட்டனார் பெயர் சிதம் பரப்பிள்ளை இவரை வில்லியம் நெவின்ஸ் என்றும் அழைப்பார்கள். இவர் கணித சாஸ்திரத்திலும் ஆங்கிலம் தமிழ் என்னும் இரு பாஷைகளிலும் மகா தீரன். வட்டுக்கோட்டை செமினரியில் ஆசிரியராயிருந்து பல மாணவருக்குக் கல்வி கற்பித்தவர். அதன் பின்னர் வெஸ்லியன் சென்றல் ஸ்கூலில் ஹெட் மாஸ்றராகவு மிருந்தவர். அக்காலத்தில் இவர் ஆங்கிலந் தமிழ் என்னு மிரு பாஷைகளையுங் கலந்த அகராதி யொன்றையும இயற்றியுள்ளார். இவருடைய சிரேஷ்டபுத்திரரே சாமியூல் நெவின்ஸ், இவர் சென் னப்பட்டணத்தில் ஹைக்கோட் வக்கீலாகவும், சர்வகலாசாலைப் பரீக்ஷகராகவுமிருந்து பெரும் கியாதிபெறறு விளங்கினார். இவர் வன்னிக்டன் சந்தியாகுப் பிள்ளையுவடைய இரண்டாவது புத்திரி ரூசன் என்னும் மாதை விவாகஞ்செய்தவர். இப்பேர்பபட்ட கல்விமான்களுடைய சந்ததியிலேயுதித்த ஸ்ரீமான் செல்வத்துரை ரிறினிற்றிக் கல்லூரியிலும் சட்டக் கல்லூரியிலும் கல்வி கற்றுத் தம் பிதாவைப்போல் யாவராலும் சன்மானிக்கப்பெற்றுத் தற் போது பிரபல நியாயதுரந்தரராகவும் பிரசித்த நொத்தாரிசாகவும் விளங்குகின்றனர். இவர் மிக்கநேர்மையும் சாந்தகுணமும் பெருந் தன்மையுமுடையவர். இவர் உலகப்பிரசித்திபெற்ற உத்தமராய் விளங்கும் ஸ்ரீமான் டாக்டர் இரத்தினமவர்களுடைய சிரேஷ்ட புத்திரி ஸ்ரீமதி Nesamani Padmavati, என்னும் பெயரையு டைய குணவதியை வெகு விமரிசையுடன் கைப்பிடித்தவர்.

## SANGEETHA SAMAJ.

இலங்கையில் சங்கீத வித்தையை அபி விருத்தியாக்கும் பொருட்டாகச் சுமார் ஒன்பது வருடங்களுக்கு முன் "சங்கீத சமாஜ்" என்னும் நாமத்துடன் பல கனவான்களுடைய பேருத வியைக்கொண்டு ஸ்தாபிக்கப்பெற்றது. இதற்குப் பிரதான ஆசிரி யர் பண்டிதர் பிரமஸ்ரீ இரத்தினசாமி ஐயர்.

## Sri Namasivayam Esq., Head Shroff,

Hong Kong & Shanghai Bank

Son of the late Mr Namasivayam J.P the Greatest philanthropist

திருவாளர் ஸ்ரீ நமசிவாயம்:— இவர் காலஞ்சென்ற ஸ்ரீமான் சிறுப்பர் நமசிவாயமவர்களின் ஏகபுத்திரராவர். தமிழ சா வமிசத்துத்தோன்றிய மனப்புலிசிங்க முதலியார், குணபால சிங்க முதலியார், கதிர்காம சுப்பிரமணியம் என்போருடைய வழித்தோன்றலாயிருந்த ஸ்ரீமான் கதிர்வேற் சிறுப்பரவர்களுக்குப் பௌத்திரராவர். புண்ணிய விஷயங்களாலும், தரும விஷயங்களாலும் சிறப்புற்றுச் சிற்றரசனுக்கொப்பாகப் பெருங்கீர்த்தி பெற்று விளங்கிய ஸ்ரீமான் நமசிவாயமவர்களுக்கு புத்திரப்பேறில்லாமையால் மனக்கவலையுற்று ஈசனைவேண்டி இயற்றிய தவங்கள் செய்து கடவுள் அனுக்கிரகத்தால் மதியும், அருமையும், மாசிலா ஒழுக்கமும் வாய்ந்த நற்புதல்வரைப் பிள்ளையாகப் பெற்றனர். இவர் 1907-ம் ஆண்டு மார்ச் மாதம் 12-ம் திகதி பிறந்தவர். நற்பழக்க ஒழுக்கமுடையராய் வளர்ந்து ரோயல் கல்லூரியிற் கல்விகற்று தற்போது ஹொங்கோங் அண்ட் ஷாங்ஹே வங்கிக்குச் சிறப்பாயிருக்கின்றனர். இவர் அதிபாலிய வயது முதலாக எம்மிடத்தில் கல்விகற்றவர். இவர் சங்கீதஞானமுடையவர், அருமையாகப் பாடுந்தகைமையுடையவர். "வயாலின்" பிரோட் காஸ்ற்றிங் விஷயமாக முயற்சிசெய்தவர். தற்போது பிதாவுடைய தருமஸ்தாபனங்களைப் பாதுகாத்து வருகின்றனர். சுருக்கமாகச் சொல்லுகில் பிதாவைப்போல பெருந்தன்மையும், நற்பழக்கமும், சாந்தகுணமும், தருமசிந்தையும், பிறருக்கு உதவிசெய்தலாகிய பெருங்குணமுமுடைய யோக்கியராய் விளங்குகின்றனர். உதாரணமாக இப்புத்தகத்தை அச்சிடுதற்குக் கடுதாசி முதலானவற்றை வாங்கி உபகரித்து எம்மை உற்சாகப்படுத்திய உத்தமரும் இவரே! இவர் ஸ்ரீமான் சிவசங்கரந் சண்முகமவர்களுடைய புத்திரி ஸ்ரீமதி Sunthamanie, என்னும் நாமத்தையுடைய பெண்மணியை விவாகஞ்செய்தவர். இந்தப் பெண்மணி நற்பழக்கமும், நல்லொழுக்கமும், சாந்தகுணமும், பொறுமையும், விவேகமும், அதிஷ்டமுமுடைய பாக்கியசாலியாயுங் குணசாலியாயும், சீமாட்டியாயும் விளங்குகின்றனர். இதுபற்றியே "நிதியுங்கணவனும் நேர்படினுந் தத்தம விதியின் பயனேபயன்" என்றார் பெரியார்.

## Mr. K. C. Selladurai, Act Asst Registrar of Motor Cars

ஸ்ரீமான் செல்லத்துரை:— இவர் தெல்லிப்பளையைச் சார்ந்த வீமன்காமம் என்னுங் கிராமத்தை சென்மஸ்தானமாயுடையவர், அவ்வூரில் அந்தஸ்துடைய மேன்மக்களின் மரபிலே யுதித்த குருநாத உடையார் மகன கந்தையாபிள்ளையின் நற்புதல்வராவர். மாதாவுடைய வழியினால் மானிப்பாயிலுள்ள பிரபுக்களாயுந் சாமாதனா அவர்களுடைய நாமங்களைச் சொல்லுகில் சுவாமிநாத முதலியார், குமாரசிங்கமணியம், என்போருடைய வழித்தோன்றலாயுள்ள இராச காரியரின் கனிஷ்ட புத்திரியே ஸ்ரீமான் செல்லத்துரையுடைய தாயாா. இவர் 1891-ம் ஆண்டு பிறந்தவர். சென்றல் கல்லூரியில் கல்வி கற்று காணிப்பதிவு கந்தோரில் உத்தியோகமாயிருந்து பலராலும நனகுமதிக்கப் பெற்றவர். சண்டைக்காலத்தில் உத்தியோக உயர்வடைந்து சென்சர் ஆபீசில் கடமை பார்த்தவா. இப்பொழுது மோட்டார் பதிவு கந்தோா பிரதம லிகிதராகவும உப தலைவராகவுமிருக்கின்றனர். இவருடைய குணத்தின் பெருமையைச் சொல்லுகில் சாந்தம், பொறை, அடக்கம், பரோபகாரம பெரியோா சிநேகம முதலாகிய சிறந்த குணங்களையுடைய குணசாலியாய் விளங்குகின்றனர்.

## Mr. R, Subramaniam, 'Mahendra'' Barnes Place.

திருவாளர் சுப்பிரமணியம்:— இவர் சைவவேளாண் மரபிற்றோன்றிய கொழும்புத்துறை ஓவசியர் ஸ்ரீமான் இராமலிங்கமவர்களுடைய நற்புதல்வராவர். மாதாவுடைய வழியால் பிரபல நியாயதுரந்தரராயிருந்து பிரக்கியாதி பெற்று விளங்கிய ஸ்ரீமான் அத்வக்காத் திருநாவுக்கரசு அவர்களுக்கு மருகராவர். சுப்பிரமணியத்துடைய தாயார் பெயர் மகேஸ்வரியம்மாள். இவ்வம்மையாருடைய தகப்பனர் பெயர் கார்த்திகேசு. தாயாருடைய பெயர் பாறுவதிப்பிள்ளை. இவர்களுக்கு சென்மஸ்தானம் கொக்குவில்" பூவோடு கூடிய நாரும் மணம் பெறும்" என்றபடி இவர் நற்பழக்க வொழுக்கமுடையராய்க் கல்விகற்றுத் தறபோது உத்தியோகமாயிருக்கின்றனர். மறுபதிப்பில் விபரமாய்க் கூறுவேம்.

## C. D. A. Sherrard Esq, Appraiser H.M. Customs Colombo.

ஸ்ரீமான் அரியம் செறட்:—இவர் தன்னலை என்னுமிடத்திலோர் பிரபல குடும்பத்தைச்சார்ந்தவர். இவருடைய பிதாவுக்குப் பெயர் தாமோதரம் பிள்ளை. இவருக்குப் பூர்வீகம் உரும்பராய். இவர் கல்விகற்று கிறிஸ்துமார்க்கத்தைத் தழுவி "செறட்" என்னுஞ் சிறப்புப் பெயர்பெற்று பருத்தித்துறையில் ஓர் ஆங்கில வித்தியாசாலையை ஸ்தாபித்துப் பலமாணவருக்குக் கல்விகற்பித்து ஞானசாரியரென்ற முறையில் பிரக்கியாதி பெற்று விளங்கினர். பருத்தித்துறையில் பிரபலமுற்று விளங்கும் ஹாட்லிக் கொலீஜ் உண்டாதற்குக் காரணரும் இவரே. இவர் மரணபரியந்தம் இக் கலாசாலையில் ஆசிரியராயிருந்து, உலகில் நற்கியாதி பெற்றவர். அக்காலத்தில் இவர் தன்னலைப்பகுதியில் ஐஸ்வரியவானயிருந்த ஆறுமுகக்கணக்கரின் புத்திரியை விவாகஞ்செய்து சந்தானங்களையும் பெற்றனர் இந்த ஆறுமுகத்துடைய பௌத்திரரே ஸ்ரீமான் அரியம் செறட். இவர் பிதாவைப்போல் கல்விகற்று அரசாங்கத்தில் உத்தியோகம் பெற்றுப் பலதுறைமுகங்களில் சப்கலெக்டராயிருந்து பலராலும் நன்கு மதிக்கப் பெற்றவர் இவர் கிறிஸ்துமதாபிமானமும், தேவபக்தியும், சன்மார்க்கமும், சாந்தகுணமும், பிரபுத்தன்மையுமுடையவர் இவருடைய விசேட செயல்களை ஏறக்குறைய இருபது வருடங்களாக யாமறிவோம். இவர் பிற்றில்வாத்தியம் வாசிப்பதிலும் சங்கீதத்திலும் திறமையுள்ளவர். சிலகாலம் எம்மிடத்திலும், வித்துவான் சேஷையாநாயுடு அவர்களிடத்திலும் முறைப்படி கற்றவர். சுருக்கமாகச் சொல்லுகில் அரியத்தைப் போல் பரோபகாரசிந்தையுள்ள உத்தமரைத்தமிழ்மக்களுட் காண்பது மிக அருமை இவர் கரோல் விசுவநாதபிள்ளைக்குப் பௌத்திரியும் சுப்பிரமணியம் அவர்களுக்குப் புத்திரியுமாகிய **ஸ்ரீமதி இரத்தினம்** என்னும்பெண்மணியை விவாகஞ்செய்து Leelavati என்னும் நாமத்தையுடைய ஓர் பெண்மகவைப்பெற்றனர். இந்தப்பெண்மணி பிதாமாதாவைப்போல் நற்பழக்கமும், நல்லொழுக்கமும் கல்வித்தேர்ச்சியும், அழகும், குணமும், சங்கீதஞானமும், ருத்ரவீணை வாசிப்பதில் சாமர்த்தியமுமுடையராய் உயர்தரக்கல்வி கற்கின்றனர். இவருடைய மனைவி குணத்திலே சிறந்த குணசாலி, தேவபத்தியுள்ள மஹா உத்தமி.

## S. Somasundaram Esq , Village President, Manipay.

---

ஸ்ரீமான் சோமசுந்தரம்:--தற்போது கிராமக்கோட்டுத் தலைவராய் விளங்கும் இப்பெருந் தகையாளருடைய விருத்தாந் தத்தைப்பற்றி அறியும்பொழுது இவருடைய மூதாதைகள், அடிமை, குடிமை, ஐஸ்வரியம், கீர்த்தி முதலானவற்றோடு பெரும் பிரபுக்களாயும், மேன்மக்களாயும், உத்தியோகஸ்தர்களாயும் விளங் கினார்களென அறியக்கிடக்கின்றது. உதாரணமாக இவருடைய பாட்டனார் அக்காலத்தில் பிரசித்த நொத்தாரிசுவாயிருந்து உலகத் தில் நற்கீர்த்தி பெற்ற பெரும் பிரபுவாயிருந்தனர். இந்த நொத் தாரிசு சின்னத்தம்பியுடைய புத்திரரே ஸ்ரீமான் சரவணமுத்து. இவர் அக்காலத்தில் யாவராலும் கணிக்கப்பட்ட யோக்கியரா யிருந்தனர். இப்படி இருக்குங்காலத்தில் O. B. C. என்னும் பழைய "ஓறியன்டல் பாங் கோப்பரேஷனு"க்குத் தலைவராக நிய மனம்பெற்றுப் பலகாலஞ் சிறப்பாயிருந்தனர். இவ்விஷயம் ஏறக் குறைய ஐம்பது வருடங்களுக்கு முற்பட்டதாயிருக்கவேண்டும். இவருடைய புத்திரரே ஸ்ரீமான் சோமசுந்தரம், இவர் கல்வியறி வொழுக்கங்களில் மேம்பட்ட யோக்கியர். மிக்கநேர்மையும், சாந்த குணமும பிரபுத்தன்மையும பிறருக்குதவுதலாகிய பெருங்குண மும், தருமசிந்தையும உடையவர். ஸ்ரீமான் சோமசுந்தரம் மானிப்பாய் வாசிகளுள் மதிப்பாலும் உலக நடப்பாலும் முதன் மையாயுள்ளவர். இவருடைய புகழை அறியாதாரில்லை. இவர் "ஸ்கின்றயின்" கம்பனிக்குப் புறோக்கராயிருந்தவர். அத்துடன் லக்ஷக்கணக்காயுள்ள திரவியங்களைச் செலவிட்டு சொந்த வியாபா ரமுஞ்செய்தவர். ஸ்ரீமான்சோமசுந்தரம்கொழும்பிலேயுள்ளபெரு மக்களால் பெரிதும் சன்மானிக்கப்பெற்ற பெரும் பிரபுவுமாவர் இவ்வுத்தமர் ஸ்ரீமான் பேசன் உடையார் மகன் ராஜரத்தினமவர் களின் சிரேஷ்ட புத்திரி ஸ்ரீமதி ஞானம்மாளென்னும் மாது சிரோன்மணியை விவாகஞ்செய்து புத்திரசந்தானங்களைப் பெற்ற னர். இப்பெண்ணரசி குணத்திலும், அழகிலும், கற்பொழுக்கங் களிலும், குடும்பபாரத்தை நடாத்துதலிலும் மிக்க திறனுடையரா யிருந்து காலஞ்சென்றனர்.

## K.P.L.S.P.L Sockalingam Chettiar, Rice Merchant

ஸ்ரீமான் சொக்கலிங்கம் செட்டியார்:-இவர் இராமநாதபுரம்ஜில்லாவைச்சார்ந்த கண்டவராயன்பட்டிஎன்னும் கிராமத்தை ஜென்மஸ்தானமாகவுடையவர். தற்போது கு ப. மு. சு என்னும்விலாசத்தையுடைய கடைக்கு மானேஜராயும் பங்காளராயுமிருக்கின்றனர். இவர் சாந்தகுணமும பரோபகாரசிந்தையும பிரபுத்தன்மையும் பொருந்தியவர். இவருக்கு தெ. நா. சொ. என்னும் விலாசத்துடன் இலங்கை யாழ்ப்பாணம் முதலான இடங்களிலும சிங்கப்பூர் பினாங்கு முதலான பிறநாடுகளிலும் சொந்தக்கடைகள் இருக்கின்றனர் இவற்றில் வியாபாரமுறைகள் மிகப்பலிதமாய நடை பெற்று வருகின்றன. ஸ்ரீமான் சொக்கலிங்கம் செட்டியார் புத்தி சாதுரியமும் மிக்க அநுபவமும் உடையாரானதால் வியாபார முறைகளை நன்குநடாத்தி ஊரவர்களாலும் உத்தியோகஸ்தர்களாலும், துரைமார்களாலும், பிரபுக்களாலும், சன்மானிக்கப்பட்டு வருகின்றனர். உதாரணமாக இவ்வூரில் அரிசிப்பஞ்சம் உண்டான காலத்தில் ஸ்ரீமான் செட்டியாரவர்கள் ஏழைமக்களாயுள்ள பலருக்குப் பெரும் ஒத்தாசைகள் செய்திருக்கின்றனர் அக்காலத்தில் அரிசிக்கன்ட்ரோலரும்அரசாங்கஉத்தியோகஸ்தர்களும் மேலதிகாரிகளும் இவர் சொல்லும் உபாய நெறிகளைக் கேட்டு இவருடைய ஆலோசனைப்படி நடக்கக்கூடிய சந்தர்ப்பம் ஏற்படலாயிற்று. அப்பொழுது ஸ்ரீமான் சொக்கலிங்கஞ் செட்டியார் இங்கேயுள்ள வியாபாரிமார்களுக்கும் மற்றையோர்களுக்கும் போதிய சகாயங்களை உண்டுபண்ணி வைத்தனர். இதனால் அதிகாரவர்க்கத்தினராலும் பிரபுக்களாலும் நல்மதிப்பு உண்டாகப் பெற்றனர். இனி தரும விஷயமாகச் சொல்லுகில் அவைகளை எழுதியடங்காது. "தண்ணீரும் வாருந்தருமமே சாரமாக' என்றபடி தாகத்துக்கு ஜலமின்றி வருந்திய ஜனங்களின் இடைத்தீர்க்கும் பொருட்டாக பதினையாயிரம் ரூபா வரையிற் செலவிட்டு நல்ல தண்ணீர் ஊற்றுள்ள ஓர் ஊரணியையும் உண்டாக்கி வைத்தனர். எல்லாவற்றுள்ளும் இதுவே சிறந்த புண்ணியமாகும். ஸ்ரீமான் சொக்கலிங்கஞ் செட்டியார் ஆதிக்காட்டுத் தெக்கூர் என்னுங்கிராமத்தில் ஓர் பிரபுவினுடைய புத்திரியை விவாகஞ் செய்து சேது என்னுமோர் ஆண்மகவையும் ராமாயி என்னுமோர் பெண்மகவையும் பெற்றனர்.

## Dr. R. Somasundram. L. M. S. Colombo.

ஸ்ரீமான் டாக்டர் சோமசுந்தரம்:—இவர் மல்லாகத்திலேயுள்ள மேன்மக்களின் மரபிற்றோன்றியவர் இவர் 1902-ம் ஆண்டு ஆகஸ்ற் மாதம் பிறந்தவர். இவருடைய ஞாதிகளுட் பலர் ஆங்காங்கு பெரும உத்தியோகஸ்தர்களாயிருக்கின்றனர். இவர் சென் ஜோசெப் கல்லூரியில் கற்றுக்கேம்பிறிஜ் பரீக்ஷைகளிற் தேர்ந்தபின் மெடிக்கல் கல்லூரியில் உயர்தரக்கல்வி கற்று, தற்போது பிரபல டாக்டராயிருக்கின்றனர் இவர் சாந்தகுணமும், சாமார்த்தியமும் விவேக புத்தியுமுடையவர். இவருடைய தகப்பனார் பெயர் ஸ்ரீமான் ஏ. இராமசாமிபிள்ளை. இவர் தற்போது தபாற் கந்தோரில் போஸ்ற் மாஸ்ற்றராயிருக்கின்றனர். யாமொருமுறை இவரைச் சந்தித்துளோம். இவர் சமயாசாரமுடைய ஓர் சிறந்த யோக்கியர். இவரை பற்றி மற்றோர் சரித்திரத்தில் கூறுவோம்.

## Peri Sundaram, M. A. L. L. B. (Cantab) Bar-at-law

ஸ்ரீமான் பாரிஸ்டர் சுந்தரம்:—இவர் பாத கண்டத்திலே தமிழ்வழங்கும் நிலமாகிய தென்னாட்டை சார்ந்த திருவாளர் ஏ பெரியண்ணனவர்களுடைய அருந்தவப் புதல்வராவர். இவர் 1890-ம் ஆண்டு ஆடிமாதம் 23-ம் திகதி ஜெனனமானவர். கண்டியிலுள்ள திறினிற்றிக் கல்லூரியிலும் செந்தோமஸ் கல்லூரியிலும் கல்வி கற்றவர். அதன் பின்னர் இங்கிலாந்து சென்று கேம்பிறிஜ்ஜிலுள்ள எம்மானியல் காலீஜ்சில் உயர்தரக்கல்வி கற்று நியாயப் பிரமாணங்களில் மிக்க வல்லுனராய், பெறுதற்கரிய பெரும் பட்டங்களைப்பெற்றுத் தற்போது இலங்கையில் பிரபல நியாயதுரந்தரராகவும், பலராலும் நன்கு மதிக்கப்பெற்ற பேரறிவாளராயும் பிரபலமுற்று விளங்குகின்றனர். இவருடைய திறமையையும் சாமர்த்தியத்தையும் பற்றிச்சொல்லுகில், வாக்குச் சாதுர்யமும் பேச்சுத்திறமையும், புத்திவிவேகமும், ஆழ்ந்த அறிவும், அரசியல் ஞானமும், தேசாபிமானமும், பொதுஜனசேவையும், பரோபகார சிந்தையும், பெருந்தன்மையுமுடையவர் இவருடைய பெருமையைக்குறித்துக் கனவான்கள் பலரும் எமக்கு வியந்து கூறியதால்

யாமும் நன்கு மதித்து இவருடைய புகழை எழுதலானோம். இவர் நம் யாழ்ப்பாணத்துப் பெருமக்களோடும் இந்தியர்களோடும் மற்றும் ஏனையர்களோடும் பெரும் பான்மையாகப்பழகியவர். ஸ்ரீமான் சுந்தரம் இலங்கைத் தொழிலாளர் விஷயமாகவும் ஏழை மக்களாகிய இந்தியர் விஷயமாகவும் தோட்டக்காட்டுக் கூலிச்சனங்கள் விஷயமாகவும் அரசாங்கத்தாரோடு வாதாடி உலகுக்காகப் பெரிதும் உழைத்திருக்கின்றனர். இவர் ஐரோப்பாவில் இருக்கும் காலத்திலே, கேம்பிறிஜ யூனியன், கேம்பிறிஜ இந்தியன் மஜ்லிஸ், கேம்பிறிஜ் சிலோன் சொசையிறறி, முதலான வற்றில் அக்கிராசனம் வகித்து அங்குள்ளோரால் அங்கீகரிக்கப்பட்டவர். சிலகாலம் இலஙகை இந்திய சங்கத்துத் தலைவராயுமிருந்தவர். இலங்கைச் சட்டசபையில் இந்தியர்களுக்குப் பிரதிநிதித்தானம் வகிக்க இடந்தரல் வேண்டுமென்ற நியதியை உண்டு பண்ணிப் பெரும் கிளர்ச்சி செய்தவரும் இவரே. ஸ்ரீமான் சுந்தரம் 1916-ம் ஆண்டு முதலாக இலங்கையில் பிரபல பாரிஸ்டராய் வந்து தேசத்தொண்டு புரிந்து வருகின்றனர். இத்தன்மையுடைய ஸ்ரீமான் சுந்தரம், பிரபல வாத்தகராயும் பாரிய தனவந்தராயுமிருந்த மின்றறர் இராமசையாவுடைய புத்திரி ஸ்ரீமதி Selva Natchiar என்னும் பெயரையுடைய பெண்மணியை விவாகஞ் செய்து ஓர் மகவைப்பெற்றனர் இந்தப்பெண்மணி ஆங்கிலம், தமிழ் சங்கீதம் என்பவற்றிலும் தனத்திலும் சிறந்த உத்தமியாவர்

## R. C. K Sabhanathan Esq , H M Customs, Colombo

ஸ்ரீமான் சபாநாதன்:—இவர் யாழ்ப்பாணத்து நல்லூரில் உயர்குலத்துத்தோன்றிய சைவ வேளாண்செட்டி மரபில் உதித்த ஸ்ரீமான் சி. ற கைலாசபிள்ளை முதலியாரவர்களின் ஏகபுத்திரராவர். ஸ்ரீமான் முதலியார் வடமொழி தென்மொழி இரண்டிலும் வல்லுனராயிருந்து உலகில் பெருங் கீர்த்திபெற்ற புலவராய் விளங்கினர். எமது ஞானசிரியராயிருந்த இப்பெருந் தகையாளரின் பெருமையை என்னென்று சொல்வோம்! இப்போப்பட்ட வித்வசிரோன்மணியின் மைந்தராகிய சபாநாதன், நற்பழக்கவொழுக்கமுடையராய்க் கல்விகற்றுத்தற்போது கஸ்ற்றம் ஆபீசில் உத்தியோகமாயிருக்கின்றனர் இவர் பிதாவைப்போல் சன்மார்க்கமுடையவர். மறுசரித்திரத்தில் விரிவாய்க் கூறுவோம்.

## W. M. Sellayah Esq. Law Student.

திருவாளர் வால்ற்றர் மகேசா செல்லையா:-இவரைப் பற்றிச் சொல்லுகில், அரசாட்சியாரின் அச்சுக்கந்தோருக்குத் தலைவராயிருக்கும் ஸ்ரீமான் செல்லையாவுடைய சிரேஷ்ட புத்திரராவர். இவருடைய பாட்டனார் பெயர் ஸ்ரீமான் இளையதம்பி, இவருக்குப் பூர்வீகம் கொக்குவில். இவர் கோப்பாயில் போஸ்ற்மாஸ்ற்றராயிருந்து காலஞ்சென்றனர். இவருடைய முப் பாட்டனார் பெயர் முருகேசு. இவர் அக்காலத்தில் மலையாள வர்த்தகராயும், செல்வாக்குடையவராயு மிருந்தவர். அன்றியும் இந்த மகேசாவுக்கு, இலங்கைச் சைவபரிபாலன சபை உப அக்கிராசனராயிருந்த ஸ்ரீமான் பிறக்டர் நாராயணசாமியவர்களும், முற்காலத்துப் பட்டாள சேவையிலிருந்து இராச பட்டயங்களைப்பெற்ற ஸ்ரீமான் சுபேதார் வைத்திலிங்கமவர்களும் முறையே பாட்டன்மாராவர். திருவாளர் மகேசா பிதாமாதாவைப்போல் நற்பழக்க வொழுக்கமும், நல்லறிவுமுடைய பிள்ளையாய விளங்குகின்றனர். இவர் வெஸ்லிக்கல்லூரியிற் கல்விகற்று தற்போது நியாயதுரந்தரமாணவராயிருக்கின்றனர் இன்னும் ஒரு வருடத்தில் பிரபல நியாயதுரந்தரராவார் இவர் லோ கொலீஜ் ஹௌனர் ஒப் கொமன்சில் பிறைசு சரிபதரிசியாயும், அதே கொலீஜ்ஜில் புற்போல் கிளப்புக்கு கப்றறனுயு மிருக்கின்றனர்

## Kasi Vasi Senthinatha Aiyer Avl.

மஹாவித்வ சிரோன்மணியாய் விளங்கிய பிரமஸ்ரீ சேந்திநாதையர் அவர்களுக்குப் பூர்வீகம் புன்னாலைக்கட்டுவன். இவர் ஆயுள் பரியந்தம் இந்தியாவிலேயிருந்தவர், வடமொழி தென்மொழி, ஆங்கிலம் என்பவற்றில் மஹா நிபுணர், இவருடைய பெருமையை எழுதியடங்காது இவர் இயற்றிய அரும்பெரும் நூல்களோ அனந்தம், ஆறுமுகநாவலரவர்களைப்போல் உலகெங்கும் பிரக்கியாதிபெற்று விளங்கினர் இவருடைய சகோதரரே பிரமஸ்ரீ சிவசம்புநாதையர், இவரும் தமயனைப்போல ஆகம சாஸ்திரங்களில் அதிக விற்பத்தியுடையராய்த் தற்போது பலவாங்குடியில் வசிக்கின்றனர்.

## Sinnatamby Elisha Rockwood, Sub Collector.

ஏறக்குறைய 86 வருடங்களுக்குமுன் காங்கேசன் துறையில் சப்கலெக்டராயிருந்த எலிஷா றொக்வூட் என்பவருக்குச் சென்மஸ்தானம் அளவெட்டி. இவருடைய இயற்கைப் பெயர் சின்னத்தம்பி. இவர் அக்காலத்தில் வட்டுக்கோட்டைச் செமினெரியில் ஆசிரியராயிருந்த "மாட்டின்" என்பவரிடம் கல்விகற்றுக் கணிதப் பகுதியில் அதிக திறமையுடையராய விளங்கினர். இவருக்குப் புத்திரர் நால்வர். இவர்களுள் பிரபல டாக்டராயிருந்து காலஞ்சென்ற வில்லியம் கேப்பிரியல் றொக்வூட் எனபவர் இரண்டாவது புத்திரராவர். இவருடைய சந்ததியாருட் சிலர் இப்பவும் கிறீஸ்து மதாபிமானிகளாயிருக்கின்றனர். இவர்கள் நற்குண நற்செய்கையுடைய யோக்கியர்களாய விளங்குகின்றனர்.

## C. Sri-Kanta Esq, Doctor of Literature (Litt D) M R A.S

ஸ்ரீமான் டாக்டர் ஸ்ரீகாந்தா :— இவர் எத்திசையும் பிரக்கியாதி பெற்று விளங்கிய ஸ்ரீமான் பீ. குமாரசுவாமியவர்களுடைய சீரேஷ்ட புத்திரராவர். இவர் 1872-ம் ஆண்டு பிறந்தவர். சிலகாலம் செந்தோமஸ்க்கல்லூரியிலும் பலகாலம் கேம்பிறிஜ் கிறைஸ்ற் கொலீச்சிலும், லண்டனிலும் கல்வி கற்விகற்று "வித்வ சிரோன்மணி" என்னுங் கருத்தமைந்த ஓர் பட்டத்தைப்பெற்று சிலகாலம் மொர்கின்ரையில் வங்கிக்குப் பிரதம ஷ்ருப்பாயிருந்து இளைப்பாறியவர் அறிவிருத்திக்கேற்ற ஔவையாரின் அருள்பெரும் நூல்கள் பலவற்றை இயற்றியுள்ளார். இவருடைய அறிவின் திறத்தை இப்புஸ்தகங்கள் மூலமாய் அறியக்கிடக்கின்றது. இவர் ஸ்ரீயான் தம்பையா முதலியார் மகன் சுப்பிரமணியரவர்களுடைய புத்திரியை விவாகஞ் செய்து **Ponuambalam, Srinivasan, Visalakshi, Annapurani,** என்னும் பெயரையுடைய பிள்ளைகளைப் பெற்றனர். மறு சரித்திரத்தில் விபரமாய்க்கூறுவேம்.



THE HON MR. H A P. SANDRASAGARA K C.

## The Hon. Mr. H. A. P. Sandrasagra, K.C. M. L C.

Who acted as Supreme Court Judge

கௌரவ ஸ்ரீமான் சந்திரசேகரா:— இவர் மைனர் ரோட் சுப்பிறீம்கோட்டின் டெனுவிருந்த சந்திரசேகராவின் புத்திரரும் இராச வாசல் முதலியாராயிருந்த செவலியார் சந்திரசேகரா சவரிமுத்து அவர்களுக்குப் பௌத்திரருமாவர். இவர்களெல்லோரும் நற்குடியிலே நல்ல கோத்திரத்திலேயுதித்த பெருங்கனவான்களாவார்கள். ஸ்ரீமான் சந்திரசேகரா 1873-ம் ஆண்டு ஜூன் மாதம் 12-ம் திகதி பிறந்தவர். சென் பற்றிக் கல்லூரியிலும், சட்டக் கல்லூரியிலும் கல்விகற்று 1899-ம் ஆண்டுமுதல் பிரபல நியாயதுரந்தரராய வெளி வந்து, அளவுகணக்கற்ற அரும்பெரும வழக்குக்களை நடாத்திப் பெரும புகழையும் கீர்த்தியையும் நிலைநாட்டி, 1929-ம ஆண்டு சுப்பிறியங்கோட்டில் நீதவானைகி நிதாசனம்வகித்துத் தற்போது சட்ட சபை அங்கத்தினராய் இருக்கின்றனர். ஸ்ரீமான் சந்திரசேகரா வுடைய விவேகத்தையும், புத்திசாதுரியத்தையும், வாக்குவல்லபத்தையும் வாணித்துச்சொல்ல முடியாது. தமிழ் மங்கையர்ன் சேர் இராமநாதனுக்குச் சமத்துவமாயுள்ளவர் இவரே. இவர் இன்ரப் பிறிற்றர் முதலியாராயிருந்த சைமொன் செ நாயின் அவர்களுடைய புத்திரி Sumathi Josephine என்னும் பெண்ணரசியை விவாகஞ்செய்து Wilfred என்னுமோர் புத்திரனையும், Lennie என்னு மோர் புத்திரியையும் பெற்றனர். இக்குபிள்ளைகள் எம்முடைய மாணக்கராவார்கள், இவர்களைபபோல் விவேகமுள்ள குணசாலி களைக் காண்பதரிது. வில்பிறட் இங்கிலாந்திலே கற்கின்றனர்.

## Suppaiyer, Chellappa Aiyer, The Famous Flutist.

<>

பிரமஸ்ரீ செல்லப்பா ஐயர்:—இவர் காலஞ்சென்ற வித்துவான் சுப்பையரவர்களின் புத்திரராவர் இவர் வேதாத்தியனத்திலும், சாஸ்திரபாடங்களிலும், சங்கீதத்திலும், திறமையுள்ளவர். "கல்யாணமால்" என்னுங்கலாசாலையில் கல்விகற்றவர். பில்லாங்குழல் வாசிப்பதில் பிரக்கியாதி பெற்றவர். "சஞ்சீவிராவ்" நாகராஜராவ் என்பவர்களுடைய சிஷ்யராவர். இவர் காத்திராவண்ணம் 1919-ம் ஆண்டு இந்தியாவிற் காலஞ்சென்றனர். இவருடைய சகோதரரோ பிரமஸ்ரீ இரத்தினசாமி ஐயர்.

## K. Swaminatha Pillai Esq, Broker, Colombo.

ஸ்ரீமான் புரோக்கர் சுவாமிநாதபிள்ளை :— இவர் மானிப்பாயில் பிரக்கியாதி பெற்று விளங்கிய ஓர் பெருங் குடும்பதைச்சார்ந்தவர். இவருடைய மூதாதைகள் உத்தியோகம், கீர்த்தி, செல்வம், என்பவற்றில் மேம்பாடுடைய மேன்மக்களாய் விளங்கினார்கள். உதாரணமாக சுவாமிநாதபிள்ளைஉடையார் கனகசபை உடையார் என்போருடைய பெருமையை அறியாதாரில்லை. புத்திரராகிய ஸ்ரீமான் சுவாமிநாதபிள்ளை மூதாதைகளைப்போல் சாந்த குணமும், பரோபகார சிந்தையும், உடைய யோக்கியராய் தற்போது புரோக்கர் உத்தியோகத்தி லிருக்கின்றனர். இவர் வித்தியாதரிசியாயிருந்த ஸ்ரீமான் செல்லப்பாவுடைய புத்திரி ஸ்ரீமதி தங்கம் என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து Mahadeva, Puvaneswari, Kanagasabai, Ratnagopal, என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப்பெற்றனர்.

## S Sanmogam Esq, Merchant & Landed Proprietor. "Skandhagiri" Kynsey Road.

ஸ்ரீமான் சி. சண்முகம்:— இவர் மானிப்பாயிலுள்ள பெரும பிரபுக்களின் சந்ததியிலே தோன்றியவா. இவருடைய பிதாவின் பெயர் சிவசங்கரம், இவர் உயர்குலத்துத் தோன்றிய உத்தமராயும், புண்ணியசீலராயும் விளங்கினர். இவருடைய மூதாதைகளின் வரலாற்றைச் சொல்லுமில், உலகநாதர், மாதர், கிறிர் காமக்கணக்கர், தில்லையம்பலம், சின்னத்தம்பி, சண்முகம் என்போருடைய வழித்தோன்றலாயுதித்தனா. இவர்கள் பிறவியிலே செல்வர்களாயும், மேன் மக்களாயும், உத்தியோகஸ்தர்களாயும் விளங்கினார்கள். இந்தச் சந்ததியிலுள்ளவர்களே இன்றுவரையும் பிரபலஸ்தர்களாய் விளங்குகின்றார்கள். ஸ்ரீமான் சண்முகம் 1878-ம் ஆண்டு பிறந்தவர். சொந்தோமஸ் கல்லூரியிற் கல்விகற்றவர். தற்போது பிரபல வர்த்தகராயும் "சண்முகம் அன் கோ.," என்னும் கம்பனிக்கு அதிபராயும், பாரிய தனவந்தராயும் விளங்குகின்றனர். தமிழ்யூனியன் சங்கத்தை ஸ்தாபித்தவரும் இவரே.

இவர் எக்சைஸ் அட்வைசறிபோட் மெம்பருமாவர். ஸ்ரீமான் சண்முகம் சாந்தகுணமும், பரோபகாரசிந்தையும், சமயாசாரமும், பெருந்தன்மையும், பிறருக்கு உதவிசெய்தலாகிய பெருங்குணமு முடைய புனிதராயும், மகாயோக்கியராயும், பெரும் பிரபுவாயும் விளங்குகின்றனர். இவர் எப்பவும் நல்மனதுடையவர், இவருடைய மனம்போல் இவரின் பிள்ளைகுட்டிகள் சிறப்பாயிருக்கின்றனர், இயல்பாக ஏழைகளுக்கு இரங்கும் இயல்புடையவர். இவர் நன்னித்தம்பி முதலியார், தம்பையா முதலியார் என்னும் பெரும் மக்களைச்சார்ந்த ஸ்ரீமதி சாந்தம்மா ளென்னும் மாதை விவாகஞ் செய்து, Kalvinayaki, Nagendra, Sellachi, Sunthamanie Sivasangaram, என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப்பெற்றனர். ஸ்ரீமதி சாந்தம்மா குலமகளானதால், நற்குண நற்செய்கைகளையுடைய யோக்கியவதியாய் விளங்குகின்றனர். இவர்களுடைய பிள்ளைகளும் மகா யோக்கியர்களாவார்கள்.

## T. Seevaratnam Esq Retired, Chief Appraiser, H. M. Customs

ஸ்ரீமன் சீவரத்தினம்:—இவருடைய ஜென்மஸ்தானம் திரிகோணமலை, 1866-ம் ஆண்டு ஜூன் மாதம் 2-ம் திகதி செனனமானவர். இவர் வெஸ்லியன் மிஷனிலும் ஸ்ரேயற் கல்லூரியிலும் கல்வி கற்று 1889-ம் ஆண்டு உத்தியோகத்தில் அமர்ந்து ஏறக்குறைய முப்பத்தைந்து வருடகாலம கஸ்றம் ஆபீசில் உத்தியோகஸ்தராயிருந்து பெரும் பதவிகளைக்கையாண்டு யாவராலும் சன்மானிக்கப்பெற்று 1924-ம் ஆண்டில் இளைப்பாறி உபகார வேதனம் பெற்றுத்திரிகோணமலையில் வசிக்கின்றனர். இவர் சமயாசாரமும், சாந்தகுணமும், மிக்கநேர்மையுமுடைய யோக்கியராவர். இவருடைய மூதாதைகளைப்பற்றிச்சொல்லுகில்வம்சபாரம் பரியத்திற்றோன்றிய மேன்மக்களாயுஞ் சாதிமான்களாயும் விளங்கினோர்களென அறியலானோம். வேதவன முதலியார் கதிர்காமத்தம்பி என்பவர், அக்காலத்திலே அதிக செல்வாக்கும் நாட்டாண்மையும் உடையராயிருந்தனர் இவருடைய புத்திரர் தாமோதரம்பிள்ளை முதலியார். இவரும் உத்தியோகத்திலிருந்தவர். இவருடைய புத்திரரே ஸ்ரீமான் சீவரத்தினம். இவர் 1897-ம் ஆண்டு, சுவாமிநாத வன்னியனார் கதிரவேற்பிள்ளையுடைய புத்திரி ஸ்ரீமதி

தையல்நாயகி யென்னும்மாதை விவாகஞ்செய்து அருணசலமென்னுமோர் புத்திரரையும் கமலாம்பிகை என்னுமோர் புத்திரியையும் பெற்றனர் இந்தப்பிள்ளைகள் நற்பழக்க வொழுக்கமும், கல்வித்தேர்ச்சியும்,நல்லறிவுமுடைய நற்பிள்ளைகளாய் விளங்குகின்றனர். எமது மாணுக்கிகளுளொருவராகிய ஸ்ரீமதி கமலாம்பிகையம்மாளின் பெருமையைச்சொல்லுகில் இந்தப் பெண்மணியைப்போல் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த குணவதியைக்காண்பது மிக அருமை ஸ்ரீமதி கமலாம்பிகை ஆங்கிலம், தமிழ், சங்கீதம் என்பவற்றிலும்,பியானே,பிற்றில், வீணை, முதலான, வற்றிலும்,சித்திரம வரைதலிலும் மிக திறமையுடையர்.

## Mr. Seevaratnam Arunachalam F L S

திருவாளர் அருணசலம்:—இவர் திரிகோணமலை வாசராகிய ஸ்ரீமான் சீவரத்தினமவர்களுடைய அருந்தவப்புதல்வராவர். இவர் 1900-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 13-ம் திகதி பிறந்தவர் சென் ஜோசெப் கல்லூரிற் கல்வி கற்றுச் சிலகாலம் சர்வ கலாசாலையில் "டிமொன்ஸ் றேற்றராயிருந்தவர்." தற்போது திரிகோணமலை சென் ஜோசெப் கல்லூரியில் "சயன்ஸ் லெக்ஷறர்" ராயிருக்கின்றனர் இவர் பிரபல வியாபாரிகாரராயிருந்த,சுப்பிரமணியமவர்களின புத்திரி சௌந்தரநாயகி யென்னும் பெண்மணியை விவாகஞ் செய்து சுசனருளால் ஓர் ஆண்மகவைப்பெற்றனர். அடுத்த பதிப்பில் இவரைக்குறித்து விபரமாய்க்கூறுவோம்.

## Mr. Sathasivam Kulavirasingam.

இவ்விளைஞர் ஸ்ரீமான் சதாசிவமவர்களுடைய சிரேஷ்ட புத்திரராவர். இவர் விரோதிகிருது வருஷம் வைகாசி மாதம் பிறந்தவர். றோயல் கல்லூரியில் கல்விகற்று கேம்பிறிஜ் பரீக்ஷைகளிற் சித்தியடைந்து உயர்தரக் கல்விகற்கின்றனர். இவர் பிதாமாதாவைப்போல் நற்பழக்க வொழுக்கமுடையவர்.

**The Hon Mr. M. M. Subramaniam,** Proctor, S. C.

கௌரவ ஸ்ரீமான் சுப்பிரமணியம்:—இவர் திரிகோணமலையை ஜென்மஸ்தானமாகவுடையவர். இவருடைய மூதாதைகளுக்குப் பூர்வீகம் கோப்பாய. தகப்பனார் பெயர் மயில்வாகன முதலியார். இவர்கள் வம்சபாரம்பரியத்திலேயுள்ள மேன்மக்களாயும், பரம்பரை உத்தியோகஸ்தர்களாயும், கீர்த்தி, செல்வம், செல்வாக்கு முதலானவற்றையுடைய பிரபுக்களாயும் விளங்கினார்கள். உதாரணமாக ஸ்ரீமான் பிறக்டர் சுப்பிரமணியம் திரிகோணமலைக்கு ஓர் சிற்றரசனைப்போல் இருப்பதைக் காண்கிறோம். இவர் சைவாசாரமும் சமய பக்தியுமுடையவர். திரிகோணமலையிலுள்ள சிவாலயங்களுக்கும் வித்தியாலயங்களுக்கும் தர்மகர்த்தாவாவர். தற்போது திரிகோணமலையாரின் சுயநலங்களைப் பாதுகாத்து வருகின்றனர். ஸ்ரீமான் சுப்பிரமணியம் சட்டசபை அங்கத்தினராயவதபின், உலக நன்மையைக் குறித்து எத்தனையோ அரும் பெரும் செயல்களைச் செய்து வருகின்றனர், அவைகளை யெழுதி யடங்காது. ஸ்ரீமான் சுப்பிரமணியம் இடையிடையே அயிட்டிங் பொலிஸ் நீதவானாகவுமிருந்து நிதாசனம் வகித்து வருகின்றனர்.

**J. N. Sandrasagara Esq**, B. A Advocate. Colombo.

ஸ்ரீமான் அத்வகாத் நடராஜா சந்திரசேகரா:—பிரபல நியாயதுரந்தராயிருந்து பிரக்கியாதிபெற்றுக் காலஞ்சென்ற இவ்வுத்தமர், கல்வியறிவொழுக்கங்களிலும், சைவாசாரங்களிலும் யோக்கியராய் விளங்கினார். இவர், எத்திசையும் பிரபலமுற்று விளங்கிய புரொக்டர் சங்கரப்பிள்ளையுடைய புத்திரி ஸ்ரீமதி முத்தாச்சி யென்னும் மாதை விவாகஞ்செய்து Thangamma, Saraswathi, Somasundram, Thaiyalnayaki என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப் பெற்றனர். இந்தப் பிள்ளைகள் நற்பழக்க வொழுக்கமும், சாந்தகுணமும் உடையவர்கள் சோமசுந்தரம் கேம்பிறிஜ பரீசைஷகளிற் சித்தியடைந்து உயர்தரக் கல்வி கற்கின்றனர். ஒருகாலத்தில் மிக்க விசேடமாய் விளங்குவார்.

## W. Sathasivam Esq, Proctor & Notary, Colombo.

ஸ்ரீமான் பிறக்டர் சதாசிவம்:—இவர், இந்நாட்டில் பெருங்கீர்த்திபெற்று விளங்கிய மயிலுப்பிள்ளைச் சிறுப்பர் மகன் வயித்திலிங்கச் சிறுப்பருடைய ஜேஷ்ட புத்திரராவர் இவருடைய மூதாதைகள் பிறவிச் செல்வர்களாயும், ராட்டசபை அங்கத்தவர்களாயும் விளங்கினார்கள். மாதாவுடைய வழியால் சிவபூஜா துரந்தரர்களாயும், சகலாகம பண்டிதர்களாயும், வித்வ சிரோன்மணிகளாயும் விளங்கினார்கள். கௌரவ எதிர்மன்னசிங்க முதலியார், பொன்னம்பல முதலியார், சிதம்பரப்பிள்ளை, முத்துக்குமாரு, சிவப்பிரகாச பண்டிதர் முதலானோரைச் சார்ந்தவர். இப்பேர்ப்பட்ட பெரும்பிரபுக்களைச் சார்ந்த ஸ்ரீமான் சதாசிவம் தமிழ் மக்களுள் பிரபல நியாயதுரந்தரராய பிரக்கியாதியுடன் விளங்குகின்றனர். இவர் சங்கீத சாஸ்திரங்களிலும், வீணைவாசிப்பதிலும் மகாதீரன். தியாகராஜஸ்வாமிகளின் கீர்த்தனங்களை மிகவருமையாக பாடுஞ் சக்தியுள்ளவர். பங்களூர், மைசூர், பரோடா, கறகுத்தா பம்பாய முதலான இடங்களுக்குச்சென்று யாவராலும் நன்கு மதிக்கப் பெற்றவர். இவர் நமசிவாய முதலியாருடைய மகன் பாரிஸ்டர் தியாகராஜாவின் புத்திரி ஸ்ரீமதி Puvaneswari என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து இரு பெண்குழந்தைகளைப் பெற்று வெள்ளவத்தையில் வசிக்கின்றனர்.

## Mr. C. Singhanayagam, H. M Naval Yard, Trincomalee

திருவாளர் சிங்கநாயகம்:— இவரைப்பற்றிச் சொல்லுகில் இவர் மானிப்பாயிலுள்ள பிரபுக்களின சந்ததியிற்றோன்றியவர். இவருடைய பிதாவாகிய ஸ்ரீமான் காராளசிங்கத்தை அறியாதாரில்லை. இவர் காலிப்பதிவுக் கந்தோருக்குத் தலைவராயிருந்து பிரக்கியாதிபெற்றுக் காலஞ்சென்றனர். தற்போது சிங்கநாயகம் திரிகோணமலையில் உத்தியோகமாயிருக்கின்றனர், இவருடைய மனைவி பெயர் ஸ்ரீமதி கமலாம்பிகையம்மாள். இத்தம்பதிகள் குணத்திலே சிறந்த குணசாலிகளாவர்.

## Dr. A. Suppiah, D. M. O. Chavakacheri.

ஸ்ரீமான் டாக்டர் சுப்பையா :— இவர் தெல்லிப்பழை யைச்சேர்ந்த பன்னாலையென்னும் கிராமத்தை ஜென்மஸ்தானமா யுடைய திருவாளர் அப்பாக்குட்டியவர்களின் அருந்தவப் புதல் வராவர். இவர் 1887-ம் ஆண்டு ஆவணி மாதம் 13-ம் திகதி பிறந் தவர், சென்னை முதலான இடங்களில் கல்விகற்று எல். எம். எஸ். முதலான பட்டங்களைப்பெற்றுப் பிரபல டாக்டராயக கொழும் பிலும், மந்திமமாகாணத்திலும், ஊர்காவற்றுறையிலும், மண்டபத் திலும், மற்றைய நாடுகளிலும கடமை பார்த்துப் பலராலும் சன் மானிக்கப்பெற்றுக் தற்போது சாவகச்சேரி ஆஸ்பத்திரிக்குத் தலைவராயிருக்கின்றனா. ஒருமுறை யாமும், எமது நண்பா முத லியார் முத்துகுமாருவும, சென்னைக்குச் சென்று வருமபொழுது இவரை மண்டபத்தில் சந்தித்துளேம. அப்பொழுது இவருடைய குண மகிமையை முதலியாரவர்கள் எமக்கு எடுத்துரைத்தனர். ஆகவே இவரை யாமும நன்குமதித்து எழுதலானோம். இவர் சாந் த குணமும், பரோபகார சிந்தையுமுடையவர். இனசனங்களுக்குப் பெருந் துணையாளா. இவர் பன்னாலையிலுள்ள திரு. நாராயண ருடைபுத்திரியை விவாகஞ்செயது இரு ஆண்களையும, இரு பெண் களையும பெற்றனர். மறுசரித்திரத்தில் விரிவாயெழுதுவோம்,

## M. K. Suppiah Pillai, Merchant, Malay Street.

ஸ்ரீமான் மு, க. சுப்பையாபிள்ளை;—இவர் காரம்பன் என்னுமிடத்திலே பெருவேளாண்மரபிற் றோன்றிய முத்துக் குமாரு கதிரவேலரின் புத்திரராவர். ஜய வருடம் தை மாதம் பிறந்தவர். இவருடைய ஜென்ம நக்ஷத்திரம் சதயம். இவர் சைவாசாரமும் சமயபக்தியும் சிவபுண்ணியங்களில் மிக்க சிரத்தை யுமுடையவர். உதாரணமாக ஊர்காவற்றுறையில் புதிதாக யேற் பட்டிருக்கும சிவாலயத்தில் சண்டேஸ்வரப் பிரதிஷ்டை செய் தவர். கொம்பனித்தெரு சுப்பிரமணியாலயத்தில் வருடந்தோ றும் நடேசர் அபிஷேகம, கந்தசஷ்டி யுற்சவம், முதலானவை களைச் செய்பவர். இவருடைய புத்திரர் பாலசிங்கம்.

## **M. Theagaraja Esq**, Shroff, Hong Kong Bank.

ஸ்ரீமான் தியாகராஜா:-இவருடைய முதாதைகளுக்குப் பூர்வீகம் ஆனைக்கோட்டை. பிதாவுடைய வழியால் முருகேசர் மகன் விசுவநாதனையும் மாதாவுடைய வழியால் சுப்பிரமணியர் மகன் கதிரவேற சிருப்பனையும் சார்ந்தவர். இவருடைய பிதாவுக்குப்பெயர் மதியாபரணம். மாதாவுக்குப்பெயர் முத்துப்பிள்ளை, ஸ்ரீமான் மதியாபரணம குணத்திலும் கொடையிலும் சிறந்தவர். இலங்கைப்புகையிலைப்பகுதியில் பிரதம சிருப்பாயிருந்து பலருக்கும உத்தாசைகள் செய்தவர். அக்காலத்தில் இலங்கைச் சைவபரிபாலன சபைக்குப் பிரசாரகராயிருந்த எம பிதாவிடத்திலே மிக்க அன்புவிசுவாசமுடையவராயிருந்து, ஏனையோருடன் சைவசித்தாந்த சாஸ்திரங்களை ஆராயச்சி செயதவர். தேவார திருவாசகங்களைப்பண்ணுடன் பாடுகின்றவர். இவருடைய புகழைக்குறித்து 36 வருடங்களுக்குமுன் வெளியிடப்பெற்ற அறிக்கைப்பத்திரத்தினுல் அறியக்கிடக்கின்றது. இப்போப்பட்ட ஒரு பெரும் பிரபுவுடைய புத்திரரே ஸ்ரீமான் தியாகராஜா. இவர் செந்தோமஸ் கல்லூரியிற் கல்விகற்றுப் பல வருடங்களாக கொங் கோங் வங்கியில் சிருப்பாயிருக்கின்றனர. தறபோது ஸ்ரீமான் தியாகராஜா தமிழ் மக்களுள் பாரிய தனவந்தராகவும பரோபகார சீலராகவும விளங்குகின்றனர். சில கனவான்களிடம ஓர் அறப உதவியை விரும்பிச் சென்ருல் "ஈயாரை யீயவொட்டான் இவனு மீயான்" என்றபடி தரும சிந்தையற்ற லோபிகளாயிருத்தலைக் காண்கின்ருேம். இவ்விஷய மிருப்ப, ஸ்ரீமான் தியாகராஜா பிதாவைப்போல் சாந்தகுணமும், சைவாசாரமும் தரும விஷயங்களில் மிக்க சிரத்தையுமுடையவராய விளங்குகின்றனர் ஸ்ரீமான் தியாகராஜா திருவாளா காசிப்பிள்ளையுடைய கனிஷ்ட புத்திரி ஸ்ரீமதி Kanmani என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து ஹவலக் டவுனில் வசிக்கின்றனர். இந்தப் பெண்மணி கல்வி, அறிவு, ஒழுக்கம், முதலானவற்றிலே சிறந்த குணசாலியாவர். மறு சரித்திரத்தில் விரிவாய்க் கூறுவேம்.

## C. Sittampalam Esq , B A. (Cantab) C C. S. Bar-at-Law
Police Magistrate, Matara



நீதிபதி ஸ்ரீமான் சிற்றம்பலம்:--இவருடைய வரலாற்றைச் சொல்லுகில் யாழ்ப்பாண நாட்டிலே உத்தியோகம், கீர்த்தி, செல்வம், பரோபகாரம், பிரபுத்துவம், சமயாசாரம் முதலானவற்றிற் சிறந்த பிரபுக்களின் சந்ததியிற்றோன்றிய ஸ்ரீமான் பிறக்டர் கதிரவேல் அவர்களுடைய புத்திரராவர். இவர் 1898-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 13-ம் திகதி சென்னமானவர். இவர் றோயல் கல்லூரியிற் கல்விகற்று, ஸ்கொலஷிப்மாணவராய் இங்கிலாந்து சென்று பெறுதற்கரிய சிவில் சேர்விஸ் எனனும் பரீக்ஷையிற் சித்தியடைந்து 1923-ம் ஆண்டு முதலாக இலங்கையின் பல பாகங்களிலும் நிதாசனம வகித்துவருகின்றனர். இவர் கல்வியிலும் கணித சாஸ்த்திரத்திலும் மகாதீரன், இவருடைய பெருமையையும், புகழையும் குறித்து மறுமுறை விரிவாய்க் கூறுவோம.

## K. Sathasivam Esq, Merchant, Wellawatta, Colombo

ஸ்ரீமான் கு. சதாசிவம்:—இவர் மானிப்பாயிலுள்ள பெருமக்களின் வம்சத்தைச்சார்ந்தவர். இவருடைய பிதாவின் பெயர், ஸ்ரீமான் குலவீரசிங்கம் இவர் ஏறக்குறைய இருபத்தைந்து வருடங்களுக்குமுன் இருந்தவர். இவர் இலங்கையிலுள்ள தமிழ் மக்களுள் சமயாபிமானமும் சாதியாசாரமுமுடைய யோக்கியராய் விளங்கினர். இவருடைய பெருமையை அறியாதாரில்லை. இலங்கைச் சைவபரிபாலன சபையை நன்கு நடாத்தி உலகில் நற்கீர்த்தி பெற்றுச் சிவலோகஞ் சென்றனர். இவருடைய முதாதையர்களின் வரலாற்றைச்சொல்லுகில், இணுவில் மாறுப்பிள்ளை சந்ததியிற்றோன்றிய சண்முகத்தார் ஆறுமுகம் அம்பலவாணரின் புத்திரராவர். ஸ்ரீமான் குலவீரசிங்கமவர்களின் சிரேஷ்ட புத்திரரே ஸ்ரீமான் சதாசிவம. இவர் சர்வதாரி வருடம் சென்னமானவர். இவருடைய சென்ம நக்ஷத்திரம் ரோகிணி. ஸ்ரீமான் சதாசிவம் சிறுபிராயமுதல் நற்பழக்கவொழுக்கமுடையராய் வளர்ந்து வெஸ்லிக்கல்லூரியிற் கல்வி கற்றுத்தற்

போது சீமை வர்த்தகராய் விளங்குகின்றனர். இவர் பிதாவைப் போல் சமயாசாரமும் சாந்த குணமும் பெருந்தன்மையும் மிக்க நேர்மையுமுடைய யோக்கியராவர். இவர் பிரபல டாக்டரா யிருந்த ஸ்ரீமான் "ஹெல்லக்" சரவணமுத்து அவர்களின் புத்திரி **ஸ்ரீமதி தங்கம்மா** என்னும் மாதுசிரோன்மணியை விவாகஞ் செய்து, Kulavirasingham, Indrani, Neelyathakshi, Wijayasundari, Nagesan, Maruthanayaki, Sahadevan, என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைபெற்றனர். இந்தப் பிள்ளைகளுடைய பெருமையைச்சொல்லுகில் பிதா, மாதா, குரு, உபாத்தியாயா, என்னும் பெரியோர்களிடத்தன்பும், நற்பழக்க வொழுக்கமும், சாந்தகுணமும், விவேகபுத்தியும் கல்வித்தேர்ச் சியும் நல்லறிவுமுடைய நற்பிள்ளைகளாவார்கள். எம்மிடம் கல்வி கற்கும் மாணுக்கர்களுள் இவர்களைபோல் சாதுரியமுள்ள பிள்ளைகளை யாம் கண்டதில்லை. இனி ஸ்ரீமதி தங்கம்மாளுடைய குணமகிமையைப்பற்றி யாம் சொல்லவேண்டுவதில்லை. இப்பெண் ணரசி நற்குடியிலே நல்ல கோத்திரத்திலே பிறந்த குலமகளான படியினுல் நற்குணமும் நற்செய்கையும் பரோபகாரசிந்தையும் பெருந் தன்மையுமுடைய குலஸ்திரீயாய் விளங்குகின்றனர். இப்பொழுது ஸ்ரீமான் சதாசிவமும், மனைவி தங்கம்மாளும், சிரேஷ்ட புத்திரி ஸ்ரீமதி இந்திராணியும் இங்கிலாந்துக்குச்சென் றிருக்கிறார்கள் 21st July, 1929

## Sinnappah Arasaratnam Esq, Broker,
Thomson Tetley & Co.

ஆனால் அரசரத்தினம்:—இவா மானிப்பாயிலுள்ள பெருமக்களைசசார்ந்தவர். இவருடைய மூதாதைகள் இலக்கண இலக்கியங்களிலும் கவிபாடுவதிலும் திறனுடைய புலவர்களாயிருந் தனர். அருணாசலம்பிள்ளை "ஆனால்" சதாசிவம்பிள்ளை மகன் சின்னப்பாபிள்ளையுடைய புத்திரராவர். இவர் 1905-ம ஆண்டு அக்டோபர் மாதம 19-ம திகதி பிறந்தவர். சென்ரல கல்லூரியில் கல்விகற்றுத் தற்போது "தொமசன் ரெற்லி" வீட்டுப்புரோக்கரா யிருக்கின்றனர். இவர் சங்கீதத்தில் மிகக பிரீதியும் பரோபகார சிந்தையுமுடையவர். இவர் டாக்டர் சுப்பிரமணியமவர்களின் புத்திரி ஸ்ரீமதி Pavalam Emily எனனும் மாதை விவாகஞ் செய்து Rosamalar, Dharmaraja, Kanagaratnam, என்னும் குழந்தைகளைப்பெற்றனர். மறு சரித்திரத்தில் கூறுவோம்.

## Dr. R. Saravanamuttu, M.B.C M (Madras)

M R C S, (Eng) L R C P (Lon)

ஸ்ரீமான் டாக்டர் சரவணமுத்து:—இவர், கதிர்காம சேகர முதலியார் வமசத்துத்தோன்றிய முத்தர் வேதாரணியர் சரவணமுத்துவுடைய ஜேஷ்ட புத்திரராவர். மாதாவுடைய வழியால் பிரக்கியாதி பெற்று விளங்கிய "ஆம்ஸ் ரோங்" முத்துக் குமாரியாரவர்களுக்குப பௌத்திரராவர். இங்ஙனம இருபகுதிகளாலும் பிரபலமுற்ற, பெரும பிரபுக்களின் சந்ததியிற்றோன்றியவர். இவருடைய பெருமையைச்சொல்லுகில் சாநதம பொறை, அடக்கம பரோபகாரம் பிரபுத்துவம, பெருந்தன்மை ஜீவகாருண்யம, முதலாகிய இன்னோரன்ன சிறந்த குணங்களையுடையவர். "குலத்தளவேயாகுங்குணம என்றபடி ஸ்ரீமான் சரவணமுத்து தம பிதாவிலும பன்மடங்கு விசேட குணங்களையும் செயல்களையுமுடைய யோக்கியராய விளங்குகின்றனர். இவர குலமகனை தால் எவர்களோடுங் கலந்து ஏகபோகமாய உறவாடி இனிய வார்த்தைகள் பேசும இயல்புடையராவர். இவர அரசியல் ஞானமும வாக்குவல்லபமுமுடையவர். சுருக்கமாகச்சொல்லுகில் ஸ்ரீமான சரவணமுத்துவுடைய அரும் பெருங்குணங்களையறியாதாரில்லை. இவர தேசத்தொண்டும பொதுஜன சேவையுஞ் செய்கின்றவர். சென்னை முதலாகிய இராசதானிகளிலும், இங்கிலாந்து முதலாகிய மேலைத்தேசங்களிலும் கலவிகற்றுப பெரும் பட்டங்களைப பெற்று, தற்போது மேட்டுத்தெருவில் ஓர் ஆசுப்பத்திரியை ஸ்தாபித்துப் பிரபல டாக்டராய் பிரக்கியாதியுடன் விளங்குகின்றனர். மற்ற சரித்திரத்தில் விபரமாய்க கூறுவோம்.

## Mr S. Somanathan, "Villula."

இவர் சற்குணசம்பன்னராயும் சிவபுண்ணிய சீலராயுமிருந்து காலஞ்சென்ற ஸ்ரீமான் சிவசிதம்பரம் அவர்களுக்கும், ஸ்ரீமதி மீனும்பாள் ஆச்சிக்கும் மிகவருமையாய்வந்துதித்த நற்புதல்வராவர். இவர் கேம்பிறிஜ் பரீக்ஷைகளிற் தேறியவர்.

## Mr. Samuel F. John Pulle,

Retired Chief Clerk, Loan Board.

மிஸ்றற்றர் சாமுவேல் பிறெட் ஜோன்பிள்ளை:— இவர் யாழ்ப்பாணத்திலே பிரபல முற்று விளங்கிய ஓர் பெரும் குடும்பத்தைச் சார்ந்தவர். இவருடைய ஞாதிகளுட் பலர் அரசாங்க உத்தியோகத்தில் அமர்ந்து பிரபலமுற்று விளங்கினோர்களென அறியக்கிடக்கின்றது. மிஸ்றற்றர் ஜோன்பிள்ளை சென்பற்றிக் கல்லூரியில் கல்வி கற்றபின் 1890-ம் ஆண்டு பீ டபிள்யு. டீ யில உத்தியோகம் பெற்று கிளறிக்கல் முதலான பரீட்சைகளிற் தேர்ந்து 1893-ம் ஆண்டு தொடக்கம் 1904-ம் ஆண்டு வரையில் கண்டி, குருநாகல், நீர்கொழும்பு முதலான இடங்களிலும் பொக்கிஷ சாலையிலும் கடமை பார்த்தனர். அதன் பின் 1907-ம் ஆண்டில் நுவரெலியாக கச்சேரிக்கு மாற்றப்பட்டனர். அதன் பின்னர், முதலாங் கிளாசில் முதலாவது கிறேட்டில் மேல் உத்தியோகஸ்தராகி 1920-ம் ஆண்டு வரையில் லோன் போட் முதலான வற்றிலும், யாழ்ப்பாணம் கச்சேரி முதலான வற்றிலும் இரண்டாவதாயிருந்து பெரும் பதவிகளைக்கையாண்டு பலராலும் சன்மானிக்கப் பெற்றனர். இப்பொழுது உத்தியோகத்தினின்றும் இளைப்பாறி உபகார வேதனம் பெற்று வருகின்றனர். இவர் சாந்த குணமும், பரோபகாரசிந்தையும், மதாபிமானமும் உடையவர். கத்தோலிக்கருள் இவரைப்போல் பிரமசாரிவிரதம் பூண்ட கிறீஸ்தவரைக் காண்பதரிது, இவர் ஆயுள் பரியந்தம் அளவுகணக்கற்ற புண்ணியங்களைச்செய்திருக்கின்றனர். உதாரணமாக சென்பற்றிக்கல்லூரியில் கல்விகற்கும் ஓர் ஏழைப்பையனுக்குத் தருமத்தின் பொருட்டாக ஆயிரம் ரூபாவை ஸ்கொலஷிப்புப் பணமாகக் கொடுத்திருக்கின்றனர் இதுவே யெல்லாவற்றிலும் சிறந்த புண்ணியமாகும்.

## Sinnappa Kurukal, Katherasan Kovil.

சம்பாங்கோட்டார் கதிரேசன் கோவிலில் அருச்சகராயிருக்கும் பிரமஸ்ரீ சின்னப்பாக்குருக்கள் சுமார் முப்பது வருடகால மாக சிவாலய சேவை செய்து யாவராலும் சன்மானிக்கப்பெற்றவர் தற்போது இக்கோவிற் கருமங்களை நடாத்திவருகின்றனர்.



Mr. S. G. John Pulle, J. P.

CROWN PROCTOR.

Meenambal Press.

## Mr. Solomon Gabriel John Pulle. J. P

Crown Proctor, Jaffna.

மிஸ்ற்றர் சலமோன் கேப்பிரியல் ஜோன் பிள்ளை:- இவர் யாழ்ப்பாண நகரில் ஓர் மரியாதையான குடும்பத்திலே யுதித்தவர். இவருடைய பிதாவுக்குப் பெயர் சலமோன் ஜோன் பிள்ளை இவர் சிலோன் பேற்றிறியற் என்னும் பத்திரிகைக்கு அதிபராயிருந்தவர். புத்திரராகிய கேப்பிரியல் ஜோன்பிள்ளை, சென் பற்றிறிக் கல்லூரியிலும், மதராஸ் பிறசிடென்சிக் கொலீச்சிலும் கலவி கற்றவர். அதன் பின்னர் அத்வக்காத் பிறிற்றோவிடம் நியாயப் பிரமாணங்களைக் கற்றுப பரீஷையிற் சித்தியடைந்ததும் பிரபல நியாயதுரந்தரராகவும், பிரசித்த நொத்தாரிசாகவும், ஏறக்குறையப் பதினைந்து வருடகாலமவரையில், கொழும்பிலே கடமை பார்த்தவர். அதன் பின்னர் யாழ்ப்பாணஞ்சென்று கிறவுன் பிறக்டராக நியமனம்பெற்று, நான்கு வருடமவரையில் கடமை பார்த்தவர். இப்படி இருக்குங்காலத்தில் ஒருநாள் பகிரங்க கூட்டத்துக்குச்சென்று ஜனங்கள் மத்தியில் பிரசங்கம் செய்துகொண்டிருக்கும் சமயத்தில், சுவாசபபை அடைபட்டதின் காரணமாக மரணமடைந்தனர். இவருடைய மரணத்தைக் குறித்து, கௌரவ சேர். இராமநாதன் சுப்பிறீம் கோட்டாருக்குத்தெரிவித்தபொழுது நீதிபதி உடனே மிஸ்றறர் ஜோன் பிள்ளையுடைய திறமையையும், அவருடைய குணமகிமையையும் புகழ்ந்து அனுதாபப்பட்டனர்.

## Dr. A. B Santiago, F.R.C.S L.R.C.P & S. (Edin.)

டாக்டர் ஏ. பீ சந்தியாகு:—இவருடைய மூதாதைகள் டச்சுக்காரருடைய காலந் தொடக்கமாக அரசாங்கத்தில் பெரும் உத்தியோகங்களைக்கையாண்டு வந்தார்களென அறியலானோம். இந்த டாக்டருடைய பிதாவுக்குப்பெயர் சந்தியாகுப் பிள்ளை. இவர் யாழ்ப்பாண மணியகாரனாயிருந்தவர். இந்த மணியகாரனுடைய பிதாவுக்குப்பெயர் டொன் நிக்கலஸ் அரசநிலயித்தமுதலியார் இவரும் அக்காலத்திலே மணியவேலையிலிருந்தனராம். மிஸ்ற்றர் சந்தியாகு சென் பற்றிறிக் கல்லூரியிலும் பிறசிடென்சிக் கொலீச்சிலும் கல்வி கற்றவர். அதன் பின்னர்

1873-ம் ஆண்டு சிலோன் மெடிக்கல் கொலீச்சில் சேர்ந்து கல்வி கற்றுக் கவுண்மெந்தில் ஸ்கொலஷிப்பையும் பெற்றனர். 1877-ம் ஆண்டில் கண்டி முதலான இடங்களில் பிரபல டாக்டராயிருந் தனர். சிலவருடங்களான பின்னர் இங்கிலாந்து முதலிய மேலைத் தேசங்களுக்கு இருமுறையாகச் சென்று பெரும பட்டங்களையும பெற்றனர். இவர் இங்கிலாந்தில் இருக்குங்காலத்தில் எத்த னையோ லோடமாரைச் சந்தித்து இலங்கையிலுள்ள முத்துக் களின் விஷயமாக அவர்களோடு ஆகேஷபஞ் செய்தவர். அக் காலத்தில் ரோமாபுரிக் குச் சென்று பாப்பாண்டவரைக் கரிசித்து அவருடைய ஆசீர்வாதத்தையும பெற்றவர். இவர் சிலகாலம் யாழ்ப்பாணத்திலே கொலனியல் சேர்ஜனுகவும சிறைச்சாலை வைத்தியராகவுமிருந்தவர். பருத்தித்துறையில் காலரா நோயு ண்டான போது ஊழியஞ் செய்து தேசாதிபதியவர்களால் சன் மானிக்கப்பெற்றுக காலஞ் சென்றனா. இவருடைய சகோத ரரே பாரிஸ்டர் சந்தியாகு

## Mr. Solomon John Pulle,

காலஞ்சென்ற மிஸ்ற்றர் சொலொமன் ஜோன்பிள்ளை, இவர் முற்காலத்திருந்த முதியோருளொருவராவர். 1836-ம் ஆண்டு பிறந்தவர். அக்காலத்தில் சுண்டிக்குளிச் செமினரியிலிருந்த "ஜோனஸ்றன்" என்பவரிடம் கல்வி கற்றவர். இவருடைய சாமர்த்தியத்தையும், ஆங்கில அறிவின்றிறத்தையும், புத்திவிவே கத்தையும் புகழ்ந்து பாராட்டிச் சிலபுஸ்தகங்களிலும், பத்திரிகை களிலும தீட்டியுள்ளார்கள். இவர் அக்காலத்தில் அவ்வளவு திற மையுடையரா யிருந்தாரென்பதற்குப் போதிய ஆகாரங்களைக காண்கின்றேம். உதாரணமாக, மிஸ்றர் சொலமன் அனேக பத் திரிகைகளுக்கு ஆசிரியராகவும், "மோனிங்ஸ்ரார்" "லோன் ஒப் சேவர்" "மிரர்" என்னும் பத்திரிகைகளுக்குப் பிரதிநிதியாகவும், விஷயமெழுதும் நிருபராகவும் இருந்தவர் "சிலோன் பேற்றிறி யற்" என்னும் பத்திரிகையை நடாத்தி வந்தவரும் இவரே. மிஸ்ற் றர் ஜோன்பிள்ளை 1866-ம் ஆண்டு வரையில் சிவில் இஞ்சினியர் ஆபிசில்பிரதமலிகிதராயிருந்தவர். அதன்பின் டைக்குத்துரை காலத் தில் யாழ்ப்பாணங் கச்சேரியில், தோம்புப் பதிவுகாறராயும், மாகா



DR. A. B. SANTIAGO, F. R. C S. (Edin.)

Meenambal Press.

ணறிஜிஸ்றராயுமிருந்தவர். 1875-ம் ஆண்டு எட்வேட் இளவரசர் விஜயஞ் செய்தபொழுது வந்தனோபசாரப் பத்திரம் எழுதி வாசித்துத் தமிழ்மக்களுடைய பெருமையை விளங்கவைத்து உலகில் பிரக்கியாதியுடனிருந்து 1889-ம் ஆண்டு மரித்தனர். இவருக்குப் புத்திரர் நால்வர். புத்திரி ஒருவர். முதலாவது கேப்பிரியல் ஜோனபிள்ளை. இவர், ஜே பி. பட்டம்பெற்று கிறவுண் பிறக்டராயிருந்தவர். இரண்டாவது ஜீ. எப். ஜோன் பிள்ளை. இவர் இரிகேஷன் டிப்பாட்மெண்டில் பிரதம கிளார்க்காயிருந்தவர். மூன்றாவது ஜே. எஸ் ஜோனபிள்ளை இ[illegible] டாக்டராயிருந்தவர். நான்காவது ஹென்றி ஜோன்பிள்ளை ஐந்தாவதாகிய புத்திரியைப் பாரிய கனவந்தராயிருந்து பிரபலமுற்ற நிகொலஸ் புவிராயசிங்கமுதலியாருடைய மகன், சீ. என். புவிராயசிங்கம் என்பவர் மணந்தனர். இவர்களெல்லாரும நல்ல நிலையில் பெரிய உத்தியோகஸ்தர்களாய் விளங்கினார்கள்.

**T**

## The-Late Sriman Shroff Thambiah.

ஸ்ரீமான் தம்பையார் சிறாப்பர்:—இவர் முற்காலத்திருந்த முதியோருளொருவராவர். இவர் மாணமுதலியார் வமிசத்துத்தோன்றிய பூதத்தம்பி சுவாமிநாதர் கதிரவேலருடைய புத்திரராவர். இவர் அக்காலத்திலே ஓரியண்டல் வங்கியிலும் நேஷனல் வங்கியிலும சிறாப்பாயிருந்து அளவு கணக்கற்ற புண்ணியங்களைச் செய்தவர். உதாரணமாகச் செக்கடித்தெரு யாழ்ப்பாணத்தார் கதிரேசன் கோவிற் கும்பாபிஷேகத்தை நிறைவேற்றியவருமிவரே இப்புண்ணிய சீலர் கனகசூரியர் வமிசத்துத் தோன்றிய வைத்திய நாதரின் மகளை விவாகஞ் செய்து, சிவகாமிப்பிள்ளை, சிவசிதம்பரம் விசாலாட்சி என்போரைப்பெற்றுச் சிவபதமடைந்தனர். இவர்களுள் ஸ்ரீமதி சிவகாமிப்பிள்ளை ஸ்ரீமான் முருகேசுவை விவாகம் செய்து தமையையாவையும் ஸ்ரீமான் சிவசிதம்பரம் மீனும்பாவை விவாகம் செய்து சோமநாதன், செல்லாச்சிஎன்னுமிருவரையும் விசாலாக்ஷி ஸ்ரீமான் சின்னத்தம்பியை விவாகஞ் செய்து பல சந்தானங்களையும் பெற்றனர்

## The Late Mr. Tiru-Navuk-Arasu, Advocate.

"Mahendra," Barnes Place.

காலஞ்சென்ற ஸ்ரீமான் அத்வொகாத் திருநாவுக்கரசு:- இவர், கிழக்குக் கொக்குவிலே சென்மஸ்தானமாயுடைய திரு. கார்த்திகேசரவர்களின் சிரேஷ்ட புத்திரராவர். இவருடைய பாட்டனார் பெயர் குமாரவேலர். முப்பாட்டனார் பெயர் சங்கரப் பிள்ளை. இவர்கள் நற்குடியிலே, நல்லகோத்திரத்திலே, வமசபாரம்பரியத்திலே யுள்ளவர்கள். திருவாளர் கார்த்திகேசர் யாழ்ப்பாணங் கோட்டிலே ஓர் லிகிதராயிருந்தவர் அக்காலத்திலிவர் பிரபல வர்த்தகராயிருந்த சிவகுருநாதர் சிற்றம்பலத்துடைய மகள் பாறுவதிப் பிள்ளையை விவாகஞ்செய்து ஆறு ஆண்களையும், நாலு பெண்களையும் பெற்றனர். அவர்களுடைய நாமங்களைச்சொல்லுகில் முதலாவது ஸ்ரீமான் திருநாவுக்கரசு, இரண்டாவது மாணிக்கவாசகர், மூன்றாவது சுந்தரம், நான்காவது சம்பந்தர், ஐந்தாவது பதஞ்சலி, ஆறாவது வியாக்ரபாதர், ஏழாவது குட்டிப்பிள்ளை, எட்டாவது மகேஸ்வரி, ஒன்பதாவது பொன்னம்மா, பத்தாவது சரஸ்வதி. இவர்களுள் ஸ்ரீமதி மகேஸ்வரி ஓவசியர் இராமலிங்கத்தையும், கனிஷ்ட புத்திரியாகிய சரஸ்வதி பசுபதிச்செட்டியாருடைய சகோதரர் சிதம்பரசுப்பையார்ச் செட்டியார் மகன் முத்துக் குமாருச் செட்டியாரையும் விவாகஞ் செய்தனர். புத்திரராகிய ஸ்ரீமான் திருநாவுக்கரசு நற்பழக்க வொழுக்கமுடையவராய யாழ்ப்பாணத்துச் சென்றல் கொலீச்சிலும், அதன் பின்னர் றோயல் ஐக்கடமியிலும் கல்விகற்று 1884-ம் ஆண்டு லண்டன் மற்றிக்குலேஷன் பரீக்ஷையில் அதிக திறமையோடு சித்தியடைந்தனர். அதன் பின்னர் நியாயமாணவராயிருந்து ஸர். இராமநாதனைப் போன்ற பேரறிஞர்களிடம் சட்டப்பிரமாணங்களைத் தெரிந்து சகல கலைகளிலும் மஹா பாண்டித்திய முடையவராய் 1892-ம் ஆண்டு அத்வகாத் பரீக்ஷையில் தேறினர். மிஸ்டர் பாவா சீ. எம். பெர்ணாண்டு, ஸர். மாக்கஸ், என்போருடன் படித்தவர். இப்படி இருக்குங்காலத்தில் பிரபல டாக்டராயும், சட்டசபை அங்கத்தினராயுமிருந்த கௌரவ ஸ்ரீமான் றக்வூட் துரையவர்களுடைய சிரேஷ்ட புத்திரி ஸ்ரீமதி தையல் நாயகி யென்னும் மாதுசிரோன்மணியை விவாகஞ் செய்து கொழும்பிற் சிலகாலமும்,

யாழ்ப்பாணத்திற் பலகாலமும் நியாயதுரந்தரராயிருந்து யாவரா லும் சன்மானிக்கப்பெற்றனர். அதன் பின்னர் 1906-ம் ஆண்டு தொடக்கம் கொழும்பிலேயிருந்து தமிழ்மக்களுக்கு வேண்டும் பேருதவிகளைப்புரிந்து 1907-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 20-ம் திகதி சிவபதமடைந்தனர். எமது நண்பராகிய ஸ்ரீமான் திருநா வுக்கரசுவுடைய பெருமையை எம்மால் எழுதியடங்காது. தமிழ் மக்களுக்கோர் திலகமாயிருந்தனர். இவர் சமயபக்தியும், சைவா சாரமும, சாதுகுணமும், தண்ணளியும், பகுத்தறிவும், பரோப கார சிந்தையும், புருஷலக்ஷணமும உடையவர். யாழ்ப்பாணத் திலுள்ள திருவே மண்டபத்தை ஸ்தாபித்தோருள் ஒருவராவர். இவருடைய நாமத்தால் ஓர் தருமவைத்தியசாலையும் நடைபெற்று வருகின்றன. இவ்விஷயமிருப்ப, ஸ்ரீமதி தையல்நாயகியம்மாள் பதிவிரதா தாமமபூண்டு சைவாசார சீலராய காரியாத்திரை முத லானவைகளைச்செய்து கறபொழுக்கங்களிலே சிறந்த கற்பாஸ்திரி யாயும், குலமகளாயும விளங்குகின்றனர். இப்பெண்ணரசி ஆங் கிலம், தமிழ், சமிஸ்கிருதம் என்பவற்றில் அறிவுடையர் அரிய நூல்களையும இயற்றியுள்ளார். ஸ்ரீமான் திருநாவுக்கரசுவுக்கு, முற் காலத்திருந்த தில்லை. நாயக முதலியார், இராசநாயக முதலியார், பெரியதம்பிஉடையார், வீரகத்திஉடையார் என்போர் உறவினர்.

## Thangaratnam Anaicottai

தங்கரத்தின மென்னும பெயரையுடைய இவ்விளைஞர் சங் கீதவித்தையை எம்மிடம் முறைப்படி கறறு இராமநாதன் கல் லூரியில் சங்கீதாசிரியராயிருக்கின்றனர். இவர் சமயாசார முடையவர். இவருடைய வாத்தியத்தை யாவரும் கேட்கத் தக்கது. இவருடைய பிதாவுக்குப் பெயர் வேலுப்பிள்ளை.

## H. Tiruvilangam, Proctor & Notary

காலஞ்சென்ற ஸ்ரீமான் திருவிளங்கம்:— இவர், தமிழ்மக்களுள் கல்வியறி வொழுக்கங்களினால் மேம்பட்ட யோக கியராயிருந்தனர். சித்தாந்த சாஸ்திரங்களைக் கற்றவர். எம்மி டத்திலே மிக்க அன்பு விசுவாசமுடையவர். இப்பேரறிஞர், சிவ ஞானபோதம், சிவஞானசித்தியார், திருப்புகழ்த்திரட்டு, தோத்தி ரத்திரட்டு முதலானவைகளையும் இயற்றியுள்ளார்.

## Tyagaraja Jaganathan Esq, M.A. (Cantab) L.L.B.

Son of the late Mr. N Tyagaraja, Barrister-at-law & Advocate.

ஸ்ரீமான் பாரிஸ்டர் தியாகராஜா ஜகநாதன்:— இவருடைய மூதாதைகளுக்குப் பூர்வீகம் முதலாலி. குபேர சம்பத்துடைய சிவகுருநாதர் மகன் நமசிவாய முதலியாருக்குப் பௌத்திரராவர். இவர் 1895-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 18-ம் திகதி பிறந்தவர். றோயல் கொலீச்சிலும் அதன் பின்னர் இங்கிலாந்திலுள்ள கேம்பிறிஜ் ரினிற்றி கொலீச்சிலும் கல்வி கற்று, எம். ஏ. எல் எல். பீ. என்னும் அரும் பெரும் பட்டங்களைப்பெற்று 1917-ம் ஆண்டு முதலாகப் பிரபல நியாயதுரந்தரராகவும் பாரிஸ்டராகவும் விளங்குகின்றனர். இவர் நல்லறிவும், நல்லொழுக்கமும் நற்சிந்தையும் விவேகபுத்தியும் அரசியல் ஞானமும் வாக்குசாதுரியமும் உடையவர். இலங்கையில் பரம்பரையான செல்வாக்கும் மனுஷத்தன்மையும் யோக்கியமும் மிக்க நேர்மையுமுடையவர். இங்கிலாந்திலுள்ள கல்விமான்களாலும் லோட் மார்களாலும் நன்கு மதிக்கப்பெற்றவர். உதாரணமாக "பக்கிங் ஹாம் பலெஸ்" என்னும் இராசமாளிகைக்கு அழைக்கப் பெற்று அரசரால் சன்மானிக்கப்பெற்றவர். டொனமோர் கம்மிஷன் வந்தகாலத்தில் "றிபோம்" விஷயமாக வாக்கு மூலம் கொடுத்ததில் "சேர். கொட் பிறேபட்லர்" டாக்டர் டிறமன் ஷீல்ட்" "மெத்யூ நேதன்" முதலானோர் இவருடைய வார்த்தைகளைப் பெரிதும் அனுசரித்தனர். இவர்கள் இங்கிலாந்து சென்று அறிக்கைப்பத்திரத்தை வாசிக்கும் பொழுது இலங்கைத்தமிழ்ப் பிரதிநிதியா யிருந்தவர் இவரே. இவர் பிரக்கியாதி பெற்று விளங்கிய ஸ்ரீமான் நமசிவாயமவர்களின் ஏகபுத்திரி ஸ்ரீமதி Padmavathi என்னும் பெண்ணரசியை விவாகஞ் செய்தவர். இந்தப் பெண்மணி பிதாமாதாவைப்போல் நற்பழக்கவொழுக்கமும் சமயாசாரமும் தருமசிந்தையும் சாமார்த்தியமும் உடையர். பத்மாவதியைப்போற்சிறந்த சீமாட்டியை தமிழ்ப்பெண்களுட் காண்பது மிக வருமை, மறு சரித்திரத்தில் கூறுவேம்.



Tyagaraja Jaganathan Esq., M. A. (Cantab) L. L B.

Barrister-at-Law & Advocate

Vice-President, Ceylon Branch, Historical Association,
Member, English Association, Fellow of the Royal Colonial Institute
Member of Lin Coln's Inn & Member of Cambridge University

Meenambal Press

## The Hon. Mr. E. R. Tambimuttu, Advocate M.L.C.

கௌரவ ஸ்ரீமான் தம்பிமுத்து:--இவருடைய மூதாதைகளுக்குப் பூர்வீகம் நல்லூர். தகப்பனார் காலத்தில் மட்டக்களப்பிலே குடியேறினார்கள். இப்பொழுது ஸ்ரீமான் தம்பிமுத்து கீழ்மாகாணத்திலுள்ள குடிசனங்களின் சுவய நலத்தை விரும்பி உழைத்து வருகின்றனர். இவர் தேசாபிமானமேலீட்டால் எத்தனையோ ஏழைமக்களின் வாழ்வைக்கருதிச் சட்டசபையில் நிகழ்த்திவரும் ஆக்ஷேபங்களை அறியாதாரில்லை. மட்டக்களப்பாருக்காக இதுகாறும் எத்தனையோ சற்கருமங்களைச்செய்திருக்கின்றனர் உதாரணமாகக் கல்லடியிலுள்ள பாலத்தை நிறைவேற்றிய வரும் இவரே. இதன் பொருட்டாகப்பெரும் பிரயாசைபட்டிருக்கின்றனர். ஸ்ரீமான் தம்பிமுத்து கல்வியறிவிலும் பேச்சுத்திறமையிலும் வாக்குவல்லபத்திலும் சிறந்த நிபுணரென்பதும், அஞ்சா நெஞ்சம் படைத்த அத்வக்காத்தென்பதும உலகமறிந்த விஷயமாகும். சட்டசபையில் ஸ்ரீமான் தம்பிமுத்துவைப் போன்ற நிபுணரில்லா திருந்தால் தமிழ்ச்சாதியார் ஒழிப்பிடந் தேடி ஓடவேண்டுமென்பதற்குச் சந்தேகமில்லை. இன்னுஞ் சில காலஞ் சட்டசபையிலிருந்து தமிழ்மக்களுக்காகப் பாடுபடுவாரென எதிர்பார்த்திருக்கின்றேம்.

## P. Tyagaraja Esq., Advocate Colombo,

ஸ்ரீமான் அத்வகாத் தியாகராஜா:—இவர் சண்டிருப்பாயிலோர் தக்க குடும்பத்தைச்சார்ந்தவர். இவருடைய பிதாவாகும் திருவாளர் பிறைசூடி யெனபவர் அரசாங்க உத்தியோகத்திலிருந்து காலஞ்சென்றனர். இவருடைய பாட்டனாராகும் "லேமன்" சரவணமுத்து என்பவர், அக்காலத்திலே வட்டுக்கோட்டைச் செமினரியில் பிரதம ஆசிரியராயிருந்து பலமாணவருக்குக் கல்விகற்பித்து உலகில் பிரக்கியாதி பெற்றிருந்தனர். இவ்வுத்தமர், தம் மூதாதைகளைப்போல் கல்வியறிவொழுக்கங்களிலும் நற்குண நற்செய்கைகளிலும் புத்திவிவேகத்திலும் பேச்சுத்திறமையிலும் வாக்குசாதுரியத்திலும் திறனுடையராய் சகல

மான பரீக்ஷைகளிலும் தேர்ந்த பின் பலகாலம் எம்மிடத்திலே முறைப்படி சங்கீதமுங் கற்றவர். தற்போது பிரபல நியாய துரந்தராகவும் நியாயப்பிரமாணங்களில் வல்லுனராகவும் விளங்குகின்றனர். இவர் முல்லைத்தீவுப் பகுதியில் பிரபல டாக்டராயிருந்த ஜெருமியாவின் புத்திரியை விவாகஞ் செய்து இரு குழந்தைகளைப்பெற்றனர். மறு சரித்திரத்தில் விரிவாய்க்கூறுவோம்.

## S. Thiagaraja Esq Broker, Freudenburg & Co,

ஸ்ரீமான் புரோக்கர் தியாகராஜா:--இவருடைய பிதாவுக்குப்பெயர் ஸ்ரீமான் சண்முகம் சரவணமுத்து. இவருக்குச் சென்மஸ்தானம் வட்டுக்கோட்டை கிழக்கு. அக்காலத்திலே கண்டிப்பகுதியில் உத்தியோகமாயிருந்தவர். இனி ஸ்ரீமான் தியாகராஜாவுடைய தாயார்வழியைச் சொல்லுகில் நவாலிப்பகுதியில வம்சபாரம்பரியத்தில் பாரிய தனவந்தர்களாயும், பிரபுக்களாயும், பிரபலமுற்று விளங்கிய இருமரபிலுந்துய்ய முதலியாரின் சந்ததியில் உதித்த ஹோமர் வைரமுத்தாபிள்ளைக்குப் புத்திரியுமாவர். ஸ்ரீமான் தியாகராஜா குலத்துக்கேற்றகுணமும், செயலும் உடையவராய சாந்தம், பொறை, அடக்கம், பரோபகாரம் முதலாகிய விசேட குணங்களையுடையவராய் விளங்குகின்றனர். இவர் புகழ் ஆரவாரம் முதலானவற்றை விரும்பாதவர். சமயபக்தியும் சன்மார்க்கமும் உடையவர். தற்போது புரூடன்பேர்க் கம்பனிக்குப் புரோக்கராயிருக்கின்றனர். இவர் அரசநாயமுதலியார் சந்ததியிற் றோன்றிய முருகஉடையார் மயில்வாகனம் அரசநாயகமவர்களின் சிரேஷ்டபுத்திரி **ஸ்ரீமதி தையல்நாயகி** என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து, ஈஸ்வரானுக்கிரகத்தால் கௌரி என்னும் நாமத்தையுடைய ஓர்பெண்மகவைப் பெற்றனர். ஸ்ரீமதி தையல்நாயகியின் குணமகிமையைச் சொல்லுகில் இப்பெண்மணி கல்வியறிவொழுக்கமும் கடவுள் பக்தியுமுடையாராய், இன்சொல் ஈகை, இரக்கம், ஆலயவழிபாடு, தானதருமம், ஸ்தலயாத்திரை தீர்த்தயாத்திரை முதலாகிய நற்குணநற்செய்கைகளையுடைய குலமகளாய் சங்கீத ஞானமுடைய உத்தமியாய் விளங்குகின்றனர். இத்தம்பதிகள் இனிதுவாழ இறைவனருள்புரிவாராக.

## Sriman A. S. Thambyah,

Proprietor, Meenambal Printing Works, Colombo.

ஸ்ரீமான் தம்பையா:—இக் கருமசீலர் தாது வருடம் புரட்டாதி மாதம் ஒன்பதாம் தேதி ஜெனனமானவர். இவருடைய பிதாவுக்குப் பெயர் சின்னத்தம்பியாபிள்ளை பாட்டனுக்குப் பெயர் அப்பாபிள்ளை. இவர்கள் திரிகோணமலை செழிப்புற்றிருந்த காலத்தில், அவ்வூரிற்றானே குடியேறி அரசாங்க உத்தியோகங்களிலிருந்து காலஞ்சென்றார்கள். ஸ்ரீமான் தம்பையாவுடைய தாயாரைப்பற்றிச் சொல்லுகில், இவ்வம்மையாருக்குப் பூர்வீகம் வட்டுக்கோட்டை. இவ்வம்மையாருடைய பெயர் கதிரம்மாள். இந்தக் கதிரம்மாளுடைய ஞாதிகளுட் பலர் ஆங்காங்கு பெரும் அந்தஸ்துடையர்களாயிருக்கின்றனர். சிவபக்தியிற் சிறந்த இப் புனிதவதி, கதிர்காமநாதரை தரிசித்து சுற்றத்தார் மத்தியில் பரகதியடைந்தனள். ஸ்ரீமான் தம்பையா சிறுபிராயம் முதலாக வெஸ்லிக் கொலீச்சில் கல்விகற்று, வாபேஜ் கம்பேனியில் உத்தியோகமாயிருந்து, அவ்வேலையினின்றும் நீங்கி 1901-ம் ஆண்டில் தமமுடைய சொந்தப் பொருள்கொண்டு மீனும்பாள் அச்சியந்திர சாலை என்னும் நாமத்துடன் ஓர் அச்சுக்கூடத்தை ஸ்தாபித்து பிரபலமாயும, மிக்க விசேடமாயும் நடாத்திவருகின்றனர். இப்பொழுது இவ்வச்சுயந்திரசாலைக்கு சமமாய் இலங்கையில் இல்லையெனலாம். இவ்வுத்தமர் சாந்தகுணமும், பரோபகார சிந்தையும், பகுத்தறிவும், பிரபுத்தன்மையும் பொருந்தியவர். இனி இவர் தேசாபிமானமேலீட்டால் தேசியசபைக்குச் செல்பவரும், யாத்திரை விஷயமாக இருமுறை காசிக்குச்சென்றவருமாவா. இலங்கையில் மிகப்புராதனமாயும், அனுக்கிரகஸ்தலமாயும் விளங்குகின்ற கதிர்காம க்ஷேத்திரத்தில் அதிக பணத்தைச் செலவிட்டு ஓர் திருமடத்தையும்கட்டி, வருடந்தோறும் அம்மடத்தில் சிவனடியார்களுக்கு அன்னதானம் செய்துவருகின்றனர். இது எல்லாவற்றிலும் சிறந்த புண்ணியமாகும். ஸ்ரீமான் தம்பையா புகழ், ஆரவாரம் முதலானவற்றை விரும்பாத கருமசீலருமாவர்.

## S. Theagarajah Esq, Broker. Delmege Forsyth & Co. Ltd.



ஸ்ரீமான் புரோக்கர் தியாகராஜா:— இவருடைய ஜென்ம ஸ்தானம் மானிப்பாய். அவ்வூரில் அந்தஸ்துடையர்களாயிருந்த பெரும் பிரபுக்களின் சந்ததியிலே தோன்றியவர். அதாவது மதியாபரண முதலியார், கெங்காகுலரத்தின முதலியார், மதியாபரணமுதலியார், கனகசபைமுதலியார், காராளஉடையார், சின்னத்தம்பி சிவகுருநாதருடைய புத்திரராவர். இவர் 1888-ம் ஆண்டு மே மாதம் 24-ம் திகதி பிறந்தவர். சிறுபராயம் முதலாக யாழ்ப்பாணத்திலுள்ள சென் ஜோன்ஸ் கல்லூரியிலும், சென்றல் கல்லூரியிலும் கல்வி கற்ற பின்னர், வெஸ்லிக் கல்லூரியிலே உயர்தரக் கல்வி கற்றுப் பற்பல கம்பேனிகளுக்குப் புரோக்கராயிருந்து பற்பல சாதியாரகளாலுஞ் சமயத்தாரகளாலும் சன்மானிக்கப் பெற்றவர். கடைசியாக டெல்மேஜ போராசைத் என்னுமோர் பாரிய கம்பேனிக்குப் புரோக்கராயிருந்தவர். இனி ஸ்ரீமான் தியாகராஜவுடைய சிறந்த குணங்களையும், தருமச்செயல்களின் இயல்பையும் சிறிது கூறி முடிப்போம். இவர் சைவாசாரமும, சமய பக்தியும், ஆலயவழிபாடும், சிவத்தியானமும், நித்தியகருமானுஷ்டானமும், பரோபகார சிந்தையும், பிரபுத் தனமையும், சாந்த குணமும், தமிழறிவும் உடையவர. "இல லெனனு மெவ்வமுரையாமை யீதல் குலனுடையான் கண்ணேயுள" என்றபடி எக்கருமங்களுக்கும் இல்லையென்னது தருமங்கொடுப்பவர். இனி இவர் செய்திருக்கின்ற பதிபுண்ணியங்களையும, சற்கருமங்களையும சொல்லுகில் ஏறக்குறைய 35 வருடகாலமாக வேரக்கைப்பிள்ளையார் கோவிலில் பட்டுக்குடைத்திருவிழா என்னுமோர் உற்சவத்தை அதி விமரிசையாய் நடாத்திவருகின்றனர். மருதடிப்பிள்ளையார் கோவிலில் தீர்த்தோற்சவத்தையும் நடாத்திவருகின்றனர். பழி பாவங்களுக்குப் பயந்த யோக்கியரானதால் சனிஸ்வரப் பிரதிஷ்டை, நவக்கிரகப் பிரதிஷ்டை முதலானவைகளைச் செய்வித்துப் பூசை முதலானவற்றை நடாப்பித்து வருகின்றனர். சீரணி நாகம்மாள் கோவிலில் வசந்த மண்டபத்தைக் கட்டியிருக்கின்றனர் மாவிட்டபுரம் கந்தசாமி கோவிலில் மேற்குக் கோபுர வாசலைக் கட்டியவரும் இவரே; கீரிமலை தீர்த்தக்கரைப் பிள்ளையார்கோவிலைக் கட்டியவரும் இவரே. இனி கதிர்காம மடாலயம்,

திருவாலங்காடு முதலானவற்றிற்குத் திருப்பணியின் பொருட்டுப் பெரும்பொருள் உபகரித்திருக்கின்றனர். இவருடைய தாயாருக்குப் பெயர் செல்லம்மாள். இவ்வம்மையார் எத்தனையோ கன்னியரைக் கரை சேர்ப்பித்த புண்ணியசீலியாவர். இத்தன்மைகளையுடைய ஸ்ரீமான் தியாகராஜா, 25 வருடகாலமாகப் பினங்கில் பிரபல டாக்டராயிருந்த ஸ்ரீமான் கே. முத்துக்குமாருவுடைய மூன்றும் புத்திரி ஸ்ரீமதி இராசம்மாவென்னும் மாது சிரோன்மணியை விவாகஞ்செய்து மூன்று புத்திரர்களையும், மூன்று புத்திரிகளையும் பெற்றனர். ஸ்ரீமதி இராசம்மா, நற்குண நற்செய்கையும், புத்திசாதுரியமும், பெருந்தன்மையுமுடைய உத்தமியாவர். புத்திரியாகிய பத்மாவதிக்கு இணையாய்த் திறமையுடைய பிள்ளையைக் காண்பதருமை. இத்தம்பதிகள் இனிது வாழ்வார்களாக.

## C. Thiagarajah Esq., Broker, "Isvarapathy" Wellawatta.

ஸ்ரீமான் புரோக்கர் தியாகராசா:--இவருடைய ஜென்மஸ்தானம் மானிப்பாய். இவருடைய மூதாதைகள் சோழதேசத்தினின்றும் வந்து குடியேறினார்களென் அறியக்கிடக்கின்றது. அவர்களுடைய நாமங்களாவன. முறையே குமாரர், கதிர்காமர், மாதவராய முதலியார், வேலாயுதர் சின்னக்குட்டிச் செட்டியார் என்னும் பெயர்களையுடைய பெருமக்களின் சந்ததியிற்றோன்றிய திருவாளர், சிதம்பரப் பிள்ளையின் புத்திரராவர். இவருடைய ஜென்ம நக்ஷத்திரம் மிருகசீரிடம். இவருடைய குணமகிமைகளைப் பல வருடங்களாக யாமறிவேம். இவர் சமயாசாரமும், சாந்தகுணமும், பரோபகார சிந்தையுமுடையவர். இதுகாறும் எத்தனையோ சற்கருமங்களைச் செய்திருக்கின்றனர். மானிப்பாய் இந்துக் கல்லூரிக்கும், இலங்கைச் சைவபரிபாலன சபைக்கும் காரியதரிசியாயிருந்தவர். இவர் சிங்கப்பூர் பகுதியில் பிரபல டாக்டராயிருந்த சின்னத்தம்பியவர்களின் குமாரத்தி **ஸ்ரீமதி இந்திராணி**, யென்னுமாதை விவாகஞ்செய்து ஜெகதீஸ்வரி, ஸ்ரீ இராமநாதன், புவனேஸ்வரி, சிவானந்தம் என்கின்ற பிள்ளைகளைப் பெற்றனர். ஸ்ரீமதி இந்திராணி கல்வியறிவொழுக்கங்களிலே சிறந்த நற்குணசாலியாவர். இந்தப் பெண்மணியுடைய நக்ஷத்திரம் அத்தம். பிள்ளைகளுக்கு முறையே அசுபதி, சதயம், பூரட்டாதி எனவாகும்.

## Mr. Tambyah Sockanathan, "Rotherfield"

ஸ்ரீமான் தம்பையா:—இவர் காலஞ் சென்ற சிறுப் சொக்கநாதனவர்களுடைய சிரேஷ்ட புத்திரராவர். இவர் 1891-ம் ஜூலாய் மாதம் 14-ம் திகதி பிறந்தவர். இவருடைய சென்ம நக்ஷத்திரம் சித்திரை. இவர் செந்தோமஸ் கல்லூரியில் கல்விகற்று இம்பீரியல் வங்கியில் இரண்டாஞ் சிறுப்பாயிருந்தவர். இவர் பிதாவைப்போல் சாந்தகுணமும் சமயாசாரமும் பிரபுத்தன்மையு முடையவர். இவருடைய சிறந்த குணங்களைப் பலவருடங்களாக யாமறிவேம். ஒருமுறை எமக்குப் பரோபகாரமா யொருதவி புரிந் தவர். ஆகவே அந்நன்றியை மறவாது யாமிவரை நன்கு மதித்து இவருடைய புகழை இப்புஸ்தகத்தில் எழுதலானோம். ஸ்ரீமான் தம்பையா காலஞ்சென்ற திருவாளர் முத்துக்குமாரசுவாமியுடைய சிரேஷ்ட புத்திரி ஸ்ரீமதி Meenambikai என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து Kamini, Gnaneswari, Sivananthavalli. என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைபெற்றனா. ஸ்ரீமதி மீனும்பிகை நற்குணமுடைய நன்மனையாளாவர். இப்பெண்ம ரசி கௌரவ சேர. இராமநாதனுக்குப் பௌத்திரியுமாவர். "எம மால் எழுதப்படும் மற்றோர் சரித்திரத்தில்" விரிவாய்க்கூறுவேம்.

## Mr. J. R. Thamba Pillai Asst Appraiser H M Customs

மிஸ்ற்றர் தம்பாபிள்ளை:—இவா வடமாகணத்தில் பிர பல வித்தியாதரிசியாயிருந்து பிரக்கியாதி பெற்ற ஸ்ரீமான் ஜீ. எஸ் தம்பா பிள்ளையுடைய புத்திரராவர். இவா 1892-ம் ஆண்டு பிப்ரவரி மாதம 14-ம திகதி பிறந்தவர். பிதாவைப்போல் நற் பழக்க வொழுக்கமும், சாந்தகுணமும், பரோபகாரசிந்தையு முடைய நற்புதல்வராய் வளர்ந்து, திறினிற்றிக் கல்லூரியில் கல்வி கற்று கேம்பிறிஜ் பரீக்ஷைகளில் சித்தியடைந்து தற்போது கஸ்ற றாம் ஆபீசில் "அப்றெயிசர்" என்னும் உத்தியோகத்திலிருக்கின் றனர். இவருடைய பிதாவாகும வித்தியாதரிசி தம்பாபிள்ளை கல்வி விஷயமாகத் தம்மாலியன்ற சீர்திருத்தங்களைச்செய்து வடக் கரானியில் ஓர் தேவாலயத்தையும், கீரிமலையில் ஓர் 'மடத்தையும் ஸ்தாபித்துச்சென்றனர். இவர் காலஞ்சென்ற சுப்பிரமணிய உடையாரின் வழித்தோன்றலுமாவர்.

## Dr. S. Thiagarajah, M.R.C.P (Edin) Colombo.

ஸ்ரீமான் டாக்டர் தியாகராஜா.—இவ்வுத்தமருடைய வரலாற்றைச் சொல்லுகில் வடகராலியில் சிவநேயச் செல்வர்களாயும் மேன்மக்களாயும் உத்தியோகஸ்தர்களாயும் பிரபலமுற்று விளங்கிய வயித்திலிங்க உடையார் சோமநாதபிள்ளை ஆதியோரின் வழித்தோன்றலாயுதித்த ஸ்ரீமான் சிற்றம்பலமவர்களுடைய கனிஷ்ட புத்திரராவர். மாதாவுடைய வழியால் சண்டிருப்பாயிலுள்ள வயித்தியலிங்கம் சுப்பிரமணியமவர்களுக்குப் பௌத்திரருமாவர், இவருடைய தாயாரை ஸ்ரீமதி சின்னத்தங்கம் என்றழைப்பார்கள். புத்திரராகிய ஸ்ரீமான் தியாகராஜா விரோதி வருடம் ஆனி மாதம் 12-ம் திகதிக்குச்சரியான 1889-ம் ஆண்டு ஜூன் மாதம் 25-ம் திகதி ஜெனனமானவர், இவருடைய ஜென்ம நக்ஷத்திரம் கார்த்திகை. இவர் சிறுபராயம் முதலாக நற்பழக்கவொழுக்கமுடையராய் வளர்ந்து சென்தோமஸ் கல்லூரியிலும் மெடிக்கற்கல்லூரியிலும், கல்வி கற்றுக் கேம்பிறிஜ் பரீக்ஷை, எல். எம். எஸ். பரீக்ஷை முதலானவற்றில் சித்தியடைந்து பிரபல டாக்டராய் கொழும்பு, கண்டி அநுராசபுரம், ஆகிய விடங்களில் கடமை பார்த்து ஆங்காங்குள்ள உத்தியோகஸ்தர்களாலும் ஊரவர்களாலும் சன்மானிக்கப்பெற்று இங்கிலாந்து முதலிய மேலைத்தேசங்களுக்குச் சென்று உயர்தரக் கல்விகற்றுப் பெரும்பட்டங்களைப்பெற்று தற்போது ஜெனரல் ஆசுபத்திரியில் மிகப் பொறுப்பு வாய்ந்த ஓர் ஸ்தானத்துக்குத் தலைவராயிருக்கின்றனர். இவருடைய குணமகிமையைச்சிறுபராயம் முதலாகயாமறிவோம். இவர் சாந்தம், பொறை, அடக்கம், பரோபகாரம், பிரபுத்வம், இன்சொல், ஈகைஇரக்கம் முதலாகிய இன்னோரன்னசிறந்த குணங்களை யுடையவர். இவர் இந்நகரிலுள்ள தமிழ்மக்களுள் செல்வத்தாலும்கீர்த்தியாலும் மற்றுமெவ்வகையாலும் சிறப்புற்று விளங்கும் சமாதான நீதிபதி ஸ்ரீமான் ஞானசேகரமவர்களின் சிரேஷ்ட புத்திரர், ஸ்ரீமான் சண்முகத்துடைய சிரேஷ்ட புத்திரி ஸ்ரீமதி **Mangalam** என்னும் பெண்மணியை விவாகஞ் செய்து **Visvanathan, Manonmani.** என்னும் பெயர்களையுடைய இரு குழந்தைகளைப்பெற்றுப் பிரபலஸ்தராய் விளங்குகின்றனர். இத்தம்பதிகள் இனிது வாழ்வார்களாக.

## K. R. M. T. T. Thiagaraja Chettiar.

Piece Goods Merchant & Managing Director, of the Sri Meenakshi Mills Ltd., Madura.

ஸ்ரீமான் க. ரு. மு. த். து. தியாகராஜ செட்டியார்: இவ்வுத்தமர் தமிழ்வழங்கும் நிலமாகிய பரதகண்டத்திலே தென்னாட்டைச் சேர்ந்த தெக்கூர் என்னும் கிராமத்திலே தோன்றிய திருவாளர் முத்துக்கருப்பஞ்செட்டியா ரென்னுமோர் பிரபுவுடைய கனிஷ்டபுத்திரராவர். இவர் 1884-ம் ஆண்டு ஜெனனமானவர். யாம் செந்தோமஸ் கல்லூரியிற் கல்வி கற்கும்பொழுது இவரும் அக்கல்லூரியிற் கற்றவர். அக்காலம்முதல் இதுகாலம்வரையில் இவருடைய குணாதிகளை யாமறிவோம். ஸ்ரீமான் தியாகராஜசெட்டியார் நாட்டுக்கோட்டை நகரவாசிகளுள் அறிவாலும் நற்குண நற்செய்கையாலும் பிரபுத்தன்மையாலுஞ் சிறந்தவர். இவ்வூரில் இவரை யறியாத பிரபுக்களும், துரைமார்களும் இல்லையெனலாம். ஸ்ரீமான் தியாகராஜா ஆங்கிலபாஷையில் அதிக தேர்ச்சியுடையவர். தோட்டக்காட்டுக் கூலிச் சனங்களை விஷயமாகவும், மண்டபம் காம்பு விஷயமாகவும் தாக்கித்துச் சிலபல சீர்திருத்தங்களைச் செய்வித்தவர். தற்போது ஸ்ரீமான் தியாகராஜா லக்ஷக்கணக்காயுள்ள திரவியங்களைச் செலவிட்டு தேசாபிமான மேலீட்டால் மதுரைப்பதியில் ஸ்ரீ மீனாக்ஷி மில்ஸ் என்னும் நாமத்துடன் ஓர் நெசவுசாலையை ஸ்தாபித்து நடாத்தி வருகின்றனர். ஸ்ரீமான் தியாகராஜ செட்டியாருடைய பெருமையை யாம் மற்றோர் சரித்திரத்தில் விஸ்தாரமா யெழுதுவோம்.

## Sriman Thambiah Mudaliyar,

காலஞ்சென்ற ஸ்ரீமான் தம்பையா முதலியாரைப்போல் ஒரு புண்ணியசீலரைக் காண்பதரிது. இவர் ஏறக்குறைய நாற்பத்தாறு வருடங்களுக்குமுன் கொச்சிக்கடைத் தெருவில் ஓர் தரும சத்திரத்தை ஸ்தாபித்துள்ளார். இஃதொன்றால் இவருடைய பெயர் உலகெங்கும் வழங்கத் தக்கதாயிருக்கின்றது.

## C. Thiagalingam Esq, Advocate. Colombo

ஸ்ரீமான் அத்வக்காத் தியாகலிங்கம்:—தற்போது பிரபல நியாயதுரந்தரராய் பிரக்கியாதியுடன் விளங்கும், இப் பேரறிஞரைபபற்றிச் சொல்லுங்கால், இவர் காலஞ்சென்ற ஸ்ரீமான் செல்லப்பாவுடைய புத்திரருளொருவராவர். இவருடைய தாயார் பெயர் ஸ்ரீமதி மீனாட்சி. இவருடைய சகோதரர்களின் பெருமையை அறியாதாரில்லை. ஸ்ரீமான் தியாகலிங்கம் இங்குள்ள கலாசாலைகளிற் கல்விகற்று நாளொருவண்ணம் பொழுதொருமேனியாக விருத்தியடைந்து, சகலமான பரீக்ஷைகளிலும் தேர்ந்து தற்போது யாவரும் மெச்சத்தக்க நியாயதுரந்தரராயிருக்கின்றனர். இவர், ஆழ்ந்த அறிவும், அறிவுக்குத்தக்க செயலும், அமைதியான போக்கும், சிறந்த குணமும், புத்திவிவேகமும், பேச்சுத்திறமையும், வாக்கு சாதுரியமும் மற்றாசாமார்த்தியமும், சாதியாபிமானமும், சமயாசாரமும், பரோபகாரசிந்தையும் உடையவர் இவருடைய திறமையை பலரும் வியந்து கூறக்கேட்டுளோம். இன்னுஞ் சில காலத்துள் இவர் மேலான நிலைக்கு வருவாரென்பது திண்ணம். இவர் காலஞ்சென்ற திருவாளர் சுந்தரமவர்களின் கனிஷ்டபுத்திரி ஸ்ரீமதி Maheswari எனனும் பெண்மணியை விவாகஞ்செய்து Thiageswari யென்னுமோர் பெண் மகவைப் பெற்றனர். ஸ்ரீமதி மகேஸ்வரியின் குணமகிமையைச் சொல்லுமில், பிதா மாதாவைப்போல் நற்பழக்கவொழுக்கமும், சாந்தகுணமும், கல்விகதேர்ச்சியும், சங்கீதஞானமும், தமிழறிவும் உடையர். இந்தப்பெண்மணியைப்போல் பிற்றில்வாத்தியம் வாசிப்போர் இல்லையெனலாம். யாம்சென்பிறிஜெற்கொன்வென்றில் ஆசிரியராயிருக்கும்பொழுது எம்மிடத்தில கல்விகற்ற மாணக்கிகளுளொருவருமாவர். இத்தம்பதிகள் இனிது வாழுவார்களாக.

## Mr. Thambipillai, Asst Inspector of Schools.

ஸ்ரீமான் தம்பிப்பிள்ளை:—இவ்வுத்தமர் யாழ்ப்பாணத்திலோர் தக்ககுடும்பத்தைச் சார்ந்தவர். இவர் கல்விகற்றுத் தற்போது உப வித்தியாதரிசியாயிருக்கின்றனர். ஸ்ரீமான் தம்பிப்பிள்ளை நற்பழக்க வொழுக்கமுடையராய் விளங்குகின்றனர்.

**M. Thambyah Esq,** Broker Freudenberg & Co., "Villula"

ஸ்ரீமான் புரோக்கர் மு. தம்பையா:— ஆதிகாலத்திலே இந்நகரில் பெரும் பிரபுவாகவும், லக்ஷாதிபதியாகவும், தருமவானாகவுமிருந்து தம்மாலியன்ற சிவபுண்ணியங்களைச்செய்து உலகில் பெருங் கியாதியையும், பெரும் புகழையும் பெற்று சிவாலயம், மடாலயம், அன்னசத்திரம் முதலானவைகளை ஸ்தாபித்துச் சென்ற ஸ்ரீமான் தம்பையாமுதலியாரவர்களின் பௌத்திரரும், ஸ்ரீமான் முருகேசபிள்ளையவர்களின் அருந்தவப் புதல்வருமாவர். இவருடைய மூதாதைகளின் நாமங்கள், வீரநாராயணமுதலியார் முருகேசச் சட்டம்பியார், சண்முகத்தார் என்போராவர். இவரைப் பெறும் பொருட்டாக எவ்வளவோ தானதருமங்களையும், சிவபுண்ணியங்களையும் இவருடைய பிதாமாதாக்கள் செய்து மிக வருமையாகப் பெற்றெடுத்த சற்புத்திரசிகாமணியாவர். இவர் நற்பழக்கவொழுக்கமுடையராய் வளர்ந்து கல்விகற்று தற்போது பூருடன்போக் கம்பனியில் புரோக்கராயிருக்கின்றனர். இவர், பிதாமாதாவைப்போல் சாந்த குணமுடையவர். சைவாசாரங்களில் ஒருசிறிதும் பிறழாதவர். விசேட தினங்களையும், விரதகாலங்களையும் அனுஷ்டிப்பவர். பிதா மாதா குரு உபாத்தியாயர் என்னும் பெரியோர்களிடம் தயவுடையவர். "தாயிற்சிறந்ததொரு கோயிலுமில்லை" யென்றபடி மாதாவைக் கனம்பண்ணி நடப்பவர். தருமவிஷயமாகச் சொல்லுகில் எவ்விஷயங்களுக்கும் இல்லையென்னாது தருமங் கொடுக்கின்றவர். வருடந்தோறும் தலயாத்திரை தீர்த்தயாத்திரைகளைச் செய்பவர். இன்னும் இவரிடத்தில் அநேகமாயுள்ள விசேட குணங்களுஞ் செயல்களுமுண்டு. அவைகளை விரிக்கிற் பெருகும். ஆதலால் "நல்லாரை நாவிலுரை, பொன்னை கல்லிலுரை" என்றபடி சுருக்கமாய் இங்கு எழுதலானோம். இவர் விசாக நக்ஷத்திரத்தையுடைய கடவுளின் அம்சத்தையும், அனுக்கிரகத்தையும் பெற்றவர். இத்தன்மைகளையுடைய ஸ்ரீமான் தம்பையா, காலஞ்சென்ற கௌரவ ஸ்ரீமான் சேர். அருணாசலமவர்களின் புத்திரி ஸ்ரீமதி சிவானந்தவல்லி என்னும் பெயரையுடைய பெண்மணியை விவாகஞ்செய்து Umadevi, Nadaraja, Mangaleswari என்னும் மூன்று குழந்தைகளைப்




## DR. SAGARAJA SEKARAM.

M. A. (Cantab.) M. B. B. CH. (Cantab )

M. R. C. S. (Eng.) L. R. C. P. (Lon.)

Meenambal Press.

பெற்றனர். இக்குழந்தைகள் பூசம், மிருகசீரிடம், பூரம் என்கின்ற சுபதினங்களிலே பிறந்தனர். இனி ஸ்ரீமதி சிவானந்தவல்லியுடைய குணமகிமையையும் பழக்கவொழுக்கத்தின் இயல்பையும் சொல்லுகில், இப் பெண்மணி மஹாலக்ஷ்மிக் கொப்பாவர். அன்றியும் இவ்வுத்தமி; கற்பிலேசிறந்த கார்த்திகைப்பெண்களுள் ஒருவராய், விசாகத்திற்றோன்றிய மணவாளனை மணந்து இல்லற தருமத்தைக் குறைவற நடாத்திவருகின்றனர்.

## Mr. A. Thiagaraja, Freudenberg & Co.

திருவாளர், அ. தியாகராசா:—இவர் காலஞ்சென்ற சீமைவர்த்தகர் ஸ்ரீமான் அரசநாயகமவர்களின் அருமைப் புதல்வராவர். இவருடைய பாட்டனார் பெயர் முருக உடையார் மயில்வாகனம். தியாகராசா பிதாவைப்போல் பிரபுத்தன்மையும், நற்குண நற்செய்கையுமுடையவர். சிலகாலம் ஹொலன் சிலோன் கொம்மேஷியல் கம்பனியில் உத்தியோகமாயிருந்தவர். தற்போது புரூடன்பேர்க் கம்பனியில் உதவிப்புரோக்கராய் இருக்கின்றனர் இவர் மிக அழகாய் புல்லாங்குழல் வாசிக்கும் இயல்புடையர்.

## Dr. Saga Tyagaraja, M. A. (Cantab) M. B. CH. (Cantab) M. R. C. S. (Eng.) L. R. C. P. (Lon.)

டாக்டர், செகராஜசேகரம் :— இவர் காலஞ்சென்ற நமசிவாய முதலியார் மகன், பாரிஸ்டர் தியாகராஜாவுடைய கனிஷ்ட புத்திரராவர். இவர் இங்கிலாந்திலே கல்விகற்று, பெரும் பட்டங்களை வகித்து சமீபகாலத்தில் இங்கு வந்திருக்கின்றனர். பிரபுக்கள் சந்ததியில் இவ்விதபட்டங்களைப்பெற்றவர் இவர் ஒருவரேயாம். இவர் அதிஷ்டவசத்தால் செல்வச்சீமானாய் விளங்கும் பிரபு சிகாமணி ஸ்ரீமான் செல்லமுத்துவுடைய குமாரத்தி ஸ்ரீமதி Baleswari, யென்னும் பெண்மணியை விவாகஞ்செய்யப்போகின்றனர். இந்தப் பெண்மணி கல்வியிலும், பழக்க வழக்கத்திலும், குணத்திலும் சிறந்த புத்திசாலியாய் சிறுபிராயம் முதல் எம்மிடம் கல்வி கற்றனர். இத்தம்பதிகள் இனிதுவாழ எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக. இவர் 1900-ம் ஆண்டு மார்ச்சு மாதம் 17-ம் திகதி பிறந்தவர்.

## V

## Sriman P. Vythialingam B.A. Advocate J.P.U.P.M.

Police Magistrate Panandura

நீதிபதி ஸ்ரீமான் வைத்தியலிங்கம்:— இவ்வுத்தமருக்கு சென்மஸ்தானம் பண்ணுலை. இவருடைய பிதாவுக்குப் பெயர் சின்னத்தம்பியார் மகன் பூதப்பிள்ளை. இவர்கள் குற்றமற்ற இலக்கணங்களையுடைய சைவவேளாண் மரபிற்றோன்றிய பிரபுக்களாவர்கள். இவர்களுடைய பூர்வீக வரலாற்றை ஆராயும் பொழுது காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து வந்த தண்டிகைக் கனகநாயக முதலியாருடைய வழித்தோன்றலாயுதித்தார்களென அறியக்கிடக்கின்றது. ஸ்ரீமான், வைத்தியலிங்கம் 1882-ம் ஆண்டு செனனமானவர். வட்டுக்கோட்டைச் செமினரியிற் கல்வி கற்றுக் கற்குத்தா பீ.ஏ. பரீட்சைக்குச்சென்று பட்டம்பெற்றவர். அதன்பின் நியாயப்பிரமாணங்களில் மிக்கவல்லுனராகிப் பிரபல நியாய துரந்தரரானார். அதன்பின்னர் கிறவுண் கவுன்சிலாகவும் பருத்தித்துறை, சாவகச்சேரி முதலான விடங்களுக்குப் பொலீஸ் நீதவானுகவுமிருந்து பலராலும் சன்மானிக்கப்பெற்றுத் தற்போது பாணந்துறைக்கு பொலீஸ் நீதவானுயிருக்கின்றனர். இவர் சாந்தம, பொறை, அடக்கம, பரோபகாரம், பிரபுத்துவம், பெருந்தன்மை, சைவாசாரம், சமயபக்தி, முதலாகிய இன்னோரன்ன சிறந்த குணங்களையும் செயல்களையுமுடையவர். பக்திரசமாய்ப் பாடும் பான்மையுடையவர். இதுகாறும் எத்தனையோ சற்தருமங்களையும் செய்திருக்கின்றனர். உதாரணமாக விளிசிட்டியிலோர் சைவ வித்தியாசாலையையும், பண்ணுலையிலோர் தபாலாபீசையும், தம்முடைய சொந்தச்செலவில் ஓர் தெருவையும் அமைப்பித்திருக்கின்றனர். ஒருகாலத்தில் எமக்கும் ஓர் அற்ப உதவி புரிந்தவர். இவர் ஸ்ரீமான் சங்கரப்பிள்ளையுடைய புத்திரி ஸ்ரீமதி அன்னப்பிள்ளை என்னும் மாதுசிரோன்மணியை மணந்து Sachithananda, மென்னும் ஓர் ஆண்மகவையும் ஸ்ரீமதி Gnanambikai, Kamalambikai, என்னும் இரு பெண்மணிகளையும் பெற்றனர். இந்தப் பிள்ளைகள் பிதா மாதாவைப்போல் நற்பழக்க வொழுக்கமுடையவர்கள்.



MR. P. VYTHIALINGAM,

*Police Magistrate.*

Meenambal Press.



J. N. Vethavanam Esq., Police Magistrate

Meenambal Press.

## J. N. Vethavanam Esq., M. A. B. L.

**Additional District Judge. & Police Magistrate of Avisawella.**

மிஸ்ற்றர் ஜே. என். வேதவனம்:—இவர் யாழ்ப்பா ணத்து நல்லூரில் அரசகேசரியார் வளவு சங்கிலித்தோப்பு என்னு மிடத்தை வாஜஸ்தானமாயுடையவர். இவர் எஸ். பீ. ஜீ. மிஷனில் றெவறன் பாதிரியாராயிருந்த மிஸ்ற்றர் ஆர். ஜே. வேதவனம் அவர்களுடைய புத்திரராவர். தாயாருடைய வழியால் சீ. எம். எஸ். மிஷனில் றெவரன் பாதிரியாராயிருந்த மிஸ்ற்றர் ஜோன் ஹென்ஸ்மன் அவர்களுக்குப் பௌத்திரருமாவர். இவர் சென் ஜோன்ஸ் கல்லூரியிலும், மதராஸ் பிஷொப் கிறம்மர் ஸ்கூலிலும் கிறிஸ்ற்றியன் கொலீஜ்சிலும் கல்விகற்றவர். மட்றாஸ் யூனிவேர் சிற்றி வீ. ஏ. பரீக்ஷையில் விசேஷ பாடங்களாயுள்ள இங்கிலீஷ், லற்றின், ஹிஸ்றறி, எக்கொனமிக்ஸ் என்பவற்றில் சித்தியடைந்த வர். இத்துடன் எம். ஏ. வீ எல். என்னும் அரும் பெரும் பரீக்ஷைகளில் அதிக திறமையோடு சித்திவாய்ந்தவர். இங்ஙனம் பலவித பரீக்ஷைகளிலும் தேர்ந்து கிறிஸ்ற்றியன் கல்லூரியிலும், திறினிற்றிக் கல்லூரியிலும், அதன்பின் மஸ்லீபட்டணம் நோபிள் கல்லூரியிலும் 1914-ம் ஆண்டு தொடக்கம் 16-ம் ஆண்டு வரை யில் சென் ஜோன்ஸ் கல்லூரியிலும் ஆசிரியராயிருந்தனர். அதன் பின் 1916 முதல் 1924-ம் ஆண்டுவரை கண்டியில் பிரபல அத்வக் காத்தாகவும், அயிட்டிங் டிஸ்றிக் ஜட்ஜாகவும், பொலீஸ் மஜிஸ் ரேட்டாகவும் கடமை பார்த்தனர். 1920-ம் ஆண்டு முதல், வை. எம். சீ. ஏ. சங்கத்துப் பிறெசிடென்டாகவும், சோஷல் சேர்விஸ் லீக் செக்றட்டரியாகவும், 1918-ம் ஆண்டு முதல் 1924-ம் ஆண்டு வரை கண்டித் தமிழர் சங்கத்து வயிஸ் பிறெசிடெண்டாகவும், அதன்பின் கண்டி, அசோசியேஷன், றேற்பேயேஸ் சங்கம் முத லானவற்றை யேற்படுத்தி சனங்களுக்குப் பெரும் ஒத்தாசைகள் செய்தவர். 1918-ம் ஆண்டு தொடக்கம் 1923-ம் ஆண்டுவரை நேஷனல் காங்கிரசில் பெரிதும் உழைத்தவர். 1924-ம் ஆண்டு முதல் 1927-ம் ஆண்டுவரை அப்பீல் கோடுகளிலே அரும் பெரும் வழக்குகளை நடாத்தியதோடு சட்டக்கல்லூரி மாணவருக்கு கிறமி னல் சீவில் என்னும் பிரமாணங்களைக் கற்பிக்கின்ற லெக்ஷறரா கவுமிருந்தனர். ஓல் சிலோன் பொலிற்றிக்கல் கான்பிரசிலும், ஓல்

சிலோன் தமிழ் காங்கிரசிலும் காரியதரிசியாயிருந்து டொனமோர் கொம்மிஷனருக்கு வாக்குமூலங் கொடுத்தவர். அதன்பின் 1928-ம் ஆண்டில் அவிசாவலைக்கு அடிஷனல் டிஸ்திரிக் ஜட்ஜாகவும், பொலிஸ் நீதவானாகவும் நியமனம்பெற்று அவ்வூரிற்றானே வசிக்கின்றனர். யாமறிந்தளவில் மிஸ்றர் வேதவனம் கல்வியாலும், அறிவாலும், குணத்தாலும் சிறந்த புனிதராவர்.

## K. Vaithianathan Esq., C. C. S. Colombo.

நீதிபதி ஸ்ரீமான் வைத்தியநாதன்:— இவர் யாழ்ப்பாணத்தைச் சார்ந்த கோவையில் அடிமை, குடிமை, ஆட்சி, அதிகாரம், செல்வம், சீர்த்தி முதலானவற்றோடுகூடிய பெரும் பிரபுக்களின் சந்ததியிற்றோன்றிய திருவாளர் கந்தையாபிள்ளையுடைய புத்திரராவர். இவர் 1896-ம் ஆண்டு ஜூலாய் மாதம் 23-ந்திகதி பிறந்தவர். சிலகாலம் யாழ்ப்பாணத்துச் சென் பற்றிறிக் கல்லூரியிலும் அதன்பின்னர் கொழும்பிலும் கல்விகற்றுச் சகலமான பரீக்ஷைகளிலும் தேர்ந்தபின், சிலோன் மெடிக்கற் கல்லூரியில் உயர்தரக்கல்விகற்று வயித்தியமாணவராயிருந்து சிலவற்றில் சித்தியடைந்தவர். அதன்பின்னர் இங்கிலாந்து முதலிய தேசங்களுக்குச் சென்று, சிவில் சேர்விஸ் முதலான பரீக்ஷைகளில், முதன்மை பெற்று1923-ம் ஆண்டு தொடக்கம் இலங்கையின் பலபாகங்களிலும் உத்தியோகமாயிருந்து, பெரும் பதவிகளைக்கையாண்டு தற்போது மேல்மாகாணத்துக்கு உப ஏசெண்டாயிருக்கின்றனர். இவர்குலத்துக்கேற்றகுணமும் செயலும் உடையவர். சமயாபிமானமும், சாதியாபிமானமும், பரோபகாரசிந்தையும், பெருந்தன்மையுமுடையவர். இவருடைய பெருமையைச் சில வருடங்களாக யாமறிவேம். அத்துடன் பிரபுக்கள் பலரும் இவருடைய திறமையையும் குணமகிமையையும் புகழ்ந்து கூறக்கேட்டுளேம். இதுபற்றியே திருவள்ளுவ நாயனர் "ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச்சான்றோன் எனக்கேட்டதாய்" என்று கூறியுள்ளார். இவ்விஷயமிருப்ப, ஸ்ரீமான் வைத்தியநாதன் காலஞ்சென்ற சமாதான நீதிபதியும் பிரபுசிகாமணியுமான ஸ்ரீமான் ஞா. சண்முகமவர்களுடைய இரண்டாவது புத்திரி ஸ்ரீமதி Puvaneswari என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து, Sundaravalli, Tiruchelvam என்னும் இரு குழந்தைகளைப் பெற்றனர். ஸ்ரீமதி

புவனேஸ்வரியின் குணவிசேஷத்தைச் சொல்லுகில் இந்தப்பெண் மணி கல்வி, அறிவு, ஒழுக்கம் முதலான வற்றிலும் குணத்திலும் சிறந்த பிள்ளையாய் விளங்குகின்றனர். இந்தப்பெண்ணரசி எம்மு டைய மாணுக்கிகளு ளொருவருமாவர். தம்பதிகள் நீடூழிவாழ்க.

## Mr. P. C. Villavarayan, B. A

University Scholar, Barrister - at - law, Colombo.

பாரிஸ்டர் ஸ்ரீமான் வில்லவராயன்:—இவர் யாழ்ப் பாணத்து நல்லூரிலே சைவ வேளாண் செட்டிமரபிலே யுதித்த திருவாளர் தில்லையம்பலம் மகன் பொன்னம்பல மவர்களுடைய சிரேஷ்ட புத்திரராவர். இவர் 1894-ம் ஆண்டு தை மாதம் 7-ம் திகதி மாத்துறை யென்னுமிடத்திற் சென்னமானவர். இவரு டைய பிதா, பெரியகோட்டுச் சக்கிடுத்தாராகவும், முதலியாராக வுமிருந்தவர். ஸ்ரீமான் வில்லவராயன் நற்பழக்க வொழுக்க முடையவராய் வளர்ந்து ரோயற் கல்லூரியிற் கல்வி கற்று இலங் கைச் சர்வகலாசாலை மாணவராக இங்கிலாந்து முதலிய மேலைத் தேசங்களுக்குச் சென்று உயர்தர கல்விகற்று பெறுதற்கரிய பெரும் பட்டங்களைப் பெறறு 1918-ம் ஆண்டு முதலாக பிரபல நியாயதுரந்தரராய் விளங்குகின்றனர் இலங்கையிலிருந்து இங் கிலாந்து சென்றோருள் யாவரும் மதிக்கத்தக்க கல்விமானுய் வந் தவர் இவரொருவரே யாவர். இவருடைய கல்வித்திறமையைப் போற்றாதாரில்லை. காலஞ்சென்ற சிற். கைலாசபிள்ளை முதலியார், வைத்தியநாதமுதலியார் என்போர் இவருக்கு ஞாதிகளாவர். இவரின் பெருமையைப்பற்றிச் சொல்லுகில் குலத்தாலும், குணத் தாலும், யோக்கியத்தாலும், அறிவாலும், நேர்மையாலும், மற்று மெவ்வகையாலும் சிறந்தவர் என்பதற்குச் சந்தேகமில்லை. இத் தன்மைகளையுடைய ஸ்ரீமான் வில்லவராயன், காலஞ்சென்ற டாக் டர் சின்னத்தம்பியுடைய புத்திரி ஸ்ரீமதி Saraswathi என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து, Ananda Kumar, Vijayalakshmi, Sri Krishna என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப் பெற்றனர் ஸ்ரீமதி சரஸ்வதியைப்போல் சிறந்த குணவதியை தமிழகத்தாருட் காண்பதரிது. சிறுபராயம்முதலாக இப் பெண் மணி எம்மிடத்தில் கல்விகற்றவர். ஆகவே இத்தம்பதிகள் இனிது வாழ எல்லாம் வல்ல இறைவ னருள்புரிவாராக

## **R. Vamadeva Esq**, Vice Principal, Parameswara College

ஸ்ரீமான் வாமதேவா:—இவர் எத்திசையும் பிரக்கியாதி பெற்று விளங்கும், கௌரவ ஸ்ரீமான் சேர். இராமநாதனவர்களுடைய கனிஷ்ட புத்திரராவர். தற்போது பரமேஸ்வரக் கல்லூரித் தலைமை ஆசிரியருளொருவராயிருக்கின்றனர். இவர் பிதாவைப் போல் சிறந்த குணங்களையுடையவர். யாழ்ப்பாணத்து மாணவர்களின் கல்வி விஷயமாகப் பெரிதும் உழைத்து வருகின்றனர். இவர் புரோக்கர் சங்கரப்பிள்ளை அவர்களுடைய கனிஷ்ட புத்திரி ஸ்ரீமதி Annapurani, என்னும் குணவதியை விவாகஞ் செய்து Sivakumaran, Sellachi, Ramasinh, Balasundram. என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப்பெற்று யாழ்ப்பாணத்தில் வசிக்கின்றனர். ஸ்ரீமதி செல்லாச்சி என்னும் பெண்மணி கல்வியிலும், வீணைமுதலான வாத்தியங்களை வாசிப்பதிலும் திறமையுடையர். இத்தம்பதிகள் இனிது வாழ்வார்களாக.

## **K. Velautham Esq.**, Maintenance, Inspector, C. M. C.

ஸ்ரீமான் வேலாயுதம்:—இவர், புலோலி என்னுமிடத்தில் பெரும் பிரபுக்கள் சந்ததியிலே தோன்றியவர். இவருடைய பிதாவுக்குப் பெயர் கிருஷ்ணபிள்ளை, இப்பெரியார் இதற்குமுன் திரிகோணமலை ஆதியவிடங்களில் பிரசித்த கொந்தாரிசுவாயிருந்தவர். புத்திரராகிய ஸ்ரீமான் வேலாயுதம் 1888-ம் ஆண்டு நவம்பர் மாதம் 24-ம் திகதி பிறந்தனர். இவர் இராஜதானியாகிய சென்னைக் கிறீஸ்தியன் கொலிச்சிலும், சென் ஜோன்ஸ் கல்லூரியிலும் கல்விகற்று அநுராசபுரப் பகுதியில் சேவையராக இருந்தவர். இப்பொழுது கொழும்பு முனிசிப்பாலிற்றியில் உத்தியோகம்பெற்று மெயின்ரனன்ஸ் இன்ஸ்பெய்க்டராய் இருக்கின்றனர். இவருடைய பெருமையைச் சொல்லுகில், இவர் குலாசாரம், மதாசாரம்பூண்ட யோக்கியராவர். இவர் அத்வகாத் எம். ஏ. சங்கரபிள்ளையுடைய புத்திரி ஸ்ரீமதி சிவயோகம் என்னும் பெயரையுடையமாதை விவாகஞ்செய்து மகேஸ்வரி, சிவபாக்கியம், ராஜேஸ்வரிஎன்கின்ற பிள்ளைகளைப் பெற்றனர்.

## Veeravagu Kirubaratnam Crowther, S. J. K.
B. A. (Oxon) Editor "Daily News."

மிஸ்ற்றர் கிருபாரத்தினம் கிறௌதர்:— இவர் யாழ்ப்பாணத்திலே ஓர் தக்க குடும்பத்தைச் சார்ந்தவர். வெகுகாலத்துக்குமுன் மட்டக்களப்பிலே குடியேறிப் பிளாண்டராயிருந்த வீரவாகு கிறௌதருடைய புத்திரராவர் இவர் 1888-ம் ஆண்டு பிப்பிரவரி மாதம் 12-ம். திகதி பிறந்தவர். பரித்தித்துறை சிவன் கோவில் ஆதீனகர்த்தராயிருக்கும் இராமசாமிச் செட்டியாருக்கு ஞாதியாயுள்ளவர். இவருடைய தாயாருக்குப் பெயர் எமிலி கிறௌதர். இவர் லண்டன் ஒக்ஸ்வோட் முதலான இடங்களில் கல்விகற்றுப் பெரும பட்டங்களைப்பெற்று தற்போது "டெயிலி நியூஸ்" பத்திரிகைக்கு ஆசிரியராயிருக்கின்றனர். யாமறிந்தளவில் மிஸ்ற்றர் கிறௌதர் விசேஷகுணங்களையுடைய குணசாலியாவார்

## S. Veluppillai, Esq., Metal Contractor, Maradana.

ஸ்ரீமான் வேலுப்பிள்ளை:— சிவபுண்ணிய சீலராய்ப் பிரபலமுற்று விளங்கும் இவ்வுத்தமர் மூளாய் என்னுமிடத்தைச் சென்மஸ்தானமாயுடையவர். "நின்று மிருந்தும் நடந்தும் கிடந்தும் என்றும் சிவன்றாளிணை" யென்றபடி இவர் சிவபக்தி வைராக்கிய ஞானங்களிற் சிறந்த யோக்கியராய், சைவாசாரம், சிவத்தியானம், சிவபக்தி, இன்சொல், ஈகை, இரக்கம், சாந்தம், பொறை, அடக்கம் முதலாகிய அரும்பெருங் குணங்களையுடைய உத்தமராய் "அறத்தான் வருவதே யின்பம்" என்னும் வாக்கிற்கிணங்க "இரந்தோர்க்கீவது முடையோர்கடனே" என்றபடி தன்பொருளை உத்தம கருமங்களிலே செலவிடுகின்ற புனிதராய் விளங்குகின்றனர். இவருடைய சிறந்த குணங்களை அறியாதாரில்லை. இவர் ஆன்மசுகத்தின் பொருட்டு இதுகாறும் எத்தனையோ சற்கருமங்களையும், ஸ்தலயாத்திரை, தீர்த்தயாத்திரை முதலானவைகளையும் செய்தவர். இத்தகைய ஸ்ரீமான், வேலுப்பிள்ளை, கந்தையாவுடைய புத்திரி ஸ்ரீமதி பறுவதம், என்னும் மாதரசியை விவாகஞ் செய்து சண்முகப் பெருமான்றிருவருளால் சற்புத்திர சந்தானங்களைப் பெற்றனர். இப்பெண்மணி சமயாசாரங்களிற் சிறந்தொழுகும் சுகுணவதியாவர். இத்தம்பதிகள் இனிதுவாழ்வார்களாக.

## Mudaliyar S. Vallipuram.

Land Settlement Office, Colombo

ஸ்ரீமான் முதலியார் வல்லிபுரம்:— இவர் நவாலிப் பதியிலோர் பாரியகுடும்பத்தைச் சார்ந்தவர். இவருடைய பிதாவுக்குப் பெயர் சின்னத்தம்பியாபிள்ளை. இவர் சமயாசாரங்களையுடைய யோக்கியராய் விளங்கினர். ஸ்ரீமான் வல்லிபுரமுதலியார் ஏறக்குறைய முப்பது வருடகாலமாக அரசாங்கத்தில் கடமை பார்த்து யாவராலும் சன்மானிக்கப்பெற்று வருகின்றனர். இவர் சாந்தம், பொறை, அடக்கம், சமயாசாரம், பிரபுத்வம், பெருந்தன்மை, பரோபகாரம் முதலாயுள்ள அரும் பெருங் குணங்களையுடைய உத்தமராய், தமிழ்மக்களுட் சிறந்த புனிதராய் விளங்குகின்றனர். இவர் முதலாவதாக கந்தர்மடம் நல்லதம்பியாருடைய புத்திரி ஸ்ரீமதி விசாலாக்ஷி யென்னும் மாதை விவாகஞ்செய்து நியாய மாணவராயிருக்கும் நாரணபிள்ளை, புவனேஸ்வரி, செல்லாச்சி, என்னும பிள்ளைகளையும், இரண்டாவதாக ஸ்ரீமதி நாகரெத்தின மென்னும் மாதை மணந்து, இரத்தினேஸ்வரி யென்னுமோர் பெண் மகவையும் பெற்றனர.

## S. Velautham Pillai, Merchant, Maradana

திருவாளர் வேலாயுதம் பிள்ளை:— இவர் தஞ்சாவூர் ஜில்லாவைச் சேர்ந்த பனையூர் என்னுங் கிராமத்திற்றோன்றிய திரு. சின்னச்சாமி பிள்ளையின் புத்திரராவர். இவர் சுபானு வருடம் புரட்டாதிமாதம் 24-ம் திகதி கூடிய அசுபதி நக்ஷத்திரத்திலே ஜெனனமானவர். இவருடைய தாயாருக்குப் பெயர் சௌந்தர அம்மாள், இவ்வம்மையார் சிவபக்தியிற் சிறந்த உத்தமியாவர். இவருடைய மனையாளின் பெயர் ஸ்ரீமதி பொன்னம்மாள், இத்தம்பதிகள் தனபாக்கியம், கதிர்காமன் என்கின்ற இரு குழந்தைகளைப் பெற்றனர். திருவாளர், வேலாயுதம் பிள்ளை மருதானையில் பிரபல வர்த்தகராய் விளங்குகின்றனர். இவர் சைவாசாரமும், சாதியாபிமானமுமுடைய யோக்கியராவர்.

## Mr. Vyramuttu Kanagaraja,

Govt., Surveyor, Ratnapura

ஸ்ரீமான் கனகராஜா:— இவர், ஆனைக்கோட்டையி லோர் தக்க குடும்பத்தைச் சார்ந்தர். இவருடைய மூதாதைகள் பிறவியிலே சைவர்களாயும், சாதிமான்களாயும் விளங்கினார்க ளென அறியக்கிடக்கின்றது. உதாரணமாக பேராயிரமுடையான் சந்ததியிற்றோன்றிய பண்டைம்பப்பெருமாள், கண்ணப்பர், ஐயம் பெருமாள், சிதம்பரநாதர், பெரியதம்பி, குமாரவேலர், சின்னத் தம்பியார், குமாரவேலர் என்னும் பெயர்களையுடைய பெருமக் களின் வழித்தோன்றலா யுதித்த வயிரமுத்து றயிற்றாவர்களின் சிரேஷ்டபுத்திரரே ஸ்ரீமான் கனகராஜா. இவருடைய சகோதரரு ளொருவராகிய சிவரத்தினமென்பவர், பகிரங்க வேலைப்பகுதியில் ஓவசியராயிருக்கின்றனா. கனிஷ்ட சகோதரராகிய மயில்வாகன மென்பவர் இந்துக்கல்லூரியில் ஆசிரியராயிருக்கின்றனர். மற் றைய மூவரும் பெண் சகோதரங்களாவார்கள். அவர்களுடைய நாமங்கள் முறையே அமிர்தலக்ஷ்மியம்மாள், சொர்ணலக்ஷ்மியம் மாள், அன்னபூரணம்மாள் என்போராவர். இனி இவர்களுடைய தாயார்வழியோ என்றால், பேராயிரமுடையான் சந்ததியிற்றோன் றிய உபரப்புலம் தேவேந்திரமுதலியார், விசுவநாதர் கந்தப்பர் மகன் முத்தசாமி றயிற்றநுடைய புத்திரியாவர். இவ்வம்மையா ருக்குப்பெயர், அன்னமுத்து என்பார்கள். இங்ஙனமாகப் பிதா வழியாலும், மாதாவழியாலும் பிரபலமுற்ற ஸ்ரீமான் கனகராஜா விரோதி ௵ ஆனி ௴ 18-ம் ௳ ஞாயிற்றுக்கிழமை பூசநக்ஷத்தி ரத்திலன்று பிறந்தனர் இவர் சிறு பிராயம்முதல் சற்குண சம் ன்னராய் வளர்ந்து திறினிறறிக் கல்லூரியிலும், வெஸ்லிக் கல்லூரி யிலும் கல்விகற்று, அரசாங்க உத்தியோகத்தில் ஏறக்குறைய 17 வருடகாலம்வரையில் மிக்கநேர்மையோடும், திறமையோடும் கட மைபார்த்து யாவராலுஞ் சன்மானிக்கப் பெற்று வருகின்றனர். இவர் முதலாவதாக பேராயிரமுடையான் சந்ததியிற் றோன்றிய பத்தஉடையார், கொத்தஉடையார், குழந்தைச்சட்டம்பியார், குல நாயகமாப்பாணமுதலியார், புன்னத்தஉடையார், இராமுஉடை யார், குழந்தை தம்பி, முருகேசஉடையார் புத்திரி, ஸ்ரீமதி சிவரத் தினமென்னும் பெண்மணியை விவாகஞ்செய்தனர். இந்தப்பெண்

மணி இல்லற தருமத்தைக் குறைவற நடாத்தி 1928-ம் ஆண்டு மாசி மீ 4-உ தேக வியோகமாயினர். ஸ்ரீமான் கனகராஜா இரண்டாவதாக நவாலி நற்குணசேகரமுதலியார் வம்சத்திற்றோன்றிய சின்னத்தம்பியார் மகன் தம்பிநாதருடைய புத்திரி ஸ்ரீமதி ஞானகலாம்பிகை என்னும் பெண்மணியை விவாகஞ்செய்திருக்கின்றனர். இந்தப் பெண்மணியும் சற்குணசாலியாவர். இது நிற்க; ஸ்ரீமான் கனகராஜா பிரபுத்துவம், சாந்தம், பொறை, அடக்கம், பரோபகாரம், பெருந்தன்மை ஆகிய சிறந்த குணங்களையுடைய யோக்கியராயும், உத்தமராயும் விளங்குகின்றனர். இவருடைய மூதாதைகளாகும் முத்துசாமி நயினாரும், வைரமுத்து நயினாரும் தரும விஷயங்களி லீடுபட்ட புண்ணிய சீலர்களாய விளங்கினார்கள். அவர்களைப்போல் இவரும் சற்பாத்திரராவர்.

## The Late Mr. C. Vyramuttan, Merchant.

காலஞ்சென்ற ஸ்ரீமான் வைரமுத்து:— இவர் இருமரபிலுந்துய்ய முதலியார் சந்ததியிற்றோன்றிய கதிர்காமர் மகன் வன்னியசிங்க முதலியார் கதிர்வேலு செல்லப்பாவுடைய புத்திரருளொருவராவர். இவர் பிரசோற்பத்தி வருடம் ஆவணி மாதம் 29-ம் திகதி ஜெனனமானவர். இவர் வியாபார முறைகளில் ஈடுபட்டு சீமைவர்த்தகராகவும், தமிழ் மக்களுள் பாரிய தனவந்தராகவும் பிரபலமுற்று விளங்கினார். "தம்பிப்பிள்ளை பிரதேஷ்" என்னுமோர் கம்பனியை ஸ்தாபித்து நடாத்தியவருமிவரே! இவர் காலஞ்சென்ற ஸ்ரீமான் பிரபல புரோக்கர் குலவீரசிங்கமவர்களின் சிரேஷ்ட புத்திரி ஸ்ரீமதி கனகாம்பிகை யென்னும் மாதுசிரோன்மணியை விவாகஞ்செய்து சகலமான செல்வங்களையும், சற்புத்திர சந்தானங்களையும் பெற்றுச் சௌபாக்கிய சம்பன்னராய் வாழ்ந்து, மிக வருமையாய்ப் பெற்றெடுத்த, நடேஸ்வரனையும், ஞானபூரணியையும் இழந்து இதே கவலையாக இற்றைக்குச் சில வருடங்களுக்குமுன் காலஞ்சென்றனர். புத்திரசோகம் யாரைத் தான்விட்டது. பரிதாபம்! பரிதாபம்! யாமறிந்தளவில் நடேஸ்வரனைப்போல் நற்குண சீலனைக் காண்பது மிக வருமையிலும் அருமை. இப்பொழுது வாமதேவி யென்னும் பெண்மணியே சகலசம்பத்துகளுக்கும் உரிமைக்காறியானார்

## Mrs. C. Vyramuttan, "Sybildton."

ஸ்ரீமதி, கனகாம்பிகையம்மாள்:-இச்சுகுணவதி, காலஞ் சென்ற ஸ்ரீமான் வைரமுத்துவின் மனையாளாவர். இவ்வம்மை யாருடைய மூதாதைகள் பெரும் புண்ணிய சீலர்களாயும், சாதி மான்களாயும் விளங்கினார்கள். அவர்களுடைய வரலாற்றைச் சொல்லுகில் மாணுப்பிள்ளை சந்ததியிற்றோன்றிய ஆறுமுகம் அம்ப லவாணருக்கு பௌத்திரியும் பிரக்கியாதிபுடன் விளங்கிய ஸ்ரீமான் குலவீரசிங்கத்துக்குச் சிரேஷ்ட புத்திரியுமாவர். இவ்வுத்தமி நற் பழகக வொழுக்கமுடைய குணசாலியாய் வளர்ந்து ஆங்கிலம், தமிழ் என்னு மிருபாஷைகளையும் கற்று ஸ்ரீமான் வைரமுத்துவை விவாகஞ் செய்து இல்லற தருமத்தை நடாத்தி ஞானபூரணி, நடேஸ்வரன், வாமதேவி என்னும் பிள்ளைகளைப்பெற்றுச் சகல சௌபாக்கிய சம்பன்னியாய் அட்டைஸ்வரியங்களையுடைய சீமா ட்டியாய் சமயாசாரங்களிலும், தானதருமங்களிலும் சிறந்த யோக்கியவதியாய் விளங்குகின்றனர். பதிவிரதா தருமம்பூண்ட இப்பெண்ணரசி பிதாவைப்போல் அரும்பெருங் குணங்களையுஞ் செயல்களையுமுடைய குலமகளாய் தம்முடைய காலத்தையும் கருத்தையும் நல்விஷயங்களிற்போக்கி, சிவபத்தியும், சிவசிந்தனை யுமுடையாராயிருக்கின்றனர். புண்ணிய க்ஷேத்திரங்களாகிய சீர் காழி, சிதம்பரம், திருச்செந்தூர், இராமேஸ்வரம், மதுரை, முனீஸ் வரம், கதிர்காமம், நல்லூர் என்னும் திவ்விய ஸ்தலங்களுக்குச் சென்று பூசை, உற்சவம், அன்னதானம், வஸ்திரதானம் என் பவற்றைச் செய்துகொண்டு ஏகாந்தமாயிருக்கின்றனர்.

## Mudaliyar C. Vallipuram. Trincomalee.

இப்பெரியார் மரபாலும், குணத்தாலும், மற்று மெவ்வகை யாலும் சிறந்த புனிதராயும், பரம யோக்கியராயும் பிரபலமுற்றுத் தற்போது திரிகோணமலைப் பட்டின பரிபாலசங்கத் தலைவருளொ ருவராயும் பிரபல உத்தியோகஸ்தராயும் விளங்குகின்றனர்.

## N. Vaitilingam Esq.,

Hard ware Merchant, Colombo,



ஸ்ரீமான் வைத்தியலிங்கம்:— இவர் நவாலிப் பகுதியிலோர் தக்க குடும்பத்தைச் சார்ந்தவர். இவருடைய பிதாவின் பெயர் நாகமுத்து. இவரொரு சிறந்த மனுஷர். "மனம்போல வாழ்வு" என்றபடி நாகமுத்துவுடைய பிள்ளைகளுட் சிலர் உத்தியோகத்திலும், சிலர் வியாபாரத்திலும், சிலர் கமத்தொழிலிலுமிருக்கக் காண்கின்றோம். ஸ்ரீமான் வைத்தியலிங்கம், பிறவுண் கொம்பனியிற் பலகாலம் மிகப் பொறுப்புவாய்ந்த பெரும் உத்தியோகத்திலிருந்து வெள்ளைக்காறராலும், மறநாடறயோராலும் சன்மானிக்கப்பெற்றவர். இவர் இக்கம்பெனியிலிருக்குங் காலத்தில் எத்தனையோ ஏழைமக்களை உத்தியோகமாக்கிப் பெரும் ஒத்தாசைகள்புரிந்திருக்கின்றனர். இற்றைக்குச் சில வருடங்களுக்கு முன் இப்பதவியினின்றும் நீங்கி, சொந்த வியாபார முயற்சியில் ஈடுபட்டு இலங்கையின் நாலுபகுதிகளிலும் வியாபாரஸ்தலங்களை ஏற்படுத்தி, ஆங்காங்கு ஏற்றுமதி இறக்குமதிகளைச் செய்து, வியாபார முறையை விருத்திபண்ணி ஏராளமான சம்பத்துக்களை ஈட்டிப் பாரிய தனவந்தராகவும், சிறை வர்த்தகராகவும் பிரபலமுற்று விளங்குகின்றனர். இவ்வுத்தமரின் அரிய குணங்களை அறியாதாரில்லை ஆயினும் எமதனுபவத்திற் கண்ட சிலவற்றை இங்கு கூறி முடிப்பேம். இவர் சைவாசாரம், சிவத்தியானம், சிவத்தொண்டு, சிவாலயங்களிலே பூசை உற்சவம், ஏழைகளிடத்தன்பு, ஈகை, இரக்கம், சாந்தம், பொறை, அடக்கம் முதலாயுள்ள சிறந்த குணங்களையுடைய யோக்கியராவர். சற் கருமங்களுக்கும், சற்பாத்திரர்களுக்கும் இல்லையென்னாது பொருளுபகரிப்பவர். உதாரணமாக வேரக்கைப்பிள்ளையார் கோவிலில் ஓர் உற்சவத்தை அதிவிமரிசையாக நடாத்திவருகின்றனர். இதுபோன்ற எத்தனையோ சற்கருமங்களைச் செய்திருக்கின்றனர். இவ்வுத்தமர் ஈசனருளால் சந்தான விருத்தியாகித் தற்போது வெள்ளவத்தையில் வசிக்கின்றனர். இவருடைய மருகரே ஸ்ரீமான் பிறக்டர் நல்லையா. இதில் எஞ்சியவற்றை "மறு சரித்திரத்தில்" விரிவாய்க் கூறுவேம்.

## Mr. R. Valliappa Chettiar Avl.

ஸ்ரீமான் வள்ளியப்பச் செட்டியார்:— தற்போது S. R. M. M. R. M. R. M. என்னும் விலாசத்துக்கு அதிபராயிருக்கும் இவ்வுத்தம தயாளகுண சீலருடைய பெருமையையும், வரலாற்றையும் சொல்லுங்கில், இவர் இராமநாதபுரம் ஜில்லாவைச் சார்ந்த சொக்கநாதபுரம் என்னுங் கிராமத்தை ஜென்மஸ்தானமாயுடைய திருவாளர் இராமசாமிச்செட்டியாரவர்களின் அருந்தவப் புதல்வராவர். இவருடைய தாயாருக்குப் பெயர் திருமாள் ஆச்சி. ஸ்ரீமான் வள்ளியப்பச்செட்டியார், விகாரி வருடம் சித்திரைமாதம் மிருகசீரிட நக்ஷத்திரத்திலே சுபஜெனனமானவர். இவருடைய மூதாதைகள் பரம்பரையான செல்வர்களாயும், சீமான்களாயும், சிவபக்தி, வைராக்ய ஞானங்களில் முதிர்ந்த உத்தமர்களாயும், சிவதொண்டர்களாயும் விளங்கினார்களென அறியக்கிடக்கின்றது. உதாரணமாக இவருடைய முன்னோர் பல புண்ணியங்களின்மீடு பட்டுச் சற் கருமங்களாயுள்ள அன்னசத்திரம், அகத்தீஸ்வர இலிங்கப் பிரதிஷ்டை முதலானவைகளைச் செய்திருப்பதாகவும் அறியலானோம். புண்ணியவசத்தாற் றோன்றிய ஸ்ரீமான் வள்ளியப்பச் செட்டியார் நற்பழக்க வொழுக்கமும், சாந்த குணமும், கல்வி யறிவும், புத்திசாதுர்யமும், பெரியோர் நட்பும், பெருந்தன்மையும், பரோபகார சிந்தையுமுடைய பிரபுவாய் யாவராலும் நன்கு மதிக்கப்பெற்ற உத்தமராய் விளங்குகின்றனர். இவருடைய குணமகிமையை பிரபுக்கள் பலரும் வியந்து கூறினமையால் இப்புத்தகத்தில் சுருக்கமாய் எழுதலானோம். இவருடைய மனைவியின் பெயர் ஸ்ரீமதி மெய்யம்மை ஆச்சி. இவ்வுத்தமி, சற்பிலக்கணங்களையுடையகுணசாலியாவர். இத்தம்பதிகள் சற்புத்திர சந்தானங்களைப்பெற்று இனிதுவாழ ஈசன் அருள்புரிவாராக.

## Mr. Veeriah. James Finley & Co.

திருவாளர் வீரையா பிள்ளை:—இவ்விளைஞர் தஞ்சாவூர் ஜில்லாவைச்சார்ந்தவர். ஜேமஸ் பின்லே என்னுமோர் பாரிய கம்பேனியில் சுமார் 15-வருடகாலம்வரையில் பீஸ்குட்ஸ் டிப்பாட்மெண்டில் உத்தியோகமாயிருக்கின்றனர். இவர் மிக்கநேர்மையும், சமயாசாரமும், சாந்தகுணமுமுடையவர். இவர் குருபக்தி விஸ்வாசமுடையவராய் எம்பிடத்திலே சிலகாலம் கல்வி கற்றவர்.

## Mr. Velautham Pillai. Native Physician.

சுதேச வைத்தியர் வேலாயுதம் பிள்ளை:—இவர் நல்லூர் கிழக்கிலேயுள்ளவர். தற்போது இந்நகரிலிருக்கும் பல்லாயிரம் வைத்தியத் தொழிலாளருள் கல்வியறி வொழுக்கங்களாலும், மிக்க அனுபவத்தாலும் நிறைமையுடையவர். வைத்திய முறையில் பிரக்கியாதிபெற்றுக் காலஞ்சென்ற இராமலிங்கமவர்களுக்கு மருகராவர். இவர் மாமனைப்போல் வெகு சாதுரியமும், வைத்தியமுமுடைய குணசாலியாய் விளங்குகின்றனர்

## W

## Dr. G. Wignaraja, L R C P (Lon) M R CS (Eng)

And Barrister-at-Law

ஸ்ரீமான் விக்னராஜா:—பிரபல டாக்டரும், பாரிஸ்டருமாகிய இவ்வுத்தமர் இலங்கைத் தமிழ மக்களுட் பிரக்கியாதி பெற்றுச் சமாதான நீதிபதியாய் விளங்கும் தருமசீலரான பிரபு சிகாமணி ஸ்ரீமான் க. ஞானசேகரமவர்களின் கனிஷ்ட புத்திரராவர். இவர் தமிழரசர்களின் வமிசத்துத் தோன்றிய மனப்புலி சிங்க முதலியார், தனபாலசிங்க முதலியார் என்னும் பெருமக்களுடைய சந்ததியிலுதித்த கதிர்காமர் சுப்பிரமணியர் மகன் கதிரவேற் சிறுப்பரவர்களுக்குப் பௌத்திரராவர். இனி இவருடைய தாயாரவழியைச் சொல்லுகில் வட்டுக்கோட்டை மாணமுதலியார் வம்சத்துத்தோன்றிய மயில்வாகன சிறுப்பரவர்களின் அருந்தவப் புதல்வியாவர். இத்தருமகுணசீலியின் பெயர் ஸ்ரீமதி நீலாதாக்ஷி. இப் புனிதவதியுடைய பெருமையை இதில் எழுதியடங்காது, ஆயினும் சிறுகக்கூறுவேம். இவ்வுத்தம அம்மையார், கல்வியறிவொழுக்கங்களிலும், தானதருமங்களிலும் சிறப்புற்றுச் சிவபக்தி வைராக்கிய ஞானமுடையவராய் விநாயகக் கடவுளைவைத்துப் பூசைசெய்து அப்பெருமானுடைய கிருபா நோக்கத்தால் சண்முகம், விக்கினராசா என்கின்ற இரு புத்திரசிகாமணிகளைப் பெற்றுச் சிவலோகமடைந்தனர். ஸ்ரீமான் விக்கினராசா 1897-ம்



DR. G. WIGNARAJAH,

BARRISTER-AT LAW.

ஆண்டு நவம்பர் மாதம் 20-ம் திகதி பிறந்தனர். இவர் பிதா மாதா வைப்போல் நற்பழக்கவொழுக்கமும், சைவாசாரமும், சாந்தகுண மும், மிக்க பொறுமையும், புத்தி விவேகமும் உடைய சன்மார்க் கராய் வளர்ந்து கல்வி கற்றுக் கேம்பிறிஜ் பரீக்ஷைகளிற் தேர்ந்து மெடிக்கற் கல்லூரியில் வைத்திய மாணவராயிருந்து இங்கிலாந்து சென்று உயர்தரக கல்வி கற்றுப் பெரும் பட்டங்களைப்பெற்றுப் பிரபல டாக்டரானார். இரண்டாவது முறையாக இங்கிலாந்து சென்று நியாயப்பிரமாணங்களைக் கற்று அதிலும் மஹா பாண்டித் தியமுடையவராய் பாரிஸ்டர் பட்டம் பெற்றனர். இங்ஙனம் இரு பகுதிகளிலும், நிறைமைவாயந்தோர் இலங்கையில் இல்லை யெனலாம். ஸ்ரீமான் விக்கினராஜா சிலகாலம் ஜெனரல் ஆஸ்பத் திரியில் கடமைபார்த்துத் தற்போது சொந்தப் பொறுப்பாக ஓர் மருந்துச்சாலையை ஸ்தாபித்துப் பிரபல டாக்டராய் விளங்குகின் றனர். இவர் இன்சொல், நகை, இரக்கம், பகுத்தறிவு முதலா னவைகளையுடைய பரம யோக்கியர். பிதா, மாதா, குரு, உபாத் தியாயர் என்னும் பெரியோர்களிடத் தன்புடையவர். உதாரண மாக எம்மிடத்திலே நீதிநூல்களைப் பலகாலங் கற்றவர். யாத்திரை விஷயமாக காசிவரையிற் சென்றவர். இத் தன்மைகளையுடைய ஸ்ரீமான் விக்கினராஜா ஸ்ரீமதி Muttamma, என்னும் குணவ தியை விவாகஞ்செய்து Neela-Devi, Ponnambalam, என் னும் பெயர்களையுடைய இருகுழந்தைகளைப் பெற்றனர். ஸ்ரீமதி முத்தம்மாள் கல்வியறிவிலும், நற்குண நற் செய்கைகளிலும், விவேகத்திலும் சிறந்த உத்தமியாய், கேம்பிறிஜ் பரீக்ஷைகளிற் தேறிய புத்திசாலியாய் இங்கிலாந்து முதலிய மேலைத்தேசங் களுக்குச்சென்று திரும்பிய பாக்கியசாலியாய் விளங்குகின்றனர். இத்தம்பதிகள் இனிதுவாழ இறைவன் அருள்புரிவாராக.

# அநுபந்தம்.

## The Late Sir P. Arunachalam, & HIS POLITICAL ACTIVITIES

கௌரவ சேர். அருணாசலம்
இலங்கை அரசாங்க முறையைச் சீர்செய்து
இராச்சியத்தை திருத்திய விதங்கள்.

காலஞ்சென்ற கௌரவ சேர். பொன்னம்பலம் அருணாசலம் உள்ளபடியே ஒரு அவதார புருஷரென்று சொல்லவேண்டும். ஏனென்றால்? இவர் உலகத்திலுள்ள ஏழைகளுக்காகப் பாடுபடவும், அவர்களுடைய சுவதந்திரங்களைக் காப்பாற்றுதற்காகவும் உருவெடுத்து இப்பூமியிற் பிறந்தாரெனச் சொல்லவேண்டியிருக்கிறது. இதற்கு உதாரணமாக அனேக வித்துவான்களும், பெரும் மேதாவிகளும் இவருடைய செயல்களைப்பற்றிப் புகழ்ந்து பாராட்டிப் பல பத்திரிகைவாயிலாகவும், புத்தகங்கள் மூலமாகவும் மிகப் போற்றியிருக்கின்றனர். "எல்லாரும் மானிடவராவாரோ இப்புவியில் கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ" என்பதற்கிணங்கப் பலவிதத்திலும் இவரொரு புண்ணியாத்மா வென்பதற்குத் தடையில்லை. இவருடைய விவேகத்திற்குத்தக்க கல்வியும், கல்விக்குத்தக்க அறிவும், அறிவிக்குத்தக்க ஞானமுமுள்ள மேதாவியாய் விளங்கினார். ஸ்ரீமான் அருணாசலம் இயல்பாகவே தேசாபிமானம், பாஷாபிமானம், சமயாபிமானம், சாதியாபிமானமென்னும் பேரபிமானங்களையுடைய அபிமான புத்திரராயும், மகாயோக்கியராயும், அஷ்டாவதானியாயும் விளங்கினார். இவர் கேம்பிறிஜ் யூனிவேர்சிற்றி யென்னும் சர்வகலாசாலையில் உயர்

தாக் கல்விகற்கும் பொழுதே தேசத்தொண்டு செய்யவேணு மென்கின்ற பேரவா இவருடைய இருதயத்தில் உதயமாயிற்று. அதுமுதலாக இறக்கும் வரையில் இதே சிந்தனையுடையராயிருந்தனர். அரசாங்க உத்தியோகத்தை அபேக்ஷித்திருந்தவரல்லர். அருளினைக்காறாமல் "உத்தியோகம் புருஷலக்ஷண" மென்பதற்கிணங்க அதையும் ஒப்புக்கொண்டு அதிக திறமையோடு பார்த்துவந்தனர். அரசாங்க உத்தியோகஸ்தராயிருக்கிற பொழுதும், இராச்சிய பரிபாலன விஷயமாகக் கண்ணுங் கருத்துமாயிருந்தனர். ஸ்ரீமான், அருணாசலம் சிவகாருண்ணியமும், ஆத்மஞானமுமுள்ள மெஞ்ஞானியானதால் ஏழை மக்கள்மீதன்புவைத்து அவர்களுடைய கருமங்களை பார்த்து கொடுக்கவும், அவர்களுக்கு ஊழியம் செய்யவும், ஒருப்பட்டனர "மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார கண்டுஞ்சார் எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் தம் கருமமே கண்ணாயினர்" என்றபடி தாம் எடுத்துக்கொண்ட விஷயங்களை நிறைவேற்றுங் கருத்துடையராயிருந்து, இத்தேயத்துள்ள ஏழை மக்களுக்கு, அத்தியாவசியகமாய வேண்டுவனவற்றையெல்லாம், ஏற்பாடுசெய்துவைத்தனர். 230 வருடகாலங்களாக அந்தகாரமென்னும், இருளினால் மூடப்பெற்று ஒருவிதமான சுவதந்திரங்களையும பெறவியலாமல் அடிமைகளாக யிருந்தோம். ஸ்ரீமான் அருணாசலமவர்களுடைய கிளர்ச்சியாலும், சூழ்ச்சியாலும் அடிமைத்திறத்தினின்றும் நீங்கி, ஒவ்வொருவரும் சுயேச்சாதிகாரிகளாய்த் தத்தம சுயவுரிமை பூண்டொழுகும் இயல்பினர்களானோம். ஸ்ரீமான் அருணாசலம் ஊரவர்களுக்குச் சார்பாய்நின்று அரசாங்கத்தாரோடு வாதாடியதால், தற்போது பெரும் உத்தியோகங்களை இலங்கைவாசிகள் பெறத்தக்கதாயிருக்கின்றனர். இதற்குமுன் இலங்கைவாசிகளுக்கு பெரும் உத்தியோகங்களை இங்கிலீஷ அரசாங்கத்தினர் கொடுப்பதில்லை. இவ்விஷயத்தையிட்டு ஸ்ரீமான் அருணாசலம், பெரிதும் ஆக்ஷேபம நிகழ்த்திய பின்னரே அனுகூலமாயிற்று. ஸ்ரீமான் அருணாசலம் உத்தியோகமா யிருக்கும்பொழுது எந்தெந்தப் பகுதிக்குத் தலைவராயிருந்தனரோ அந்தந்தப்பகுதியிலுள்ள வேலைகளைச் சீர்படுத்தி, நவீனமுறைகளை யனுசரித்து திருத்தமுறச் செய்துவைத்தனர். சிலர், எக்கருமங்களையும் ஆலோசிப்பதும், மனக்கோட்டை கட்டுவதுமேயல்லாமல் அவற்றை செய்து முடித்தாரில்லை யெனலாம். ஆனல் ஸ்ரீமான்அருணாசலம் எந்த வேலையைச் செய்யத்

தொடங்கினாலும், அந்தவேலையை யாவரும் மெய்ச்சத்தக்கதாக முடிக்கும் வல்லபமுடையராயிருந்தனர். அன்னியருடைய ஆதிக்கத்துளகப்பட்டு அலக்ஷியமாய்க்கிடந்த வெங்களை ஆளாக்கி, எங்களுக்கு நல்லறிவுச்சுடர் கொளுத்தி, நாங்கள் ஈடேறும் வழியைக் காட்டி, எங்களை உலகம் மதிக்கத்தக்கதாகச் செய்துவைத்த இப் புண்ணிய சீலருடைய பெருமையை என்னென்றுதான் சொல்லுவேம், எப்படித்தான் மறப்பேம். ஸ்ரீமான அருணாசலம் உத்தியோகத்தினின்று இளைப்பாறியபின்னா பகிரங்கமாக தம்முடைய ஊருக்குத் தொண்டுசெய்யப் புறப்பட்டனா. இவர் இங்ஙனம கிளம்பியதால் தேசாதிபதிமுதலானோர் அச்சங்கொண்டிருந்தனர். இராச்சியமுறையிற தலையிட்டு, ஊருக்கூர்சென்று பிரசங்கமாரி பொழிந்து இராச்சியபரிபாலனத்திறகுவேண்டும, வழிதுறைகளை போதித்துத் துண்டுப்பத்திரங்களையும், புத்தகங்களையும அச்சிட்டு உலகெங்கும பரப்பி, சனங்களை உறசாகப்படுத்தி, இன்னபடி செய்யுங்கள், இன்னபடி கேளுங்கள் என்று கிளர்சசிசெயது ஈறறில் தாம் எடுத்துக்கொண்ட கருமத்தில் வெற்றியடைந்தனர். ஸ்ரீமான் அருணாசலம் சட்ட சபையிலுள்ள மந்திராலோசனைச் சபை அங்கத்தவராயிருக்குமபோது, எத்தனையோ அரும்பெரும் விஷயங்களையிட்டு அரசினரோடு தர்க்கித்திருககின்றனர், இந்த விதம் வாதாடியவர்கள எவருமில்லையெனலாம். ஸ்ரீமான் அருணாசலம் அரசியல் ஞானத்தில் சிறந்த மேதாவியானதால் இராச்சிய பரிபாலனத்துக் கேறறமுறைகளை யனுசரிக்கத் தொடங்கினர். முதலாவதாக, "ரிபோம லீக்" என்னும நாமத்துடன் ஓர் சபையை ஸ்தாபித்தனர். இரண்டாவதாக, ஒரு கான்பரன்ஸை ஏறபடுத்தினா. மூன்றாவதாக, நேஷனல் காங்கிரஸ் என்னும பொதுஜனசேவைச சங்கமொன்றை நிறுவினர். நான்காவதாக, மஹாஜன சபையை உண்டாக்கினர். இந்தவிதமாகப் பறபல உபாயநெறிகளால் சுவதந்திரமடையும் வழிகளைக் காண்பித்தனர். இதன்காரணமாகச் சட்டசபையில 45 பேருக்கு மேற்பட்டோர் அங்கத்தவரானாகள். இதுவும அருணாசலம அவர்களுடைய அபிப்பிராயமேயாம். அன்னியருடைய ஆட்சியை குறைத்து ஊரவர்களுக்கே அதிகாரத்தையும், ஆளுந்திறத்தையுமுண்டாக்கி வைத்தனர். ஸ்ரீமான் அருணாசலம் இராப்பகல் இதேசிந்தனையாயிருந்து பலவிதத்தினாலும், இவ்விலங்கை அரசாங்கத்தைத் திருத்தி தமிழ்ச்சாகியத்தாரை நன்னிலைப்படுத்தி, ஊர்கடோறும

கிராமச் சங்கங்களையும், கிராமக்கோடுகளையும், கன்ஸபாவ முதலானவைகளையும் ஏற்பாடாக்கிவைத்தனர். இலங்கைச் சீர்திருத்த விஷயமாக மந்திராலோசனைச்சபை முதலானவற்றிலும் ஆக்ஷேபித்திருக்கின்றனர். இனி, தோட்டக்காட்டுக் கூலி ஜனங்களுடைய விஷயமாகப் பாளிமேந்து வரையிலும் எடுத்தாண்டனர். இதுவன்றியும் இலங்கையிலுள்ள பிரதான றோட்டுகளும், மூலை முடுக்குகளும் இவருடைய முயற்சியால் விஸ்தாரமாக்கப்பட்டன. இப்படியெல்லாம் ஒவ்வொரு கருமங்களையும் புதிது புதிதாக உண்டாக்கினர், இதன் பலனைக இன்னும சிலகாலத்துள் சுயராச்சியமும் பெறத்தக்கதாயிருக்கின்றது. இனி, சர்வகலாசாலை விஷயமாகச்சொல்லுகில், முப்பது வருடகாலமாகப பெரும பிரயாசைப் பட்டுவந்தனா. இதுவிஷயமாக எத்தனை யெத்தனையோ தேசாதிபதிகளோடும், பிரமுகர்களோடும் ஆலோசித்து இதற்குவேண்டிய பல ஆயத்தங்களைச் செய்து கொண்டே வந்தனர். அதாவது இலங்கையில் வாழும் ஏழைமக்கள், உயர்தரக்கல்வியை இங்கிலாந்திலே கறகாமல் தங்கள் ஜெனனதேசத்திற்றனே கறகும்பொருட்டாக ஓர் சர்வகலாசாலை யேற்படுத்த வேண்டுமென்று பகிரங்கக கூட்டங்களில் பலருமறியத்தக்கதாகத் தெருவித்திருக்கின்றனர். இந்தக் கலாசாலை ஏற்படுமட்டும் ஸ்ரீமான் அருணசலம் பட்டபாடும் கெட்டகேடும கொஞ்சமல்ல, இதறகு நியாயம் இங்கிலாந்துசென்று சர்வகலாசாலையில தாம கல்வி கற்கும்பொழுதே தங்களூரில் இவ்விதமா யொன்றை ஏறபடுத்த வேண்டுமென்று தீர்மானித்தனா. தாம் நினைத்தபடி சாவகலாசாலையையும் ஸ்தாபித்துச்சென்றனர் இவருடைய புண்ணியத்தால், ஏழைமக்கள் உயர்தரக் கல்விகறக ஏதுவாயிருக்கின்றனா, சர்வ கலாசாலை வேண்டுமென்று கனவிலும் நினையாத இத் தேசவாசிகளுக்கு, தங்கள் பிள்ளைகள் இலகுவாய கல்விகறகும மார்க்கத்தைக்காட்டி வைத்தனர். இதனாலேதான் இவரை தேசாதிபதியாகிய மனிங் "Father of the Uuiversity" என்று அழைத்தார். அதாவது இலங்கைச் சர்வ கலாசாலைக்குச் சேர். அருணசலமவர்களே பிதாவானர், என்னுங் கருத்துப்பட ஆங்கிலத்திலே மொழிந்தனர், "University Journal" என்னும் நாமத்துடன் ஓர் சஞ்சிகையை நடாத்தி அதன்மூலமாக இக்கலாசாலை நடைபெற வேண்டிய வழிவகைகையையும், இதனை ஸ்தாபிக்கவேண்டிய இடைத்தையும், தீர்க்கமாய் வைப்புறுத்திக் கூறியுள்ளார். ஸ்ரீமான் அருணசலம்

வருங்காரியங்களை அறியத்தக்க தீர்க்கதரிசியாய் இருந்தமை யால் "பொலிற்றிக்கல்நீட்" என்னும் ஓர் அரியநூலைச் சுருதி யுக்தி யனுபவத்திறனுைங்கச் செய்து, ஆங்கிலம், தமிழ், சிங்களம் என்னும் மூன்று பாஷைகளிலும் அதனை அச்சிட்டுப் பரப்பிய பின்னர் உலகம் விழித்தெழுந்தது. ஆகவே இந்த மகாநுபாவ ரால் இயற்றப்பட்ட இந்நூல் இராச்சியபரிபாலன முறையைப் போதிக்கும் வேதவாக்கியத்திற்குச் சமானமாய்க் கொள்ளவேண் டியதாயிற்று. இதுபோல் இன்னும் அநேகநூல்களைச் செய் திருக்கின்றனர். இவர் செய்த நூல்களின் பெருமையைப்பற்றி இங்கிலாந்திலுள்ளோரும் மெச்சியிருக்கின்றனர். சமய சம்பந்தமா யுள்ளதும், ஞானார்த்தங்களை யுட்கொண்டதுமாகிய, "நடராஜ தத்துவார்த்தம்" போன்ற நூல்களை ஆங்கிலபாஷையில் சொற்சுவை, பொருட்சுவை ததும்ப எழுதியிருக்கின்றனர். இத் தகைய இலக்ஷணங்களையுடைய ஸ்ரீமான் அருணாசலம் கல்விமானும் கல்விக்களஞ்சியமாய், புலமைவாய்ந்த பெரும் புலவராய, எத்தி சையும் கீர்த்திப் பிரதாபமுற்று விளங்கினார். இவருடைய பெரு மையைப்பற்றி யறியாதார் எத்தேசத்திலு மில்லையெனலாம். இவர் ரோயல் ஏஷியாற்றிக் சொசைற்றி என்னும் மஹாசங்கத்து அக்கிராசனருமாவர். இந்தச் சங்கமானது, உலகத்திலுண்டான கல்விமான்களைத் தனக்கிடமாகக் கொண்டுள்ளது, இதில் பல வித்துவான்களும் ஒன்றுய்க்கூடி அரும்பெரும் விஷயங்களையிட்டு நாலாதரத்தோடு ஆக்ஷேபஞ்செய்யும் தானமாகும், இச்சங் கத்தில் தேசாதிபதியைப்போன்ற பெரும் உத்தியோகஸ்தர்களும், சுப்பிறியங்கோட்டு நீதிபதிகளும, அங்கத்தவராவார்கள். சுப்பி றிங்கோட்டு நீதிபதிகளாக நியமனம்பெற்று இலங்கைக்கு வந்தோ ருள் கல்வியிலே சிறந்த மேதாவியாகிய, சேர் அன்ரன் பேட்ரும் அவர்கள் ஸ்ரீமான் அருணாசலத்துடைய பெருமையையும், அவரு டைய கல்வித்திறமையையும், உத்தியோகபாரத்த சாதுரியத்தை யும், அரசியல்ஞானம், உலகியல்ஞானம் எனபவற்றையுங் குறித் துப் பலமுறையும் வியந்து கூறியிருக்கின்றனர். கற்றவருடைய பெருமையைக் கற்றவரேயறிவார். ஆதலால் மேதாவியாகிய சேர் அன்ரன் பேட்ரும், ஸ்ரீமான் அருணாசலமவர்களிடத்தில் அவ்வளவுதூரம் அன்புடையராய் இருந்தனர். இதுவன்றியும், ஸ்ரீமான் அருணாசலம் கேம்பிறிச்சிலிருந்து கல்விகற்கும் காலத் தில், இவரோடு கூடஇருந்து கல்விகற்ற மாணவருள் எத்தனையோ

பேர் பாளிமேந்து முதலான பெரும் பதவிகளில் பெரும் உத்தி
யோகஸ்தர்களாயிருக்கின்றனர் அவர்களும் இவரிடத்தில் அன்
புடையவராவார்கள். ஸ்ரீமான் அருணாசலம் இலங்கையிலுள்ள
ஏழைமக்களுக்காகத் தேசநலத்தொண்டும், ஊழியமும் செய்து
பொதுஜனசேவைச் சங்கத்தைப்போன்ற பலசங்கங்களை ஸ்தா
பித்து, ஜனங்களுக்கு அதிக நன்மைகளைச் செய்து வந்தமையால்
அபிமானங்கொண்டு சேர். ஜேம்ஸ்பீரிஸ், ஏ. டபிள்யு. பெரைரா
என்னும் மேதாவிகளையுட்கொண்டு நூற்றுக்கணக்கான பிரஜை
கள் ஒன்றாய்ச்சேர்ந்து சோஷல் சோவிஸ் சங்கத்தில் அழகாய
சித்திரிக்கப்பட்ட ஸோ. அருணாசலமவர்களுடைய பிரதிமைப்
படத்தை ஞாபகசின்னமாக வைத்தார்கள். அப்பொழுது சேர்.
ஜேம்ஸ் பீரிஸ், எழுந்து வெகுஜனமத்தியில் ஸ்ரீமான் அருணாசல
மவர்களுடைய உத்தம குணநிசயங்களையும், உலகத்துக்காகச்
செய்துவைத்த நன்மைப்பகுதியையும் வியந்து சர்வகலாசாலைக்
கும், நேஷனல் காங்கிரசுக்கும், ஸ்ரீமான் அருணாசலம் பிதாவா
யிருந்தாரென்னும் கருத்துப்பட வெகுநேரம் விரிவாய்ப்பேசி
முடித்தனர். அதன்பின்னர், ஜோஜ் டி. சில்வாவும், ஏ. டபிள்யு.
பெரைராவும் பேசினார்கள். அவர்கள் பேசிய விஷயங்களெல்
லாம் ஸ்ரீமான் அருணாசலத்தின் விசேஷ செயல்களைப்பற்றி
யும், ஊருக்காகவும், ஜனங்களுக்காகவும், பாடுபட்டாரென்றும்,
பொதுஜன ஊழியஞ்செய்து பெரும் புகழ்பெற்றாரென்றும் பேசிய
சாரத்தை இங்கு எழுதலானேம். 1904-ம் ஆண்டு ஸ்ரீமான் அரு
ணாசலம் பாரியாருடன் சீமைக்குச் சென்றபொழுது சக்கிர
வர்த்தியவர்களும், குவீன் அலெக்சாந்திராவுமாக இவர்களிருவரை
யும் தம்முடைய மாளிகைக்குத் தனிமையாக அழைப்பித்து பஞ்ச
வாணச சோபாவில், லேடி அம்மையாளை தமக்கருகில் இருத்தி
பல விஷயங்களையும் மிக்க அன்புடன் சம்பாஷித்து சந்தோஷ
மடைந்து, தம்முடைய ஞாபகார்த்தமாக ஓர் அருமையான போட்
டோ படத்தையுமளித்து வெகுமரியாதை செய்தனுப்பினார்கள்.
அதன் பின்னர் 1914-ம் ஆண்டில் ஸ்ரீமான் அருணாசலம் இங்கி
லாந்துக்குச் சென்றபொழுது சக்கிரவர்த்தியவர்கள் தம்முடைய
மாளிகைக்கு அழைப்பித்து மரியாதைசெய்து மந்திரிபிரதானிகள்
கூடியிருக்கும் சபா மண்டபத்திலிருத்தி ஸ்ரீமான் அருணாசலத்
துடைய திறமையையும், சென்ஸஸ் விஷயமாகச் செய்த றிப்
போட்டையும் வியந்துகூறி, இந்த முறையை மற்றைய ஊர்களி

லும் அனுசரிக்கும்படி செய்தேன் என்று சந்தோஷப்பட்டு, சக்கிரவர்த்தியவர்கள் தம்முடைய கையால் ஸ்ரீமான், அருணுசலத்துடைய முதுகில் தட்டி ஆசீர்வதித்து சேர். பட்டத்தையும் அழித்தனர். 1920-ம் ஆண்டு ரிபோம் கொங்கிரஸ் விஷயமாக டிப்புற்றேஷன் சென்றபொழுது இராச்சிய பரிபாலன முறைகளை லோட் மில்னர் அவர்களோடு சம்பாஷித்தனர். அப்பொழுது கிங் ஜோர்ஜ் சக்கிரவர்த்தியும், குவீன் மேரி ராணியுமாகக் கூப்பிட்டுச் சங்கைசெய்து அனுப்பினுர்களாம். ஸ்ரீமான் அருணுசலம் அன்றன்று செய்யவேண்டிய எக்கருமங்களையும் தமமுடைய கையினுல் எழுதி நாளாந்தக் குறிப்புவைத்து அதன்படியே சகல கருமங்களையும் செய்துவந்தனர். ஆகம சாஸ்திரங்களிலும், தமிழறிவிலுஞ்சிறந்த வித்துவானுமாவர். தமிழின் பெருமையை நன்கறிந்ததால் சுவயபாஷையை கட்டாயக் கல்வியில் ஒன்ருக ஏற்படுத்தி சிவபதமடைந்தனர். இவ்விஷயமிருப்ப யாம் இப்பெரியாரைக்குறித்து இபபுஸ்தகத்தின் ஆரம்பத்திலே மிகவும் அழகாய் எழுதி அச்சிட்ட பின்னர், ஆங்கில பாஷையிலிருந்த சில விஷயங்களை மொழிபெயர்த் தெழுதும்படி அன்னுருடைய மனைவி மக்கள் விரும்பிக்கேட்டமையால், மறுக்கவியலாது யாம் அவர்களுடைய கேள்விக்கிசைந்து எம்முடைய சிரமத்தையும், பொருட் செலவையும் பாராது இப்பெரியாருடைய புகழையும், பெருமையையும் ஒருவாறு எழுதிமுடித்தேம். இவ்விஷயங்களை இப்புஸ்தக ஆரம்பத்தில் எமக்குத் தராமல் இடைநடுவில் தந்தமையால், அனுபந்தமாக எழுதி அச்சிடலானேம்.

## Raja Sir. Annamalai Chettiar Avl.

ராஜா சேர் அண்ணுமலைச் செட்டியார்:—இப்பெரியார் கானுடுகாத்தான் என்னுங் கிராமத்தைச் ஜென்மஸ்தானமாகவுடையவர். இவருடைய தகப்பனுருக்குப் பெயர் முத்தையா செட்டியார். தாயாருக்குப்பெயர் மீனுக்ஷி. புத்திரராகிய ஸ்ரீமான் அண்ணுமலைச் செட்டியார் நாட்டுக்கோட்டை நகரவாசிகளுட் செல்வத்தாலும், கீர்த்தியாலும், மதிப்பாலும், மற்றுமெவ்வகையாலுஞ் சிறப்புற்று "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்னும் ஆன்ருேர் வாக்கியத்திற்கிலக்காய், உலகம் போற்றத்தக்க மாண்

புடையாராய், கொடையிலே சிறந்த கொடைவள்ளலாய், பதிபுண்ணியங்களைப் பக்தி சிரத்தையோடு செய்யும் தருமசீலராய், சொல்லப்பட்ட இலக்கணங்களையுடைய சற்பாத்திரராய், குணத்திலே சிறந்த குணசாலியாய், பிரகசியாதையுடன் விளங்குகின்றனர். இப்பெரியார் 1929-ம் ஆண்டு இந்திய அரசாங்கத்திலிருந்து பெறுதற்கரிய பெரும் பதவியாகும் ராஜாப்பட்டத்தைப் பெற்று பல ஜனசமூகத்தினராலும் சன்மானிக்கப்பெற்றுச் சென்ற ஜூன் மாதத்தில் இலங்கைக்கு விஜயஞ்செய்தனர. அப்பொழுது பல்லாயிரஞ் செட்டிப்பிள்ளைகளும், பிரபுக்களும், உத்தியோகஸ்தர்களும், வியாபாரிமார்களும் றயிலடி கருச் சென்று அன்னாரை எதிர்கொண்டு அன்புடன் வரவேற்று, மலர் மாலைசூட்டி மோட்டோர் ரதமீதிருத்தி, மிகவழகாய் அலங்கரிக்கப்பட்டிருந்த வீதிகடோறும் விமரிசையுடன் அழைத்துச்சென்று, அபிமானிகளால் ஆங்காங்குநடாத்திய உபசாரணைகளை யேற்றுச் சுமார பத்துமணியளவில் தமதிருப்பிடஞ் சென்றனர். மறுநாட் சாயங்காலம நவமாயமைக்கப் பெற்ற டவுண் ஹாலில் கௌரவ சேர். பொன்னம்பலம் இராமநாதனவர்களுடைய அக்கிராசனத்தின் கீழ், பல்லாயிரம் பிரபுக்களும் உத்தியோகஸ்தர்களும் ஒன்று கூடி வந்தனோபசாரஞ் செய்து ஸ்ரீமான் அண்ணாமலைச் செட்டியாரவர்களைக கௌரவப்படுத்தினார்கள். அப்பொழுது கௌரவ சேர். இராமநாதன் கரகோஷத்துடன் எழுந்து, ஸ்ரீமான் அண்ணாமலைச் செட்டியாரவர்களுடைய அரும் பெருங் குணங்களையுஞ் செயல்களையும, சர்வகலாசாலை, சங்கீத கலாசாலை என்பவற்றின் உபயோகத்தையும், அதனை ஸ்தாபிக்கும்பொருட்டாகப் பட்ட பிரயாசையையும் வியந்துகூறி ஈற்றில் "அண்ணாமலை தொழுவார் வினை வழுவா வண்ண மறுமே" என்னும தேவாரப்பதிகத்தை இணையாகவைத்து மலையின், சிறப்பையும், அதன் பெருமையையும் விளக்கிச் சொற்சுவை பொருட்சுவை ததும்பச் சொற்பொழிவு நிகழ்த்திப், பலரையும் மகிழ்வித்தனர். இத்தகைய ராஜா சேர அண்ணாமலை நாற்பது லக்ஷ ரூபாவைச் செலவிட்டு சிதம்பரத்திலிருந்து மூன்று மைலுக்கப்பாலுள்ள அண்ணாமலை நகரில் சர்வகலாசாலையையும், சங்கீத கலாசாலையையும் ஸ்தாபித்து, கடற்கரைவரையும் ஓர் புதிய தெருவையும் நவமாய் அமைத்திருக்கின்றனர். இதன் பெருமையை எஞ்ஞான்றும் போற்றத்தக்கது. இதுவன்றியும் கானடுகாத்தானில் ஓர் மருத்துவ ஆஸ்பத்திரியையும் அமைப்பித்திருக்கின்றனர்.

இப்பொழுது சிதம்பரத்துத் திருப்பணியையும் செய்வதாக ஒப்புக் கொண்டிருக்கின்றனர். ஸ்ரீமான் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் தங்களுடைய ராணி சீதையாச்சி என்னும் மாதுசிரோன்மணியை விவாகஞ்செய்து குமாரராஜா முத்தையா செட்டியார் B.A. அவர்களையும், இராமநாதன், சிதம்பரம் என்கின்ற இளைஞர்களையும், வள்ளியம்மையாச்சி, மீனாக்ஷியாச்சி, உண்ணாமலையாச்சி, லக்ஷ்மியாச்சி என்கின்ற புத்திரிகளையும் பெற்றனர். இவ்விஷயமிருப்ப, எங்கள் பிரதிநிதியாகிய கௌரவ சேர். இராமநாதன் ஸ்ரீமான் அண்ணாமலையவர்களைக் குறித்து வியப்புடன் கூறியதால் யாம் இவரைக்கண்டு சம்பாஷித்தற் பொருட்டாகச் சென்றிருந்தோம். அப்பொழுது ஸ்ரீமான் செட்டியாரவர்கள் எம்மோடு சில நிமிஷங்கள் மிகவும் அன்பாக சம்பாஷித்து எம்மைக் கௌரவப் படுத்தியதால் இவருடைய புகழையும், பெருமையையும் குறித்துச் சுருக்கமாய் இப்புத்தகத்தில் எழுதலானோம் மறு பதிப்பில் விரிவாய்க் கூறுவோம்.

## Arasanilayitta Mudaliyar Santiagopulle.

அரசநிலையித்த முதலியார் சந்தியாகுப்பிள்ளை, இவர் டச்சுக் காலத்திலே யாழ்ப்பாணம் மணியக்காரனாயிருந்த டொன் நிக்கொலஸ் அரசநிலையித்த முதலியாருடைய புத்திரராவர். இவர், 1816-ம் ஆண்டு பிறந்தவர். நல்லூர்ச் சேர்ச் மிஷன் செமினரியிற் கல்விகற்று 1836-ம் ஆண்டு தகப்பனுடைய மணியவேலையை ஒப்புக்கொண்டு பார்த்தவர். இவருடைய பாட்டனும், முப்பாட்டனும் டச்சுக் கவுண்மேந்தில் "றெஸ்பதோர்" என்னும் பதவியிலிருந்தனராம். இவ்வுத்தியோகம் எல்லாவற்றிலும் மிக்க மேலானதாக வைத்தெண்ணப் படுவதொன்றாம். மிஸ்றர சந்தியாகுப்பிள்ளை அரசியல் ஞானத்திலும், ஆபீஸ்வேலையிலும் மிக்க அனுபவம் உடையராயிருந்தமையால் அதிகாரிகள் இவருடைய தயவை எதிர்பார்த்துக் கனம்பண்ணி நடக்கவேண்டியவர்களாயிருந்தனராம். இவருடைய புத்திரருள் பெஞ்சமன் சந்தியாகுப்பிள்ளையென்பவர், சுப்பிறியங்கோட்டுப் பிறக்டராகவும், நிக்கொலஸ் என்பவர் சக்கிடுத்தாராகவும், ஏ. பி. சந்தியாகு என்பவர், பிரபல டாக்டராகவுமிருந்து காலஞ்சென்றனராம்.

## Mr H. J. Arasanilai, Plauter, "Lilistan," Batticaloa.

மிஸ்ற்றர், அரசநிலை:— இவர் யாழ்ப்பாணத்திலோர் பழமைவாய்ந்த குடும்பத்திற் றோன்றியவர். இவருடைய தகப்பனுருக்குத் தப்பெயர் அரசநிலையிற்ற ஹென்றி, இவர் பலகாலம் யாழ்ப்பாணத்திலோர் பகுதிக்கு உடையாராயிருந்தவர். மிஸ்ற்றர் அரசநிலையுடைய பாட்டனரின் பெயர், அரசநிலையிற்ற முதலியார். இவர் டச்சுக்காரனுடைய காலத்தில் ஓர் பகுதிக்கு மணியகாரனுயிருந்தவர். இப்பேர்ப்பட்ட பெரியார் சந்ததியிற்றோன்றிய மிஸ்ற்றர் அரசநிலை, யாழ்ப்பாணத்தார் சென்பற்றிக்ஸ் கலாசாலையில் கல்வி கற்று, வன்னிப் பகுதியிலிருக்கும் "வாங்கரன் கிறீக்" என்னும் கம்பனியில் வெகுகாலமாய் ஐக்கெண்டாயிருந்து, அவ்வேலையை விட்டுப் பின்னர், மிஸ்ற்றர் கொத்தலாவெலா என்பவருடன் கூட்டுவியாபாரஞ் செய்தனர். இப்பொழுது மட்டக்களப் பிலே பிளாண்டராயிருக்கின்றனர். இவர் மட்டக்களப்புக் கிறவுண் பிறக்டராயிருந்த கதிர்காமத்தம்பி J. P. U. P. M. என்பவருடைய ஏகபுத்திரியை விவாகஞ்செய்தவர். இவருக்கு யாழ்ப்பாணத்திலும், மட்டக்களப்புப் பகுதியிலும் ஏராளமாயுள்ள விளைநிலந், தோட்டம் முதலானவைகளிருக்கின்றன. இவர், கத்தோலிக்கருள் கண்ணியம் வாய்ந்தவர். தருமவிஷயமாகத் தேவாலயங்களுக்குப் பெரும் பொருளுபகரித்த புனிதருமாவர். டச்சுக்காரர் காலத்தில், "றொம்பதோராயிருந்து" பெருங் கீர்த்திபெற்று விளங்கினோர் சந்ததியில் உதித்த, மிஸ்ற்றர் சாமுவேல் பிறெற்றிக் ஜோன்பிள்ளைக்குச் சொந்தக்காரருமாவர். 'குறிப்புரைகள் வரும்.'

## Don. Diego Warnakulasooria Arasanilayitta Mudaliyar.

மிஸ்ற்றர் டோன் தீயோகுவர்ணகுலசூரிய அரசநிலையிற்ற முதலியார் என்பவர், வெகு காலத்துக்கு முன்பாக, யாழ்ப்பாண நாட்டிலேயிருந்த, பழைய காலத்து முதியோருளொருவராவர். யாழ்ப்பாண நாட்டைப் போர்த்துக்கீசர் கைப்பற்றி ஆளுகின்ற காலத்தில், இவருடைய மூதாதைகள் இந்தியாவினின்றும் வந்து பட்டினப் பகுதியிற் குடியேறினார்களென வறிகிறோம். இந்த முதலியார் 18-ம் நூற்றாண்டின் மத்தியிற் பிறந்தாரென அறியக்கிடக்கின்றது. அக்காலத்திலே இவர், டச்சுக் கவண்மேந்தில் "றெஸ்பதோர்" என்னும் உத்தியோகத்தை வகித்து, உலகில் பெரும்

பிரக்யாதி பெற்று விளங்கினராம். இந்த முதலியார் டச்சுக் கவுண்மேந்தில் சர்வாதிகாரம்பெற்ற உத்தியோகஸ்தராகவும், சுபாசுபகருமங்களுக்கு உத்தரவளிக்கும் உரித்தாளராகவும், மார்க்க சம்பந்தமாய் உண்டாகும் சச்சரவுகளை நீக்கும் மத்தியஸ்தராகவு மிருந்தனராம். றெஸ்பதோர என்னும் உத்தியோகத்தை சிங்களப் பாஷையில் "திசாவை" என்றழைப்பார்களாம். எல்லாவிதத்திலும் இவ்வுத்தியோகம் மேன்மையுடையதென்றும், ஒரு கச்சேரி முதலியாருடைய உத்தியோகத்திலும் பார்க்க, எத்தனையோ பங்கு விசேடமுள்ளதென்றும், இவ்வுத்தியோகத்தை முதலாவதாக இந்த முதலியாரே கையாண்டிருந்தனரென்றும் அறியலாவோம். இவ்வுத்தியோகம் அவசியமற்றதெனக் கண்ட ஆங்கிலேயர் 1825-ம் ஆண்டு முதலாக நிறுத்திவிட்டனர். டொன் தியோகு வர்ன தலசூரிய அரசநிலையிற்ற முதலியாரும் 92-ம் வயதளவில் மரித்தனர். அப்பொழுது இவருடைய புத்திரர் டொன் நிக்கொலஸ் அரசநிலையிற்ற முதலியார் என்பவர், யாழ்ப்பாண நகருக்கு முதலாவது மணியகாரனாக நியமனம் பெற்று 1839-ம் ஆண்டுவரையில் மிக்க திறமையோடு பார்த்து உலகில் நற்கியாதிபெற்று விளங்கினராம். இவருக்குப் பிறகு இவ்வுத்தியோகத்தைப் பௌத்திரராகிய அரசநிலையிற்ற முதலியார் சந்தியாகுப்பிள்ளையென்பவர் மிக்க திறமையுடன் 1861-ம் ஆண்டுவரையிற் பார்த்துப் பிசயின் பண்ணினராம். மேலே குறிக்கப்பட்ட டொன் தியோகு முதலியாருடைய சந்ததியிற் றோன்றிய பேரப்பிள்ளைகள், பூட்டப்பிள்ளைகள், கொப்பாட்டப்பிள்ளைகள் முதலானோர் சந்ததிவிருத்தியாகி, ஆங்காங்கு பெரும் உத்தியோகங்களிலிருக்கின்றனர். தெல்லிப்பழையிலேயிருந்த டொன் பிலிப் என்னும் புலவர், டொன் தியோகு முதலியாருடைய கேள்விப்படி விசுவாச விளக்கமாகிய "ஞானானந்த புராண"மென்னும் ஓர் நூலை இயற்றியுள்ளார். அவற்றுள் முதலியாரைப் பற்றி வியந்து கூறிய செய்யுளை இங்கு தருகின்றோம்.

அலைவுறு மனதானந் திமிரமற வருமெஞ்ஞான விசுவாசவிளக்க முனைநூல்
புலவியன்சொற் சித்தெடுத்து விருத்தபாவாய்ப் போராது வரோமாபுரியின் சபைக்கேற்பத்
தொலைவிலிலங் கியாழ்நக குருகுலத்து மகா மான்மியஸ்ரீ தியோகென்முதலி முயற்சியாலே
தெல்லிநக ரேவாளர் தோமபிலிப்பு செந்தமிழிற் காப்பியமாயச் செய்தானம் மன்னே

வளரும் கருமபினொடை யூடுவழி சென்றுழங்கி வசைத்தனைத்துய
பழகுஞ் செந்தேனொடை சீறிப்படர்க கழனி மடைபாய
விளையுஞ் செந்நெற் குருநாடுவிளங்க வந்த தோந்தியோகு
தழைய வாழுந் தேவமனைவல் சவைவிலரம் சேற்றுவித்தானே.

சித்தமுளைக்க மெய்ஞ்ஞான திருமுக கருணை நதிபெருக
பத்தியெனும் சொழுந்தெழுந்து படரப் பருவத் தரம்பூக்கப்
புத்தியெனும் பலனகனியப் புகழ் தோந்தியோ கென்முதலி
தித்திக்கருந்தி தேவமுனைநூல் சித்தித்தாங் கேற்றுவித்தானே

## Mr. Fredrick Johnpulle.

மிஸ்ற்றர் பிறெட்றிக் ஜோன்பிள்ளை:—இவரும் ஓர் பாரிய குடும்பத்தைச் சார்ந்தவர். இவர் 1828-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 10-ந் திகதி பிறந்தவர். இவருடைய தகப்பனுக்குப் பெயர் பிலிப் ஜோன்பிள்ளை. இவர் மன்னாரில் அரசாங்க உத்தியோகத்திலிருந்தனராம். மிஸ்ற்றர் பிறெட்றிக ஜோன்பிள்ளை நல்லூரிலேயிருந்த சேர்ச் மிஷனிலும், அதன்பின் கொட்டாமிஷன் பள்ளிக்கூடத்திலிருந்த, றெவறன் பொயிலி அவர்களிடத்திலும் கல்விகற்று சிலகாலம் கண்டிக்குளிச் செமினரியில் ஆசிரியராயிருந்தனர். இப்படியிருக்குங் காலத்தில் றெவறன் ஜோன்ஸன் என்பவர், ஜோன்பிள்ளையைப் பற்றி மிக்க விசேடமாய் எண்ணியிருந்த தைக்குத் துரைக்குச் சிபாரிசு செய்தனர். அப்பொழுது காங்கேயன் துறைக் கஸ்ற்றம் ஆபீசில் பிரதம உத்தியோகத்தைப் பெற்றனர். அதன்பின் 1877-ம் ஆண்டுவரையில் பருத்தித்துறை பேகிலே சிறாப்பராயிருந்தனர். அங்கிருந்து திரிகோணமலை கஸ்ற்றம் ஆபீசுக்கு மாற்றப்பட்டு முதலாங் கிளாக்காகவும், லான்டிங் வெயிற்றராகவுமிருந்து 13-வருடகாலம் அரசாங்க சேவைசெய்து 1890-ம் ஆண்டு இளைப்பாறினர். இவருடைய திறமையைக் குறித்து நீட் என்பவரும், வெளிகுளிக் என்பவரும் புகழ்ந்து பாராட்டியிருக்கின்றனர். இவர் கே. முதலியார் புவிராஜசிங்கத்தின் சகோதரியுடைய புத்திரராவர். மிஸ்ற்றர் பிறெட் ஜோன்பிள்ளையுடைய புத்திரரே சாமுவேல் ஜோன்பிள்ளை இவர், கத்தோலிக்க மதத்தினருள் சிறந்த புண்ணிய சீலராவர். இவருக்கு நீண்ட ஆயுளையும், திடகாத்திர சரீரத்தையும் ஆண்டவர் அருள்புரிவாராக.

## Mudaliyar J. G Puvimanasinghe,

மிஸ்ற்றர் ஜே. ஜீ. புவிமன்னசிங்க முதலியார்:—இவர், யாழ்ப்பாணத்திலே பூர்வகாலத்துள்ள ஓர் பாரிய குடும்பத்தைச்சார்ந்தவர். இவருடைய பாட்டனும் மாமனும் அரசாங்கத்தில் பட்டயம் பெற்ற முதலிமார்களாகவும் அதிகாரிகளாகவுமிருந்தனர். மிஸ்ற்றர் புவிமன்னசிங்க முதலியாருடைய மூதாதை

கள் போர்த்துக்கீசர்காலந் தொடக்கம் டச்சுக்காறன் காலம்வரையில், கௌரவமான உத்தியோகங்களைக் கையாண்டிருப்பதாக அறிகிறோம். மிஸ்றறர் புவிமன்னசிங்க முதலியார் சென்பற்றிக் கல்லூரியிற கல்விகற்று கௌறிக்கற் பரீட்சைகளில் தேர்ந்து ஏறக்குறைய 25 வருடகாலம் கண்டியிலேயுள்ள கோடுகளில் இன்ரப்பிறிறறர் முதலியாராயிருந்து அநேகருள்ள நியாயதுரந்தரர்களாலும் மற்றை ஏனையோர்களாலும் சன்மானிக்கப்பெற்றனர். இப்படியிருக்குங்காலத்தில் தோட்டக்காட்டுக் கூலிகளால் ஏறபட்ட தொல்லைகளை நீக்கும் பொருட்டாக இந்தியாவுக்குச் சென்று எல்லாரையும் சமாதானப்படுத்தி நேர்சீராக்கியவரும் இவரே! இதனால் அரசாங்கத்தாராலும் பிளாண்டேஸ் றஸக்கிய சங்கத்தாராலும் நன்குமதிக்கப்பெற்றனர் இவர் சிலவருடங்களுக்கு முன், கண்டியிலிருந்து யாழ்ப்பாணஞ் சென்று அங்கேயுள்ள டிஸ்திறிக்கோட்டில முதலியாராயிருநது 1920-ம் ஆண்டு இளைப்பாறப்போகுஞ் சமயத்தில், யாழ்ப்பாணவாசிகள் திரண்டு ஓர் பகிரங்கக்கூட்டம் வைத்து வெகுமதியாக ஓர் தங்கப் பதக்கத்தையும் வழங்கப்பெற்றனர். அப்பொழுது இவருக்கு அரசாங்கத்தாரும் விசேஷமாயுள்ள முதலியார் பட்டத்தை சூட்டினார்கள். இவருடைய சிரேஷ்ட புத்திரர் கல்வியில் மகா சமர்த்தராகவும், நியாயமானவராகவுமிருந்து 18-ம வயதுளவிற காலஞ் சென்றனர். இரண்டாவது புத்திரராகிய ஜோர்ஜ் W. புவிமன்னசிங்கமென்பவர், பிரபல டாக்டராயிருக்கின்றனர். முதலியாருடைய ஏகபுத்திரியை நியாயதுரந்தரராயிருக்கும் மிஸ்றறர் ஜோசெப் எப் மாடின் என்பவர் விவாகஞ் செய்திருக்கின்றனர். மேலே சொல்லப்பட்ட முதலியார், மிஸ்றறர் சாமுவேல்ஜோன்பிள்ளைக்குமைத்துனராவர் இந்த புவிமன்னசிங்க முதலியாரும், மிஸ்றறர் ஜோண்பிள்ளையைப் போல் சிறந்தவர். சகதந்தொணிஸ் கதீரல் ஆலயத்துக்குப் பொருளுதவிகளுஞ் செய்தவர் மறுசரித்திரத்தில் 'குறிப்புரை கூறுவேம்'

## Mr Joseph Saverimuttu Puvimannasinghe

மிஸற்றர் ஜே. எஸ் புவிமன்னசிங்க. இவர் யாழ்ப்பாணத்திலே கத்தோலிக்க மதம் பரவுதற்கு முன்னராயிருந்த ஓர், பழமையான பெரும குடும்பத்திலே தோன்றியவர். இவருடைய மூதா



The Late Mr. J. S. Puvimannasinghe, Head Master.

St Patrick's College

Meenambal Press

தைகளுக்கு, அக்காலத்தில் அவ்வளவு செல்வாக்கும், உத்தியோ கமும், நாட்டாண்மையும் இருந்ததாக அறியலானேம். இவர் காலஞ்சென்ற புவிமன்னசிங்க முதலியார் ஜோசெப்புடைய சிரே ஷ்ட புத்திரராவர். இவருடைய பாட்டனர் பெயர், டொன் குரு குலசூரிய புவிமன்னசிங்க முதலியார். மிஸ்ற்றர் புவிமன்னசிங் கத்துடைய தாயார் வழித்தோன்றிய டொன்மத்யூ என்பவர், அக் காலத்தில் மிக்க செல்வாக்குடை யராகவும், ஏராளமான காணிபூமி கள், விளைநிலம், தோட்டம் முதலானவைகளையுடைய கமக்காரரு கவும், கிறீஸ்து மதாபிமானியாகவுமிருந்தனர். கத்தோலிக்க மதம் பரம்புதற்கும், கோஆனிஸ் சாதியார் குடியேறுதற்கும் காரணரா யிருந்தவர் இவரேயாம். இவர் கத்தோலிக்க மதத்தில் அவ்வளவு விசுவாசமும், பயபக்தியு முடையவராம். இவ்விஷய மிருப்ப, மிஸ்ற்றர் புவிமன்னசிங்கம் கவுணேஸ் கேற் முதலியாராயிருந்த மனுவேற்தம்பி சென் ஜோன் புவிராஜசிங்கம் என்பவருடைய கனிஷ்ட புத்திரியாகும் பிலிப்பாதங்கார் என்னும் பெண்ணை விவா கஞ்செய்து கேட் ரூட்தங்கரத்தினம், ஜோசேப்பின் பாக்கியவதி, ஜீ. ரீ. புவிமன்னசிங்க, ஏ. எல் புவிமன்னசிங்க, ஏ. ஈ. புவி மன்னசிங்க என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப்பெற்று, எழுபதாம் வயதில் 1920-ம் ஆண்டு எப்பிரல் மாதம் 19-ம் திகதி காலஞ்சென்றனர். மிஸ்ற்றா புவிமன்னசிங்கம் யாழ்ப்பாணத் துச் சென்பற்றிக் கல்லூரியில் சுமார் 45-வருட காலம் தலைமை ஆசிரியராயிருந்து கத்தோலிக்க குருமார்களாலும், ஊரவர்களா லும் நன்கு மதிக்கப்பெற்றனர். திரிகோணமலையில் முதலாவதாக ஓர் கத்தோலிக்க பாடசாலையையும், இரண்டாவதாக முல்லைத் தீவில் ஓர் வித்தியாசாலையையும் ஏற்படுத்தியவர் இவரே. இவர் 1914-ம் ஆண்டு இளைப்பாறும்பொழுது, சென்பற்றிறிக் கல்லூரிப் பழைய மாணவர்களும், புதிய மாணவர்களுஞ் சேர்ந்து வந்தனுப சாரப் பத்திரங்கள் வாசித்துக் கனம்பண்ணினர்கள். அப்பொ ழுது தலைவராய் இருந்த வெரி றெவறன் பாதராகிய சீ. எம். மத்யூ ஓ. எம். ஐ. என்பவர் எழுந்து, மிஸ்ற்றர் புவிமன்னசிங்கத்துடைய விசேட குணங்களையும், இக் கல்லூரி விஷயமாக அவர் பட்ட பிர யாசையையும் குறித்துப், பிரசங்கம் செய்து சபையோரை மகிழ் வித்தனர். இத்தகைய மிஸ்ற்றர் புவிமன்னசிங்கத்துடைய புத்தி ரிகளுள் தங்கரத்தினம், மிஸ்ற்றர் ஏ. ஈ. பிலிப்ஸ் என்பவரையும்,

பாக்கியவதி ஜே. ஏ. ஜோன்பிள்ளையையும் விவாகஞ்செய்தனர். ஜீ. ரீ. புவிமன்னசிங்க என்பவர், புகைரதப் பகுதியில் ஸ்டேஷன் மாஸ்றறாயிருக்கின்றனர். இவர் சாந்த குணமும், சன்மார்க்கமும் உடையவர். மற்றைய இரு சகோதரர்களும் முறையே கிளறிக்கல் சேர்விசில் உத்தியோகமாயிருக்கின்றனர்.

## St. John Manueltamby Puvirajasinghe

Mudaliyar of the Governor's Gate

சென் ஜோன் மனுவற்தம்பி புவிராஜசிங்க முதலியார்:—என்பவர் டச்சுக்காலத்திலே யிருந்த முதியோரு ளொருவராவர். 1710-ம் ஆண்டு தேசவளமை என்னுமோர் சட்டப்பிரமாணத்தை ஏற்படுத்தியபொழுது, அக்காலத்திலே யிருந்த வஸ்முதலியார் என்பவரே இதற்குப் பொறுப்பாளியாகவும், தத்துவகாறராகவுமிருந்தனராம். டச்சுக்காறனுடைய காலத்தில் எவ்வித சுபாசுப கருமங்களுக்கும், இங்ஙிற சொல்லப்பட்ட இரண்டு முதலியார்களுமே பட்டயம் பெற்ற முகாமைக்காறர்களாகவும், அதிகார வர்க்கத்தவர்களாகவு மிருந்தனர்களாம. சென் ஜோன மனுவற்தம்பி முதலியார், வெகு காலமாகச் சுப்பிறியங் கோட்டிலும், டிஸ்றிக் கோட்டிலும் இன்ரப்பிறிற்றர் முதலியாராயிருந்து, கவுணேஸ்கேற் முதலியார் என்னும் பட்டத்தைப் பெற்றனராம். இவருடைய புத்திரருள் கேப்பிரியல் புவிராஜசிங்கமென்பவர் பிறக்டராகவும், பிரசித்த நொத்தாரிசாகவு மிருந்து காலஞ்சென்றனராம் முதலியார் மிக்கேல் புவிராஜசிங்கமென்பவர், சுமார் ஐம்பது வருடகாலம் ஆசனக்கோவிலுக்கு அதிபராகவும், தலைமையான மூப்பராகவுமிருந்து பாப்பாண்டவரிடம் பரிசுகள் பெற்றனராம். தற்போது இவர்களுடைய பேட்டன்மாருள், மிஸ்றறா ஜீ. எஸ் புவிராஜசிங்கமென்பவர் கவுண்மேந்துப் பைக்ற்றறியில் இஞ்சினியராயிருக்கின்றனர். மற்றொருவர் சென்ஜோன் புவிராஜசிங்கம். இவர் இங்கிலாந்து சென்று பெரும் பட்டங்களைப் பெற்று டாக்டராயிருக்கின்றனர். இவர் பாட்டுப் பாடுவதிலும் தெரிக் விளையாட்டிலும், குணத்திலும் சிறந்தவர்.




MICHAEL PUVIRAYASINGHE, MUDALIYAR.
PRESIDENT MOOPU ST MARY'S CATHEDRAL,
JAFFNA, RECEIPENT OF BENE HIS HOLINESS
POPE BENEDICT XV,



DR. A. RAJASINGHAM, M. B. C. M.

Retired provincial Surgeon, member British Medical Assn., Member Royal Asiatic Society, member Corona Club (London) . Interested in Religious & charitable work.

## Dr. A. Rajasingham, M.B C M Aberdeen

டாக்டர் இராஜசிங்கம்:—இவர், 1863-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 28-ம் திகதி பிறந்தவர். இவருடைய மூதாதைகள் போர்த்துக்கீசர், டச்சுக்காறர் என்னும் சாதியார்கள் அரசாண்ட காலம்முதல் பிரிறறிஷ் காலம்வரையில் பெரும உத்தியோகங்களைக் கையாண்டு வந்தாரகளென அறிகிறோம். உதாரணமாக டாக்டர் இராஜசிங்கத்துடைய பாட்டன அரசநிலையித்த முதலியார் சந்தியாகுப் பிள்ளையிலிருந்து, மூன்று தலைமுறைவரைக்கும் யாழ்ப்பாணத்திலே, மணியகார என்னும உத்தியோகத்திலிருந்தார்களாம். இனி டாகடர் இராஜசிங்கத்துடைய தாயாரவழிப் பாட்டன் மாருடைய பெயர், சத்துருக்கஙசிஙகமுதலியார மனுவேற்பிள்ளை, மற்றவருடைய பெயர், ஆசீர்வாதமுதலியார். இந்த ஆசீர்வாத மென்பவர் அக்காலத்திலே யாழ்ப்பாணங் கச்சேரியில் முதலியாராயிருந்தனராம். இவர்களுடைய முன்னோர சந்ததியிறறேன்றிய கதிர்காமப் புலவர் எனபவா, சுதேச வைத்தியராகவும, வித்துவானாகவுமிருந்தனராம். இதற்குமுன்பாக இவர்களைச்சார்ந்த வயிரமுத்துச சட்டம்பியார் எனபவா, மணிமநதிர ஔஷதங்களில் வல்லுனராகவும், பக்திமானாகவுமிருந்தனராம. இந்தச் சட்டம்பியாருடைய வீட்டிலே ஒருநாளிரவு சில திருடர் புகுந்து, அங்கிருந்த பொருட்களை எடுத்துக்கொண்டு போகும்பொழுது, தம்முடைய மாநதிரசக்தியினுல் அந்தத் திருடர்களை அங்கிருந்து செல்லாமற் தடுத்து மற்றைநாட்காலையில் ஆகாரம் கொடுத்து அனுப்பினுராம். இன்னொரு சந்தர்ப்பத்தில் இநதச் சட்டம்பியார், தாம் அணிந்திருந்த பாதரக்ஷைபுடன் நல்லூர கந்தசுவாமி கோவிலுள் நுழையும் போது யாரோ ஒருவர் தடுத்தனராம; ஒருவாறு சுவாமிதரிசனம் முடித்துப் போகும் சமயத்தில் அந்த மனுஷனைப் பார்த்து "அப்பா உன் வாழ்நாள் எட்டு நாளிற் பூர்த்தியாகுமெனறு கந்தர் எமக்குத் தெரிவித்தார்" எனச் சொல்லிச்சென்றனராம. இவ்விஷயங்களை இவர் சொல்ல யாம் எழுதலானேம. இத் தன்மைகளையுடைய முதியோர்கள், டாக்டர் இராஜசிங்கத்துடைய தாயார் அன்னமுத்துவுக்கு ஞாதிகளாவர். டாக்டா இராஜசிங்கம் தமிழ்க் கல்வியைத் தக்க ஆசிரியர்களிடத்திலும், ஆங்கிலக்கல்வியை சென் ஜோன்ஸ் சீ எம். எஸ். செமினுரியிலும் கற்ற பின்னர், இங்கி

லாந்து சென்று வைத்திய முறையில் விசேஷ பாடங்களாகும், பொற்றனி, ஹிஸ்றறி, கிமிஸ்றறி, பாமக்லோஜி, தெறபென்ரீஸ், என்பவைகளில் தேர்ந்து பரிசுகளையும்பெற்று மீண்டனர். முதலாவதாக, வெளிக்கடைச்சிறைச்சாலையில் டாக்டராயிருந்து உத்தியோக உயர்வடைந்து 1912-ம் ஆண்டு கண்டியிலும், 1913-ம் ஆண்டு கொழும்பிலும், 1915-ம் ஆண்டு அநுராசபுரத்திலும், 1916-ம் ஆண்டு கீழ் மாகாணத்திலும், 1920-ம ஆண்டு சப்பிறகாமத்திலும், அதன்பின் மட்டக்களப்பிலும் கடமைபார்த்து இளைப்பாறினர். இவ்விடங்களிலெல்லாம் இவர் பிறொவின்சல் சேர்ஜனாயிருந்தபின், சட்டசபைத் தேர்தலுக்கு முற்பட்டு நின்றனர். இவர் வைத்திய விஷயமாகக் கண்டுபிடித்த விசேட முறைகளை பிறிற்றிஷ் மெடிக்கல் ஜேணலில் பிரசுரித்துள்ளார்கள். இவருடைய புத்திரர் இப்பொழுது சீமையிலே கல்வி கற்கின்றனர். இவருக்கு இந்நகரிலும், கண்டியிலும் சொந்தமாயுள்ள வீடுவாசல், காணிபூமி, தோட்டம் முதலானவைகளிருக்கின்றன. இவர் 1909-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 25-ம் திகதி, மிஸ்றறர் அல்பிறெட் பஸ்தியான் வன்னித்தம்பியுடைய மகள் Alice Constance என்னும் பெண்மணியை விவாகஞ்செய்தனர். இந்தப்பெண்மணி கல்வியிலும், குணத்திலும், மற்றும் எவ்வகையிலுஞ் சிறந்து, கேம்பிறிஜ் பரீக்ஷைகளிற் தேறிய மகா புத்திசாலியாய் விளங்குகின்றனர்.

## Tisseverasinghe Mudaliyar Abraham.

---

இவர் டச்சுக்காரருடைய காலத்தில் றெக்கோட் கீப்பராகவும், தோம்புப் பதிவுகாரராகவுமிருந்த டொன் நிக்கொலஸ் திசைவீரசிங்க முதலியாருடைய புத்திரராவர். இவர் கவுண்மேந்தில் உத்தியோகம் பார்த்த பின, பிரசித்த நொத்தரிசுவாக நியமனம் பெற்றனர். அக்காலத்திலிருந்த தமிழ் மக்களுள் ஆங்கிலம், தமிழ் என்னும் இரண்டு பாஷைகளிலும் உறுதிப் பத்திரங்களை எழுதும் நொத்தாரிஸ் இவரேயாம். இவருடைய புத்திரருள் ரீ. ஏ. திசைவீரசிங்கமென்பவர், சிறுப்பாயிருந்து காலஞ்சென்றனர். மற்றொருவருடைய பேர் கேப்ரியல் திசைவீரசிங்க. இவர்களுள் தற்போது மிஸ்றறர் ஜோன் திசைவீரசிங்க என்பவர் தந்திக் கந்தோரில் உத்தியோகமா யிருக்கின்றனர். இந்த நொத்தாரிசுடைய

பேரப்பிள்ளைகளுள் மிஸ்ற்றர் ஜே. ஏ. ஜீ. திசைவீரசிங்க மென்பவர் யாழ்ப்பாணத்து ஏர்பன் கவுன்சிலில் வைஸ் செயர்மனுகவும், பிறக்டராகவுமிருக்கின்றனர். மிஸ்ற்றர் ஜீ. என். திசைவீரசிங்கமென்பவர் மட்டக்களப்பில் சிறவுண் பிறக்டராகவும், அசிட்டிங் டிஸ்றிக் ஜட்ஜாகவுமிருக்கின்றனர். இவர்கள் எல்லாரும பரம்பரை உத்தியோகஸ்தர்களாகவும், சன்மார்க்கர்களாகவும விளங்குகின்றனர்.

## Srimati. Padmavati "Tyaganivasam"

ஸ்ரீமதி ஜெகநாதன் பத்மாவதி:—இப்பெண்மணி காலஞ்சென்ற ஸ்ரீமான் க. நமசிவாயமவர்களுடைய ஏகபுத்திரியாவர். இந்தப்பெண்மணி பிதா மாதாவைப்போல் நற்பழக்கவொழுக்கமும, சாந்த குணமுமுடையா. "பக்கிங்ஹாம் பலஸ்" என்னும இராசமாளிகைக்கு விருந்தினராய் அழைக்கப்பட்டு அங்கேயுள்ள கனவான்களால் கௌரவிக்கப்பட்ட குலமகளாவா.

## Dr. St. John Puvirajasinge L R C. P & S

டாக்டர் செண் ஜோன் புவிராஜசிங்க:— இவருடைய சந்ததியில் எல்லாரும் கண்ணியமான உத்தியோகங்களைக் கையாண்டிருந்தனர். டாக்டர் புவிராஜசிங்க இங்கிலாந்து சென்று உயர்தரக் கல்வி கற்று, பெரும பட்டங்களை வகித்துத் தற்போது டி. எம். ஓ. ஆபிசராயிருக்கின்றனர். இவா மிகவுமருமையாகப் பாடும் இயல்புடையவர். "மறுபதிப்பில் இன்னுங் கூறுவேம்."

## Mr Joseph F. Martyn Proctor & Notary

மிஸ்ற்றர் ஜோசெப் மாட்டின்:— இவர் யாழ்ப்பாணத்திலே ஓர் மரியாதையான குடும்பத்திற் றோன்றியவர். இவர் கேம்பிறிஜ் பரீக்ஷைகளிற் தேர்ந்து, பிறக்டராகவும்,பிரசித்த நொத்தாரிசாகவு மிருக்கின்றனர். இவ்விளைஞர் சாந்த குணமும், சன்மார்க்கமுமுடையவர். இவருடைய சகோதரரே மிஸ்ற்றர் சீ. எக்ஸ் மாட்டின். இவர் இப்பொழுது நியாய மாணவராயிருக்கின்றனர். இப்புத்தகத்தை எழுதுதற்குத் துணைபுரிந்தவர்.

## Alice Gnanammah Supramaniam.

ஸ்ரீமதி அலெலஸ் ஞானம்மா:—இவ்வம்மையார் திரிகோணமலையில் டிஸ்திறிக் நீதிபதியாயிருக்கும் ஸ்ரீமான் சுப்பிரமணியமவர்களுடைய மனையாளாவர். இவ்வம்மையாருடைய தகப்பனுருக்குப் பெயர் றெவறன் சீ. எம். சான்டேஸ். இவருடைய பூர்வீகம், உடுவில் புத்திரியாகிய ஸ்ரீமதி ஞானம்மாள் கல்கற்று யூனிவேர்சிற்றி முதலான பரீக்ஷைகளிற்பயின்ற ஞானவதியாவர். இவ்வம்மையார் யாழ்ப்பாணத்திலிருக்கும் பொழுது பொதுஜன சேவை புரிந்து "ஹெல்த் லீக்" என்னும் சுகாதார சங்கத்தில் அங்கத்தவராயிருந்தனர். தற்போது திரிகோணமலையில் பொதுஜன சேவை புரிந்து வருகின்றனர். இத்தம்பதிகளுடைய பிள்ளைகளுள் மிஸ்றர் Samuel Alagasundram என்பவர் இலங்கைச் சர்வகலாசாலையில் உயர்தரக் கல்வி கற்கின்றனர். மற்றோர் புத்திரியாகிய ஸ்ரீமதி Grace Savundarammah என்னும் பெண்மணியின் பெருமையையும், கல்வியின் திறத்தையும் உலகம் மெச்சுகின்றது. இந்தப் பெண்மணியைப்போல் ஜூனியர், சீனியர் என்னும கேம்பிறிஜ் பரீக்ஷைகளிற் மிசக திறமையோடு சித்திவாய்ந்தோர் இலங்கையிலில்லை யெனலாம். தற்போது ஸ்ரீமதி சௌந்தரம்மா சர்வகலாசாலையில் உயர்தரக் கல்வி கற்கின்ற கலைமகளாய் விளங்குகின்றனர்.

## Mr. S. Suppiah "Ceylon Trading Company

திருவாளர் சுப்பையா:—இவர் இன்னகரையே ஜென்மஸ்தானமாயும், வாஜஸ்தானமாயு முடையவர். அதி பாலிய வயசுமுதலாக யாமிவரை நன்கறிவேம். இவர் சமயாசாரங்களிற் சிறந்தொழுகும் சிவ தொண்டர். இவருடைய மனைவிக்குப் பெயர் வள்ளிநாயகம். இந்தப் பெண்மணியுடைய பெருமையைச் சொல்லுகில் கல்வியறிவொழுக்கங்களிலும, கற்பொழுக்கங்களிலும், நற்குண நற்செய்கைகளிலும் சிறந்த உத்தம குணசீலியாவர். இத்தம்பதிகள் வடிவாம்பா என்னுமோர் புத்திரியைப் பெற்றனர். இவர்களுக்கு எல்லாம் வல்ல இறைவனின் அருள் உண்டாகக் கடவது.

## Tisseverasinghe Mudaliyar Joseph

மிஸ்ற்றர் திசைவீரசிங்க முதலியார் ஜோசெப்:— இவர் டொன் நிக்கொலஸ் திசைவீரசிங்க முதலியாருடைய மூன்றும் புத்திரராவர். இந்த முதலியார் போர்த்துக்கீசருடைய காலத்திலும், டச்சுக்காறருடைய காலத்திலும் யாழ்ப்பாணங் கச்சேரியில் தோம்புப் பதிவுகாறராகவும், றெக்கோட் கீப்பராகவுமிருந்தனர். அக்காலத்திலே யிருந்த துரைமார்களும், பறங்கிக்காறரும் இவரை நன்கு மதித்து "டச்சு முதலியார" என்றே அழைத்து வந்தனர். இனி ஊரவர்களும், இவரை நன்குபசரித்து பெரிய தம்பர் என்று அழைக்க ஒருப்பட்டனர். அக்காலத்திலே இந்த முதலியார் அவ்வளவு செல்வாக்கும், செல்மதிப்புமுடையராயிருந்தனராம். புத்திரராகிய மிஸ்ற்றர் ஜோசெப் 1812-ம் ஆண்டு பிறந்தனர். இவரும் ஏனையோர்களைப்போல் நல்லூரிலே யிருந்த செமினறியிற் கல்வி கற்று 1838-ம் ஆண்டு யாழ்ப்பாணங் கச்சேரியிலே உத்தியோகத்தில் அமர்ந்தனர் இவர் மிக்க நேர்மையும், திறமையு முடையவரா யிருந்தமையால் 1858-ம் ஆண்டு உத்தியோக உயாவடைந்து கச்சேரிக்குப் பிரதம லிகிதராக நியமனம் பெற்று, பிதாவைப்போல் பெரும் உத்தியோகஸ்தரானார். இவர் அககாலத்திருந்த மணியகாரன் மார்களோடும், உடையார் விதானை மார்களோடும் நெருக்கமாகப் பழகிப் பெரிதும் சன்மானிக்கப் பெற்று 1876-ம் ஆண்டு இளைப்பாறி, யாழ்ப்பாணத்து ஆசனக் கோவிலுக்குத் தலைவராகவும், மூப்பு முகாமைக்காரனுகவும், பிறெசிடெண்டாகவுமிருந்து 1882-ம் ஆண்டு காலஞ்சென்றனர் இவருடைய புத்திரர்களாகிய ஜோன் திசைவீரசிங்க, கௌரவ திசைவீரசிங்க என்போர் கண்ணியம் வாய்ந்தோராகளாயிருந்து காலஞ்சென்றனர். மிஸ்ற்றர் ஜேம்ஸ் திசைவீரசிங்க, ஜே ஜீ. திசைவீரசிங்கமுதலியார், பாரிஸ்டர். எவ். ஏ. திசைவீரசிங்க என்போர், பேரப்பிள்ளைகளாவர். மட்டக்களப்பு கிரவுண் பிறக்டர் ஜீ. என். திசைவீரசிங்க, யாழ்ப்பாணம் யூ. ட. சி. வயிஸ் செயர்மன் மிஸ்ற்றர் ஜே. ஏ. ஜீ. திசைவீரசிங்க, காலஞ்சென்ற லயனல் திசைவீரசிங்க, பிரபல டாக்டர் ஜோர்ஜ் திசைவீரசிங்க, என்போர் பீட்டப்பிள்ளைகளாவர். இங்ஙனமாக இந்த டொன் நிக்கொலஸ் திசைவீரசிங்க முதலியார் சந்ததியிற்றோன்றிய, பிள்ளை குட்டிகள் பெரும் உத்தியோகஸ்தர்களாகவும், சன்மார்க்கர்களாகவும் விளங்குகின்றனர்.

## **Mr. N. Suppaiya Raja,** Parameshvara College

திருவாளர் சுப்பையா ராஜா—இவர் காலஞ்சென்ற நன்னித்தம்பி முதலியாருடைய இரண்டாந்தாரமனைவியாள் ஸ்ரீமதி முத்தாச்சியின், ஜேஷ்ட புத்திரராவர். இவர் 1898-ம் ஆண்டு மேமாதம் 4-ம் திகதி பிறந்தவர். சென் ஜோசெப் கல்லூரியிற் கல்விகற்றபின் கல்கத்தாவிலுள்ள சென் போல்ஸ் கல்லூரியிலே உயர்தரக் கல்விகற்றனர். இவருடைய சகோதரருக்குப் பெயர் Visvesa. இந்த விஸ்வேசர் என்பவர் கல்விகற்று இராமநாதனிடத்தில் வேலையாயிருக்கிறனர். ஜேஷ்டராகிய மிஸ்ரர் சுப்பையா ராஜா என்பவர் வண்ணார்பண்ணை வாசராகிய மிஸ்ரர் சரவணமுத்துவுடைய ஜேஷ்ட புத்திரி Grace திருமைரத்தினம் என்னும் பெண்ணை விவாகஞ்செய்து Balambikai, Sathanandan, Leelavati என்னும் பெயர்களையுடைய பிள்ளைகளைப் பெற்றனர். தற்போது மிஸ்ரர் சுப்பையா தராதரப்பத்திரம் பெற்று பரமேஸ்வரக் கல்லூரியிலே ஆசிரியராயிருக்கின்றனர்.

## **Mr. Somasundaram Mahadeva,** B. A. (Lon.)

இற்றைக்கு சில மாசங்களுக்குமுன் நடைபெற்ற லண்டன் பரீக்ஷையில், ஸ்ரீமான் சோமசுந்தரமவர்களுடைய இரண்டாம் புத்திரரான திருவாளர் மகாதேவர் என்னும் இவ்விளைஞர் மிக்க திறமையுடன் பீ.ஏ பரீக்ஷையிற் சித்திபெற்றனர். பிரபுக்கள் சந்ததியிற்றோன்றிய மகாதேவரின் கல்வித் திறமையையும் புத்திசாதுரியத்தையும் போற்றத்தக்கது. இவர் கௌரவ சேர் இராமநாதனவர்களுடைய புத்திரி ஸ்ரீமதி ருக்மணியாச்சியின் கனிஷ்ட புத்திரராவர். இவருக்குத் திருவருள் உண்டாகக்கடவது.

## Mr. Somasundaram Muttukumaru, B.Sc. (Lon.)

ஸ்ரீமான் சோமசுந்தரத்துடைய சிரேஷ்ட புத்திரரே மிஸ்ற்றர் முத்துக்குமாரு. இவ்விளைஞர் கல்வியில் மிக்க திறனுடையர். யூனிவேர்சிற்றி சாவகலாசாலையில் கல்விகற்று கேம்பிறிஜ் பரீக்ஷைகளிறதேறி பி, எஸ். சீ. பட்டம் பெறறு நியாயமாணவராயிருக்கின்றனர், இவ்விரு சகோதரர்களுடைய திறமையை எஞ்ஞான்றும் போற்றத்தககது

## Mr. M. Swaminathan, "Law Student"

இவ்விளைஞருடைய பெருமையைச் சொல்லுங்கால் கல்வி, அறிவு, ஒழுக்கம, சமயபக்தி, பிதா மாதா குரு உபாத்தியாயர் என்னும் பெரியோர்களிடத் தன்பு, சாந்தம, பொறை, அடக்கம் முதலாகிய அருமபெருங்குணங்களையுடைய அருமைப் புதல்வராய் வளர்ந்து ஸ்ரேயறு கலலூரியிலும, சாவகலாசாலையிலும் கல்விகற்று, கேம்பிறிஜ பரீக்ஷைகளிலும, லண்டன் பரீக்ஷைகளிலும் தேர்ந்து தற்போது நியாய மாணவராயிருக்கின்றனர். இவ்விளைஞர், சிவானுபூதிச செலவராய் விளங்கும் ஸ்ரீமான் முத்ததம்பியவர்களுக்கும், செல்வச்சீமாட்டியாய் விளங்கும் ஸ்ரீமதி கமலாம்பாவுக்கும் மிக வருமையாய வந்துதித்த சற்குணசாலியவர். இவ்விளைஞருக்கு எல்லாம்வல்ல இறைவனின அருள் உண்டாகும்படி ஆசீர்வதிக்கின்றோம். "பெறறோரெல்லாம் பிள்ளைகளல்லர்."

## Mr. N. Neethi Rajah.

128-ம் பக்கத் தொடர்.

இத்தகைய லக்ஷணங்களையுடைய ஸ்ரீமான் நீதிராசா—மூன்று புத்திரர்களையும் இரண்டு புத்திரிகளையும் பெறறனர். அவர்களுடைய நாமங்களாவன முறையே மயில்வாகனம், நாகராஜா, அழகராஜா, மங்கையர்க்கரசி, மாணிக்கமணி என்பனவாகும்.

## Hon. Sir. Pon Ramanathan, KT., K.C., C.M.G.

159-ம் பக்கத் தொடர்.

தேசாபிமானியும் இராசதந்திர நிபுணரும் தமிழ் மக்களுட் சிரேஷ்டரும் பட்டவர்த்தனருமாகிய ஸேர். பொன். இராமநாதனவர்கள் இலங்கை மாதாவுக்காகச் சேவைசெய்துள்ள காலமாகிய 50-ம் வருடப்பூர்த்தி 1929-ம் ஆண்டு ஜூன் மாதம் முற்றுப் பெற்றது. ஸ்ரீமான் பொன்னம்பலமுதலியாரின் புண்ணியந் திரண்டு ஓர் உருவெடுத்தாற்போன்ற இவ்வுத்தம புருஷர் 1851-ம் வருடத்திலே உதித்தனர். இவர் தமது 28-வது ஆண்டான 1879-ம் வருடத்தில் இலங்கைச் சட்ட நிரூபண சபையில் தமிழ்ச் சாதியத்தாருக்கும இஸ்லாமானவருக்கும் பிரதிநிதியாயிருந்த தமது மாதுலராகும ஸேர். முத்துக்குமாரஸ்வாமியவர்களுடைய இடத்திற்கு அக்காலத்திலேயிருந்த தேசாதிபதியவர்களால் நியமனம் பெற்றனர். இந்தப் புருஷோத்தமர் அக்காலந்தொடங்கிப் 13-வருடகாலம்வரையில் இடையீடின்றி சட்டநிரூபண சபைப் பிரதிநிதியாயிருந்து, இலங்கைவாசிகளுக்கும் தமிழருக்கும் வேண்டிய பொதுநலங்களை விரும்பிப், பலதுறைகளிலும் ஈடுபட்டுப்பெரிதும் உழைத்துவந்தனர் இவ்வுத்தமருடைய சேவையை, நன்கு மதித்து அரசாட்சியாரும் இவருக்கு, சி. எம். ஜி. என்கின்ற ஓர் விசேஷ பட்டத்தையும அளித்தனர். ஸேர் இராமநாதன் சொலிசிற்றா ஜெனரல் என்னும் உயர்ந்த பதவியை 1892-ம் ஆண்டு முதல் 1905-ம் ஆண்டு வரையில் வகித்து அரசினரும் ஊரவரும் மெய்ச்சுமபடி அதிக திறமையோடு பதின்மூன்று வருடகாலம் பார்த்து பெரும் கீர்த்திபெற்றனர். பலமுறை அற்ரோணி ஜெனரலாகவும் கடமை பார்த்துள்ளார். மாட்சிமைதங்கிய மஹாராணி விக்ரோறியாவின் அறுபதாமவருடப பரிபாலனக்கொண்டாட்டம் 1897-ம் ஆண்டு நடைபெற்றபோது ஸேர் இராமநாதனவர்கள் இலங்கைவாசிகளின் பிரதிநிதியாக கவர்ணரால் நியமிக்கப்பட்டு இங்கிலாந்து சென்று திரும்பிவந்தனர். 1905-ம் ஆண்டு சொலிசிற்றர் உத்தியோகத்தினின்றும் இளைப்பாறியபின்னர் அமெரிக்கா முத

ளிய மேலைத்தேசங்களுக்கு விஜயஞ்செய்து பிரசங்கமாரிபொழிந்து ஆங்காங்குள்ள பெரியோர்களால் பெரிதும் சந்மானிக்கப்பெற்ற னர். 1912-ம் ஆண்டில் ஆங்கிலேய பாஷையைக் கற்ற சுதேசி களின் பிரதிநிதியாய வருதற்கு ஸேர். இராமநாதனவர்களும் சிங்களப்பிரபுவாகிய டாக்டர் பர்ணன்டோ என்பவரும் முற்பட்டு நின்றனர். அப்பொழுது இலங்கையிலிருக்கப்பட்ட சமஸ்த ஜனங்களும் ஒன்றுகூடி சாதிபேதம் சமயபேதமின்றி கற்ற வகுப் பினரின் பிரதிநிதியாக ஸேர் இராமநாதனவர்களையே தெரிவுசெய் தார்கள். இந்தப் பிரதிநிதித்வதும் 1917-ம ஆண்டில் முற்றுப்பெற் றதும் 1918-ம் ஆண்டுமுதல் 1930-ம் ஆண்டுவரையும் வடமாகா ணத் தமிழ பிரதிநிதியாக நியமனம் பெறறிருக்கின்றனா. 1914-ம் ஆண்டு தொடக்கம 1918-ம் ஆண்டுவரையில் ஐரோப்பாக்கண்டத் தில் பயங்கரமான பாரிய யுத்தம நிகழ்ந்தபோது, 1915-ம் ஆண்டு இலங்கையில் நேர்ந்த கலகத்தின் காரணமாக ராணுவச்சட்டம் அனுசரிக்கப்பட உலகிலுள்ள சமுத்திரங்களெல்லாம் மரணப்பொறி யெனத்தக்கவெடிக்குண்டுகளால்விதைபுண்டுகிடக்க,இப்பெரியார் தமது ஆருயிரைத் திரணமாக மதித்து இங்கிலாந்துசுதந்சென்று வெற்றிக்கொடியுடன் மீண்டனர். “செய்யாமறசெய்த உதவிக்கு வையகமும் வானகமுமாற்றலரிது” என்றபடி உறறவிடத்திற் செய்த பேருதவிக்கு இலங்கைவாசிகளாகிய நாம இப்பெருந்தகை யாளருககு எவ்வகையான கைமாறுஞ் செய்தலரிது. ஸேர் இராமநாதனவர்கள் ஏறக்குறைய 50-வருடகாலமாக சட்டநிரூ பணசபையின் அங்கத்தவராகவும் சனப்பிரதிநிதியாகவுமிருந்து தமக்கு ஒப்பாருமமிக்காருமில்லாராய்த்தேசத்தொண்டுபுரிந்துவரு தல் உலகமறிந்த விஷயம் இது இலங்கைவாசிகளுக்குப பொது வாகவும் பெருமிதத்தைத் தரத்தக்க ஓர் அரிய செயலாகும்.

இதுவன்றியும் இப்பெரியார் “மேன்மைகொள் சைவநீதி விளங்குக வுலகமெலாம்” என்றபடி யாழ்ப்பாணத்திலுள்ள சை வப்பெண்களும் ஆண்களும் தங்கள் சமயாசாரப்படி உயர்தரக் கல்விகற்றும் பொருட்டாக “இராமநாதன் கல்லூரி” “பரமேஸ்

வரக் கல்லூரி" என்கின்ற இருகல்லூரிகளையும் ஸ்தாபித்து அதன் வாயிலாக மெய்ஞானச்சுடர்கொழுத்தி "முத்திதரும் தெய்வச் சபையைக் காண்பதற்குச் சேரவாரும் செகத்திரே" என்று ஞான சம்பந்தபரமாச்சார்ய ஸ்வாமிகள் அருளிய அருமைத் திருவாக் கை கடைபிடித் தொழுகும் ஞானாசாரியருமாயினர். இத்தகைய புண்ணியசீலரும், இவரின் அரிய சகோதரரும், மூதாதைகளுமே யாழ்ப்பாணத்திலும் இலங்கையிலும் ஏனைய பாகங்களிலும் தமிழ் மக்கள் என்றொருசாதியார் இருக்கின்றனர் என்பதையும், இவர் கள் சமயாசாரம் சாதியாசாரம் புராதன சீர்திருத்தம் கல்வி அறிவு ஒழுக்கம் உடை நடை பாவனை முதலானவற்றில் மேம்பாடு உடையவர்கள் என்பதையும் நன்குவிளங்கி அரசினருக்கும் நமது சகோதரர்களாகிய சிங்களவருக்கும் காட்டிவைத்து,எங்களை மதிக் கச்செய்த பரமதாதாக்களாவர்கள் ஆகவே இவ்வுத்தமர் எங்க ளுக்காகச்செய்த நன்றியை என்ஞான்றும எங்கள இருதய கமலத்திலிருத்தி நல்வழிப்படுவோமாக.

---

சேர் இராமநாதனவர்கள இயற்றிய நூல்கள்

1. பகவத்கீதை மொழிபெயர்ப்பும் வியாக்கியானமும் தமிழ்
2 ஆத்திசூடி மந்திர விளக்கம் .. ... தமிழ்
3. நாஞஜீவவாதக்கட்டளை வேதாந்த சாத்திரம .. ஆங்கிலம்
4. செந்தமிழ் இலக்கணம் முதறபாகம, எழுத்தும், சொல்லும் ... தமிழ்

5-6. செயின்ற மதயூ, செயினற் ஜோன் என்ப வர்களின் சுபவாக்குகளுக்கு வியாகயானம்

7. ஈசுரபக்திவிளையுமமுறை ... ஆங்கிலம்
8. நீதிசாஸ்திரத்தைப்பற்றிய 2-பிரசங்கம ... ஆங்கிலம்
9. இலங்கை இஸ்லாமானவர்களின் வரலாறு ... ஆங்கிலம்
10 1879-ஆம் முதல் 1894-ஆம் வரை இலங்கைச் சட்டநிரூபணசபையில் பேசிய விஷயங்களி லிருந்து தேர்ந்தெடுக்கபபட்ட சொறபொழிகள்—ஆங்கிலம்
11. மேலைத்தேசத்தாரின் ஆத்ம விசாரணையும் ஆத்மப்பயிற்சியும் ... ஆங்கிலம்

## லேடி இராமநாதனவர்கள் இயற்றிய நூல்கள்.

1. அமெரிககதேசத்துச் சர்வ கலாசாலைகளைக் குறித்த வியாசங்கள் ... ஆங்கிலம்
2. Western Pictures for Eastern Students ஆங்கிலம
3. இராமாயணச் சுருக்கம், ஸ்ரீ ராமபிரானும் இலக்குமணரும் அயோத்தியாபுரியினின்றும் இலங்காபுரிக்குப் போய்வந்த சரித்திரம்.

## Hon. Sir P. Ramanathan KT. K.C., C.M.G.

WRITES

Dear Sriman Ratnasamy Aiyer, "you have taken much trouble in preparing the biographies. I hope that you will sell a sufficient number of your books to re-coup your expenses. I miss in the book some references to your own life." என்று பட்டவர்த்தனர் எமக்கு எழுதியிருந்தனர். இந்நூலைப் பரிசீலனைசெய்யும் பொருட்டாகப பெரும் மேதாவிகளாய் விளங்கும் கனவான்கள் பலருடைய பார்வைக்கு அனுப்பியிருந்தேம். இதனைக் கண்ணுற்ற கல்விமான்களுள் அறிவாலும் அனுபவத்தாலும் மேம்பட்ட கல்வியாளராய் விளங்கும் கௌரவ சேர் இராமநாதன் இதனை அங்கீகரித்துப் பெருமகிழ்வடைந்து தமிழ் மக்களின் பெருமையை ஒருங்கு திட்டியவன்மையைப் புகழ்ந்து பாராட்டியபின்னர், எமக்கு எழுதிய ஓர் கடிதத்தின் பக்கலிலே குறிப்பிடுகின்றார். அதாவது 'இந்தப் புஸ்தக விஷயமாக நீங்கள் பெரும் பிரயாசைப்பட்டிருக்கின்றீர்கள்." உங்களுடைய செலவுகளை கட்டக்கூடிய பிரதிகள் விலையாகுமென்று நான் நம்புகிறேன" என்னுங் கருத்தமைந்த வாக்கியத்தை ஆங்கில பாஷையில் குறிப்பிட்டு, அதன் கீழ்வரியில் 'உங்களுடைய சரித்திரத்தை யான் இங்கு காணவில்லை" என்று எழுதுகின்றார். இப்பேர்பபட்ட அவதானியின் பெருமையை என்னென்றுதான் சொல்லுவேம்.

"I miss in the book some references to your own life" என்றமையால் அிசிவசியம் எழுதவேண்டியதாயிற்று. ஆகவே எம்முடைய வரலாற்றைச் சிறிது கூறி முடிப்பேம். எம் மூதாதையர்களுக்குப் பூர்வீகம் சோழதேசம். ஜென்மபூமி கணபதி அக்ரகாரம். இது திருவையாற்றிற்கும் சுவாமிமலைக்கும் மத்திஸ்தானமாயுள்ளது. இவர்கள் வம்ஸபாரம் பரியத்திலே ஸ்ரீவத்ஸ கோத்திரத்திலே தோன்றிய சோழதேசத்துவடமாள் ஆவார்கள். எம்முதாதையரின் நாமங்கள் சுப்பிரமணிய சாஸ்திரிகள் ப்ராணதார்த்திஹர ஸாஸ்திரிகள், பஞ்சாபிகேச ஸாஸ்திரிகள், மீனாக்ஷிசுந்தர ஸாஸ்திரிகள் என்போராவர் இந்த ஸாஸ்திரிகளுடைய புத்திரரே பிரமஸ்ரீ வீராச்சாமி ஸாஸ்திரிகள். இவரொரு மஹா வித்துவான். இவருடைய சுவய நாமம் சுப்பையர். இவ்வுத்தமரை அறியாதாரில்லை. இவரே எம்முடைய பிதா. இப்பெரியார் தம மூதாதைகளைப்போல் சமயாசாரங்களிற சிறப்புறறு சமஸ்த சாஸ்திரங்களிலும் வல்லுனராய் இலக்கண இலக்கியம் காவிய பாடம், சித்தாந்த சாஸ்திரம, மாந்திரீகம், சோதிடம், சைவப்பிரசங்கம் முதலாய இன்னோன்ன கலைக்கியானங்களிற தேர்ந்து, யாவராலும் நன்கு மதிக்கபெற்ற மஹானுய விளங்கினர். அக்காலத்திலே சிவபூஜாதுரந்தரராயிருந்த இராமஸ்வாமி ஐயரவர்களுடைய புத்திரி ஸ்ரீமதி விசாலாக்ஷி என்னும் மாதை விவாகஞ்செய்து மூன்று புத்திரிகளையும், நான்கு புத்திரர்களையும் பெற்றனர். இவர்களுள் இருவர பிறநீங்கலாக, ஏனையோர் காலஞ்சென்றனர். இப்பொழுது மதுரைக்கடுத்த சோழவந்தானில் இருக்கும் சோமசுந்தர ஐயரவர்கள் எம்முடைய சிரேஷ்ட சகோதரராவர். வேங்குழல்வாசிப்பதில் கீர்த்திபெற்ற செல்லப்பா ஐயர் எம்முடைய இளைய சகோதரராவர். இவர் 1919-ம் ஆண்டு இந்தியாவில் காலஞ்சென்றனர். எம்முடைய மாதாவானவள் சிறுபிராயத்தில் இறந்தமையால் பிதாவானவர் தேசாந்திரம் புறப்பட்டனர். யாம் எம்முடைய ஆரம்பக கல்வியை சைவ வித்தியாசாலையிலும், இந்துக் கல்லூரியிலும கற்றேம். அதன்பின்னர் செந் தோமஸ் கல்லூரியில் ஆங்கில கல்வியைக் கற்றேம். இதற்கு சேர் இராமநாத

னவர்களின் மனைவி ஸ்ரீமதி செல்லாச்சியும், குமாரசுவாமி முதலியா ரும் துணைக்காரணராயிருந்தனர். அதன்பின்னர் சாஸ்திரபாடங் களையும் சங்கீதத்தையும் தஞ்சாவூர் மகாராஜாவினால் ஸ்தாபிக்கப் பட்ட "கலயாணமால்" என்னும் கலாசாலையிற் கற்றேம். தேவார திருவாசகங்களையும் பண்முறைகளையும் திருவாவடுதுறை ஆதீனத் திலிருந்த சொக்கலிங்கையாவிடத்திலும், நாகலிங்கபிள்ளையிடத்தி லும் பாடங்கேட்டேம். புராணோபந்நியாசங்களை எம் பிதாவிடத்திலும், குமாரசுவாமிப்புலவரிடத்திலும், முதலியார் கைலாய பிள்ளையிடத் திலும் பாடங்கேட்டேம். இங்ஙனமாகப் பலரிடத்திலும் பல கலை களையும் கற்று மதுரைத் தமிழ்ச் சங்கப் பரீக்ஷைக்கு சென்றேம். அதன்பின்னர் 1910-ம் ஆண்டு அரசாங்கத்தில் உத்தியோகம் பெற்றேம். சங்கீதவித்தையில் பிரமைகொண்டு உத்தியோகத்தை விடுத்தேம். சில நாளாய் பிடில் வாத்தியம் வாசிப்பதில் கை தேர்ந்தேம், அது முதலாக கல்வி கற்பிக்கும் தொழிலையே கைக் கொண்டு வித்தியாசாலைகளில் ஆசிரியராயிருந்தேம். இதுகாறும் எம்மிடத்திலே கல்விகற்ற மாணவர் மாணவிகளுள் எத்தனையோ பேர், சந்தானவிருத்தியாகிப் பெருநிலையிலிருக்கக் காண்கின்றேம்.

இலங்கையில் சங்கீத வித்தையை விருத்தியாக்கும் பொருட் டுப் பலதுறைகளிலும் ஈடுபட்டு பெரிதும் உழைத்துவந்தேம். இதனை உலகம் நன்கறியும். இதன்பயனாக இன்னுஞ்சிலகாலத் துள் எங்கள் சங்கீதம் முன்னையிலும் பன்மடங்கு விசேட விருத்தி யாகும் என்பது திண்ணம். இது விஷயமாக எத்தனையோ பிரசங் கங்களைச் செய்திருக்கின்றேம். எத்தனையோ அரும்பெரும் விஷயங்களை பத்திரிகைவாயிலாகத் தீட்டியிருக்கின்கிறேம். எத் தனையோ ஆண்களுக்கும் பெண்களுக்கும் கிரமப்படி சிக்ஷைசெய் திருக்கின்றேம். எத்தனையோ சங்கங்களிலும், சபைகளிலும், கோஷ்டிகளிலும் வாசித்து ரசிக்கச்செய்திருக்கின்றேம். "சங்கீத சமாஜ்" என்னும் ஓர் சங்கமொன்றை ஏற்படுத்தி அதன் வாயி லாக சங்கீதத்தை அபரிமிதமாக ஊட்டிவந்தேம். கலாசாலைகளில் சங்கீதப்பயிற்சி அவசியகம் வேண்டும் என்பதையிட்டு மேலதிகாரி

களோடு வாதாடி அங்கீகாரம்பெறச்செய்தேம். 1927-ம் ஆண்டு சென்னையிற்கூடிய அகில இந்திய சங்கீத மகாநாட்டிற்குச்சென்று அபிவிருத்திக்குரிய விஷயங்களை வித்துவான்கள் மத்தியில் பிரசங்கம்செய்து பிற்றில் முதலான வாத்தியம் வாசித்து சேர் சி. பி. இராமசாமி ஐயர், ஹைகோர்ட் ஜட்ஜ் வீ. வீ. ஸ்ரீநிவாசையங்கார் வித்வான் ஸ்ரீநிவாசையங்கார், டாக்டர் ருமாருவ் என்னும் பிரமுகர்களாலும், மற்றையோர்களாலும், சன்மானிக்கப்பெற்றேம் யாம் அவ்வளவொரு பெரிய வித்துவானுமல்ல, அபாரசக்தியுடையவனுமல்ல. ஏதோ ஒரு சாமான்னிய அறிவுடையவன் என்றறிக. இந்த மகாநாட்டில் பங்குபற்றிய வித்துவான்களின் பெருமையை எம்மாற் கூறவியலாது இவ்விஷயமிருப்ப, சங்கீதத்தில் பிரமைகொண்டு யாம் போகாத இடங்களே இல்லை. வட இந்தியா, தென் இந்தியா முழுவதும்சுற்றிப் பார்த்தேம். அந்தந்த தேசத்தாருடைய வழிமுறைகளை ஆராய்வு செயதேம். ஆனால் எங்களுடைய சங்கீதத்துக்கு நிகரில்லையெனத் தீர்மானித்தேம். எங்கள் சாஸ்திரத்திற சொல்லியபடி யாம பிரதி மந்திரங்களை கையாண்டு பிறறில வாத்தியத்தில் வாசிப்பது வழக்கம் அதனை இங்குள்ளார் மெச்சுகின்றனர். இதுவும ஈசனருளேயன்றி எமமுடைய செயலல்ல. யாம் பூர்வஜென்மத்திற் செய்த புண்ணியமபேற்ருல் இப்பிறப்பில் இந்த ஞானத்தை அதிகமாகப பெற்றேம். இதனல் விசேஷித்தவனுகவுமில்லை. இது நிற்க, அன்பர்களுக்கு யாம தெரிவிப்பது, பலவளங்களாலும் சிறப்புற்ற இக்கொழும்புமாநகரில் ஓர் இந்துக் கல்லூரியும் சங்கீத கலாசாலையும் அவசியம் வேண்டும். இதன்வாயிலாக எங்கள் சமயத்தை வளாக்கவேண்டும. இதனல் தமிழ மக்கள பெருங் கீர்த்தியைப பெறவேண்டும. இதுவே எமமுடைய வேண்டுகோள் இது விஷயமாக யாம பலருக்கும் தெரிவித்திருக்கின்றேம். இக்குறையை நீக்குமபொருட்டுப பொருளுதவிபுரியவேண்டும். அத்துடன் அபிமானமும ஒற்றுமையுமிருத்தல்வேண்டும் உதாரணமாக சிஙகளவருள் கிறிஸ்தவரும, புத்தசமய தவரும், இஸ்லாமானவரும், தங்கள் சமயவளர்ச்சியின்பொருட்டு ஆங்காங்கு கல்

லூரிகளை ஸ்தாபித்து நடாத்திவருகின்றனர். பெருந்தொகையின ராயிருக்கும் தமிழ்மக்களுக்கோ ஒரு கல்லூரி கிடையாது. இந்தக் குறையை நிவர்த்திக்க அபிமானிகள் முற்பட்டு துணைச்செய் வார்களாக இதன் பொருட்டாக யாம் எமது உடல் பொருள் ஆவி யும் அர்ப்பணஞ்செய்ய தீர்மானித்திருக்கின்றோம்

இனி எம்முடைய தருமப லக்ஷணத்தின் பெருமையைச் சிறிது கூறி முடிப்போம். 1913-ம் ஆண்டு பரிதாபி வருஷம் பங் குனி மாதம் ஏழாம் திகதி கோயம்பாடி பிரமஸ்ரீ சபாபதிக் குருக்க ளவர்களின் மூன்றாம் புத்திரி ஸ்ரீமதி வாலாம்பா என்னும் அரும ணியை விவாகஞ்செய்தோம். இந்தப் பெண்மணியுடைய பெரு மையை எம்மால் வர்ணித்துச் சொல்ல முடியாது. சுருக்கமாகச் சொல்லுகில் "இல்லாளகத்திருக்கவில்லாதொன்றில்லை" என்ற படி இந்தப்பெண்மணியால் சகல நன்மைகளையும் உண்டாகப் பெற்றோம். உலகில் நற் பெயரையும் நற் கீர்த்தியையும் நாட்டி னோம். இந்தப் பெண்மணியோ தேவாமசர் பெற்ற குலமணி யாய அவதரித்தனள். உதாரணமாக அப்ஸரஸ்திரீகளைப்போல் அழகும் பொறுமையும் சாந்தமும் பாதிவிரத்யமும் பதிவிரதாதா மமும நற்குண நற்செய்கையும நல்லறிவும் பிரிய வசனமும் தண் ணளியும பொருந்திய நன்மனையாளவள். எம்முடைய அனுபவத் தில் இந்தப பெண்மணி சத்காலக்ஷேபமும ஈஸ்வரபக்தியும சிவத் தியானமும் நைட்டிகமும் பக்திவைராக்கியமும் தரும சிந்தையும் ஆனம இரக்கமும ஜீவகாருண்யமும உடைய சுசீலையாயிருக்கலை காண்கின்றோம் "நின்றும இருந்தும நடந்தும கிடந்தும் என்றும் சிவன்றாளினை" என்றபடி அல்லும் பகலும இதே சிந்தனையாயி ருப்பள். ஸ்ரீமான நடராஜப்பெருமானிடத்திலே இடையறாத பற் றுடையவள். வாய்திறந்து எதைச் சொன்னாலும் சித்தியாயாற் போவதில்லை. இத்தகைய குணங்களையுஞ் செயல்களையுமுடைய புண்ணியவதியாளை துணைவியாகக்கொண்டேம் இப்படியான ஒரு புண்ணியசாலியை கண்டதில்லை. யாம இதனை உற்றுநோக்குமி டத்து தெய்வத்தன்மை பொருந்திய காரைக்காலம்மை, சாவித்

திரி என்னும் அறநெறித்தாய்மாருடைய அம்சத்தைப்பெற்ற அருந்ததியாய்த் தோற்றப்படுகின்றனள். ஆனால் வீட்டுப்பணிகளில் ஒரு சிறிதும் குறைவின்றி சம்ரக்ஷணை செய்து வருகின்றனள். இந்தப் பெண்மணியில் இன்னும் எத்தனையோ அற்புதங்களைக் காண்கின்றோம். விரிக்கிற்பெருகும் ஆதலால் விடுத்தேம். ஈசன் திருவருள எனமதித்து, பொன்னும் நீ பொருளும் நீ போதிக்கவந்த குருவும் நீ என்று எல்லாம் வல்ல இறைவனை இருதயகமலத்திருத்தி இல்லதருமத்தை குறைவற நடாத்திவருகின்றோம். "பொன்னுமெய்ப் பொருளும் தருவானை" என்றருளியபடி இம்மை மறுமை இரண்டிற்கும் ஏதுவாகிய பத்தினியாகவும் இப்புண்ணிய சாலியைப் பொருளாகவும் புத்திரி சந்தானமாகவும் பெறறேமென்றறிக. இதுவும் கௌரவசேர இராமநாதனவர்கள் எம்மேற்கொண்ட அன்பு காரணமாக வற்புறுத்தியதால் எம்மைப்பற்றிக் கூறத்துணிந்தேம். ஆகவே எக்காலஞ்சென்றாலும் எம்முண்டை ஞாபகம் அன்பர்களுடைய உள்ளத்தில் இருக்கவேண்டுமென்பதே இப்பெரியாருடைய கருத்துபோலும்.

☞ குறிப்பு:—

இப்புத்தகத்தில் கனவான்களுடைய பெருமையை இயன்ற மட்டும் கூறி முடித்தேம். எஞ்சியவற்றை மறுபதிப்பில் கூறுதும் விடேம்.